

# முன்னேற்றத் திட்டத்தின் கோலம்

இந்த நன்னாளை மங்களகரமாக அலங்கரிக்கும் கோலம்
நமது நாட்டில், வருங்கால செழிப்பிற்கும் உயர்வுக்கும் போடப்பட்டுள்ள மாபெரும்
திட்டக் கோலத்தை நம் கண்முன் கொண்டுவருகிறது.

இந்த முன்னேற்றத் திட்டத்தில் டாடா கம்பெனியார், அவர்கள் பங்கில் பெருமிதம்
அடைகிறார்கள் . . . இந்தியாவின் வருங்கால நலனுக்காக ஒவ்வொரு நாளும்
பல்வேறு வழிகளில் அவர்கள் தொடர்ந்து செய்துவரும் பணியில்
மேன்மேலும் பெருமை கொள்ளுகிறார்கள்.




TO. 4081

டாடா ஆயில் மில்ஸ்

# Gift...

*for yourself*
*or somebody else!*

ஏதாவது ஒன்றை நீங்கள் பரிசாக அளிக்க விரும்பினால் அதற்குச் சிறந்தது ஒரு **வெஸ்ட் எண்ட்** கடியாரம்! தாய், தந்தை, சகோதரி, சகோதரன் அல்லது யாருக்காயினும் சரி, பரிசுக்கு உகந்தது **வெஸ்ட் எண்ட்**தான் என்று எவரும் நன்கு சிபாரிசு செய்வார்கள்.

இந்தியாவிற்கென விசேஷமாகத் தயாரிக்கப்படும் **வெஸ்ட் எண்ட்** கடியாரங்கள் சென்ற முக்கால் நூற்றாண்டுகளுக்கு மேலாகப் பிரசித்தி பெற்றுள்ளது. கால முன்னேற்றத்துக்கு ஏற்றபடி **வெஸ்ட் எண்ட்** ஒவ்வொரு புது மாடல்களிலும் புதுப்புது முறைகளைக் கையாண்ட போதிலும் முன்பு வெளியிடப்பட்ட மாடல்கள் பல இன்னும் உபயோகத்தில் உள்ளன.

ஒவ்வொருவருடைய வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு **வெஸ்ட் எண்ட்** கடியாரத்தின் புது மாடல்களில் பல உள்ளன. நம்பகம் கவர்ச்சிகரமான தோற்றம் நீடித்த உழைப்பு இவைகளுடன் **வெஸ்ட் எண்ட்** கடியாரங்கள் சிறந்து விளங்கக் காரணம், அவைகளின் வேலைத் திறனேயாகும்.

இலவச காட்லாகிற்கு எழுதவும்!







தேவர் பிலிம்ஸ்
தாய்க்குப்பின் தாரம்
டைரக்ஷன்
M.A. திருமுகம்
ஸ்டுடியோ
வாஹினி




"சிங்க மார்க்"

பட்டாஸ், கம்பி மத்தாப்பு, கேப்புகள்
மற்றும் எல்லா ஜினுசுகளும் மிகவும் பிரசித்தமானவை
உத்திரவாதத்துடன் தயார் செய்யப்படுகிறது



NATIONAL FIRE WORKS

POST BOX No. 13 SIVAKASI TELEPHONE No. 60



















அனைவருக்கும் எமது மனமார்ந்த

**தீபாவளி நல் வாழ்த்துக்கள்**

## குடும்பப் பெண்கள் அதிகமாக விரும்புவது



# Prabhakar

# பிரபாகர்

அபாயமற்ற ஸ்டவ்

- ஸ்பிரிட் தேவையில்லை
- காற்று அடிக்க வேண்டாம்
- ஊசிகள் அவசியமில்லை

★

**ஓகேல் கிளாஸ் ஒர்க்ஸ் லிமிடெட்**

ஓகேல்வாடி (வடக்கு ஸதாரா ஜில்லா)



சந்தோஷத்துடன்

வாழ்த்துகிறோம்....

யாவரும் சந்தோஷமாகவும் சுபிட்சமாகவும் இருக்கும் இந்த நன்னாளில் எமது ஆதரவாளர்கள் அனைவருக்கும் வரும் புத்தாண்டிலும் மேலும் மேலும் சந்தோஷமும் சாந்தியும் செல்வமும் பெருக வேண்டுமென மிகவும் விரும்புகிறோம்.

ஆரியன் பிரஷ் கோ., லிமிடெட்.
சென்டிரல் சேம்பர்ஸ்
டலால் தெரு, பம்பாய்-1




*Cleans far Better - Lasts far longer!*

# பொருளடக்கம்





# குயில்காள் !

குயில்காள் ! முகில் வண்ணன் வரக் கூவீரோ
துயருறும் எனக்கோர் தூது சொல் வீரோ (குயில்)

தென்றலும் வந்தது தேன்மலர் அவிழ்ந்தது
குன்றத்தின் மேலொரு குளிர்மதி தவழ்ந்தது (குயில்)

மாலதி வனத்தில் மாலைகள் புனைந்து
லீலைகள் செய்ததை நினைப்பூட்டு வீரோ (குயில்)

கண்மணி என்முன் கண்ணினைப் புதைத்தான்
கண்ணைத் திறந்தே னென் கண்ணனைக்
காணேன் (குயில்)

கல்கி



# அவர் செய்த குற்றம்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

ராமகிருஷ்ணய்யர் சென்னை ஹைகோர்ட்டில் ஒருபெரிய உத்தியோகத்தில் இருந்தார். பரம யோக்கியர்; சர்க்கார் வேலையிலும் அப்படியே; ஜனங்களுடன் நடந்து வந்த மற்ற விவகாரங்களிலும் அப்படியே. வக்கீல்கள், கட்சிக்காரர்கள், குமாஸ்தாக்கள், மயிலாப்பூரில் அவருடைய நண்பர்கள் எல்லாருமே ராமகிருஷ்ணய்யர் என்றால் சாத்விகம், சாமர்த்தியம், சுறுசுறுப்பு, அறிவு, தயை, தெய்வ பக்தி எல்லாம் ஒன்று சேர்ந்த மகான் என்று மதித்து வந்தார்கள்.

ராமகிருஷ்ணய்யருடைய மனைவியும் அவருக்கு ஏற்ற வாழ்க்கைத் துணையாக விளங்கினாள். பிறகு அவர்கள் பெற்ற குழந்தைகளைப் பற்றி ஏன் கேட்கவேண்டும்? மூத்த பையன் அவனுடைய பள்ளிக்கூடத்தில் முதல் பையனாக விளங்கினான். மற்றவர்கள் இன்னும் சிறுவர்கள், பள்ளிக்கூடத்தில் சேர்க்கவில்லை.

** ** **

"ஐயா! பசி தாங்கவில்லை! நான் ஏழை. தகப்பனார் இல்லை. தாயார் பிச்சையெடுத்து ஜீவனம் செய்கிறாள், தஞ்சாவூரில் கும்மட்டித் திடலில். இந்த ஊரில் ஏதாவது வேலை சம்பாதித்து ஜீவனம் செய்யலாம் என்று வந்தேன். ஒன்றும் கிடைக்கவில்லை. என் படிப்பு ஏழாவதுடன் நின்று விட்டது. உங்கள் வீட்டில் சமையலுக்கு உதவி ஆளாக இருக்கிறேன். எனக்குச் சோறு போட்டால் போதும்" என்றான் ஒரு பிராமணப் பையன்.

'ஐயோ பாவம்' என்று அநுதாபப்பட்டு, ராமகிருஷ்ணய்யர் பையனிடம் அவனைப் பற்றிய விவரங்களை விசாரித்தார். தம் சமையல்காரருக்குச் சகாயமாக இருக்க அவனைச் சேர்த்துக் கொள்ளலாம் என்று மனைவியிடம் சொன்னார்.

"வேண்டாம்! ஏதாவது பணம் கொஞ்சம் கொடுத்து அவனை அனுப்பி விடுங்கள்" என்றாள் சாரதாம்பாள்.

"பிச்சை கொடுத்துப் பையன்களைக் கெடுக்கக் கூடாது. அவர்களிடம் ஏதாவது வேலை வாங்கிச் சாப்பாடு போடுவது நல்லது. வேலைக்கு வைத்துக் கொண்டு கொஞ்சநாள் பார்க்கலாம்" என்றார் ராமகிருஷ்ணய்யர்.

** ** **

"நான் சொன்னபடி ஆகிவிட்டது, பார்த்தீர்களா?" என்றாள் சாரதாம்பாள். பையன் இரண்டு நாட்கள் வீட்டில் வேலை செய்தான். இரவில் சமையல் அறைக்குப் பக்கத்தில் கூடத்தில் படுப்பான். மூன்றாவது நாள் மறைந்து விட்டான். சமையல் அறை அலமாரியிலிருந்த இரண்டு வெள்ளி டம்ளர்களும் ஒரு கிண்ணமும் மறைந்து போயின.

"பையனது அடையாளத்தைச் சொல்லிப் போலீசாருக்குத் தெரியப்படுத்துங்கள். அவர்கள் கண்டு பிடித்தாலும் பிடிக்கலாம்" என்றாள் சாரதாம்பாள்.

"போனது போச்சு! ஒன்றும் விசாரணை வேண்டாம்" என்றார் ராமகிருஷ்ணய்யர்.

"இப்படி எல்லாரும் கெட்டுப் போவதைச் சும்மா விட்டு விடுவதா? ஏதாவது செய்தால்தான் இந்த மாதிரியான மோசங்கள் வளராமல் இருக்கும்" என்றாள் அவர் மனைவி.

ஐயர் ஒப்புக் கொள்ளவில்லை. சாரதாம்பாள் வெகுநேரம் வாதாடிப் பார்த்தாள். ராமகிருஷ்ணய்யர் ஒரேபிடிவாதமாக "போலீசுக்குச் சொல்லமாட்டேன்!" என்று சொல்லிவிட்டு, ஆபீசுக்குப் போய் விட்டார்.

** ** **

"பையனுடைய முகக் களையைப் பார்த்தால் எவ்வளவு நல்ல பையனைப் போலத் தோன்றிற்று!" என்றாள் சாரதாம்பாள்.







''ஆமாம்! அவனும் நல்லவன்தான். திருடிவிட்ட படியால் அவன் அயோக்கியன் என்று எப்படிச் சொல்லலாம்?'' என்றார் ராமகிருஷ்ணய்யர்.

''நன்றாகப் பேசுகிறீர்கள்! திருடர்களைக் கூட நீங்கள் தண்டிக்க மாட்டீர்கள் போலிருக்கிறது. இது என்ன கிருதயுகமா?'' என்றாள் சாரதாம்பாள்.

''அப்படியல்ல சாரதா! உனக்கு என்ன தெரியும்? நானும்கூடத் திருடியிருக்கிறேன். உனக்குத் தெரியுமா?'' என்றார் ஐயர்.

அம்மையார் திடுக்கிட்டாள். ஏதேனும் ஆபீசில் பணம் கையாடி வருகிறாரோ என்று பயந்தாள்.

''என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? எப்போது என்ன திருடினீர்கள், சொல்லுங்கள்!'' என்றாள்.

''பெண்களாகிய உங்களுக்குப் பையன்களின் நடவடிக்கை ஒன்றும் தெரியாது. என் அப்பா ஏழை. என்னைப் படிப்புக்குக் கும்பகோணத்துக்கு அனுப்பி, அவருடைய நண்பராகிய ஒரு பெரிய மனிதர் வீட்டில் சாப்பிட்டுப் படுத்துத் தூங்க இடம் பார்த்துக் கொடுத்திருந்தார். அவர் மிக நல்லவர். அவர் வீட்டில் ஆபீஸ் அறையில் மாட்டியிருந்த அவருடைய சொக்காய் ஜேபியிலிருந்து நான் பணம் திருடியிருக்கிறேன், சாரதா!—பாவம், அவர் என்மேல் சந்தேகப்படாமல், வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த ஒரு வேலைக்காரப் பையனைச் சந்தேகித்து அவனை அடி அடி என்று அடித்து வேலையிலிருந்து நீக்கினார்.

''பள்ளிக்கூடத்தில் மத்தியான வேளையில் ரொம்பப் பசியாயிருக்கும். வாழைப்பழமோ வேறு ஏதோ விற்க வருவார்கள். கையில் பணமிருக்காது, வாங்கிச் சாப்பிட. அதற்காக நானும் திருடியிருக்கிறேன். ஒரு நாள் திருடினேன். பிறகு பயமாய்ப் போய் விட்டது. நிறுத்திக் கொண்டேன். பசியின் கொடுமை இப்படியெல்லாம் செய்யச் சொல்கிறது. என்னுடைய இந்தப் பாபத்தை நான் எண்ணி எண்ணி வருத்தப்படுவது உண்டு. கும்பகோணத்துப் பெரியவர் வீட்டில் அந்தப் பையனை அடித்தபோது, 'இல்லை, சாமி! நான் திருடவில்லை' என்று அவன் அழுதகுரல் இன்னும் என் காதில் அப்படியே ஒலிக்கிறது'' என்றார் ராமகிருஷ்ணய்யர்.

'' 'குற்றம் செய்யாதார் யாரே உளர்?' என்று சீதாதேவியும் சொன்னாள் அல்லவா?'' என்றாள் சாரதாம்பாள்.

''தேவியின் அருள் இல்லாவிடில் யாருக்குமே நல்ல கதியில்லை'' என்றார் ராமகிருஷ்ணய்யர்.

''நம்முடைய குழந்தைகள் நல்ல குழந்தைகளாக வளர வேண்டும்!'' என்றாள் சாரதாம்பாள்.

''எல்லாம் தேவி அருள்வாள்! நான் செய்த பாபத்தைத் துடைத்து அருள்வாயோ என்று இந்த முப்பது ஆண்டுகளாக நான் தேவியைப் பிரார்த்தித்து வந்தேன். இன்றுதான் அதைத் துடைத்தாள்'' என்றார் ஐயர்.

# திடமான பற்களும் ஈறுகளும் பெற

## ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த

## அற்புதமான பச்சை 'கோலினஸ்' டூத்பேஸ்ட்

- பற்களைச் சுத்தமாயும் பிரகாசத்துடனும் வைக்கிறது
- ஈறுகளுக்குப் பலமளிக்கிறது
- பற்களை சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது
- வாய் நாற்றத்தை அகற்றுகிறது




'கோலினஸ்'

நுரை தனிச்
சிறப்பு வாய்ந்தது

GK. 3027

# ரஸஞ்ஞானி

கொறநாட்டுப் புடவை'யை வெறுங் கையாலேயே முழம் போட்டு விடலாம். அது பருப் பொருளாக இருப்பதால், தொட்டுப் பார்த்தே அதை எடை போட்டு விடுவோம்; கண்ணால் பார்த்தே, அதன் நீள, அகலத்தை நிதானித்து விடுவோம்.

மொச்சைக் கொட்டையை அளப்பதோ, அதைக் காட்டிலும் எளிது. தடித் தடியாக வல்லவா இருக்கிறது அது! உரி, உழக்கு, நாழி, பட்டணம் பக்கா என்று எத்தனையோ கருவிகள் வைத்திருக்கிறோம்; அந்தக் கருவிகளைக் கொண்டு, மொச்சைக் கொட்டையை அளந்து, மூட்டை மூட்டையாகக் குவித்துத் தள்ளி விடுவோம்.

ஆனால், சூக்ஷ்மமான பொருள்களை அளக்க வேண்டும் என்றால், கஷ்டப்படத்தான் செய்கிறோம். பண்பாடு, கலை, தத்துவம் என்று சொன்னாலே, நமக்குத் திகைப்பு ஏற்பட்டு விடுகிறது. மொச்சைக் கொட்டை மாதிரி, அவை மசிவதில்லை; நம்முடைய கண்ணை உறுத்துவதுமில்லை. கலையை முழம் போடுவதற்கு நம்மிடம் அளவுகோல் இல்லை. தத்துவத்தையும், பண்பாட்டையும் அளக்கப் பட்டணம் படி கிடையாது. கலையிலுள்ள — சிறப்பாகத் தமிழ்க் கலையிலுள்ள — தெளிவும், ஆழமும் அவ்வளவு நுட்பமாயிருப்பதால், அது நம்மோடு கண்ணாம்பொத்தி விளையாடி விடுகிறது; அதை இனம் கண்டு கொள்ள முடியவில்லை. படித்தவர்களுக்குக் கூட, கலைச்சுவை இன்னதுஎன்று தெரியவில்லை; சுவை யுள்ளது எது, சுவையற்றது எது என்று நிர்ணயம் பண்ணவும் முடியவில்லை.

கலையை அனுபவிப்பதற்கு, படிப்பிருந்தால் போதாது! உள்ளுணர்வு வேண்டும். அதோடு, பரிவும், பௌவியமும் வேண்டும். கலையுலகத்துக்குள்ளேபிரவேசிக்க வேண்டும் என்றால், காலிலே போட்டிருக்கும் செருப்பைக் கழற்றிவைத்து விட்டு, ''நான்'' என்ற திமிரைக் கொஞ்சம் பம்ம வைத்துக் கொண்டு, மேல் வேட்டியை அரையிலே கட்டிக்கொண்டு, வாலிருந்தால், வாலைச் சுருட்டி வைத்துக் கொண்டு, அதற்குப் பின் தான் கலை வாசலுக்குள் எட்டி அடி வைக்கலாம்; அல்லாதபக்ஷம், கலையுலகம் வழி திறவாது.

இப்படியெல்லாம் நோன்பிருந்து, மனசைப் பக்குவப் படுத்திக் கொண்டு, கலை உலகத்தினுள்ப் புகுவோமேயானால், ஆனவமற்ற ஆனந்த நிலை நமக்குக் கிட்டும். இந்த அரிய உண்மையை நேரடியாக எடுத்துக் காட்டினார்கள் ரஸிகமணி டி. கே. சி.

தேனுக்குள் விழுந்து வண்டு எப்படி மயங்கிக் கிடக்குமோ, அதைப் போல, தமிழ்ப் பாடல் ஒன்றில் டி. கே. சி. இறங்கி, அதில் முங்கி, மூழ்கி, மணிக் கணக்கிலே அந்தப் பாடலோடு ஒன்றிக் கரைந்து நிற்பார்கள். அதோடு, பாடலைக் கேட்டுக் கொண்டிருக்கும் நம்மையும் அந்த அத்வைத நிலையில் இருத்தி வைக்கும் வல்லமையும் அவர்களிடம் இருந்தது.

டி.கே.சி.யே சொல்லுவார்கள்:—'' கலை என்றால் எப்படி இருக்க வேண்டும்? அது நம்முடைய உணர்ச்சி தத்துவத்திலப் போய்க் கலந்து நம்மை வேறு வஸ்து ஆக்கிவிட வேண்டும். அதனால் நமக்கு வேறு பிறப்பு ஒன்று கிட்டுகிறது. அதுதான் கலை.''

கலையைச் சுவைப்பதெப்படி, சுவைத்துக் களிப்பதெப்படி என்று தெரிந்து கொள்வதற்கு, ஒரு சுலபமான வழியிருக்கிறது. ரஸிகமணியின் கையை இறுகப் பிடித்துக் கொண்டு, கலையுலகத்தை ஒரு சுற்று, சுற்றி வர வேண்டும். சுற்றி வரும்போது, டி. கே. சி.யின் இதயத்தோடு ஒட்டி, நாமும் விஷயங்களை அநுபவிக்க வேண்டும். அவ்வளவுதான், கலையைச் சுவைக்கும் முறை நமக்கு எளிதில் கைவந்து விடும்.

முதன்முதலாக, டி.கே.சி.யோடு திருச்சியில் நடந்து கொண்டிருக்கிற திருவள்ளுவர்

ராஜு

கூட்டத்துக்குப் போவோம். கூட்டத்தில் எட்டுப்பேர் பேசுகிறார்கள், கெட்டிக்காரத்தனமாகவே பேசுகிறார்கள். என்ன இருந்தாலும், அவர்களில் ஒருவராவது நம்முடைய இதயத்தையோ, வள்ளுவருடைய இதயத்தையோ தொட்டபாடாக இல்லை. காரணம் தெரியாமல், ரஸிகமணியை ஜாடையாகப் பார்க்கிறோம். மீசையை ஒதுக்கி விட்டுக் கொண்டே, காரணத்தை விளக்குகிறார்கள் டி.கே.சி. :—"ஒவ்வொருவருக்கும் திருவள்ளுவர் கெட்டிக்காரர் என்று பட்டது. ஏன்? தாங்கள் நினைத்திருந்ததை அவர் சொல்லி விட்டாராம். அப்படியானால், கெட்டிக்காரர் அல்லாமல் வேறு எப்படி இருக்கக் கூடும். எந்த விதத்திலோ, அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது — திருவள்ளுவர் மேல் அல்ல. தங்கள் மேல்த்தான்." டி. கே. சி. யின் விளக்கம் பேச்சாளர்களுடைய குறையை எடுத்துக் காட்டி விட்டது. தன் மரியாதை மிதமிஞ்சிப் போய் விட்ட படியால், அவர்களால் வள்ளுவருக்கு மரியாதை காட்ட முடியவில்லை. ஆகவே, அவர்களுடைய வாய்விச்சுக்கெல்லாம் தப்பி ஓடி ஒளிந்து கொள்ளுகிறார் வள்ளுவர்.

# டி.கே.சி

அரிஸ்டாட்டில், ப்ளேட்டோ என்று கத்திக் கொண்டு, ஒன்பதாவது பிரசங்கி மேடைமேல் ஏறிப் பேச ஆரம்பித்து விட்டார். அவரும் வள்ளுவரைப் பற்றிப் பேசுவதாக ஐதிகம். ஆனால், வள்ளுவரைத் தவிர மற்ற ஆசிரியர்கள், சிறப்பாக, மேல் நாட்டு ஆசிரியர்கள்தான் அவர் பேச்சிலே அடிக்கொருதரம் தலையைக்காட்டிக் கொண்டிருக்கிறார்கள். வள்ளுவரைப் பற்றிப் பேச்சாளருக்குக் கவலையில்லை. தான் படித்த அபத்தப் படிப்பையெல்லாம் மாட்டித் தொங்க விடுவதற்கேற்ற 'கோட் ஸ்டான்டு' என்று குறளாசிரியரை அவர் கருதி விடுகிறார். ஆகவே, மேற்கோள் அருவி திம் திம் என்று குதித்துக் குறளையும், வள்ளுவரையும் ஒரே அமுக்காய் அமுக்கி விடுகிறது. ஒரு குறளையாவது வாழ்க்கையோடு பொருத்தி அனுபவித்து விட்டால், அதை அழகாகவும், உணர்ச்சியோடும் மற்றவர்களுக்கு விநியோகம் செய்து விடலாம். அப்படி அனுபவிக்காதவர்கள், இரவல் சரக்கை (மேற்கோளை) விலைக்கு விற்க வேண்டியிருக்கிறது. மேற்கோள் "நயகரா"வின் கையில் அகப்பட்டுக் கதிகலங்கி நிற்கும் நம்மைப் பார்த்து, டி. கே. சி. உபதேசம் செய்கிறார்கள் :— "பூர்வமான இதர ஆசிரியர்களைப் பற்றிப் பேசக்கூடாது என்று நான் சொல்லவில்லை. நானே அடிக்கடி ஆங்கில, இத்தாலிய நிபுணர்களை வரவழைக்கத்தான் செய்கிறேன்; விருந்தாளியாக அல்ல, பெட்டியில் போட்டு வாக்குமூலத்தை வாங்கிக் கொள்ளத்தான். வேறொன்றுக் கல்ல." ஒரு உண்மையைத் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கும் போது, அதற்கு ஸர்டிபிகேட் கொடுப்பதற்காக, வேறு போக்கு இல்லையென்றால், மேற்கோளைக் கையாளலாம் என்று தெரிந்து கொண்டோம்.

இனி, திருச்சியிலிருந்து புறப்பட்டு, ரஸிகமணியின் கையைப் பிடித்துக் கொண்டே திருவாரூருக்குப் போவோம். அங்கே தமிழ் வளர்ச்சிக் கழக விழா அலங்காரமாகவும், ஆரவாரத்தோடும் நடக்கிறது. "காந்திஜிக்கு ஜே!" என்று பலர் கத்திக் கொண்டிருக்கிறார்கள். இதையெல்லாம் கேட்ட நமக்கு, "அடே, தமிழ் வளர்ந்து விட்டதே" என்ற மயக்கம் ஏற்படுகிறது. ஆனால், பக்கத்திலிருக்கும் டி. கே. சி. "இதெல்லாம் தமிழ் வளர்ச்சியென்று நினைத்து விடாதே" என்று எச்சரிக்கை செய்கிறார்கள். இங்கே நடக்கும் பேச்சுகளைப் பற்றிய டி. கே. சி. விமர்சனம் கீழ்க்கண்டவாறு :—"டாக்டர் கிருஷ்ணன் பெரிய நிபுணர். பூமி பிறந்த காலம், சூரியன் பிறந்த காலம் என்ற விஷயமாக உள்ள சில கணக்குகளைத் தமிழில் எடுத்து விளக்கினார். இது எப்படித் தமிழை வளர்த்ததாகும்? சில்லிபுத்தூர்க்காரன் ஒருவன் மதுரைக்கு வழி இன்னது என்று எடுத்துச் சொல்லி விட்டால், தமிழ், ஆகா வளர்ந்துவிட்டது. 'ஹோ, ஹா, ஹோ' என்று கத்த வேண்டியதுண்டா?

ஆர். கே. சண்முகம் செட்டியாரும், நம் நாட்டுக்கும், இதர நாடுகளுக்கும் உள்ள பொருளாதார விஷயங்களைத் தெளிவாய் எடுத்து விளக்கினார். எதில்? தமிழில். அதுகாரணமாகத் தமிழ் வளர்ந்து விட்டது என்று சொல்ல வேண்டியதுண்டோ?

இந்த விஷயங்களுக்குத் தமிழ் உபயோகப்படாமல் இருந்தால், அது ஒரு பாஷை ஆகுமா? ஆனால், ஒன்று. தமிழ் வித்வான்கள் எந்த விஷயத்தை







எஸ். மகராஜன்

புமே தமிழில் விளக்க முடியாததுதான். இடைப் பிறவரல்கள், சிலேடைகள், மடக்குகள், ஆகிய பல அசந்தர்ப்பங்கள் வந்து விழுந்து விஷயத்தைக் குழப்பி விடும்.

'கல்கி' அவர்கள் பேசிய வந்தனோபசாரம், அபாரமாய், ரஸமாய், கேட்போர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதாக இருந்தது — தமிழ் வளர்ந்து விட்டது.''

தமிழ் வளர வேண்டும் என்றால் விஷயத்தைத் தெளிவாகச் சொன்னால் மாத்திரம் போதாது, உணர்ச்சியோடும், அபிநயத்தோடும் தமிழ் மொழி சல்லாபம் செய்ய வேண்டும் என்று டி. கே. சி. பேச்சிலிருந்து தெரிந்து கொண்டோம்.

திருவாரூரிலிருந்து தேரெழுந்தூர் வெகு தூரமல்ல. அங்கே நடக்கும் கம்பர் விழாவுக்குப் போகிறோம். ''கம்பர் மேட்டி''லிருந்து கவிதையை விளக்கிக் கொண்டிருக்கிறார் ஒரு பேச்சாளர். கவிதையென்றால் ஒரு பொல்லாத காரியம். அதை விளக்குவதற்கு அபாரமான உள்ளுணர்வும், சொல்லாற்றலும் வேண்டும். இவருக்கோ இரண்டும் பூஜ்யம். ஆனால், ரொம்ப, ரொம்பப் படித்தவர். ஆகவே, கவிதை உலகத்துக்குள்ளே புகுந்து, ஒரு கலக்கு, கலக்கிக் கொண்டிருக்கிறார், எருமை மாடு குட்டையைக் கலக்கின கணக்கில். பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த ரஸிகமணி நம்மிடம் சொல்லுகிறார்கள் :— இவரிடம் அமிர்தத்தையே கொடுங்களேன் ; ஒரு நிமிஷத்தில் அதை அப்படியே விளக்கெண்ணெய் ஆக்கி விடுவார்.'' இப்படிக் கவிதையைத் தொட்டுக் கரியாக்கி விட்டு இவர் போய் விடுகிறார். அடுத்தாற்போல் வந்த பேச்சாளர், உப்புச் சப்பில்லாத ஒரு விருதாப் பாட்டைக் கவிதை யென்று சொல்லிக் கூத்தாடுகிறார். ''வெண்ணெய் தின்கிறோம், வெண்ணெய் தின்கிறோம்'' என்று சொல்லிக் கொண்டே, களிமண்ணை உருட்டி, உருட்டித் தன் வாயிலே போட்டுக் கொள்ளுகிறார்; ''பெருமக்கள்'' வாயிலும் திணிக்கப் பார்க்கிறார். இவரைப் பார்த்து இரக்கமே வந்து விடுகிறது டி. கே. சி.க்கு. ''கருப்பஞ்சாறு ஆறாக ஓடிக்கொண்டிருக்கும்போது, சோளத் தட்டையைக் கடித்துச் சவை போடுகிறார்களே!'' என்று ஆற்றாமைப் படுகிறார்கள். இதற்குள்ளாக, அடுத்த கம்ப ராமாயணப் பிரசங்கி மேடை யேறிவிட்டார். கம்பர் எழுதாத பாட்டின் ஒரு அடியை எடுத்துக் கொண்டு, தனக்குத் தெரியாத பொருளைத் தெரிந்த பாவனையில் அவர் விஸ்தரித்துக் கொண்டிருக்கிறார்; ''பேரன்புடைய பெரு மக்களோ'' கொட்டாவி விட்டுக்கொண்டிருக்கிறார்கள். ரஸிகமணி, பிரசங்கியை ஏற, இறங்கப் பார்த்துச் சொல்லுகிறார்கள் :—''ஐயா! கம்பனுக்குக் கிரீடம் சூட்டுவதாகச் சொல்லிக் கொண்டு, அவன் தலையில் வைக்கோல் புரியை யல்லவா வளைய, வளையச் சுற்றுகிறீர்கள்.''



இனி, வைக்கோல் படப்புகளையும், சோளத் தட்டைகளையும் தாண்டி நாம் சென்னைக்கு ரயிலேறுகிறோம். போகிற வழியெல்லாம், விழாவைப் பற்றிய பேச்சுதான். ராமாயணப் பிரசங்கம் நடந்த போது, கூட்டத்திலுள்ள ராமாயண விரோதி ஒருவர் ''சூர்ப்பனகை மூக்கை அரிந்தது ,அக்கிரமம்'' என்று கூப்பாடு போட்டாரே, அவரைப்பற்றிப் பேச்சுவருகிறது. அவர் சூர்ப்பனகைக்கு வக்காலத்து வாங்கினதற்குக் காரணம் என்ன? அரசியல் துவேஷம் காரணமாக, கம்ப ராமாயணப் பாத்திரங்களைப் பரிவோடு அனுபவிக்க முடியவில்லை அவருக்கு. பரிவில்லை யென்றால், கம்பனுடைய அற்புத சிருஷ்டிகளை அனுபவிக்க முடியாது. போதாக் குறைக்கு, அரசியல் துவேஷமும் சேர்ந்து விட்டால், கவிச் சக்கரவர்த்தியின் சந்நிதானத்தை, மலை போல நின்று அது மறைத்து விடுகிறது. அந்த ஆசாமி பேச்சை எடுத்தவுடனேயே, டி.கே.சி.யின் மீசை துடிக்கிறது. அவரை முன்னிலைப் படுத்திக் கொண்டு, "ஏலே, சூர்ப்பனகை உங்கள் அக்காளோ, லே?'' என்று திருநெல்வேலிப் பாஷைத் தமிழில் ஒரு போடு போடுகிறார்கள்.

இதற்குள்ளாக நம்முடைய ரயில் வண்டி சென்னை வந்து சேர்ந்து விட்டது. கலையைப் பற்றியும், கவிதையைப் பற்றியும் டி.கே.சி.யோடு பேசிக்கொண்டிருக்கும் போது நேரம் போவதே தெரியாது. வெள்ளித் தண்டவாளத்தில், தங்கச் சக்கரம் பூண்டு நேரம் ஓடிக் கொண்டிருக்கும். கலையுலகத்தில், ஒரு உண்மையோடு நாம் ஒட்டி நிற்கும்போது, காலம், இடம் என்ற தத்துவங்கள் அடங்கி ஒடுங்கி, இல்லாமலே போய் விடுகின்றன. பெரும்பாலும் நம்முடைய பேச்சாளர்களுக்கு ஒரு நிமிஷத்துக்கு மேல் ஒரு உண்மையோடு ஒட்டி நிற்க முடியாது. மரநாட்டு விழாவிலே பேசச் சொன்னால், சங்க இலக்கியத்தைப் பற்றிப் பேசுவார்கள். கவிதையைப் பற்றிப் பேசச் சொன்னால், உணவு உற்பத்தியைப் பற்றிப் பேசுவார்கள். சென்னையில் நடந்துகொண்டிருக்கும், தமிழ்த் திருநாளில் கூட, அநேகமாக அப்படித்தான். விதிவிலக்காக டி.கே.சி.யும், இரண்டொருவரும், தமிழ்க் கவியைப் பற்றிப் பேசுகிறார்கள். ''இப்படியும் விதிவிலக்காக நீங்கள் அமையலாமா?'' என்று கேட்கிறோம். சிரிப்போடு வருகிறது டி.கே.சி.யின் பதில் :— ''ஆம்! நான் கவியைப் பற்றித்தான் பேசினேன். தமிழ்த் திருநாளில் அதுதானே செய்ய வேண்டும். உணவைப் பெருக்க வேண்டும் என்ற வெற்றுரைக்கும், தமிழ்ப் புலவருக்கும் என்ன சம்பந்தமோ? 'டிராக்டர்கள்' முதலான எந்திரங்களைத் தமிழ்த் திருநாளில் செய்துகொண்டிருக்கவா வேண்டும்? அமெரிக்காவில், ஆங்கில பாஷையையும் அதன் இனிமையைப் பற்றியும் பேசக் கூடினால், விவசாய எந்திரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டா இருப்பார்கள். அவைகளைப் பற்றிப் பேச மாட்டார்கள், அவைகளை வெளியிலே (காட்டில்தான்) செய்து கொண்டிருப்பார்கள். நம்முடையவன் காரியம் எப்படி இருக்கிற தென்றால், விவசாயத்தைப் பற்றியும், 'புல்டோஸ'ரைப் பற்றியும் ஆலோசிக்கக் கூடினால், புறநானூற்றையும், தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தைப் பற்றியும் பேசித் தொலைப்பான். அண்டாவிலே, விறகைப் போட்டு, நெருப்பை மூட்டுவான். அடுப்பிலே, தண்ணீரையும், அரிசியையும் கொட்டுவான். கெட்டிக்காரன்!''

சென்னையிலிருந்து, தென்காசிக்குப் போகிறோம். திருவள்ளுவர் கழகத்தின் ஆண்டு விழா அங்கே விமரிசையாய் நடந்து கொண்டிருக்கிறது. கூட்டத்துக்கு ஆயிரக் கணக்கான பெண்டிரும், ஆடவர்களும் வந்திருக்கிறார்கள். பொதுவாகப் பேச்சுகள் இங்கே ரஸமாகவே யிருக்கும். ஆனால், நாம் போகும் தருணத்தில் ஓயா மொழிப் புலவர் ஒருவர் மணிக் கணக்கிலே பேசிக் கொண்டிருக்கிறார். பேச்சு இப்படியும் நீண்டு கொண்டே போகிறதே என்று செயலாளரை நாம் முறைத்துப் பார்க்கிறோம். அவர் என்ன செய்வார். புலவர், ''மூன்று மணி நேரத்துக்குக் குறைந்து என்னும்

பேச முடியாது'' என்று கடிதமே எழுதி விட்டாராம். இதைக் கேட்டுக் கொண்டிருந்த டி. கே. சி. நம்மிடம் சொல்லுகிறார்கள் :—'' **ஆமாம். உமியும், மணலும் குப்பையுமாக அவ்வளவு தலைக்குள் குவிந்திருக்கும்போது என்ன செய்வார், அப்பாவி! ஊருக்கு எளியவன் பிள்ளையார் கோயில் ஆண்டி. தென்காசிக்காரன் என்று கண்டு, அவ்வளவையும் அவன் தலையில் கொட்டுகிறார். கொட்டியது ஒரு வருஷத்துக்குப் போதும்.''**

ஓயாமொழிப் புலவரும் ஓய்ந்து அடுத்த பேச்சாளர் பேச ஆரம்பிக்கிறார். 'அப்பாடா!' என்று சபையோர் பெருமூச்சு விட்டு, விடாயாற்றிக் கொள்ளுகிறார்கள். புதிதாக வந்தவராவது புதிதாக ஏதாவது சொல்ல மாட்டாரா என்று ஏங்கி இருக்கிறோம். அவரோ, பழையவர் சொன்ன குறளையே எடுத்துப் பிய்த்துப் பிய்த்து, துவையல் அரைத்துக் கொண்டிருக்கிறார். இந்த அலங்கோலத்தைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு டி. கே. சி. விமர்சனம் செய்கிறார்கள் :—

**'திருவள்ளுவர் பட்ட பாட்டை இன்னது என்று சொல்ல முடியாது. ஒவ்வொருவரும் குத்தின இடத்திலேயே குத்திக் குத்திச் சித்திரவதை செய்து விட்டார்கள்.**

**''தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை''**

**இந்தக் குறளைப் பாடிய முகூர்த்தம், அடடா, ரொம்ப, ரொம்பப் பொல்லாத முகூர்த்தம். தெய்வம் பட்ட பாட்டையும், கொழுநன் பட்ட பாட்டையும், இருவரையும் விட, புத்தி கெட்டுப் போய்த் தொழுதாளே, அந்த அம்மாள் பட்ட பாட்டையும், எல்லோரையும் விட, வள்ளுவர் பட்ட பாட்டையும், லேசில் சொல்லிவிட முடியாது. இதிகாசந்தான் எழுத வேண்டும். தென்காசிக்காரனும், தென்காசிக்காரியும், பிழைத்தோம், பிழைத்தோம் என்று வீடு போய்ச் சேர்ந்தார்கள். இன்னும் ஒரு வருஷத்துக்குத் திருவள்ளுவர் சங்கத்து ஆண்டு விழா கிடையாது. சுபம்.''**



இனி, டி. கே. சி.யின் இருக்கையாகிய திருக்குற்றாலத்துக்குப் போவோம். ஐந்தருவிச் சாலையில் முதலிலிருப்பது டி.கே.சி.யின் இல்லம். 'அடையா நெடுங் கத'வையுடைய இல்லம். அறுசுவையுண்டி அருந்திவிட்டு ரஸிகர் குழாம் ரஸிக மணியைச் சுற்றி மொய்த்துக் கொண்டிருக்கிறது. சாய்வு நாற்காலியிலே, தூய்ய வெள்ளை ஆடை உடுத்து, அமர்ந்திருக்கிற டி.கே.சி. தமிழ்ப் பண்பாட்டின் நயங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லி நம்மைப் பரவசப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அதோ இருக்கிற நடராஜ விக்ரஹத்தைப் பற்றிப் பேச்சுநடந்துகொண்டிருக்கிறது. அந்த அழகின் பல பட்டங்களையும் உணர்ந்து அநுபவிக்க, ''மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' என்ற பாட்டைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சமயத்திலே, அசட்டுத்தனமாக ஒருவர் குறுக்கிட்டு, ''இந்தச் சிலை கல்க்கண்டினால் செய்ததல்லவா? இதைத் தின்று பார்த்தால் இனிப்பா யிருக்குமே'' என்று சொல்லுகிறார். இந்த விரசப் பேச்சைக் கேட்டவுடனே, தன்னை மறந்த லயத்திலிருக்கும் டி. கே. சி. நிஷ்டையைக் கலைத்து விட்டு, முகத்தைச் சுழிக்கிறார்கள்.

கல்க்கண்டு என்ற நினைப்பும், அதைத் தின்று பார்க்க வேண்டுமே என்ற துடிப்பும், சுயநலத்தோடும், ஆணவத்தோடும் கலந்த காரியங்கள். அப்பேர்ப்பட்ட நினைப்புகள் குறுக்கிட்ட மாத்திரத்திலேயே, நாம் கலையுலகத்தின் உன்னதத்திலிருந்து, மண்ணுலகத்தின் படுகுழிக்குள்ளே விழுந்து விடுகிறோம். ஆனந்தம் கெட்டு, ஆணவம்தான் மிஞ்சுகிறது. இதையே நவம் நவமான கோணங்களிலிருந்து கண்டிக்கிறது டி.கே.சி.யின்குரல்.

**நா**ம் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, டி.கே.சி.க்குச் சொந்தமான ஒரு வெள்ளித் தம்ளர் காணாமல் போய் விட்டது. தேடித் தேடிப் பார்த்தும் காணவில்லை. இதனால் மனசுக்குக் கொஞ்சம் கஷ்டந்தான். சில நாட்கள் கழித்து, அந்த வெள்ளித் தம்ளரைக் கண்டு பிடித்து ஒரு நண்பர் டி. கே. சி. யிடமே அதை ஒப்படைத்து விடுகிறார். காணாமல்ப் போன பொருள் கிடைத்து விட்டதே என்று டி. கே. சி.க்குச் சந்தோஷம். ரூபாய், அணா, பைசாக் கணக்கிலே, அந்த உணர்ச்சியை அவர்கள் மதிக்கவில்லை. அப்படி மதித்தால், அதில் கலப்பாங்கு இருக்க முடியாது, சுயநலம் தானிருக்கும்; டி.கே.சி.யும், டி.கே.சி.யாக இருக்க மாட்டார்கள். எந்த அளவுகோலைக் கொண்டு அந்த சந்தோஷத்தை அளக்கிறார்கள் என்று பார்ப்போம் :—'' **வெள்ளித் தம்ளர் கிடைத்து விட்டது. இனிமேல்க் காணாமல்ப் போனாலும் கவலையில்லை. காணாமல்ப் போன பொருள் கைக்கு வந்து விட்டதே. பொருள் அல்ல விஷயம், கைக்கு வந்து விட்டதே, அது தான் விஷயம்''** என்று சொல்லுகிறார்கள் ரஸிகமணி. சுயநலத்தில் இருக்கும் நாம், வெள்ளித் தம்ளர் எத்தனை ரூபாய் எடையிருக்கும், அது காணாமல்ப் போனதால் எத்தனை ரூபாய் நஷ்டம், அது திரும்பக் கிடைத்ததால் நமக்கு எத்தனை ரூபாய் லாபம், என்ற தோரணையில் கணக்குப் போட்டுப் பார்க்கிறோம். ஆனால் ரஸிகமணியின் பேரேட்டிலே, பற்று, வரவு மதிப்பே அலாதி. காணாமல்ப் போனது, வெள்ளியாயிருந்தாலென்ன, மண்ணாங்கட்டியாயிருந்தாலென்ன, அது திரும்பிக் கிடைக்கும் போது ஏற்பட்ட உணர்ச்சி இருக்கிறதே, அதுதான் மதிக்கத் தக்கது. தம்ளரைத் திரும்பவும் இழக்கலாம். ஆனால், திரும்பிக் கிடைத்தபோதுள்ள உணர்ச்சியை இழக்க வேண்டியதில்லையே. அது போதும்.

வெள்ளித் தம்ளர் இருக்கட்டும். அழகிலும், அறிவிலும் சிறந்த தம் அருமை மகனை — ஒரே மகனை — டி.கே.சி. இழந்தார்கள். ஆணவ உலகத்திலிருந்த டி. கே. சி.க்கு எல்லையில்லாத துயரம் ஏற்பட்டது. செல்லையாவோடு (டி.கே.சி.யின் மகன்) நெருங்கிப் பழகிய கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தம் துயரத்தை ஒரு வெண்பாவில் வடித்து, அதை டி. கே. சி.க்கே அனுப்பினார்கள்.

**சிந்தை குளிரச் சிரித்தொளிரும் நின்முகத்தை**
**எந்நாள்க் காண்பேன் இனி.**

என்று முடிந்தது அந்த வெண்பா. வெண்பாவைப் பார்த்த டி.கே.சி. சோகத்தால் மூர்ச்சையாகி விழவில்லை. வெண்பா கிடைப்பதற்கு முன்னால், சோகத்தால் மொத்துண்டிருந்த டி.கே.சி., வெண்பாவைப் பார்த்த பிறகு, தன்னை மறந்த ஒரு ஆனந்த சமாதிக்குள் புகுந்து விடுகிறார்கள். பாடலைப் பாடிப்பாடித் திளைக்கிறார்கள். **"இப்படியும் ஒரு அற்புதமான கவி தமிழுக்குக் கிடைக்குமானால், உயிரைக் கொடுத்துக் கூட அதை வாங்கலாம்"** என்று சொல்லி வியக்கிறார்கள்.

மறுபடியும் பாடலைச் சவுக்கத்தில் பாடுகிறார்கள், இந்த சுகானந்த நிலையில், தந்தை — மகன் என்ற உறவு ஒழிந்தது; காலம் — இடம் என்ற கல்க்கோட்டை தகர்ந்தது; டி. கே. சி. என்ற மானிடர் மறைந்தார், டி. கே. சி. என்ற ரஸஞ்ஞானி பிறந்ததால்.



# ஒன்று பட்டால்

கனம் சி. சுப்பிரமணியம்

“இந்தியாவிலிருந்து பிரிந்தால் தமிழ்நாடு அழிந்து போகும்'' என்று ராஜாஜி அவர்கள் சமீபத்தில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார். தமிழ்நாடு தனி நாடாக அமைந்தால்தான் வாழ முடியும் என்று வாதாடுகின்றனர் கழகங்களைச் சேர்ந்தவர்கள். இந்த வாத எதிர்வாதங்களில் எது உண்மை என்பது பற்றி அறிந்து கொள்ள வேண்டியது மிக அவசியம். இரு வாதங்களும் உணர்ச்சி அடிப்படையில் எழுந்தவைகளாக இருக்க ஏது இருக்கின்றது. ஆனாலும் உணர்ச்சியை ஒருபுறம் ஒதுக்கி வைத்து விட்டு, எந்த வாதம் உண்மை என்பதை ஆராய்ந்து பார்க்கலாம்.

சில புள்ளி விவரங்களை ஆரம்பத்திலேயே கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. தமிழ் ஜில்லாக்களின் ஜனத் தொகை 1951-ம் ஆண்டில் இரண்டு கோடியே தொண்ணூற்று இரண்டு லட்சம் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். 1931-ல் இந்த ஜனத்தொகை 228 லட்சமாகத்தான் இருந்தது. 1921-லோ 211 லட்சம்தான். 1901-ம் ஆண்டில் 189 லட்சம். 1901-ம் ஆண்டிலிருந்து 1921-ம் ஆண்டு வரையில் உள்ள 20 வருஷ காலத்தில் 22 லட்சம் ஜனத் தொகை அதிகமாயிருக்கிறது. 1931-ல் இருந்து 1951-ம் வருஷம் வரையில் 64 லட்சம் மக்கள் எண்ணிக்கை உயர்ந்திருக்கிறது. இவ்வளவு உயர்ந்த அளவில் சென்ற இருபது ஆண்டுகளில் எண்ணிக்கை உயர்வதற்குக் காரணம் பலவிதமான சுகாதார வசதிகள் ஏற்பட்டு மரணம் அடைபவர்களின் எண்ணிக்கை குறைந்திருப்பதுதான். பிறக்கிறவர்களின் தொகை ஏறக்குறைய ஒரே கணக்கில்தான் இருந்து வருகிறது. இன்றைக்கு வருஷம் ஒன்றுக்கு ஆயிரத்துக்குப் பன்னிரண்டு பேர் அதிகப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதே அளவில் மக்கள் தொகை உயர்ந்து கொண்டே போகுமானால் இன்னும் இருபது ஆண்டுகளில் தமிழ்நாட்டு ஜனத் தொகை 370 லட்சத்துக்கு உயர்ந்துவிடும்.



ஒரு நாட்டின் முதல் பிரச்னை அந்நாட்டில் வாழும் மக்கள் எல்லாருக்கும் போதுமான உணவை உற்பத்தி செய்வது. இன்றைக்கு இருக்கக் கூடிய ஜனத்தொகை அளவுக்கும் இன்னும் இருபது ஆண்டுகளுக்குப் பின்னும் இருக்கக் கூடிய மக்களுக்கும் போதிய அளவு உணவு உற்பத்தி செய்ய முடியுமா என்பதைப் பற்றி முதலில் ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டும். இன்றைக்கு உற்பத்தியாகின்ற உணவு அளவு தற்போது இருக்கும் மக்களுக்குப் போதுமானதாக இல்லை என்பது ஒரு மறுக்க முடியாத உண்மை. நாட்டின் வேறு பகுதிகளில் இருந்து இறக்குமதி செய்துதான் நம் உணவுப் பற்றாக்குறையைத் தீர்க்க வேண்டியிருக்கிறது. 'இந்த உணவுப் பற்றாக்குறையை நாம் சரி செய்து கொள்ள முடியுமா ?' என்பதைப் பற்றி நாம் நன்முக ஆராய்ந்து பார்க்க வேண்டியது மிக மிக அவசியம்.

உணவு உற்பத்திக்கு அடிப்படையாக இருப்பது நிலவளமும் நீர்வளமும். 'நமக்கு இருக்கும் நில அளவு எவ்வளவு?' என்பது முதல் கேள்வி. இது இந்தியாவின் மற்றப் பகுதிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழ் நாட்டில் போதுமான அளவு நிலம் இருக்கிறதா என்று கவனிக்க வேண்டும்.

விவசாயத்துக்கு உதவக்கூடிய பூமி 1916ம் ஆண்டிலிருந்து 1920ம் வருஷங்களில் ஒரு நபருக்குத் தமிழ்நாட்டில் 65செண்ட் வீதம் இருந்தது. 1946ம் ஆண்டிலிருந்து 1950ம் வருஷங்களில் மக்கள் பெருக்கத்தின் காரணமாக நபர் ஒன்றுக்கு 42 செண்ட்டாகக் குறைந்து விட்டது.

இதே காலங்களில் மற்றப் பகுதிகளிலே நபர் ஒன்றுக்கு எவ்வளவு பூமி இருந்தது என்று கவனித்தால் தட்சிணபீடபிரதேசம் (ஹைதராபாத் வகையறு) 197–146 செண்ட்டும், மத்தியப் பிரதேசத்தில் 173–135 செண்ட்டும், பம்பாய் 166–118 செண்ட்டும், பஞ்சாப் 116–95 செண்ட்டும், உத்தரப்பிரதேசம் 78–60 செண்ட்டும் இருந்திருக்கின்றன. ஆகவே தமிழ் நாட்டில் நபர் ஒன்றுக்கு இருக்கக் கூடிய விளைச்சல் பூமி மிகக் குறைவு என்பது தெளிவாகிறது. இன்னும் மக்கள் தொகை உயர உயர இந்த விகிதம் குறைந்து கொண்டே போகும்.

இன்னொரு முக்கியமான அம்சத்தையும் நாம் கவனிக்க வேண்டியது அவசியம். மற்றப் பகுதிகளில் தரிசாக இருக்கும் பூமி அதிகமாக இருக்கிறது. அதனால் அத் தரிசு நிலங்களைச் சீர்திருத்தி விவசாயத்துக்குக் கொண்டு வரக்கூடிய சௌகரியம் அப் பகுதிகளில் வசிப்பவர்களுக்கு இருக்கிறது. ஆனால், தமிழ் நாட்டிலோ அநேகமாக விவசாயம் செய்யத் தகுதி உள்ள பூமிகளை எல்லாம் இன்று விளைச்சல் நிலமாக மாற்றியாகி விட்டது. இதன் காரணத்தினாலும் இந்த ஏற்றத் தாழ்வுகள் இன்னும் அதிகப்படுகின்றன. அடுத்தபடி நீர்வளத்தைக் கவனிப்போம்.

தமிழ் நாட்டில் ஓடக்கூடிய பெரிய நதி காவேரி ஒன்று தான். மற்றவைகள் எல்லாம் சிற்றாறுகளே. காவேரி நதியில் இருக்கும் தண்ணீர் முழுவதும் இன்றைக்கு விவசாயத்துக்கு உபயோகப்பட்டு வருகிறது. மீதியுள்ள தண்ணீர் காவேரியில் இல்லை என்றே கூறிவிடலாம். மற்றச் சிறிய நதிகளிலும் தண்ணீர்த் தேக்கங்கள் கட்டப்பட்டு முழுவதும் உபயோகப்பட்டு வருகின்றன. ஆகவே, ஆற்று நீர்ப்பாசன வசதியை அதிகப்படுத்துவது என்பது தமிழ்நாட்டில் முடியாத நிலைமையில் இருக்கிறது. மழைத்தண்ணீரைத் தேக்கி, குளங்கள் கட்டித் தண்ணீரை உபயோகப்படுத்துவதிலேயும் நாம் பெரிய அளவில் பண்டைக்காலம்தொட்டே நல்ல ஏற்பாடு செய்திருக்கிறோம். அதை விஸ்தரிப்பதற்கும் அதிக இடமில்லை. மற்றப் பகுதிகளை எடுத்துக் கொண்டால் விந்தியமலைக்கு மேல் பாகத்தில் இருக்கும் வட இந்தியாவில் கங்கை, யமுனை, சிந்து, பிரமபுத்திரா போன்ற பெரும் நதிகள் உள்ளன. அவைகளில் இருக்கக்கூடிய தண்ணீரில் நூற்றுக்குப் பத்து பங்குகூட இன்னும் சாகுபடிக்கு உபயோகமாகவில்லை. நீர்ப்பாசன வசதியை இன்னும் பெரிய அளவில் விஸ்தரிப்பதற்குப் போதுமான நதி வசதிகள் அங்கு இருக்கின்றன. விந்திய பர்வதத்துக்குத்



# உண்டு வாழ்வு !



தெற்கேயும், நர்மதா, கோதாவரி, கிருஷ்ணா போன்ற நதிகள் ஓடுகின்றன. அவைகளை அடிப்படையாகக் கொண்டு நீர்ப் பாசன வசதிகளை விஸ்தரிப்பதற்கும் அந்தப் பகுதி மக்களுக்குப் போதிய இடம் இருக்கிறது. மழை பெய்கின்ற அளவை எடுத்துக் கொண்டாலும், தமிழ் நாட்டில்தான் மழை மிகக் குறைவு. வருஷம் ஒன்றுக்குச் சராசரி 37 அங்குலம் மழைதான் தமிழ் நாட்டில் பெய்கிறது. இந்தியா முழுவதும் ராஜபுதனா பாலைவனத்தையும்சேர்த்துச் சராசரி 42 அங்குல அளவில்மழை இருக்கிறது. மேலே கண்ட புள்ளி விவரங்கள் மூலம் நமக்கு நில அளவும் மிகக் குறைவு; மழை அளவும் மிகக் குறைவு; நதி அளவும் குறைவாக இருக்கிறது என்பது நன்கு விளங்கும்.

பூமியைப் பண்படுத்தி அபிவிருத்தி செய்யப்படாமல் இருக்குமேயானால் தற்போது நிலத்தில் அபிவிருத்திகள் செய்வதன் மூலமாக உணவு உற்பத்தியை அதிகமாக்க முடியும். இந்த அடிப்படையில் பார்க்கும் போதும் தமிழ் நாட்டில் ஏற்கனவேநிலங்களில் அதிக அபிவிருத்தி ஏற்பட்டாகி விட்டது. மற்றப்பகுதிகளில்தான் அபிவிருத்திக்கு அதிக இடம்இருக்கிறது. நாம் இப்பொழுது ஒரு ஏக்கராவுக்குச் சராசரி 900 ராத்தல் விளைச்சல் எடுக்கிறோம். மற்றப் பிரதேசங்களில் விளைச்சல் இன்றைக்கும் 500, 600 ராத்தல் அளவில்தான் இருக்கிறது. அதற்குக்காரணம் மற்றப் பிரதேசங்களில் அபிவிருத்தி போதிய அளவு ஏற்படவில்லை. ஆகவே அந்த அம்சத்திலும் நாம் உணவைப் பெருக்குவதற்கு மற்றப் பகுதிகளைவிட வசதிக் குறைவுள்ளவர்களாகத்தான் இருக்கிறோம்.

இக் காரணங்களினால்தான் தமிழ் நாட்டில் உணவுப் பிரச்னை என்றைக்குமே ஒரு பெரும் பிரச்னையாக இருந்து வருகிறது. மற்றப் பகுதிகளின் தானியத்தை நம்பித்தான் நம் மக்களுக்கு உணவு அளிக்கக்கூடிய நிலைமையில் இருக்கிறோம்.



இன்னொரு வகை புள்ளி விவரங்களையும் சற்றுப் பார்ப்போம்.

தமிழ் நாட்டில் 1890-வது வருஷத்தில் ஒரு ஏக்கரா நிலத்துக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படுத்துவதற்கு 48 ரூபாய் செலவு செய்தால் போதுமானதாக இருந்தது. 1891-ல் இருந்து 1920 வரையுள்ள ஆண்டுகளில் அது 44 ரூபாயாகக் கொஞ்சம் குறைந்தது. 1921-ம் ஆண்டிலிருந்து 1940ம் வரையுள்ள ஆண்டுகளில் வருஷத்துக்கு 312 ரூபாய்க்கு உயர்ந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 1950 முதல் 1955-ம் ஆண்டு வரை ஒரு ஏக்கராவுக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படுத்திக் கொடுப்பதற்கு எண்ணூறு ரூபாய்க்குமேல் செலவாகி இருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் இனிமேல் எடுத்துக் கொள்ளக் கூடிய நீர்ப்பாசனத் திட்டங்கள் இதைவிட அதிகமாகச் செலவாகக் கூடியவைதான். பல திட்டங்களில் ஏக்கராவுக்கு இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் செலவாகிறது. இதற்குக் காரணம் நமக்கு இருந்த எல்லா நீர்ப்பாசன வசதிகளையும் ஏற்கனவே உபயோகப் படுத்தி விட்டதுதான். அகில இந்தியாவில் இந்தச் செலவு அளவுக் கணக்கைப் பார்த்தால் 1891-ம் ஆண்டில் 32 ரூபாயாகவும் 1891 முதல் 1920 ஆண்டு வரை 58 ரூபாயாகவும் 1921-ம் ஆண்டு முதல் 1940 வரை 101 ரூபாயாகவும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், அதாவது 1950—முதல் 55 வரை 270 ரூபாயாகவும் இருந்திருக்கிறது.

வட இந்தியாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு ஏக்கரா நீர்ப்பாசன வசதிக்கு 113 ரூபாய்தான் செலவு ஆகி இருக்கிறது. வட இந்தியாவுக்கும் தமிழ் நாட்டுக்கும் இன்று எட்டு மடங்கு வித்தியாசம் இருப்பதைக் காணலாம். இங்கு ஒரு ஏக்கராவுக்குச் செலவாகும் தொகையைக் கொண்டு வட இந்தியாவில் எட்டு ஏக்கரா நிலத்துக்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்து விடலாம்.

சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தாலும் இந்த நிலைமை இன்னும் தெளிவாக நமக்கு விளங்கும். தமிழ் நாட்டிலிருந்து மக்கள் பெரும் அளவில் வேறு நாடுகளுக்குக் குடியேறி இருப்பதைக் காண்கிறோம். இலங்கைத் தீவு, பர்மா, மலேயா, பிஜித் தீவுகள், மொரீஷியஸ், ஜாவா, சுமத்ரா, தென் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளுக்கெல்லாம் குடியேறி யிருக்கிறார்கள் நம் முன்னோர்கள். வெளி நாடுகளில் முக்கியமாக அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய தொழில் கூலி வேலைதான். அப்படி இருந்தும் பெரும் அளவில் நம் முன்னோர்கள் வெளிநாடுகள் சென்றார்கள் என்றால் அதற்கு முக்கிய காரணம் தமிழ் நாட்டில் உணவுக்குப் போதுமான வசதி இல்லாததுதான். எப்படியாவது வாழ்க்கையை நடத்தியாக வேண்டும் என்பதற்காகவே நம் மக்கள் மற்ற நாடுகள் மீது படையெடுக்க வேண்டிய நிர்ப்பந்தமும் பல சமயங்களில் ஏற்பட்டிருக்கிறது.

மேலே சொன்ன புள்ளி விவரங்களை வைத்துக் கொண்டு இப்பொழுது நாம் யோசித்துப் பார்ப்போமானால் நாம் இந்தியாவுடன் இணைந்திருப்பது நமக்குச் சௌகரியமா? இல்லை, அதன்மூலம் தீமை ஏற்படுமா என்பது நன்கு புலனாகும். ஜனத்தொகை மேலும் மேலும் பெருகி வரக் கூடிய நிலையில் எங்கெங்கு எவ்வளவு சுலபமாக உணவு உற்பத்தி அதிகப்படுத்த முடியுமோ அங்கெல்லாம் அந்த உற்பத்தியை அதிகப்படுத்துவதன் மூலமாகத்தான் தமிழ்நாட்டின் உணவுப் பிரச்னையையும் தீர்க்க முடியும். அப்படிச் சுலபமாக உணவு உற்பத்தி அதிகம் உண்டாக்கக் கூடிய பகுதிகள் ஒரு நாட்டில் இருந்தால்தான் அன்னிய நாணயச் செலாவணி, தனி நாடுகளுக்கு உள்ள கட்டுப்பாடுகள் இவைகளால் பாதிக்கப்படாமல் உணவு ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்குக் கொண்டு போக முடியும். உணவுப் பற்றாக்குறைப் பகுதிகள் எல்லாம் ஒரு அரசாங்கத்தின் கீழ் இருந்தால்தான் எங்கெங்கு உணவுத் தட்டு ஏற்படுகிறதோ அந்தந்த இடங்களுக்கெல்லாம் உணவு மலிவாக இருக்கும் இடத்திலிருந்து உணவை வாங்கிக் கொண்டு வர அரசாங்கம் ஏற்பாடு செய்யும். இதை இன்றைக்கும் நடைமுறையில் நாம் காண்கின்றோம். நம் நாட்டில் உணவு உற்பத்தி போதாது. வெளிநாடுகளில் இருந்து உணவு இறக்குமதி செய்வதாக இருந்தாலும் இந்தியா ஒன்றாக இணைந்து இருந்துவரும் காரணத்தினால்தான் மற்ற நாடுகளுடன் பேரம் பேசி உணவுப் பொருள்களைக் கூடிய அளவு இறக்குமதி செய்ய முடிகிறது. சிறு நாடுகளுக்கு இந்தச் சௌகர்யம் ஏற்படுவது மிகவும் கஷ்டம்.

உணவுப் பிரச்னையை விட்டு, தொழிற் பிரச்னையையும் சிறிதளவு ஆராய்வோம். இன்று நம் இந்திய நாடு முழுதுமே தொழில் துறையில் மிகவும் பின்னணியில் இருக்கிறது. ஏதோ ஒரு சில பகுதிகளில் சில தொழில்கள் இன்றைக்கு நடந்து வருகின்றன என்றால் அதற்குக் காரணம் தனிப்பட்டவர்கள் செய்த முயற்சியே. நம் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கும்



தொழில்களும் தனிப் பட்டவர்கள் ஏற்படுத் தியவைகளே. தற் போதுதான் அரசாங் கமே தொழில் அபி விருத்திக்கான நட வடிக்கைகளை எடுத் துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறது. அந்த அபிவிருத்தியும் திட்ட அடிப்படையில் செய்வதெனத் தீர்மா னிக்கப்பட்டிருக்கிறது. எந்தெந்தப் பகுதி களில் தொழில் முன் னேற்றம் குறைவோ அந்தப் பகுதிக ளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அங்கு கூடிய அளவு தொழில்களை ஆரம்பிப்பது என்ற கொள்கையைத் திட்டக் கமிஷனும் மத்திய அரசாங்கமும் ஏற்றுக் கொண்டிருக்கின்றன.



இன்றைய நம் நாட்டில் இருக்கும் சூழ்நிலையில் தொழில் அபிவிருத்திக்கு முக்கியமாக வேண்டியது இயந்திரங்களும் தொழில் நுட்பம் தெரிந்த நிபுணர்களும்தான். இவை இரண்டுக்கும் முன்னேற்றமடைந்துள்ள மற்ற நாடுகளின் உதவியைத் தான் நாட வேண்டும். அதன்மூலம்தான் இந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியும். ஆகவே. இதற்கான உதவி வெளி நாடுகளில் இருந்து வருவதற்கு நமது இந்திய நாடு ஒன்றாக இருந்து பெரிய நாடு என்ற முறையில் மற்ற நாடுகளிடமிருந்து உதவி பெறுவது கலபமா? அல்லது சிறு சிறு நாடுகளாகப் பிரிந்து அந்தச் சிறு நாடுகள் ஒவ்வொன்றும் வெளி நாடுகளிடமிருந்து உதவி பெறுவது கலபமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். ஒன்றுபட்ட இந்தியாவாக அமைந்து உலகில் ஒரு பெரும் சக்தியாக இருப்பதன் மூலம் தான் இந்த உதவிகளை நாம் வெளிநாடுகளில் இருந்து பெற முடியும் என்பதில் எந்தவிதமான சந்தேகத்துக்கும் இடமில்லை. இதையேதான் நம் கவியரசர் பாரதியார்,

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு — நம்மில்
ஒற்றுமைநீங்கில் அனைவருக்கும் தாழ்வு"

என்று கூறியிருக்கிறார். கவியின் வாக்கையும் நமது நாட்டின் நிலைமையையும் நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால் உண்மை தெளிவாகி விடும். 'தனித் தமிழ் நாடு வேண்டுமா? அல்லது இந்தியாவுடன் இணைந்து தமிழ் நாடு ஓங்கி வளர வேண்டுமா?' என்ற கேள்விக்குப் பதில் கிடைத்து விடும்.

## கற்பனை வனைந்த காரிகை

வீரத்தை விளக்கும் தங்கக் குதிரை விளக்கு சுடர்விட்டு எரிகிறது. அதன் தீப ஒளியில் அந்தப்புரத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் கண்சிமிட்டி மின்னுகின்றது. கமல விதானம் வர்ணஜாலம் புரிகிறது. மனத்தை மயக்கும் பலகணியும், அணங்கின் அழகுக்கு அழகு செய்யும் அலங்காரக் கலைப் பொருள்களும், வண்ணத் திரைச் சீலையும் மன்னனைப் போலவே மதிமயங்கி அசையாப் பொருள்களாகி விட்டன.

'வானில் தவழும் குளிர்மதி அரண்மனைக்குள் எப்படி வந்தது? வாவியில் மலர்ந்த செந்தாமரை எப்படி இங்கு வந்து மலர்ந்தது!' என்று மலைத்து விட்டான் மன்னன்.



அடாடா! அது குளிர்மதியும் அல்ல; செந்தாமரையுமல்ல! ஓர் அணங்கின் முகம்தான்! அவள் தனது அறையில் அமர்ந்து சிங்காரித்துக் கொண்டாள். முடியில் தனது கூந்தலில் மலர் செருக ஆரம்பித்த போது அவள் காதலன், யாருக்காக இவ்வளவு சிங்காரங்கள் செய்து கொண்டாளோ, அவனே அங்கு வந்துவிட்டான். இருந்தாலும் அவன் வந்துவிட்டதால் ஏற்பட்ட மகிழ்ச்சியையோ பரபரப்பையோ காட்டிக் கொள்ளாமல் இருந்த நிலையிலிருந்து விட்டாள்.

தன் முகத்தின் அழகைத் தானே தன் கையிலிருக்கும் கண்ணாடியில் பார்த்து மகிழ்வதுபோல் பாவனை செய்தாள். அவள் அருகில் வந்து நின்றுவிட்ட மன்னனோ இதுதான் சமயம் என்று தனது காதலியின் அழகைப் பரிபூரணமாக அனுபவிக்கலானான்.

சீத மதியின் ஒளியும், செழுங்கமலப்
போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாதன்
கைம்மலரா லன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப் பூங்கோதை முகம்!

"சந்திரன் குளிர் ஒளியையும், அப்பொழுது அலர்ந்த தாமரையின் மலர்ச்சியையும் கொண்டு பிரமன் கையால் வனைந்த சிருஷ்டியல்ல இது. அவன் எந்த ஒரு எட்டாத அழகைத் தன் கற்பனையில் கண்டுகண்டு மகிழ்ந்து கொண்டிருப்பானோ அதுவே ஏதோ மாயாஜாலம் புரிந்து வெளிப்பட்டிருக்கிறது! 'ஆகா! என்ன அழகிய முகம்!' என்று வியக்கிறான் மன்னன்.

மலர் சூடும் பாவனையில் அவள் தன் அழகையா பார்க்கிறாள். மலர்சூடி முடித்து விட்டால் காரியம் கெட்டு விடும். அதனால்தான் கூந்தலில் மலரைச் செருகாமல் நிற்கிறாள்!

அற்புதமான காதல்ச் சுவை ததும்பும் இந்த அருமையான கட்டத்தைத்தான் தீபாவளி மலரின் அட்டையில் உயிர் ஓவியமாக வழங்குகிறார் நமது ஓவியக் கலைஞர் மணியம்.





வாஷிங்டன்　　கிராம்வெல்　　முஸ்தபா கமால்

# சுயராஜ்யத்தில்

ஒன்பது ஆண்டுகளுக்கு முன் பாரதம் சுதந்திரம் அடைந்தது. இந்த லட்சியத்தை அடைய நடந்த சுதந்திரப் போராட்டத்தில் நமக்கு வழிகாட்டிய மகாத்மாஜி அப்போது என்ன செய்து கொண்டிருந்தார்? வங்காளத்தில் மக்களிடையே சாந்தியையும் சமாதானத்தையும் நிலை நிறுத்தக் கிராமம் கிராமமாக நடந்து யாத்திரை செய்து கொண்டிருந்தார். சுதந்திர பாரத அரசாங்கத்தில் மகாத்மாஜி விரும்பி யிருந்தால் ஒரு உயர்ந்த பதவி அடைந்திருப்பார்; ஆனால் மகாத்மா காந்திஜி மகாத்மாவாகவே இருந்து விட்டார்!

உலகத்தில் மற்ற நாடுகளின் சரித்திரத்தைப் பாருங்கள். அமெரிக்க மக்களின் சுதந்திரப் போராட்டத்தில் தலைமை வகித்த வாஷிங்டன் அமெரிக்கா சுதந்திரம் பெற்றவுடன் முதல் ஜனாதிபதியாகப் பதவி ஏற்றார். இங்கிலாந்தில் சுதந்திரப் போராட்டத்தை நடத்திய கிராம்வெல் அந்தத் தேசத்தின் ஆட்சிப் பொறுப்பைத் தாமே ஏற்றார். ஏன்? நம்முடைய இந்த நூற்றாண்டில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளைத்தான் பாருங்களேன்!

ருஷ்ய மக்களின் சுதந்திரப் போராட்டத்தில் தலைமை வகித்த லெனின், துருக்கியர்களின் தலைவர் முஸ்தபா கமால், சீனாவின் மா சே துங், எல்லோருமே அவரவர்கள் நாடு சுதந்திரம் பெற்றவுடன் அதை ஆட்சி நடத்தும் பொறுப்பில் அவர்களே அமர்ந்து விட்டார்கள்! ஆனால் மகாத்மா காந்தியோ பிடிவாதமாகத் தனித்திருந்தே தேசத்துக்கு வழி காட்டினார். ஏன், லோகமான்ய திலகர் இருந்திருந்தால் கூட மகாத்மாஜியின் வழியையே பின்பற்றி யிருப்பார்!

ஒரு சமயம் திலகரிடம் ''சுயராஜ்யம் கிடைத்து விட்டால் பிறகு என்ன செய்வீர்கள்?'' என்று யாரோ கேட்டார்கள். அதற்கு ஒரு வினாடிகூட யோசியாமல், அவர் பளிச்சென்று ''ஒன்று, வேதங்களை அத்தியயனம் செய்வேன்; அல்லது எங்கேயாவது கணக்கு வாத்தியாராக வேலை செய்வேன்'' என்றார்.

ஆக, மகாத்மாஜியும் லோகமான்ய திலகரும் அரசாங்கப் பதவியினால் கிடைக்கக் கூடிய அதிகாரம், ராணுவ பலம் இவற்றினால் மக்களை நல்ல முறையில் ஆள முடியாது என்பதை அறிந்திருந்தார்கள். இதே உண்மையை இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஒருவர் நன்கு உணர்ந்திருந்தார். அவர்தான்] பகவான் புத்தர். அவர் தம் அரச பதவியையும் செல்வாக்கையும் இன்பங்களையும் உதறி எறிந்தார். அப்போது அவருக்கு மிகுந்த மன வேதனை அளித்த விஷயம் ஆடு மாடுகளை யாகத்தில் பலியிடும் காரியம். இதை ஒரு சட்டத்தின் மூலம் நிறுத்தி யிருக்கக் கூடுமானால் புத்தர் இவ்வளவு தியாகம் செய்திருக்க வேண்டியதில்லை. சட்டத்தினால் ஒன்றும் சாதிக்க முடியாது என்பதை உணர்ந்தே அவர் பிரசாரத்தின் மூலம் மக்களின் மனத்தை மாற்ற முயன்றார். பலியிடுவதை நிறுத்துவதற்குப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க முயன்றார். இப்படி ஐம்பது ஆண்டுகள் தமது அஹிம்சைக் கொள்கையை மக்களுக்கு ஊர்ஊராகச் சென்று உபதேசித்தார். இவ்வாறு திரட்டப்பட்ட மக்களின் ஆத்ம சக்தியே பாரத நாட்டின் பெரும் சக்தியாக யுகம் யுகமாக இருந்து வந்திருக்கிறது!

இடைக்காலத்தில் பாரதத்தின் ஆத்ம பலம் குன்றத் தொடங்கியது. அதன் பலனாகப் பாரத நாட்டு மக்கள் வெளி நாட்டாருக்கு அடிமைப்பட்டார்கள். பாரதத்தின் வளர்ச்சி எல்லாத் துறைகளிலும் குன்றி விட்டது. இலக்கியம், விஞ்ஞானம், மதம் எல்லாத் துறைகளிலுமே பாரதம் சுயமாகச் சிந்திக்கும் சக்தியிழந்து வெளி நாட்டாரைக் காப்பி அடிக்கத் தொடங்கியது. பழம் பெருமை பேசிக் காலங்கழித்தது. உயர்குலத்தில் பிறந்தவர்கள் என்று கருதப்பட்டவர்கள் பெருவாரியான மக்களுடன் யாதொரு தொடர்பும் இன்றி வாழ்ந்து வந்தார்கள். இது பிரிட்டிஷ்காரர்கள் பாரத தேசத்தை வெகு எளிதில் கைப்பற்ற உதவியாக இருந்தது.

பிரிட்டிஷாரின் ஆதிக்கம் பாரத மக்களின் வாழ்வையே குலைக்கும் வகையில் நடைபெற்றது. அதற்கு முந்தி நிகழ்ந்த ஆதிக்கங்கள் பாரத சமூக வாழ்வை இவ்வளவு குலைக்கவில்லை.


லெனின் மா. சே. துங் ராஜாராம் மோகன்ராய் லோகமான்ய திலகர் தாதாபாய் நௌரோஜி

எனவே பாரதம் விழித்துக் கொண்டு தனது பழைய ஆத்ம பலத்தைத் திரட்டத் தொடங்கியது. பத்தொன்பதாம் நூற்றாண்டிலே ஆத்மீக சிந்தனையில் அதிக கவனமும் சிரத்தையும் காண்பிக்கத் தொடங்கியது. ராம் மோகன்ராய், கேசவசந்திர சேன், தயானந்தர், ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், ராமதீர்த்தர் உள்ளத்திலுள்ளே புதிய ஒளியையும் சக்தியையும் காணுமாறு மக்களைத் தட்டி எழுப்பினர். அவர்களுக்குப் பின் தாதாபாய் நௌரோஜி, திலகர் இருவரும் தோன்றி அரசியல் — பொருளாதார விடுதலைக்கு வித்து ஊன்றினர். 'சுயராஜ்யம்' என்ற மந்திரத்தைக் கூறினர். பாரதம் மீண்டும் பல துறைகளில் ஒளி விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கியது. இப்படிப் பாரதத்துக்குள் திரண்ட சக்தி மகாத்மா காந்தி யடிகளின் தலைமையில் பெருகி, பிரிட்டிஷ் அரசாங்கத்தையே தூக்கி எறிந்தது! ஆயுத பலமில்லாத மக்களின் ஆத்ம சக்தி சாதித்த சாதனை இது! இதுவரையில் சரித்திரம் கண்டும் கேட்டுமிராத அற்புத சாதனை!

# ஆத்மசக்தி

சுரேஷ்ராம்

மொழிபெயர்ப்பு: 'எஸ். வி. எஸ்.'

இப்பொழுது பாரதம் சுதந்திரம் அடைந்து விட்டது! இந்த நாட்டை நம் விருப்பப்படி புனர் நிர்மாணம் செய்து கொள்ளலாம்! எதை வேண்டுமானாலும் விதைக்கலாம், எதை வேண்டுமானாலும் அறுவடை செய்யலாம்! அதை எப்படிச் செய்வது? சட்டங்கள் இயற்றித்தான் செய்ய வேண்டும் என்று யாரும் சொல்லுவார்கள். ஆனால் சட்டங்களுக்கும் ஒரு கட்டுதிட்டம் உண்டல்லவா? பொது மக்களின் ஆதரவு பெற்ற ஒரு கருத்தைத்தான் சட்டமாக்க முடியும். எந்த அரசாங்கமும் மக்களின் வாழ்க்கை முறையையே மாற்றி அமைக்க முடியாது. மக்களின் வாழ்க்கை முறையை அலட்சியப்படுத்திவிட்டுச் சட்டம் இயற்றவும் முடியாது. அப்படி இயற்றப்பட்டாலும் அந்தச் சட்டங்களினால் பிரயோசனமே இல்லை.

நமது நாட்டில் இப்போது ஹரிஜன ஆலயப் பிரவேசச் சட்டம் அமுலுக்கு வந்து விட்டது என்று பெயர். ஹரிஜனனாயினும் சரி, யாராயினும் சரி, கோவிலுக்குள் போகாதே என்று யாரும் தடுக்க முடியாது. ஆயினும் பீஹாரில் என்ன நடந்தது? வினோபா போன்ற மகான் சில ஹரிஜனங்களுடன் கோவிலுக்குள் பிரவேசித்தபோது கோவில் குருக்கள் அவரைத் தாக்கித் தடுத்தனர்! ஹரிஜன ஆலயப் பிரவேசச் சட்டம் எப்படி அமுல் நடக்கிறது பார்த்தீர்கள் அல்லவா?

ஆகவே, மனித உணர்ச்சிகளைப் பொருட்படுத்தாது செய்யப்படும் சட்டங்கள் இருப்பதும் ஒன்றுதான், இல்லாதிருப்பதும் ஒன்றுதான். முதலில் நாம் செய்ய வேண்டிய காரியம் மக்களின் மனத்தை, பத்தாம் பசலிக் கொள்கைகளை மாற்றிப் புது வாழ்க்கை முறையை வகுத்துக் கொடுப்பது! புது நிர்வாக முறையை ஏற்படுத்துவது! இந்த மாபெரும் பணியைச் சட்டம் சாதிக்குமா? சட்டங்களினால் முடியாது என்பதையே ஒன்பது வருஷ சுதந்திரம் நமக்கு எடுத்துச் சொல்லுகிறது! சட்டங்களினால் முடியும் என்றிருந்தால், இதுகாறும் நமது பிரதம மந்திரி ஒரு சட்டத்துக்குப் பின்னால் இன்னொரு சட்டமாக இயற்றி மக்களை மிக உயர்ந்த நிலையில் கொண்டு போய் வைத்திருப்பாரே!

ஆகவே மக்கள் மனத்தையும் வாழ்க்கை முறையையும் மாற்றும் இம் மாபெரும் பணியைச் சட்டசபைகளினாலும், ராணுவ பலத்தினாலும் சாதிப்பது என்பது முடியாத காரியம். இவைகளைத் தவிர மற்ற முறைகளைத்தான் கையாள வேண்டும்! ஆனால் இன்று நாம் என்ன காண்கிறோம்? மக்கள் எல்லோரும் தங்கள் கண்களைத் தில்லிப் பக்கமாகத் திருப்பி அங்கிருந்து ஏதாகிலும் வராதா என்று ஏங்கிக் கொண்டிருப்பதைத்தான் பார்க்கிறோம். நேற்றுவரை தங்கள் சொந்த முயற்சியிலும் பலத்திலும் செவ்வனே காரியங்கள் நடத்தி வந்த பல சங்கங்களும் ஸ்தாபனங்களும் தில்லியிலிருந்து உதவி வராதா என்று எதிர்பார்க்கின்றன. சுயராஜ்யம் ஏற்பட்ட பிறகு, நம் அரசாங்கத்திடமிருந்து உதவி எதிர்பார்ப்பதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் இந்த உதவி மக்களின் ஆத்ம சக்தியைத் தட்டி எழுப்ப உதவுமா என்பதுதான் கேள்வி. இதில் இன்னொரு பரிதாபகரமான நிலை; அரசாங்க பீடத்தில் இருப்பவர்கள் நாட்டில் ஏதாவது உருப்படியான காரியம் ஆக வேண்டியிருந்தால், 'அது தங்களால் தான் முடியும்! வேறு எந்தச் சக்தியாலும் முடியாது' என்று நினைக்கிறார்கள். இந்த ஆணவம் சர்க்கார் வட்டாரத்தில் மிதமிஞ்சிக் கிடக்கிறது. இதைப்பற்றி ஒருசமயம் வினோபா பின்வருமாறு கூறினார்:

"அவர்கள் எல்லாரும் ஒரு தவறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். கெட்டிலிருந்து வரும் நீராவிச் சக்தி கெட்டிலுக்குள்ளிருக்கும்


புத்தர்


ராமகிருஷ்ண பரமஹம்சர்


விவேகானந்தர்



தண்ணீரின் காரணமாகவே ஏற்பட்டது என்று நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில் அந்தச் சக்தியை உண்டாக்கியது கெட்டிதுக்குக் கீழிருக்கும் நெருப்புத் தான். மேலிருந்த தண்ணீரோ சும்மா தான் இருந்துகொண்டிருந்தது. அடுப்பில் நெருப்பிருந்து எரிந்தால் தான் தண்ணீர் கொதிக்கமுடியும். நீராவிக்குக் காரணம் தண்ணீர் என்று நினைப்பவர்கள் தவறான எண்ணத்தில் இருக்கிறார்கள். ரசாயனங்கள் விருந்து உண்டாகும் உஷ்ணம் நீராவியை வேக வேகப் படுத்தி - இஞ்சினை ஓட்டோடு வைத்திருக்க உதவும். ஆனால் நீராவியிலும் பிரமாத்திரங்களுக்கு என்ன விசேஷப் பயன் இருக்கக்கூடும்? நான் நீராவியின் மகத்துவத்தைக் குறைத்துப் பேசுவதாக எண்ணக் கூடாது. ராமத்தைப் பொருத்த மட்டில் நீராவியிலும் உண்டாகக் கூடிய பயன் இரண்டாம் பட்சமே! அப்படியே தான் உத்தியோகஸ்தர்களின் அதிகாரமும். மக்களின் விருப்பத்தையும் அங்கீகாரத்தையும் பெற்றதாயிருந்தால் அதன் சக்தி விசேஷமாக இருக்கும். ஆனால் மக்களின் விருப்பத்தை, ஆத்ம சக்தியைத் தட்டி எழுப்பக்கூடிய காரியம் ஒன்றுமே தேசத்தில் நடக்காமல் இருப்பதுதான் மிகவும் பரிதாபமாக இருக்கிறது!''

மற்ற நாடுகளிலும் மக்களின் உள் வலிமை குறைந்து, ராணுவ பலமே மேலோங்கி இருக்கிறது. இந்தப் பாவத்தின் பயனை அனுபவித்து வருகிறார்கள் அந்நாட்டு மக்கள். அவர்கள் உள்ளத்தில் பயமும், மனத்தில் கவலையும் நிரம்பி வழிகின்றன. அவர்களுடைய பிரச்னைகளை ஆயுத பலம் தீர்க்காது என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இருப்பினும் ஆயுதபலத்தை வளர்ப்பதிலேயே ஈடுபட்டிருக்கிறார்கள்! அவர்கள் நிலையைப் பார்க்கும்போது, 'ராணுவ பலத்தை விட்டு ஆத்மபலத்தை வளருங்கள்' என்று சொல்வது போல் தோன்றுகிறது!

நமது தேசம் ஜாதி, மதம், மொழி இப்படிப் பல வேறுபாடுகள் கொண்ட தேசம். நமது ஏழைமை சொல்லும் தரமன்று. நமக்கு வெளி நாட்டில் வியாபார மார்க்கெட் கிடையாது. நமது ஜனத்தொகை ஓர் அளவுக்கு அடங்காதது. நாம் நமது ராணுவ பலத்தைப் பெருக்கிக்கொள்ளத் தொடங்கினால் நமது பொருளாதார ஏற்றத்தாழ்வு, ஏழை — பணக்காரர் வித்தியாசந்தான் அதிகமாகும். உலக வல்லரசுகளுக்கு ஒத்துத் தாளம் போடும் நிலைக்கு நம்மைக் கொண்டு போய் வைத்து விடும். ஏன், நமது சுதந்திரத்துக்கே ஆபத்து விளைந்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. ஆகவே ராணுவ பலத்தை விட ஆத்ம பலமே முக்கியம். இதை வற்புறுத்திச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. அதாவது நமது பிரச்னைகளை நமக்குள் ஒருவருடன் ஒருவர் ஒத்துப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும். கூட்டு முயற்சியில் முன்னேறப் பார்க்க வேண்டும். பிறர் ஏவி வேலை செய்வதற்குப் பதில், நாமே நம் வேலைகளைக் கண்டு பிடித்துப் பாடுபடும் சக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். நமது அடிப்படையான தேவை உணவும் உடையும் ஆகும். ஒவ்வொரு கிராமமும் இந்த விஷயத்திலாவது சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். சர்க்காரை எதிர் பாராமல் எவ்வளவுக் கெவ்வளவு நமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்கிறோமோ அந்த அளவுக்குச் சர்க்காருக்கும் நன்மை; நமக்கும் நன்மை.



# சித்திரம் காட்டும் சிற்பங்கள்



தமிழ்நாட்டுப் பழம்பெரு மன்னர்கள் வடக்கே கங்கைவரை போர்க்கோலம் பூண்டு சென்றார்கள். கிழக்கே கடாரம், சாவகம், சிங்களம் ஆகிய தீவுகள் வரை சென்றார்கள். தெற்கே இலங்கைவரையில் சென்றார்கள். எங்கு சென்றாலும் வெறும் போர் வெறியை மட்டும் கொண்டு செல்லாமல் கலை வெறியையும் கொண்டு சென்றார்கள். அந்நாடுகளில் எல்லாம் தமிழ்ப் பண்பாட்டையும் கலையையும் நிலைநிறுத்திவிட்டு வந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் தமிழ் நாட்டில் எவ்வளவு கலைச் செல்வத்தை விட்டு விட்டுச் சென்றிருக்க வேண்டும்.

முன்னொருகாலத்தில் தமிழகத்தை ஆண்ட பேரரசர்களெல்லாம் கலையின் அழியாப் புகழைச் சிலையில் அமைத்துக் காட்ட முயற்சித்திருக்கிறார்கள். கருங்கல் என்பது மருந்துக்குக்கூடக் கிடைக்காத சோழ நாட்டில் கருங்கல்லைக்கொண்டு விண்ணைத்தொடும் கோயில்கள் கட்டினார்கள். அந்தக் கோயில்களுக்குள்ளேதான் சித்திரங்களையும் சிற்பங்களையும் அமைத்திருக்கிறார்கள். ஆயிரம் ஆண்டுகளான பின்பும் அவைகள் அழியாச் செல்வங்களாகக் காட்சியளிக்கின்றன. இன்றுகூடச் சோழ மன்னர்களின் பெருமையைப் பேசுகின்றன, கங்கை கொண்ட சோழேச்சரத்திலும், திருபுவனத்திலும் உள்ள சிற்ப சௌந்தர்யங்கள். கல்லில் உயிராக்கிக் காட்டிய கலையைக் காகிதத்தில் உயிராக்கிக் காட்டுகிறார் நமது ஓவியர் மணியம். கங்கை கொண்ட சோழேச்சரத்துக் கோயில் முகப்பில் நின்று பிரமிக்க வைக்கும் சிங்கக் கிணறு, சிற்ப சித்திர முகப்பில் நின்று கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

1. முதல் வர்ணச் சித்திரமாகத் திகழ்வது மகிஷாசுரமர்த்தினியின் திருவுருவம். உலகின் தீய சக்திகளை அடக்கி ஒழிப்பதில்தான் அவளுக்கு எத்தகைய ஆவேசம்? தீய சக்திகள் அவள் திருப் பாதங்களிடையே சிக்கி எப்படி அழிந்து ஒழிகின்றன! 'கங்கை கொண்ட சோழேச்சரத்துள் நின்றிடும் மகா சக்திக்கு இருபது கரங்கள் இருப்பது ஏன் என்று பலர் பல ஆகமங்களை எல்லாம் புரட்டிப் பார்த்தும் தெரியவில்லை' என்று ஒரு பெரியவர் சொன்னார். பராசக்தியின் பேருருவம் ஆகமத்துள் எல்லாம் அடங்காதது என்ற பெரிய உண்மைதான் இதற்கு விளக்கம்.

2—3. அடுத்தாற்போல் நம் மனத்தைக் கவரும் சிற்பச் சித்திரங்கள் திருமகளும் கலைமகளும். இவை செல்வமும், கல்வியும் களி நடம் புரியும் காலத்தைக் காட்டுகின்றன. கோயில் பிராகாரத்தில் இருபுறங்களிலும் கல்வியையும் செல்வத்தையும் காப்பது போல் காட்சியளிக்கும் இச்சிற்பங்களில் திருமகளுக்கு மாத்திரம் மண்டபம் கட்டி, பூசைகள் செய்யக் கூடிய வசதியோடு விளங்குவது கல்வியைவிடச் செல்வத்தைப் பெரிதாகப் போற்றிப் புகழும் பாமர உலகவாழ்வை எடுத்துக் காட்டுகிறது!

4. கடைசியாக மனத்தைக் கொள்ளைகொள்ளும் சிற்பச் சித்திரங்கள் திருபுவன சுந்தரிகள். ஆம்! திருபுவனம் கோயிலிலுள்ள இந்த அழகுசுந்தரிகளுக்குப் பலப் பல பெயர்களிட்டு அழைத்தாலும் 'திருபுவன சுந்தரிகள்' என்று நாம் சூட்டும்பெயர் அழகாகவும் பொருத்தமானதாகவும் சிறந்ததாகவுமே இருக்கும்.




இப்பொழுதே
பறந்து சென்று
மிச்சப்படுத்துங்கள்

# கிராமங்களில்

கனம் எம். பக்தவத்ஸலம்

ஜனங்களிடையே நற்பண்புகள் வளரும்போதுதான், சுதந்திரத்தின் பயனை அனுபவிக்கும் சந்தர்ப்பம் கிடைக்கிறது. இக் கருத்தை விளக்கும்போது, திருவள்ளுவர்,

"மடிமை, குடிமைக்கண்தங்கின், தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்"

(மடிமை - சோம்பல், ஒன்னார் - பகைவர்)

என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார். "குடிமக்களிடையே, உழைப்புத் தன்மை குறைந்து, சோம்பல் அதிகமாகுமேயானால், பகைவர்க்கு அடிமையாகும் நிலைமை ஏற்பட்டு விடும்" என்று எச்சரிக்கை செய்கிறார். ஆதலால், சுதந்திரம் பெற்றதை விட, அதைப் பாதுகாத்து வளர்ப்பது மிகவும் அவசியம். சுதந்திரம் பறி போகாமல் இருக்க வேண்டுமானால், நாட்டு மக்கள் சோம்பல் என்னும் அரக்கனுக்கு இரையாகக்கூடாது.

சோம்பல் அரக்கனின் பிடியிலிருந்து கிராமவாசிகளுக்கு விடுதலை கிடைக்காத வரையில், நாட்டுக்கு விடுதலை வாங்கித் தந்தும் பயனில்லை என்பதை முதன் முதலில் கண்டவர் மகாத்மா காந்தியடிகள். அந்நிய அரசாட்சியின் அலங்கோலத்தை எளிதில் எடுத்துக் காட்டி, அதை விரட்டியடிக்க முடிந்தது. ஆனால், மக்களின் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றையும் மழுங்க வைத்துப் பாழ்படுத்திக் கீழ் நிலையிலேயே வைத்துக் கொண்டிருக்கும் சோம்பல் என்னும் தீய குணத்தை எதிர்ப்பது அவ்வளவு சுலபமானதாக இல்லை. புதிய எண்ணங்களை எண்ணச் செய்வதும், மாறுதலை உண்டாக்க வேண்டும் என்ற உறுதியை ஊட்டுவதும், இவற்றுக்கான அறிவொளி பரப்புவதும், படிப்படியே நிறைவேற வேண்டிய அபிவிருத்தி வேலைகள். ஒவ்வொரு கட்டத்திலும் எத்தனையோ கஷ்டங்கள் நேரிடும். சோம்பல் அரக்கனுக்குத் துணையாக அறியாமை, வீண் பிடிவாதம், மூர்க்கத்தனம், சுயநலம், பழமைப்பித்து முதலிய தீய சக்திகளும் கிளர்ந்தெழும். மக்களைத் தவறான பாதையில் செலுத்தும் தவறான பிரசாரம், ஆணவப் பேச்சு, அதிகார தோரணை, சர்வாதிகார நடவடிக்கைகள் முதலியன கிராம ஜனங்களை என்றும் பயமுறுத்திக் கொண்டே வந்துள்ளன.

சோம்பல் அரக்கனுக்குத் துணையாக நிற்கும் அறியாமை, வீண் பிடிவாதம், மூர்க்கத்தனம், சுயநலம் முதலிய தீய சக்திகளையும் எதிர்த்துப் போராடினால்தான் உண்மையில், கிராமவாசிகளுக்கு விடுதலை கிடைக்க முடியும். இதைத் தூர திருஷ்டியோடு உணர்ந்தவர் மகாத்மாஜி. எனவே, முதலாவதாக, மக்களின் சோம்பலை உடனடியாகப் போக்கி, அவர்களுக்கு வேலை கொடுப்பதற்காக, அநேக திட்டங்களை உருவாக்கினார். கிராமக் கைத்தொழில்கள் வளர்வதற்கான ஆலோசனைகளைக் கூறினார். கதர் அபிவிருத்தி, குடிசைத் தொழில் வளர்ச்சி முதலியன கிராமவாசிகளின் சோம்பல் வாழ்வை மாற்றியமைப்பதற்கான சாதனங்கள் என்பதை அநுபவ பூர்வமாக உணர்த்தினார். இந்தக் காலப் பொது மக்களைப்போல, எதிர்காலச் சந்ததியார் சோம்பலை வளர்த்து வாழ நினைக்கக் கூடாது என்ற கருத்தோடு, ஆதாரக் கல்வித் திட்டத்தை உருவாக்கினார். சிறு குழந்தை முதற்கொண்டே, சோம்பல் வாழ்க்கையை உதறித் தள்ளி, உழைப்புத் திறமையை வளர்த்துக் கொள்ள வழி காட்டினார். தேச சுதந்திரப் போராட்டம் நடந்து கொண்டிருந்தபோதே, சோம்பலிலிருந்து விடுதலை பெறும் போராட்டத்துக்குக் கிராம மக்களைத் தயார் செய்தார்.

இதன் விளைவு என்ன? நாடு சுதந்திரம் பெற்றது. ஐந்தாண்டுத் திட்டங்கள் உருவாயின. நாட்டு மக்களது வாழ்வில் இன்பம் தழைக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, நம் நாட்டு மூலப் பொருள்களையும், மக்கள் சக்தியையும் தக்கவாறு பயன்படுத்தி, திட்டமிட்ட ரீதியில் அபிவிருத்தியை ஏற்படுத்த நேருஜியின் தலைமையில், நம் நாட்டுப் பெரியோர்கள் சேவை செய்து வருகின்றனர். முக்கியமாக, கிராமவாசிகள் வாழ்வு வளம் பெறுவதற்கான, சமுதாய நலத் திட்டம் (Community Projects) தேசியவளர்ச்சித் திட்டம் (National Extension Service) சமுதாய அபிவிருத்தித் திட்டம் (Community Development) ஸ்தல அபிவிருத்தித் திட்டம் (Local Development works) என்ற பல்வேறு கிராமத் திருப்பணிகள், இந்திய நாடெங்கும், கடந்த நான்கு வருஷங்களாக நடைபெற்று வருகின்றன. 1952-ம் வருஷம் அக்டோபர் மாதம் காந்தி ஜெயந்தியின்போது தொடங்கப் பெற்ற இத்திட்டங்கள், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகால முடிவுக்குள், பல்வேறு ராஜ்யங்களில் உள்ள கிராமாந்திரப் பிரதேசங்களில் தேசிய வளர்ச்சித் திட்டத்தின் கீழ், அநேக வசதிகள் பெற ஏற்பாடாகியுள்ளது.

சுருங்கச் சொன்னால், இத் திட்டங்களெல்லாம் சோம்பல் என்னும் அரக்கனை எதிர்த்து நடத்தும் போராட்டம் என்று கூறலாம். 'எல்லாவற்றையும் அரசாங்கமே செய்து விடுவார்கள்' என்ற எண்ணம் கிராமவாசிகளிடையே நீடிக்கும் வரையில், அரசாங்கம், கிராமவாசிகள் ஆகிய இரு சாரார்க்கும் நன்மையில்லை. அபிவிருத்தித் திட்டங்களுக்காக அரசாங்கம் செலவழிக்கக் கூடிய தொகை, மிகவும் சொற்பமானது என்பது எல்லோருக்கும் தெரியும். ஏதோ ஒரு சில கிராமங்களுக்கு மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில வேலைகளைச் செய்து விட்டு, அரசாங்கம் இருந்து விட முடியும். அதன் பலனாக எண்ணற்ற கிராமங்கள் "நமக்கு எப்போது நல்லகாலம் வரும்?" என்று ஏங்கிக் கொண்டு காலம் நடத்துவது இயற்கையாகி விடும்.

அந்த நிலைமை இப்போது அடியோடு மாறி இருக்கிறது. முயற்சியுடையோர் முந்திக் கொள்ளலாம். கூட்டுறவுத் தொண்டில் நம்பிக்கையுடையோர், உடனடியான பயன் பெறலாம். அரசாங்கம் அதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தயாராய் இருக்கிறது. கிராமத்தின் பொதுநல வசதிகளைப் பற்றிக் கவனம் செலுத்துவோர், தாமாக முன்வந்து வேலையைத் தொடங்கத் தயாராக இருந்தால், அரசாங்கம் அதற்காகும் செலவில் ஓரளவைக் கொடுத்து உதவுவதோடு, தக்க அதிகாரிகளின் ஆலோசனைகளும் மேற்பார்வையும் கிடைக்க ஏற்பாடு செய்கிறது.

பள்ளிக்கூடக் கட்டடங்கள், ரஸ்தாக்கள், குடிநீர்க் கிணறுகள், ஆஸ்பத்திரிகள், பிரசவநிலையங்கள், வானொலிநிலையங்கள், வாசகசாலைகள் முதலியவற்றை அமைக்க, உடனடியாக உதவி அளிக்கப்படுகிறது. இதுவரை 2500 மைல் கிராம ரஸ்தாக்கள் பொது மக்கள் ஆதரவோடு போடப்பட்டுள்ளன. 2000 புதுக் கிணறுகள் நிர்மாணமாகியுள்ளன. ஒவ்வொரு துறையிலும் இப்படியே புள்ளி

# புதிய விழிப்பு



விவரங்களைக் கொடுத்துக் கொண்டு போகலாம். இதுவரை மொத்தம் 122 லட்சம் ரூபாய்க்கு மேல், பொதுஜன நன்கொடை கிடைத்துள்ளது.

கிராமங்களில் சில வசதிகளை மட்டும் ஏற்படுத்தி விட்டால் மக்கள் வாழ்வு முன்னேறி விட்டதாகக் கருதிவிட முடியாது. ஜனநாயகப் பண்புகள் வளரவும், கூட்டுறவு இயக்கம் செழித்தோங்கவும், மாதர், இளைஞர், கிராமக் கைத் தொழிலாளர் முதலியோரின் பரிபூரண உழைப்பைப் பெறவும், தக்கநடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். பஞ்சாயத்துச்சபை, கிராம சேவாசங்கம், மாதர் சங்கம் முதலியன ஒவ்வொரு கிராமத்துக்கும் ஏற்பட்டு, விழிப்போடு பணியாற்ற முன் வரவேண்டும். இந்த ஸ்தாபனங்களெல்லாம் பெயரளவில் இருந்தால் யாருக்கும் பலனில்லை. திட்டக் கமிஷன் உபதலைவர் ஸ்ரீ வி. டி. கிருஷ்ணமாச்சாரி குறிப்பிடுவது போல, ''கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பமும் அபிவிருத்தி யடைவதற்கான திட்டங்களை, ஒவ்வொரு கிராமமும் உருவாக்க வேண்டும்.'' உருவாக்கிய திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பையும், கிராமப் பொதுநல ஸ்தாபனங்கள் மேற்கொள்ள வேண்டும்.

அரசாங்கத்தைப் பொறுத்தவரை, கிராம மக்களுக்குத் தக்க ஆலோசனை கூறவும், காலாகாலத்தில் உதவி புரியவும் புதிதாகப் பல அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர். புதிய கடமைகளைத் திறம்படச் செய்வதற்கான பயிற்சியும் அவர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆகவே, ''முழு நேரமும் கிராம சேவை செய்வதற்கான ஊழியர்கள் இல்லையே?'' என்று யாரும் குறைகூற முடியாது. நியமிக்கப்பட்டுள்ள பல்வேறு இலாக்கா அதிகாரிகளின் சேவையைத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்வது கிராமவாசிகளின் பொறுப்பாகும். இதற்காகவே கிராமத் தலைவர்கள் பயிற்சி முகாம்கள், பல்வேறு வட்டாரங்களில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதிகாரிகளும் பொதுமக்களும் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டியதற்கான சூழ்நிலை இதன் மூலம் உருவாவது நிச்சயம்.

தவிர, நாட்டின் பல்வேறு பாகங்களில் நடைபெறும் அபிவிருத்தி வேலைகளை நேரில் கண்டறிந்து, அநுபவ அறிவை வளர்த்துக் கொள்ளவும் அரசாங்கம் தக்க வசதி செய்கிறது. கிராமத் தலைவர்களைப் பல்வேறு ஜில்லாக்களுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்யவும், ஐந்தாண்டுத் திட்டத்தில் நடைபெற்றுள்ள சாதனைகளை நேரில் காணவும், கிராம அபிவிருத்தி இலாகா ஏற்பாடு செய்துள்ளது. அகில இந்தியாவிலுள்ள பல்வேறு அபிவிருத்தி ஸ்தலங்களைக் காணவும், சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களைக் கண்டு அறிவு விளக்கம் பெறவும், கிராமவாசிகளுக்கென 45 நாட்கள் கொண்ட அகில இந்திய யாத்திரை ஒன்று, சென்னை அரசாங்கத்தாரால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நவம்பர் மாதம் ஒன்பதாம் தேதி தொடங்கும் இந்த யாத்திரையில் கலந்து கொள்ளும் சுமார் நானூறு பேர்கள், ஆறு வாரங்களில் கல்கத்தா, காசி, ஹரித்துவாரம், டெல்லி, அமிருதசரஸ், பிருந்தாவனம், அஜந்தா, எல்லோரா, பம்பாய், பெங்களூர், மைசூர், பவானி சாகர், கன்னியா குமரி, மதுரை, ராமேசுவரம், நெய்வேலி முதலிய அநேக இடங்களைக் காணலாம். இது தவிர, பாரத சேவா சமாஜம், சாரணர் இயக்கம், செஞ்சிலுவைச் சங்கம், சமூக நல போர்டு முதலிய அதிகார சார்பற்ற ஸ்தாபனங்களின் ஆதரவையும் ஆசியையும் பெற்று முன்னேறக் கிராமச் சேவையாளர் முற்பட வேண்டும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, அரசாங்க விதிமுறைகளில் அநேக புதிய மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. கிராமத்தில் தோன்றியுள்ள விழிப்பின் காரணமாகப் புதிதாக நடைபெற வேண்டிய அநேக திட்டங்களின் தேவைக்கேற்றபடி, பழைய அரசாங்க விதிமுறைகள் புனராலோசனை செய்யப்பட்டு வருகின்றன. உதாரணமாக, கிராமப்பிரதேசங்களில் வீடுகள் கட்டுவதற்காகக் கடன்கள் கொடுக்கும் விஷயத்தில், ''தக்காவி'' கடன் சட்டம் திருத்தியமைக்கப்பட்டுள்ளது. இதுவரையில் சுமார் 1500க்கு மேற்பட்ட வீடுகள் கிராமாந்திரப் பிரதேசங்களில் புதிதாக நிர்மாணமாகியுள்ளன. இத்துறையில் அதிக ஊக்கம்காட்டி விதிகளைத் தக்கவாறு பரிசீலனை செய்து திருத்தி யமைத்தவர், அடிஷனல் டெவலப்மெண்ட் கமிஷனராக இருந்த ஸ்ரீ என். சு. எஸ். ராகவாச்சாரியாவார். அரசாங்கத்தின் மான்யம் எதுவும் இல்லாமல், கிராமவாசிகள் புதிய வீடுகளை நிர்மாணிக்கும் வசதி பெற்றுள்ளனர். பேராசிரியர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பு இத்தகைய யோசனை ஒன்றை வெளியிட்டார். அது பலருக்கும் ஞாபகம் இருக்கலாம். புதிய வீடுகள் கட்ட, அரசாங்க நிதியைச் செலவிடக் கூடாதா என்று அவர் கேட்டிருந்தார். அரசாங்கமே புதிய வீடுகள் கட்டிக் கொடுப்பதைவிட, பொது மக்களே தம் வசதிக்கேற்ப சுயமுயற்சியால் இப்போது புதிய வீடுகள் அமைத்துக் கொண்டிருப்பது குறிப்பிடத் தக்க சாதனை அல்லவா?

அத்துடன், கிராமக் கைத்தொழில் வளர்ச்சியிலும் கிராம மக்கள் சிரத்தையோடு உழைக்க வேண்டும் என்று நான் வற்புறுத்திக் கூற விரும்புகின்றேன். சென்னை ராஜ்யத் தொழில் இலாக்கா இத்துறையில் அநேகதிட்டங்கள் உருவாக்கியுள்ளன. அநேக பயிற்சி நிலையங்கள், தொழிற்சாலைகள், கடன் வசதிகள் முதலியன ஏற்பாடு செய்ய முன் வந்துள்ளது. அம்பர் சர்க்கா, கதர் அபிவிருத்தி, 'வார்தா' செக்கு, மண் பாண்டத் தொழில் முதலிய அநேக தொழில்களுக்குப் புத்துயிர் ஊட்டி, ஒவ்வொரு கிராமமும் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு சுபிட்சமாக வாழ வழி ஏற்படும். அப்போது தான் நம் நாடு சுதந்திரத்தின் முழுப் பயனை அடைந்ததாகக் கருத முடியும். மற்ற நாடுகள் எல்லாம் நம்மை மேலும் மதித்துப் போற்றும்.

மேனாடுகள் பலவற்றில், இப்போது ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டு வருவதை, சமீபத்தில் என் ஐரோப்பியப் பிரயாணம் மூலம் அறிய முடிந்தது. அங்கே நகரங்களைவிடக் கிராமங்களில் தான் இப்போது தொழில் வளம் பெருகி வருகிறது. கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் உள்ள வேற்றுமை, கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருகிறது. கிராமங்களில் எல்லா வசதிகளும் ஏற்பட வழி செய்து விட்டால், ஜனங்கள் கிராமங்களை விட்டு நகரங்களுக்கு ஏன் போகிறார்கள்?

---



1. பவானிசாகரம் சமுதாய நலத் திட்டத்தில் புகையிலைப் பயிர் செழிக்கிறது. 2. புதுப்பீர்க்கடவு கிராமத்தில் ஸ்தல அபிவிருத்தி வேலைகள் நடைபெறுகின்றன. குடிநீர் வசதி செய்யப்படுகிறது. 3. கோவை ஜில்லா, திருப்பூரில் கதர் உற்பத்தி வேலை வளர்கிறது. வஸ்திரங்களில் வர்ண சித்திரங்கள் உருவாகின்றன.

# மகிழ மரம்





(ப)ர்ணசாலையின் வாசலில் மரமல்லிகையின் அடியில், அகன்ற பாறை ஒன்றின் மேல் பாஸ்கரன் உட்கார்ந்திருக்கிறான். முப்பது வயதிருக்கும். மெல்லிய, ஆனால் உரமான, உடல். முறுக்கேறிய வீணைத் தந்தியைப் போன்றது. கலைந்த கேசம்; முகத்திலே ஞானமும் மௌனமும் விகசிக்கின்ற ஒளி; எங்கேயோ தொலைவில் உள்ள பொருளைக் காண முற்பட்டு, பக்கத்தில் உள்ளவற்றைக் காண முடியாமல் கனவு காணும் விழிகள்; இப்போது, அவை, எதிரே பரந்து கிடக்கும் கங்கையாற்று வெள்ளத்திற்கு அப்பால், சூரியன் அஸ்தமனமாவதை இமை கொட்டாமல் நோக்கிய வண்ணம் இருக்கின்றன.

ஆற்றிலிருந்து வரும் ஒற்றையடிப் பாதை வழியே, தண்ணீர்க் குடம் ஏந்தி வருகிறாள் லீலாவதி. பாஸ்கரன் அருகே வந்து நிற்கிறாள். வலது கையால் குடத்தை வருடிக் கொண்டு, மையல் படர்ந்த விழியால் அவனைப் பார்க்கிறாள். மெல்லப் பெருமூச்சு விடுகிறாள். இளவேனிலின் பெண் வடிவமோ என்று சொல்லும்படி உள்ளது அவளது தளிர் அழகு. அவனுடைய கண்கள் அஸ்தமனத்தில் நிலைத்திருக்கின்றன.)

**லீலாவதி :** (பெருமூச்சுடன்) மாலை வந்து விட்டது... மறுபடியும் வந்து விட்டது. என்ன, நான் சொல்வது காதில் விழவில்லையா? இதோ பாருங்கள், பறவைகள் கூட்டங் கூட்டமாகச் சோலைக்குள் நுழைகின்றன, கூட்டிலடங்க....

**பாஸ்கரன் (திரும்பாமல்) :** யாரது, லீலாவதியா?

**லீலா (வெறுப்புடன்) :** ஆமாம், பெயர்தான் லீலாவதி....

**பாஸ் :** பெயருக்கென்ன, பெயர் நம்மைக் கேட்டா வைக்கிறார்கள்?

**லீலா :** எதைத்தான் நம்மைக் கேட்டுச் செய்கிறார்கள்?...உ...ம்...அதைப் பற்றிப் பேசுவானேன்? பேசினாலும் உங்களுக்குப் புரியப் போகிறதா?

**பாஸ் :** எனக்குப் புரியத்தான் இல்லை. இன்று ஆறரை விநாடி கழித்து சூர்யாஸ்தமனமாக வேண்டும், என் கணக்குப்படி. ஆனால், இதோ கடிகை ஆறு விநாடி காட்டுகிறது. சூரியன் இப்போதுதான் மறைந்தான். கடிகை தவறியதா, கணக்குத் தவறியதா, அல்லது இந்த சூரியன் தவறி விட்டானா?

**லீலா :** அத்தனையுமில்லை, விதிதான் தவறியது.

**பாஸ் :** விதியா?....

**லீலா :** ஆமாம், இல்லாவிட்டால் சூரியன் மறைந்ததும், சந்திரன் தோன்றுவானேன்?

**பாஸ் :** அதுதானே இயற்கை? ஆனால் ஒவ்வொரு நாளும் தோன்ற மாட்டான். குழந்தைக்குக்கூட இது தெரியுமே! சந்திரனுடைய கதியும், பூமியின் கதியும் வெவ்வேறானவை. அதனால் தான்...

**லீலா:** அதனால் தான் மாலையில் மல்லிகை மலர்கிறது. மதுவுண்டவன் போல் தென்றல் தள்ளாடி வருகிறது. அன்றின் புலப்பம் நெஞ்சில் வேல்போல் பாய்கிறது. இரவு நெருப்பைக் கக்குகிறது.

**பால்:** ஆமாம், இந்த நட்சத்திரங்கள் எல்லாம் கனல் உருண்டைதானே? ஆனால் அவற்றின் நெருப்பு இங்கே நாம் உணரும்படி வருகிறதில்லையே! அவற்றின் ஒளி இங்கே வருவதற்குகூடக் கோடிகோடி வருஷங்கள் ஆகின்றன என்று குருதேவர் சொன்னார். அதை ஆராயவேண்டும், எத்தனை வருஷங்கள் என்று கணக்கிட வேண்டும்... பிறகு...பிறகு...

**லீலா:** வானமுகட்டைக் கையால் தொட வேண்டும், வைய விளிம்பைச் செப்பனிட வேண்டும். அதெல்லாம் பிறகு...இப்போது...

**பால்:** இப்போதென்னவாம்? ஏன் லீலாவதி, இப்படிப் புருவத்தை நெரிக்கிறாய்; கண்கள் ஏன் இப்படிச் சிவந்திருக்கின்றன?

**லீலா:** இப்போதென்ன என்றுதெரியவில்லையா? பர்ணசாலையில் உங்கள் மனைவி லீலாவதி இருக்கிறாள்.

**பால்:** எப்போதுந்தான் அவள் இருக்கிறாள், அதற்கென்ன? உனக்கு உடம்புக்கு ஏதாவது.....

**லீலா:** அதிலே குறையொன்றும் இல்லை. அதுதான் என் குறை.

**பால்:** நீ ஏதோ புதிர் போடுகிறாய். வானத்திலே உள்ள புதிர்களை அவிழ்க்கவே நேரத்தைக்காணோம்... அடேயப்பா, இந்த விசுவ வெளியை எண்ணும்போது என் அறிவு சிலிர்க்கிறது. இந்த அறிவுச் சிறு விளக்கைக் கொண்டு, அண்டகோளங்களின் உறவை, தாரகைத் திரளின் இரகசியத்தை அளந்துவிட முடியுமா? ஏன் முடியாது? அதற்காகவே வாழ்ந்தால் ஏன் முடியாது?

**லீலா** (சிரித்துக்கொண்டு): அதெல்லாம் இருக்கட்டும். இப்போது நான் மகிழஞ் செடிக்குத் தண்ணீர்விடப் போகிறேன், நம்முடைய மகிழஞ் செடிக்கு.

**பால்:** மகிழஞ் செடியா?

**லீலா:** மறந்து விட்டீர்களா? நான் இங்கே வந்த அன்று, நீங்களும் நானும் சேர்ந்து மகிழஞ் செடி ஒன்று நடவில்லையா, அதுதான். காட்டுக்குள்ளே தேக்கமர நிழலில், வெய்யிலுக்காக வாடித் தவித்த அந்தச் செடி இப்போது தளிர்த்து விட்டது.

**பால்** (அலட்சியமாக): சரிதான்!

**லீலா:** என்ன அவ்வளவு அலட்சியமாகக் கேட்கிறீர்கள்? ஆமாம், தளிர்த்து விட்டது. பெண்ணொருத்தியின் யௌவனத்தைப் போல, மினுமினுப்புடன் வளர்ந்து விட்டது. பெண் மனத்தைப் போலவே, இந்தத் தென்றலில் சஞ்சலப் படுகிறது. இங்கே பாருங்கள், அங்கே என்ன, அதற்குள், வானத்திலே துழாவத் தொடங்கி விட்டீர்கள்?

**பால்:** இல்லை. மூன்றும் பிறையைப் பார்த்தேன். சந்திரனுடைய கதி விசித்திரமானது.

**லீலா:** ஒரு நிலையில் இல்லாத அவனை ஏன் பார்க்கிறீர்கள்? ரோகிணியைப் பாருங்கள்.

**பால்:** ஆமாம். சந்திரனுக்கும் அந்த நட்சத்திரத்துக்கும் என்ன உறவு என்பதைக் கணிக்க வேண்டும்.

**லீலா:** எனக்குத்தெரியும், கணிதம் தேவையில்லை.

**பால்:** உனக்குத் தெரியுமா?

**லீலா** (உதட்டைக் கடித்துக் கொண்டு): தெரியும், தெரியும், தெரியும், என்னைப் போன்ற ஒவ்வொரு பெண்ணுக்கும் தெரியும். ரோகிணியும், சந்திரனும் மனைவியும், கணவனும் தெரிகிறதா? அதனால்தான்..

**பால்:** பழைய கதை இது.

**லீலா:** அதனால்தான் ரோகிணி சந்திரனை விடாமல்தொடர்கிறாள்.

தொடர்ந்தும் என்ன, அவனைத் தொட முடிகிறதா?

**பால்:** பழங் கதை. பழங் கதை.

**லீலா:** ஆனால் இன்னும் நடைபெறுகிறது.

பேராசிரியர்
அ. சீநிவாசராகவன்





பாஸ்: அவற்றை யெல்லாம் கணித வாளால் வெட்டி எறிய வேண்டும். ஆனால் அறிவின் சிறு சுடர்.. இரு. அதென்ன சத்தம்....?

லீலா: குயில் கூவுகிறது....

பாஸ்: இரவிற் கூவுமா? ஏன் இப்படிக் கத்துகிறது? குயிலின் குரல் இனிமை என்பார்களே?

லீலா: அதுவா...? அது ஒரு கதை.... நான் சொல்ல மாட்டேன்.

பாஸ்: ஏன்? அதோ பார், மறுபடியும் உயிரை விட்டுவிடும் போல் இருக்கிறதே! அதன் குரல் எதையோ எட்டிப் பிடிக்க முயன்று உடைந்து விட்டது. அதுதான் இப்படிக் கத்துகிறது.

லீலா: ஏன் கத்தாது? அது வேனிற்காலக் குயில்.

பாஸ்: அப்படி யென்றால்....

லீலா (சலிப்போடு): வேனிற் காலத்திலே குயில் எதைத் தேடும்? பகல் முழுவதும் பாடிப் பாடித் தேடியது. கிட்டவில்லை, இப்போது இரவில் வெறி கொண்டு கதறுகிறது. கத்தட்டும், கத்திச் சாகட்டும்.

பாஸ்: குயிலின் பேரில் உனக்கென்ன கோபம்?

லீலா: குயிலின்பேரில் இல்லை, என் மேல் தான்... அம்மா காத்துக்கொண்டிருப்பாள், நான் போகிறேன்.

பாஸ்: அம்மா வந்திருக்கிறாளா?

லீலா: நீங்கள் இந்த உலகத்தில்தான் இருக்கிறீர்களா? காலையில் அம்மா வந்திருக்கிறாள் என்று சொன்னேனே, ஞாபகம் இல்லையா? அதோடு...

பாஸ்: இல்லை, இல்லை. இந்தச் சிம்மராசியை இன்று கவனிக்க வேண்டும்.

லீலா: எல்லாம் நாளைக்கு. இந்தப் பனி உடம்புக்கு ஆகாது. நான் போகிறேன், உள்ளே வாருங்கள். இந்தக் குயில் ஓயமாட்டேன் என்கிறது. தரித்திரம்!

*[போகிறாள். தோலையில் நின்று கொண்டு திரும்பிப் பார்க்கிறாள்.]*

பாஸ்: பனியா? உண்மையை நாடிச் செல்லும் ஞானிக்குப் பனியேது, குளிரேது...? ஆமாம், ஏன் குயிலிடம் லீலாவதிக்கு இவ்வளவு கோபம்? பெண் மனம் இந்த விகல [illegible]யை விடப் புதிராகத்தான் இருக்கிறது. அதற்கு இப்போது நேரமில்லை. சிம்மராசி, இதோ வானில் தொங்குகிறது. அதன் பேச்சு புரிகிறதா, பார்க்கலாம்.

*[வானத்தைப் பார்த்தபடி அமர்ந்து விடுகிறான். லீலாவதி பெருமூச்சுடன் பர்ணசாலைக்குள் நுழைகிறாள்.]*

## காட்சி – 2

*[அதே பர்ணசாலையின் முன்றில். இடது புறம் ஆறு. ஏழு வருஷம் வளர்ச்சி உள்ள மகிழ மரம். மகிழ மலர்களை மாலையாகத் தொடுத்துக் கொண்டு லீலாவதி உட்கார்ந்திருக்கிறாள். இளவேனில் இரவின் முற்பகுதி. வானில் மூன்றாம் பிறை. சோலையிலே குயிலின் குரல். லீலாவதி பாடிக் கொண்டிருக்கிறாள்.]*

லீலா (பாடுகிறாள்):

**மார்கழிமாசக் குளிரில் விதைத்தது இம்**
**மாசி வெயிலில் மலர்ந்தது உன்**

**வார் குழல் மேகப் புகையினிலே ஒளிர்**
**வண்ணமலர்க் கொத்தின் இன்ப வெறி.**

**அன்றெந்தன் உள்ளக்கனியிலே இட்டேன்**
**ஆயிரம் ஆயிரம் அன்பு விதை**

**ஒன்றிரண்டாயினும் ஓங்கி வளர்ந்திடில்**
**உன் மனம் எட்டிப் பறியாதோ?**

*[இடதுபுறமிருந்து சித்ராங்கதன் வருகிறான். பகட்டான உடை அணிந்திருக்கிறான். முப்பது முப்பத்தைந்து வயதிருக்கும். கட்டமைந்த உடல்; வசீகரமான முகம்; பருத்த கிழுதொந்து இச்சைப்பட்டவன் என்பதைக் காட்டுகிறது. உலகப் பொருளிலே, அது தரும் இன்பத்திலே எளிதில் கருவிழுந்தவன்.]*

சித்ரா: நானும் அப்படித்தான் எண்ணுகிறேன்.

லீலா: (எழுந்து நின்று): யாரது, சித்ராங்கதப் பிரபுவா? ஏதோ சொன்னீர்களே...?

சித்ரா: நானும் அப்படித்தான் எண்ணுகிறேன் என்று சொன்னேன்.

லீலா: எப்படி எண்ணுகிறீர்கள்?

சித்ரா (தணிந்த குரலில்):

**ஒன்றிரண்டாயினும் ஓங்கி வளர்ந்திடில்**
**உன் மனம் எட்டிப் பறியாதோ?**

லீலா (நகைத்து): அதுவா? அது கிடக்கட்டும். வந்த காரியம் முடிந்ததா? ஆசார்யரைப் பார்த்தீர்களா?

சித்ரா: பார்த்தேன், பார்த்தேன். அவர் வான முகட்டில் எங்கேயோ உட்கார்ந்து சூரியனுக்கும் சுக்கிரனுக்கும் கயிறு போட்டுக் கொண்டிருக்கிறார். இந்த மண்ணுக்கு அவர் வந்தால் அல்லவா பேசலாம்?

லீலா: பேசவே இல்லையா?

சித்ரா: பேசினேன், மூன்று நாட்கள் காத்திருந்த பிறகு இன்றுதான் பேசினேன். அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை.

லீலா: அப்படியா?

சித்ரா: ஆமாம். அரசரோ புதிய நகரம் நிர்மாணிக்க வேண்டும், புதிய அரண்மனையும், கோட்டையும் கட்ட வேண்டும் என்கிறார். நான்தான் சொன்னேன், பாஸ்கராச்சார்யார்தான் இவற்றிற்குத் திட்டம் வகுக்கத் தகுதியுடையவர் என்று. என்னோடு படித்தவராயிற்றே என்ற பாசத்தினால்....

லீலா: அது சரி. ஆசார்யர் என்ன சொன்னார்?

சித்ரா: என்னத்தைச் சொல்ல? முதலில் நான் சொன்னதே அவருக்குப் புரியவில்லை. பிறகு, 'இதை யார் வேண்டுமானாலும் செய்யலாமே, நான் எதற்கு?' என்று சொல்லி விட்டு, தம் முன்னே பரப்பியிருந்த கணிதச் சுவடிகளில் ஆழ்ந்து விட்டார்.

லீலா: சரிதான்.

சித்ரா: சரிதானா? அரசர் அனுப்பிய ஆயிரம் வராகனையும் அவர் முன் வைத்தேன். அதை அவர் திரும்பியே பார்க்கவில்லை.

லீலா: அதுவும் சரிதான்.

சித்ரா: அதுவும் சரிதானா? என்னை வேண்டுமானால் அவர் அலட்சியமாக நடத்தட்டும். அரசரிடமிருந்து வந்திருக்கிறானே என்றாவது....

லீலா: ஆயிரம் வராகன்! (நகைத்து) பராசக்தியின் சிங்கத்துக்கு உங்கள் கொல்லைப்புறப் புல்லைப்போட்டீர்கள், இல்லையா? உடனே அது வாலைக் குழைத்துக் கொண்டு வந்து விடும் என்று நீங்கள் எண்ணினீர்கள்.

சித்ரா (சிறிது எரிச்சலுடன்): பராசக்தியின் வாகனத்தைப் பற்றியும் அதன் வாலைப் பற்றியும் எனக்கு என்ன தெரியும்? எனக்கும் என்ன, உன்னைப் போல் கவிதை வருமா, அல்லது உன் கணவரைப் போல் கணிதம் வருமா? ஏதோ என்னோடு படித்தவனாயிற்றே என்று வந்தேன். இந்தப் பாஸ்கரன் மட்டும் நான் சொல்கிறபடி கேட்டால்....

லீலா: கேட்டால் என்னவாம்?

சித்ரா: கேட்டால் ராஜ சபையிலே ராஜ சிற்பியாக வீற்றிருக்கலாம். செல்வத்திலும் புகழிலும் திளைக்கலாம். இப்படி இந்தக் காட்டிலே திண்டாட வேண்டாம். உன்னையும் திண்டாட விடவேண்டாம். யார் வேண்டுமானாலும் செய்யலாமாம். நகர நிர்மாணச் சிற்பம் அவ்வளவு எளிதா?

**லீலா :** அண்டகோளச் சிற்பத்தை ஆராயும் ஒருவருக்கு அது எளிமையானதுதான். வடவைத் தீயை வீட்டில் அடுப்பெரிக்க அழைக்கிறீர்கள். வருமா? வந்தாலும் உங்களால் தாங்க முடியுமா?

**சந்ரா :** இதெல்லாம் கவிதை. இந்தப் பித்தனோடு எப்படித்தான் வாழ்க்கை நடத்துகிறாயோ?

**லீலா (சிரித்து) :** நடத்த முடியாதுதான்.

**சந்ரா :** வந்து விடு. அவன் வராவிட்டால் போகட்டும். உனக்குத்தான் அவனோடு வாழ்க்கை நடத்த முடியாது என்பது நன்றாய்த் தெரிந்திருக்கிறதே!

**லீலா :** நடத்த முடியாது. ஆனால் நடக்கலாம். அவரோடு நடக்கப் பழகிக் கொண்டு வருகிறேன்.

**சந்ரா :** உன் போக்கு எனக்கு விளங்க வில்லை. உன்னை எண்ணும் போதெல்லாம் எனக்குப் பித்துப் பிடித்து விடும் போல் இருக்கிறது. குருகுலத்தில் மான் குட்டியைப் போல் ஆடித் திரிந்த நீ, இங்கே எல்லாவற்றையும் இழந்து, வாழ்வின் இன்பம் எதனையும் உணராமல் இவனுடைய கணிதச் சிறையில் அடை பட்டுக் கிடப்பதைக் காண என்னால் தாங்க முடிய வில்லை. வா, வந்து விடு, என்னோடு வந்து விடு.

**லீலா (சிரித்து) :** வந்து விடலாம். ஆனால் அவர்...

**சந்ரா :** அவனைப் பற்றி என்ன கவலை? அவன் உன்னைப் பற்றி எண்ணுகிறானா? எங்கேயோ உள்ள சனியிடத்திலும், செவ்வாயின் மீதிலும் அவனுக்கு மோகம். இங்கே உன் இளமைக் கடல் கவனிக்கப்படாமல் கொந்தளித்துக் கொண்டிருக்கிறது. அவனைப் பற்றி என்ன கவலை?

**லீலா :** என்னைப் பற்றித்தான் நான் கவலைப்படுகிறேன். ஒரு காலத்தில் உங்களைப் போலவே நானும் நினைத்தேன். ஆனால்?....

**சந்ரா :** ஆனால் என்ன?

**லீலா :** குருகுலத்தில் நடந்தது தெரியுமா?

**சந்ரா :** தெரியாது. நீயும் பாஸ்கரனும் இங்கே வந்த பிறகு நானும் ராஜக்ருஹத்துக்குப் போய் விட்டேன். நீ போன பிறகு, அந்தப் பாழும் குருகுலக் காட்டுக்குத் திரும்ப மனமில்லை.

**லீலா (தொலைவில் நிலைத்த பார்வையோடு) :** குருதேவர் மறைந்து விட்டார்.

**சந்ரா (பரபரப்புடன்) :** குருதேவர், உன் தந்தை மறைந்து விட்டாரா? எப்போது?

**லீலா :** மூன்று வருஷங்களுக்கு முன்... அம்மாவும் போய் விட்டாள்.

**சந்ரா :** அம்மாவுமா?

**லீலா :** குருதேவரோடு உடன் கட்டை ஏறி விட்டாள். போகுமுன் எனக்குச் செய்தி ஒன்று அனுப்ப ஏற்பாடு செய்தாள். இதோ இருக்கிறது அது.

*[தலையணையிலிருந்து அவிழ்த்துச் சந்தனக் கட்டைத் துணுக்கு ஒன்றை எடுக்கிறாள்.]*

**சந்ரா :** என்ன இது?

**லீலா :** தெரியவில்லையா? பாதி எரிந்தும் எரியாமலும் உள்ள சந்தனக் கட்டைத் துணுக்கு. இதை எனக்கு அனுப்ப வேண்டும் என்று சிதை ஏறுமுன் அம்மா விரும்பினளாம். என் தாய் தந்த பதில் இது.

**சந்ரா :** பதிலா?

**லீலா :** ஆம். ஆறு வருஷங்களுக்கு முன் அம்மா இங்கு வந்திருந்தாள். யௌவனத்தின் போதையில் ஏதேதோ அவளிடம் பேசிக் குறைப்பட்டேன். 'பொறுத்திரு, பெண்ணே, உன் பிரச்னையை....'

**சந்ரா :** என்ன பிரச்னை?

**லீலா (நகைத்து) :** உங்கள் பிரச்னைதான். பொருளெல்லாம் தம்முடைய இன்பத்திற்கே என்றெண்ணி, அவற்றை விழுங்கப் பொங்கியெழும் இளமைக் கடலின் கொந்தளிப்புத்தான். 'பொறுத்திரு, பெண்ணே, உனக்கு வழியைக் காட்டுகிறேன்' என்று சொல்லி விட்டுப் போனாள். போனவள் வரவில்லை. என் பிரச்னைக்கு விடை மட்டும் கிடைத்தது.

**சந்ரா :** இந்தச் சந்தனக் கட்டைதான் விடையா?

**லீலா :** ஆம். அது சொல்வது காதில் விழவில்லையா? 'கணவனோடு இருப்பதையே விரும்பித் தீயில் குதித்தாளே ஒருத்தி, அவள் வயிற்றில் பிறந்தவள் நீ' என்று எனக்குச் சொல்கிறது. நீ எதுவானாலும் என்ன, சந்தனக் கட்டையின் அனலோ, உள்ளத்தின் இச்சைத் தீயோ, இரண்டும் தழல்தானே?

**சந்ரா :** ஆகவே...

**லீலா :** ஆகவே வாழ்க்கையை நான் நடத்தவில்லை. நடத்த வேண்டும் என்று ஆசைப்படவும் இல்லை. அவர் நடத்துகிறார். நான் அவரோடு நடக்கிறேன்.

**சந்ரா :** அட தெய்வமே! இவனோடா, இந்தப் பித்தனோடா நடக்கிறாய்? அவன் உன்னைப் பற்றி எண்ணுவது கூட இல்லையே!

**லீலா :** அதனால் என்ன? அதோ, பிறைச் சந்திரன்!

**சந்ரா :** லீலாவதி! அதை யெல்லாம் என்னால் பார்க்க முடியாது. உன் முகத்தைத்தான்...!

**லீலா (கீழே நோக்கியவண்ணம்) :** என்னை... என்னை...

**சந்ரா :** ஆம், நேசிக்கிறேன். என் உயிருக்கும் மேலாக...

**லீலா :** என் பெண் முகத்துக்காகத்தானே?

**சந்ரா :** இல்லை, இல்லை. அதற்காக மட்டுமா? நான் என்ன, தவளைச் சேற்றிலே நெளியும் புழுவா? உனக்காக, உன் உள்ளத்திற்காக, நீ நீயாக இருப்பதற்காக.

**லீலா :** அப்படியானால் என் உள்ளம் உங்களுக்குத் தெரிய வேண்டாமா?

**சந்ரா :** எனக்குத் தெரிகிறது. என் உள்ளத்தைப் போலவே... அதுவும்...

**லீலா :** பிறையைப் பாருங்கள். அதன் அருகில் உள்ள நட்சத்திரத்தின் பெயர் தெரியுமல்லவா?

**சந்ரா :** ரோகிணி.

**லீலா :** சந்திரன் ரோகிணியைத் திரும்பிப் பாராமல் வானை அளந்து கொண்டு செல்கிறான். அவளோ, கவலை எதுவுமின்றி அவனோடு நடக்கிறாள்.

**சந்ரா :** லீலாவதி, இதை என்னால் தாங்கமுடியாது. இந்தப் பர்ணசாலையின் வறுமை... இவனுடைய கணிதப் பித்து... உன் உயிரைத் தேய்க்கும் இவனுடைய அலட்சியம்... வீணாகும் உன் யௌவனம்...

**லீலா :** சந்தனக் கட்டை பேசும் உடன் போக்கே என்னுடைய தர்மம்.

**சந்ரா :** லீலாவதி....! *(லீலாவதி போகிறாள்.)*

**லீலா (திரும்பி) :** ரோகிணி என் நட்சத்திரம்.

*[சந்திரசேகரன் துயரத்தோடு அவள் போன திசையைப் பார்த்துக் கொண்டு நிற்கிறான். சோலையிலே குயில் புலம்புகிறது.]*

## காட்சி – 3

*[அதே பர்ணசாலையின் முன்புறம். இப்போது காட்டு மல்லிகை மரத்தைக் காணோம். இடதுபுறம் இரண்டாம் காட்சியில் இருந்த சிறு மகிழமரம் இப்போது பிரும்மாண்டமாக வளர்ந்து ஓங்கி நிற்கிறது. கங்கை வெள்ளத்தின் மேலும், காட்டு வெளியிலும் பௌர்ணமி நிலவின் தேன் ஒளி.*

*பாறையில் அமர்ந்துள்ள பாஸ்கரன் மேல் மகிழ மலர்கள் விழுகின்றன. அவன் முகத்திலே காலம் உழுத கோடுகள். தலை நரைத்திருக்கிறது. முகத்திலே ஒளி குறையவில்லை. உடல் மட்டும் வலி குன்றியிருப்பதாக அறிவிக்கின்றது.]*

**பாஸ் :** உலகம் சாந்தி நிறைந்திருக்கிறது, என் மனத்தைப் போல. வானத்திலும் அமைதி. ஆனால் அது பிரமை. அங்கே, அந்த விசுவ வெளியில், பிரும்மாண்டமான பூத சக்திகள் ஓயாப் பூசல் விளைக்கின்றன. அவற்றை யெல்லாம் அளக்க முடியுமா? என் வரையில் நான் எடுத்துக் கொண்ட வேலை முடிந்தது. கோள்களின் சலனத்தை வரையறுத்து விட்டேன். சூரிய மண்டலத்தைக் கணித சித்திரமாக அமைத்து விட்டேன். ராசிகளில் உள்ள தாரகை உலகங்களை இரையாக ஆடும் கோள்களின் நடனத்தைக் கணக்கில் அடைத்து விட்டேன். என் வேலை முடிந்தது.

*[லீலாவதி வருகிறாள்.]*

**லீலா** (தொலைவிலிருந்தே): ஆசார்ய, வரலாமா?

**பால்**: வா, வா, லீலாவதி. வருவது லீலாவதி தானா? ஏன் இப்படித் தள்ளாடிக் கொண்டு வருகிறாள்? லீலாவதி, நீதானா? ஏன் இப்படிச் சோர்ந்திருக்கிறாய்? இங்கே வா, உன்னைப் பார்ப்போம். (அருகில் வந்து நிற்கும் லீலாவதியை உற்று நோக்குகிறான்.) இது என்ன, லீலாவதி? ஏன் இப்படி இளைத்துப் போனாய்? அடையாளமே தெரியவில்லையே! சுருக்கம் நிறைந்து உலர்ந்த இந்த முகம் என் லீலாவதியின் முகமா?

**லீலா**: ஆம், ஆசார்ய, லீலாவதிதான், ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள்?

**பால்** (பதற்றத்துடன்): இல்லை, இல்லை, என் லீலாவதியா இது?

**லீலா** (மெல்ல நகைத்து): ஆம், உங்கள் லீலாவதி தான். இப்போது...இப்போது...கிழவியாகிவிட்டாள்.

**பால்** (திகைப்புடன்): என்ன சொல்கிறாய், எனக்கு விளங்கவில்லையே!

**லீலா**: இதோ, இந்த மகிழ மரத்தைப் பாருங்கள், தெரியும். இது, நாற்பது வருஷங்களுக்கு முன் நாம் வைத்தோமே, அந்த மகிழஞ் செடி.

**பால்**: இங்கே வந்து நாற்பது வருஷங்கள் ஆகி விட்டனவா? இரு, இரு, ஆம், நாற்பது வருஷங்கள் ஓடிவிட்டன. அந்த மகிழஞ் செடியைக் காட்டிலிருந்து நீ கொண்டு வந்ததும், அதை நான் கூட இருந்து நட வேண்டும் என்று நீ பிடிவாதம் பிடித்ததும்...ஆனால்... ஆனால்...அப்போது...நீ...இப்படியா...இல்லை, இல்லை, எனக்கு என்னவோ செய்கிறது. என் நெஞ்சை நாற்பது வருஷத்துப் பேதைமை அழுத்துகிறது.

**லீலா**: பேதைமையா? வானத்தை அளந்த உங்கள் அறிவையா பேதைமை என்கிறீர்கள்?

**பால்**: வானத்தை அளந்தேனா? (கசப்புடன் நகைக்கிறான்) அதைவிட மகத்தான ஒன்று கண் முன் நின்றும் காண மறுத்தேன். இரு, அதென்ன சத்தம்?

**லீலா**: சோலையில் குயில் கூவுகிறது.

**பால்**: இரவிலா? ஆம்.. ஆம், நீ சொன்னது நினைவுக்கு வருகிறது. அப்போது காதிலே கூட வாங்காத சொற்கள் எப்படியோ நினைவுக்கு வருகின்றன. வேனிற்காலக் குயில், கத்தட்டும், கத்தட்டும், நன்றாய்க் கத்திச் சாகட்டும் என்றாய்.

**லீலா**: அந்தக் குயில் செத்து விட்டது.

**பால்**: நம் இளமையைப் போல. (ஆழ்ந்த துயரத்தோடு) லீலாவதி, என்னை மன்னித்துவிடு. உனக்கு, உன் பெண்மைக்குத் தீராத துரோகம் செய்து விட்டேன். எப்படித்தான் உணர்ச்சியற்ற இந்த இயந்திரத்தோடு நாற்பது வருஷங்கள் வாழ்ந்தாயோ?

**லீலா**: இன்பமாகத்தான் வாழ்ந்தேன். உண்மையிலேயே வாழ்ந்தேன். துரோகம் என்று பேசினீர்களே, நானல்லவா தீர்ப்புக் கூறவேண்டும்...?

**பால்**: என்னென்ன கனவுகளோடு வந்தாயோ? அவற்றை யெல்லாம் என் கடிகை மணலோடு [illegible] லாக்கிக் காலத்தையும், கோளையும் அளந்தேன். உன்னை மிதித்துக் கொன்றிருந்தாலும் குற்றமில்லை. அணு அணுவாய் என் அலட்சியத்தால் உன்னைச் சிதைத்தேன், கிழவியாக்கினேன். உன் மகிழ மரம் வளர வளர, நீ தேய்ந்து கொண்டிருந்தாய்.

**லீலா**: ஆசார்ய...!

**பால்** (சுற்றிலும் பார்த்து): இங்கே, காட்டு மல்லிகை மரம் ஒன்று இருந்ததே, அது?

**லீலா**: அது பட்டுப் போய்விட்டது.

**பால்** (ஆவேசம் கொண்டவனைப் போல): இதற்குப் பிராயச்சித்தம் ஏது? உன் இளமையும் அழகும் இனித் திரும்புமா? என்னால் பாலையாக வறண்ட உன் வாழ்க்கை இனி தளிர்க்குமா? என்ன கொடுமை!

**லீலா** (அன்பு ததும்பும் குரலில்): ஆசார்ய... இதென்ன இது? இளமை என்றாவது ஒரு நாள் அழியப் போவதுதானே? என் இளமை காலகதியால் மறைந்தது. உங்கள் இளமையைப் பற்றி நீங்கள் எண்ணினீர்களா? அதை, சத்திய வேள்வித் தீயிலே ஆகுதியாகப் பெய்தீர்கள். இளமையை இதைவிட மேன்மையாகப் பயன்படுத்த முடியுமா? உங்கள் அறிவுச் சுடர் விசும்பின் இருளை ஊடுருவிச் சென்றது என்றால், அதற்குக் காரணம் இந்தத் தியாகம் அல்லவா?

**பால்**: தியாகமா? உன்னை என் அறிவுப் பசிக்குப் பலியாக்கினேன். அதற்கு எனக்கு உரிமை ஏது?

**லீலா**: நீங்கள் செய்த ஞானயக்ஞத்தில் உங்கள் தர்மபத்னிக்கு உரிமை இல்லையா? அந்த உரிமையை நான் கொண்டாடினேன். அதில் உங்களுக்கு வருத்தமா?

**பால்**: இப்போது தெரிகிறது. அன்று அதைப் பழங்கதை என்றேன். அறிவு வாளால் அதை வெட்டி எறியவேண்டும் என்று பேசினேன். அன்று நடந்ததெல்லாம் இப்போது நினைவிலே உயிர்பெற்று என்னை வதைக்கின்றன. அன்று மூன்றாம் பிறை.

**லீலா** (பெருமிதத்தோடு): ஆம், அன்று பிறைச் சந்திரனாக இருந்தது இன்று வானத்தை வெற்றி கொண்ட முழு நிலவாயிற்று.

**பால்**: சந்திரனைப்பற்றி நீ சொன்ன கதை...

**லீலா** (புன்முறுவலுடன்): சந்திரனைப் பற்றியா, ரோகிணியைப் பற்றியா?

**பால்** (கண்கலங்கி, அவளைப் பார்த்து): அது தான் திரும்பிப் பாராத என்னைத் தொடர்ந்து வந்தாயா? ஆனால் ரோகிணி சந்திரனுக்கு ஒளி தருவதில்லை. நீயோ உன் தியாகத்தால் இந்த உடம்பைப் பாதுகாத்தாய். ஒரு வருஷமா, இரண்டு வருஷமா, நாற்பது வருஷ காலம், இந்த உடம்பு அழியாமல், அதன் நலிவால் என் அறிவு நலியாமல் காத்து நின்றாய். என் அறிவுக்கே ஆதாரமானாய். சந்திரனுக்கு ஒளி தந்த ரோகிணியை, அங்கே அந்த வானவெளியில் இல்லை, இங்கே என் முன்னே காண்கிறேன். என் அறிவு வெறும் கானல் நீர். உன் அன்பே, உன் தியாகமே ஞானத்தின் எல்லை நிலம்.

**லீலா**: அதுவும் இந்த மகிழமர நிழலில், உங்கள் நிழலில் வளர்ந்தது தானே? ஆசார்ய...

**பால்**: யார் ஆசார்யன்? நீதான் எனக்கு இனி வழிகாட்ட வேண்டும்.

**லீலா** (மெல்ல நகைத்து): நானா? உங்களை உணராமல் இளமையின் துடிப்பிலே என்னென்னவோ நினைத்துக் கலங்கிய இந்தப் பேதையா? உங்கள் அறிவின் தளராத ஒருமைப்பாடு அல்லவா எனக்கு உறுதி தந்தது? அறிவினால் வானவெளியை அளந்த ஞானவிருளையல்லவா இந்த ஏழை கணவனாகப் பெற்றாள்? இவள் இளமை ஒரு பொருட்டா? இந்தச் சாதனைக்கு உலகமே ஒரு பொருட்டா? உலகத்தாரைப் போலச் சிறுவீடு கட்டி நாம் வாழ்ந்திருந்தால் மட்டும், இந்த இளமை தேய்ந்திராதா? உங்கள் அறிவின் உன்னதத்தோடு ஒட்டி நின்றேன். நாற்பது வருஷமானால் என்ன, இன்று உங்களைப் பெற்றேன்.

[கீழே விழுந்து வணங்குகிறாள். அவன் பாதத்தைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொள்கிறாள்.]

**பால்** (கலங்கிய குரலில்): லீலாவதி...!

**லீலா**: இளமை வாடினால் என்ன? அது நாம் வைத்த இந்த மகிழமர மலர்போல வாட வாட மணம் வீசும். இளமையை வார்த்து, வாடா மணமுள்ள ஞானத்தைப் பயிர் செய்து விட்டீர்கள்.

**பால்**: இல்லை, இல்லை. என் ஞான சாதனை மறைந்து விடும். வரம்புடைய மனித அறிவின் இயல்பு அது. ஆனால் ஞானத்தின் ஞானமாய் நிற்கும் உன் அன்போ, அதற்கு அழிவேது? அதுவே..அதுவே..

**லீலா**: அதுவே நான் பெறத் தவம்செய்து இன்று பெற்ற செல்வம். [வணங்குகிறாள்]

**பால்**: லீலாவதி...! (திரை)





சங்கநாதத்தின் முழக்கம், தேர்ச்சி பெற்ற விரல்களால்
அழகாக வரையப்பட்ட சம்பிரதாயமான
கோலங்கள், மின்னும் விளக்குகள், எல்லாம் சேர்ந்து
மகிழ்ச்சியும் கொண்டாட்டமும் நிறைந்த இந்த
சுப விழாவைச் சோபிக்கச் செய்கின்றன.

குதூகலமான மனத்துடன் இதில் நாமும் கலந்து
கொண்டு, அமைதியும் சுபிட்சமும், உழைப்பும்
வெற்றியும் நிறைந்த ஒரு புது வருஷத்தை
ஆர்வத்துடன் எதிர்பார்ப்போமாக.



**மஹிந்திரா & மஹிந்திரா லிமிடெட்**

பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

PSMM-075







# கார்ட்டூன் கதம்பம்

விஜி

"ஐயோ! இவன் கதவை அடைத்து விட்டானே!"

எகிப்து

பிரிட்டன்

பிரான்ஸ்

சூயஸ் கால்வாய்







தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கட்சியிலே சாதி உணர்ச்சி மேலோங்கி யிருப்பதைக் கண்டு நேருஜி வியப்படைகிறார்!

வகுப்பு வாதம்!

சாதி யுணர்ச்சி!




காற்றடிக்கும் பக்கமெல்லாம்
காமராஜர் பறக்கிறார்.




பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள
மந்திரிசபை மாறுதலின்
காரணமாக பாகிஸ்தான்
இந்தியா நல்லுறவு வளரும்
என்று எதிர்பார்க்கப் படுகிறது.

பாரதத்தின் செல்வாக்கு
உயர்கிறது

1951 1952 1953 1954 1955 1956







நேருஜி நட்ட பஞ்சசீல மாம்
பலன் அளிக்கத் தொடங்கிவிட்டது.

நேருஜியின் முயற்சியால் யுத்த பீதி நீங்கி
உலகம் சற்று நிம்மதி அடைந்திருக்கிறது.

# லாம்பிரட்டா '48' தனக்கே உரியசிறப்புடன் விளங்கும் வாஹனம் Lambretta 48





வேண்டிய வேகங்கள் போட்டுக் கொள்ளவும் க்ளச் கண்ட்ரோலும் உள்ளது

லாம்பிரட்டா தயாரிப்பைச் சார்ந்த இந்த புதிய வாஹனம் எல்லா அம்சங்களும் ஒருங்கே அமையப்பெற்றது. இதன் 48 CC என்ஜின், மற்றும் வில் போல் வளைந்து கொடுக்கும் சக்தி வாய்ந்த பிரேம், நிதானமானதும், சுகமானதுமான சவாரிக்கு மிகவும் ஏற்றவை. ஓட்டும் செலவுகளும் மிக மிகக் குறைவே. ஒரு காலன் பெட்ரோலுக்கு 200 மைல்களுக்கு மேல் செல்லுவதென்றும் சிக்கனத்தை யோசித்துப் பாருங்கள். இந்த நவீன லாம்பிரட்டாவின் வேலைத்திறனை இன்றே பார்வையிடுங்கள்!



வில் போல் வளையும் சக்தி பெற்ற பின் சக்கரம்

- வில் போல் வளையும் சக்தி பெற்ற முன், பின் சக்கரம்
- கான்ஸ்டண்ட் மெஷ் கியர் பாக்ஸ்
- பெரிய பார்சல் வைக்க காரியர்

விலை ரூ. 790/-
சில்லரை வியாபாரம் எக்ஸ்-பாக்டரி

**ஆடோமொபைல் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிட்.**

பாண்டுப், பம்பாய் 40

PSAP-3L

சௌத் இந்தியா ஆடோமோடிவ் கார்ப்பொரேஷன் (பிரைவேட்) லிமிடெட். மதராஸ்
எஸ். ஜி. ஜெயராஜ் நாடார் அண்டு சன்ஸ், மதுரை
ஏ. வி. ஜார்ஜ் & கோ., (பிரைவேட்) லிமிடெட். கோட்டயம்
கார்பன்டை ஆக்னைட் (பிரைவேட்) லிமிடெட். எர்ணாகுளம்
பாம்பே சைகிள் & மோட்டார் ஏஜன்ஸி லிமிடெட். செகந்திராபாத்
ஸ்டாண்டர்ட் ஆடோமொபைல்ஸ், மங்களூர்
மரிக்கார் (மோட்டார்) லிமிடெட், கள்ளிக்கோட்டை
எஸ். எம். அப்துல்றஹ்மான் சாஹேப் அண்டு பிரதர்ஸ், விஜயவாடா

## ஏழு தேச பக்தர்கள்

பாரத நாட்டின் சுதந்திரப் போராட்டச் சரித்திரத்திலே 1942-ம் வருஷம் மறக்க முடியாத வருஷம். பாரதமக்களின் தியாகம் உச்சநிலை அடைந்த வருஷம். அந்த ஆண்டிலே பீஹார் ராஜ்யத்தின் தலைநகரான பட்னாவின் சர்க்கார் காரியாலயத்தில் பாரத அன்னையின் மூவர்ணக் கொடியை ஏற்றியே தீருவது என்று வீரசங்கற்பம் செய்து கொண்டு ஏழு தேசபக்தர்கள் புறப்பட்டனர். அந்தோ, பரிதாபம்! அன்று அவர்கள் குண்டுகளுக்கு இரையாகி மடிந்தனர். அவர்களின் உயிர் போனாலும், லட்சியம் இன்று நிறைவேறி விட்டது! பாரதத் தாயின் மணிக்கொடி தேசம் முழுதும் பறக்கத் தொடங்கி விட்டது.

சென்ற ஆண்டு பதினேழாம் தேதி சுதந்திர தினத்தன்று பீஹார் சர்க்காருக்கு மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியை அற்புதமான வெண்கலச் சிலையாக வடித்துக் கொடுத்தார் ஸ்ரீ டி. பி. ராய்சௌதரி. இவர் சென்னை சித்திரக் கலைக் கல்லூரியின் தலைமை ஆசிரியர். அருமையான சித்திரங்கள் வரைந்து புகழ் பெற்றவர். இப்பொழுதெல்லாம் சிற்ப கலையும் பழமையும் நிறைந்த சிலைகளின் வடிவிலே தமது நேரத்தைப் பெரிதும் செலவழித்து வருகிறார். வெண்கலச் சிலையின் புகைப்படத்தை மேலே காணலாம். அதில் உயிர் துடிக்கும் நிலையிலும் லட்சியத்தை நோக்கியே செல்லும் பாரத சத்தியாக்கிரகிகளின் தீரத்தை அவர்களது நடையிலும், முக பாவத்திலும், ஏன், ஒவ்வொரு அம்சத்திலுமே கலைஞர் காண்பித்திருப்பதைப் பார்த்துப் பார்த்து ரசிக்க வேண்டும்.



# உங்கள் பணத்தைக் கொடுக்கும்பொழுது
# சிறந்த சாமானையே நீங்கள் வேண்டுகிறீர்கள்

பட்டுப் புடவைகளாயினும் சரி அல்லது
பருத்திச் சட்டைத் துணிகளாயினும்
சரி, அவைகளை வாங்கும்பொழுது
உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் அளிப்
பவைதாம் என நிச்சயப்படுத்திக்
கொள்ள நீங்கள் விரும்புவது சகஜமே.

## சிறந்த துணிகளை வாங்க, **பின்னி**யின் துணிகளை வாங்குங்கள்!

தி பக்கிங்ஹாம் அண்ட் கர்நாடிக் கம்பெனி லிமிடெட்

தி பங்களூர் உல்லன், காட்டன் அண்ட்
ஸில்க் மில்ஸ் கோ., லிட்.

நிர்வாகிகள் : பின்னி அண்ட் கோ. (மதராஸ்) லிட்., மதராஸ்





BY. 3777 (A)

முடிவில் அந்தநாள் வந்தே தீர்ந்து விட்டது. ஜூலை முதல் தேதி, 1956. முப்பத்துமூன்று வருஷங்களாக அதனை எதிர்பார்த்து வந்தார் கோபால கிருஷ்ணன். இருபத்திரண்டு வயதில் அதே தேதியில் ரயில்வே உத்தியோகஸ்தராக வேலையில் அமர்ந்தார். படிப்படியாக எல்லா உயர் பதவிகளும் பெற்று முடிவில் ரயில்வே போர்டு மெம்பராகவும் இருந்து விட்டார். மூன்று வருஷங்களுக்கு முன் வரையில் தனது விடுதலை நாளை வெகுஆவலுடன் எதிர்பார்த்தார். மிகவும் நாணயமாக வேலை பார்த்து வந்ததால் மிதமிஞ்சிய சொத்து சேர்க்கவில்லை. ஆயினும் மிகவும் செட்டாக வசித்து மிச்சத்தை ஜாக்கிரதையாகச் சேமித்து வைத்ததால் கவலையின்றிச் சுகமாக வசிப்பதற்கு வேண்டிய செல்வம் இருந்தது. திருவல்லிக்கேணி, மயிலாப்பூர், தியாகராய நகர் மூன்று இடங்களிலும் நல்ல வீடுகள் வாங்கி யிருந்தார். வாங்கும்பொழுது முப்பது, நாற்பதாயிரம் ரூபாய் மதிப்புள்ள வீடுகள்; இப்பொழுது ஒவ்வொன்றும் ஒரு லக்ஷம் ரூபாய் பெறுமானமுள்ளது. கையில் சுமார் ஐம்பதாயிரம் ரொக்கமாகப் பாங்கிகளில் போட்டிருந்தார். வேலையை விட்டு நீங்கும்பொழுது பிராவிடண்ட் பண்டில் ஒரு லக்ஷம் ரூபாய்க்கு மேல் கிடைக்கும். அவருக்கு என்ன குறைவு?

ஆனால் விடுதலை நாள் நெருங்கவே, அதன் மகிமையும் சுருங்க ஆரம்பித்தது. இரண்டு மூன்று வருஷங்கள் வேலை நீடிக்கலாமென்று எதிர்பார்த்தார். ஐந்து வருஷத் திட்டங்களை அமுல் செய்ய நல்ல உத்தியோகஸ்



# மதியும் விதியும்

தர்கள் தேவை என்று எங்கும் பேச்சாக இருந்தது. ஆனால் எக்காரணத்தாலோ கோபால கிருஷ்ண னுக்கு அந்த அதிர்ஷ்டம் கிடைக்கவில்லை. சென்ற ஆறு மாதங்களாக அவர் துக்க சாகரத்தில் ஆழ்ந்திருந்தாரென்றால் மிகையாகாது. ஆனால் தமது மனைவி பார்வதியைத் தவிர வேறொருவரும் அறியாதபடி நடந்து கொண்டார். சாதாரணமாகவே அவர் மற்றவர்களுடன் விசேஷமாகக் கலந்து குலாவுவது கிடையாது. இப்பொழுது அவர் ஒதுங்கித் தனித்து நின்றதைப் பற்றி ஒருவரும் கவனிக்கவில்லை. ஆனால் பார்வதிக்கு மட்டும் இது தொந்தரவாக இருந்தது. தகுதி யில்லாதவர்கள் பலருக்கு நாலைந்து வருஷங்கள் நீடிப்பு வழங்கும் பொழுது தம்மீது மட்டும் அக்கிரமம் செய்வதாகப் புலம்பினார். 'நல்லவர்களுக்குக் காலம் இல்லை' என்றார். ரயில்வே மந்திரியைப் பற்றியும், தன்னுடன் வேலை செய்யும் இதர மெம்பர்களைப் பற்றியும் கண்டபடி தூற்றினார். பார்வதிக்கும் தனது சுக்கிர தசை முடிவதைப் பற்றி வருத்தம்தான். ஆனால் அதைப் பற்றி இப்படித் துக்கப் படுவது அவளுக்குப் பிடிக்கவில்லை. தன் புருஷனைப் பரிகாசம் செய்து பார்த்தாள். கண்டித்துப் பார்த்தாள். கடைசியில் அவர் எது சொன்னாலும் பேசாமல் இருப்பதே நலமென்று பார்வதி நிர்மானித்து விட்டாள்.



சென்னை எக்ஸ்பிரஸ் வண்டியில் ஒரு சீதோஷ்ண சம கம்பார்ட்மெண்டில் அவர்கள் இருவருக்கும் இடம் ஒதுக்கப் பட்டிருந்தது. சாமான்களையெல்லாம் தனிச் சாமான் வண்டியில் அனுப்பி விட்டார். ரயில் புறப்படுவதற்கு அரை மணி முன்னதாகவே இருவரும் ஸ்டேஷனுக்கு வந்தனர். அவரை வழியனுப்ப மூன்று நான்கு உத்தியோகஸ்தர்கள் வந்திருந்தனர். ஆனால் பார்வதியின் தோழிகள் இருபது முப்பது பேர்கள் கூடினர். தனது புருஷனின் கருமித்தனத்தையும் சமாளித்து அவள் எப்படியோ டில்லியில் உத்தியோகஸ்தர்களின் மனைவி குழாத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தாள். ஸ்திரீகளின் கூட்டத்தையும், தமது நண்பர்களின் அல்பத் தொகையையும் கண்டு கோபாலகிருஷ்ணனுக்கு வருத்தமும் கோபமும் அதிகரித்தன. தாம் உத்தியோகத்திலிருக்கும் பொழுது இந்த ஸ்திரீகளின் புருஷர்கள் தம்மிடம் பல்லைக் காட்டி வந்து நின்றவர்களல்லவா? பத்தினிகளுடன் ஸ்டேஷனுக்கு வந்தால் என்ன மோசம் போய்விடும்? இந்தக் காலத்தில் வம்பு வளர்க்கும்

க. சந்தானம்

பெண்களுக்குத்தான் செல்வாக்கு' என்று பலவாறு சிந்தித்திருக்கையில் வண்டி புறப்படும் சங்கு ஊதிற்று. தம்பதிகள் இருவரும் தமது கண்டியில் ஏறிக் கொண்டு நண்பர்களிடம் விடைபெற்றனர்.

வண்டி புறப்பட்டவுடன் கோபாலகிருஷ்ணன் உட்கார்ந்து சோகக் குரலில் "ஒரு வழியாக முடிந்து விட்டது. நன்றி யில்லாதவர்களுக்கு இனி உழைக்க வேண்டாம்" என்றார்.

புன்சிரிப்புடன் பார்வதி, "அப்படி என்ன மோசம் போய் விட்டது? உங்களுடைய பூராகாலமும் உத்தியோகம்பார்த்தாகி விட்டது. வயது ஐம்பத்தைந்து முடிந்து விட்டது. வேலைவிட்டு நீங்கி ஓய்வெடுத்துக் கொள்ளுவது கிரமம்தானே!" என்றாள்.

கோபாலகிருஷ்ணனுக்குக் கோபம் பொங்கிற்று. தம்மை விடப் பார்வதிக்கு ஏமாற்றம் அதிகம் என்று அவருக்கு நன்றாகத் தெரியும். ஆத்திரத்துடன், "உன் பாசாங்கு எனக்குத்தெரியும். உன்னுடைய ஆர்ப்பாட்டம் ஒழிவதற்காக இது நல்லதுதான். ஆனாலும் என்னைவிட வயதானவர்களுக்கு நீடிப்புக் கொடுத்திருக்கிறார்கள். மந்திரிகளில் எழுபது வயதுக்குமேல் இருவர்கள் இருக்கிறார்கள். ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஆள் இல்லை என்று ஒருபுறம் கூச்சல். என்னைப்போல் வேலைத்திறமும், உடல் நலமும் உள்ளவர்களை விரட்டி விடுகிறார்கள். இவ்வித ஆட்சியில் நாட்டின் கதி அதோகதிதான்" என்று கத்தினர்.



"அது அவர்களுக்குத்தானே நஷ்டம்? நீங்கள் இவ்வளவு காலம் அதே வேலை பார்த்துக் களைத்துப் போகவில்லையா? கொஞ்ச நாள் கவலையற்றுச் சுகமாக இருக்கலாமே" என்று ஆறுதல் கூறினார் தர்ம பத்தினி.

"பணம், பெருமையைப்பற்றி நான் வருந்தவில்லை. அதெல்லாம் எனக்குத்தான் நஷ்டம். திருவல்லிக்கேணி வீட்டில் வசிப்பதற்காகக் குடியிருந்தவர்களைக் காலி செய்து விட்டேன். நமது தியாகராயநகர், மயிலாப்பூர் பங்களாக்களிலிருந்து மாதம் அறுநூறு ரூபாய் வாடகை கிடைக்கிறது. சேம நிதித் தொகையுடன் ஒன்றரை லக்ஷம் ரொக்கம் இருக்கிறது. அதிலிருந்து மாதம் ஐந்நூறு ரூபாய் வருமானம் வரும். மானமாக இருக்கலாம். ஆனால் செக்கு மாடு மாதிரி முப்பத்து மூன்று வருஷங்கள் சுற்றி வந்த பிறகு வீட்டில் சும்மா எப்படி உட்கார்ந்திருப்பது? புஸ்தகங்கள் படித்தும் பழக்கமில்லை. மற்றக் கிழவர்களுடன் வம்பு பேசவும் முடியாது. ஏதாவது கிராமத்தில் ஐம்பது ஏக்கரா நிலம் வாங்கிச் சாகுபடி செய்யலாம் என்றால், முதலே மோசமாகி விடும்போல் சீர்திருத்தம் செய்து வருகிறார்கள். கவலைக்கும் குறைவில்லை. உன் செல்லப் பிள்ளையின் போக்கைப் பற்றிப் பேச வேண்டியதில்லை" என்று பிரசங்கம் செய்வதைத் தடுத்து, பார்வதி சினத்துடன் "ஆமாம், நீங்கள் செய்த குற்றத்துக்கு நான்தான் ஜவாப்தாரி. கோபாலன் நல்லவன்தான். பணத்துக்கு ஆசைப்பட்டு அவளுக்குப் பிடிக்காத பெண்ணைக் கட்டி வைத்தீர்கள். அதன் பலனைநானும் அநுபவிக்கவேண்டி யிருக்கிறது" என்றுகூறினள்.

"பாவம், அந்தச் சாதுப்பெண்ணை ஏன் பழிக்கிறாய்? நானகியின் தவறு என்ன? தமது நகைகளைக்கூடக் கொடுத்து விட்டு வாயைத் திறக்காமல் சாமர்த்தியமாகக் குடித்தனம் செய்கிறாள். நல்ல வேளையாக இரண்டு புருஷக் குழந்தைகள் இருக்கின்றன. இல்லாவிட்டால் தமது குடிகாரப் பிள்ளையை விட்டு விட்டுத் தன் தந்தை வீடு போயிருப்பாள்" என்று கண்டித்தார் கோபால கிருஷ்ணன்.

"நான் அவள்மீது என்ன பழி சொன்னேன்? அழகில்லாததுதான் அவள் குற்றம். தனது தங்கைகள்போல் தன் மனைவியும் இருக்க வேண்டுமென்று கோபாலன் சொல்லிக் கொண்டிருந்தான்" என்றாள் பார்வதி.

"போதும், உன் பெண்களின் கதி என்னவாயிற்று? பெரிய இடமென்று பத்மினியைப் புகுத்தினாய். எனக்கு இருபது ஆயிரம் ரூபாய் செலவுதான் மிச்சம். ஒரு வருஷத்தில் மாமனார் இறந்தார். மாப்பிள்ளைக்கு வக்கீல் பட்டமே ஒழிய வருமானமில்லை. ஐந்து பெண்களை வைத்துக் கொண்டு தவிக்கிறாள்" என்று ஏசினார் பார்வதியின் கணவர்.

"ஏழையாக இருந்தாலும், இருவரும் படித்திருக்கிறார்கள் அல்லவா? மங்களத்துக்கும் நான்தானே வரன் பார்த்தேன்? அந்தப் பையன் ஐ. ஏ. எஸ் பாஸ் பண்ணி விரைவில் முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறானல்லவா? போதும் இன்றைக்கு விவாதம். சாப்பிட்டு விட்டுத் தூங்குங்கள்" என்று கூறிவிட்டுச் சாப்பாட்டு அடுக்கை எடுத்துப் பரிமாறத் தொடங்கினாள் பார்வதி.

## 2

அடுத்தநாள் காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு கோபாலகிருஷ்ணன் இரண்டு சிறிய புத்தகங்களை எடுத்து வைத்துக் கொண்டார். இவற்றில் ஒன்றைச் சிறிது நேரம் படித்துவிட்டு, காகிதமும் பென்சிலும் எடுத்து ஏதோ எழுத ஆரம்பித்தார். இதையெல்லாம் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த பார்வதி, "ஓய்வு காலக் கிரமம் தொடங்கிவிட்டது போலிருக்கிறதே. என்ன புஸ்தகங்கள்? என்ன கணக்குப் போடுகிறீர்கள்?" என்று வினவினாள்.

"சுயராஜ்யம் வந்தது. அதோடு நமக்குப் புதிய சங்கடங்களும் வந்துவிட்டன. தேசிய சர்க்கார் நமக்குச் செய்த முதல் சேவை மரண வரி. செத்தவர் சொத்து வரிச் சட்டத்தை இப்பொழுதுதான் படிக்க முடிந்தது. நான் நாளை இறந்தால் என் சொத்துக்கு இருபது ஆயிரம் ரூபாய் வரி கொடுக்க வேண்டும்" என்றார் கோபால கிருஷ்ணன்.

"உங்களுக்கு மட்டும் தனிச் சட்டமல்லவே?" என்று வாதித்தாள் அர்த்தாங்கினி.

"நீ கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருந்தால் தெரியும். அதாவது போகட்டும். தமது தறிந்து சட்டத்தை மாற்றிப் பெண்களுக்கும் பிள்ளைகளைப்போல் சம பாகம் கொடுத்து விட்டார்கள். என்ன அக்கிரமம்!" என்று கண்டித்தார்.

"அதில் என்ன தவறு? எனக்கு ஓரளவு கவலை விட்டது. நமது பத்மினி தனது பெண்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டாம்" என்று மகிழ்ந்தாள் அவர் மனைவி.

"அப்படியா உன் திட்டம்! முப்பத்திமூன்று வருஷங்கள் சம்பாதித்த சொத்தை நான் செத்து மூன்று வருஷங்களுக்குள் காற்றில் பறக்கவிட்டு விடுவீர்கள். அதற்கு நான் இடம் கொடுக்கப் போவதில்லை" என்றார் பதி.

பார்வதி திடுக்கிட்டாள். அவர் என்ன செய்யப் போகிறார் என்று அவளுக்குப் புரியவில்லை.

"ஏதாவது தாறுமாறாகச் செய்து விடாதீர்கள். நீங்கள் இருக்கும் வரையில் இதைப் பற்றி ஏன் நினைக்க வேண்டும்? உங்களுக்குப் பின் ஏதோ கடவுள் இஷ்டப்படி நடக்கட்டும்" என்று கூறி முடித்தாள் பார்வதி.

கோபாலகிருஷ்ணன் மேலே பேசவில்லை. சென்னை போய்த் திருவல்லிக்கேணி வீட்டில் வசிக்க ஆரம்பித்தபின் இரண்டு

மாதம் இதே சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். தம் மனைவிக்குத் தெரியாமல் ஒரு பிரபல வக்கீலிடம் யோசனை கேட்டார். முடிவில் ஒரு செட்டில்மெண்டு பண்ணி ரிஜிஸ்தர் செய்தபிறகே அவர் மனம் ஓரளவு நிம்மதி அடைந்தது.

இந்த நாட்களெல்லாம் பார்வதி அவரைக் கவனித்து வந்தாள். வீண் விவாதம் செய்து அவரைத் துன்புறுத்த விரும்பவில்லை. எளிதில் எந்த முடிவுக்கும் வரமாட்டார் என்று நம்பியிருந்தாள். ஆகவால் முக மலர்ச்சியுடன் ஒரு நாள் ஒரு பத்திரத்தைக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்து, "இனி என் கவலை விட்டது. சொத்துக்கு ஏற்பாடு செய்து விட்டேன்" என்றதும் அவளுக்குத் தூக்கி வாரிப்போட்டது. பத்திரத்தை எடுத்துக் கொண்டு போய்த் தனிமையில் வாசித்தாள். முதலில் சரியாகப் புரியவில்லை. இரண்டு மூன்று தடவைகள் படித்த பின் அதன் கருத்து விளங்கிற்று. திருவல்லிக்கேணி வீட்டையும், ஒன்றரை லக்ஷம் ரூபாய் ரொக்கத்தின் வட்டியும் கோபால கிருஷ்ணன் ஆயுள் வரையில் அனுபவித்துக் கொண்டு அவருக்குப் பின் தனது மகளின் மூத்த பிள்ளைக்குச் சேர வேண்டியது. தியாகராயநகர், மயிலாப்பூர் வீடுகளின் வாடகைகளைப் பார்வதி தன் வாழ் நாள் முடிய வாங்கிக் கொள்வது. அவளுக்குப் பின் அவ் வீடுகள் மகளின் இரண்டாவது பிள்ளையின் சொத்தாகும். அக்குழந்தைகள் இருபத்தொரு வயது ஆகும் வரையில் முதலிலிருந்து செலவழிப்பதற்கோ வீடுகளை விற்பதற்கோ, அடமானம் வைப்பதற்கோ எவருக்கும் உரிமையில்லை என்று பத்திரத்தில் ஏற்பாடாகியிருந்தது.

பார்வதிக்கு முதலில் அடங்காத கோபம் உண்டாயிற்று. தன் பெண்ணுக்கு, முக்கியமாக ஏழையான பத்மினிக்கு ஏதாவது கொடுக்க வேண்டாமா? பெற்ற தந்தையின் மனம் இவ்வளவு கொடியதாக இருக்குமா? முடிவில் பேரப் பிள்ளைகள் என்ன சாதித்துவிடப் போகிறார்கள் என்று வருந்தினாள். ஆனால் தான் ஜீவித்திருக்கும் வரையில் தனது வருமானத்தில் கொஞ்சம் மிச்சம் செய்து கொடுக்கலாமென்று தீர்மானித்து, அவரிடம் பத்திரத்தைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு, "நீங்கள் ஏதோ சாமர்த்தியமாகத்தான் காரியம் செய்திருக்கிறீர்கள். ஆனால் நாமொன்று நினைக்கத் தெய்வம் வேறொன்று நினைக்காமலிருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறேன்" என்றாள் பார்வதி.

'ஏதோ நம் கடமையைச் செய்து விட்டால், வருகிறது வரட்டும்' என்று அகமகிழ்ந்தார் கோபாலகிருஷ்ணன்.

## 3

நாம் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த சொத்து தமது பேரன்கள் வரையிலாவது நிலை நிற்க ஏற்பாடு செய்ததன் பலனாக இதுவரையில் அனுபவிக்காத மன அமைதியைக் கோபாலகிருஷ்ணன் அடைந்தார். அது தெய்வத்துக்குச் சகிக்க முடியவில்லை போலும்! ஒரு வாரத்துக்குப் பின் ஒரு நாள் மாலை தம் மனைவியுடன் இந்தியா முழுவதும், முக்கியமாக ஹரித்துவாரம், பதரிகாசிரமம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களைப் பார்க்கப் பிரயாணத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தார். ரயில்வே உத்தியோகஸ்தர்கள் பாடு அதிர்ஷ்டம். வேலையை விட்டு நீங்கினாலும் இலவசப் பிரயாணம் செய்யும் உரிமை ஆயுள் முழுவதுமுண்டு. கையில் ஆயிரம் ரூபாய்கள் எடுத்துக் கொண்டால் இரண்டு மாதங்களில் எல்லா இடங்களையும் தரிசித்து வரலாம் என்று கணக்கிட்டார். பார்வதிக்கும் உற்சாகம். சொத்தைப் பற்றிய கவலை நீங்கி மீதிவாழ்நாட்களை இன்பமாக வாழலாம் என்று அவள் எதிர்பார்த்தாள்.

பிரயாணத்தின் விவரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கையில் ஒரு தபால்காரர் தந்தி கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனார். 'கணவனுக்கு ஆபத்து. முப்பது ஆயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு உடனே வரவும்' என்று அதில் கண்டிருந்தது.

தம்பதிகள் திகைத்தனர். கோபாலகிருஷ்ணனுக்கு அடக்க முடியாத கோபம் உண்டாயிற்று. பார்வதி திடுக்கிட்டாள். என்ன அபாயமோ! இருக்கிற பணத்தை யெல்லாம் எடுக்க முடியாதபடி ஏற்பாடு செய்த புருஷன்மேல் ஆத்திரப்பட்டாள். ஆனால் சண்டை போடுவதில் பிரயோசனம் என்ன?

"இதற்கு என்ன ஏற்பாடு செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டாள் பார்வதி.

"நான் என்ன செய்ய முடியும்? நல்லவேளையாக எனக்குச் சக்தியுமில்லை. பணத்தை யெல்லாம் பட்டுவாடா செய்தாகி விட்டது. வட்டியைத் தவிர எடுக்க உரிமையில்லை" என்றார்.

"நமது ஒரே மகள் அபாயத்தில் இருந்தால் நாம் சும்மா இருக்கலாமா?" என்று கத்தினாள் பார்வதி.

"குடித்த கடனாக இருக்கும். அல்லது குதிரைப் பந்தயத்தில் நஷ்டமாக இருக்கும். கையில் பணம் இருந்தாலும் கொடுப்பது தவறு. இப்பொழுதோ நம் கையில் ஒன்றுமில்லை என்று உனக்குத் தெரியும்" என்றார்.

"நமக்கு இருப்பது ஒரே பிள்ளை. அவளுக்கு அபாயமென்றால் இப்படி வேதாந்தம் பேசலாமா? என் நகைகளைப் பத்மினிக்காக வைத்திருந்தேன். அதை விற்றுப் பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்து நெருக்கடியைத் தீர்த்து வாருங்கள்" என்றாள் அவர் மனைவி.

"என்னால் முடியாது. நீயே உன் அடுத்தவீட்டுத் தோழியை அழைத்துப் போய் விற்று வா. கல்கத்தாவுக்கு ஒரு பாஸ் வாங்கி வைக்கிறேன். போய் ஏற்பாடு செய்து வா" என்றார் பார்வதியின் கணவர்.

வீண் வாதம் செய்வதில் பயனில்லை யென்று பார்வதி தன் நகைகளை எடுத்துக் கொண்டு அடுத்த வீட்டுத் தோழியுடன் போய் அவைகளை பதினைந்தாயிரத்துக்கு விற்று வந்தாள். தந்தியில் கண்ட தொகையில் பாதியாக இருந்த போதிலும் அதைக் கொண்டு தற்சமயம் சமாளித்துக் கொள்ளலாமென்று எண்ணினாள். அதை எடுத்துக் கொண்டு கல்கத்தா மெயிலில் அன்றே புறப்பட்டாள். மகளுக்குத் தந்தி கொடுத்தாள்.

அவள் போன பிறகு கோபாலகிருஷ்ணனின் மனம் இளகிற்று. தாமும் மனைவியுடன் கல்கத்தா போய் வந்திருக்கலாமே என்று எண்ணினார். இலவசமாகப் பாஸ் இருந்த போதிலும் தம் மனைவியைத் தனியாகப் போகச் சொன்னதற்கு மிகவும் வருந்தினார்.

மூன்றாவது நாள் சாயங்காலம் மற்றொரு தந்தி வந்தது. 'கோபாலன் தூக்கிட்டுக் கொண்டு மாண்டான். உடனே வரவேண்டும் – ஜானகி' என்று படித்தார். அன்றிரவே கோபாலகிருஷ்ணன் விமானத்தில் ஏறிக் கல்கத்தா சேர்ந்தார்.

கோபாலன் தற்கொலை விசாரணையில் அவன் வேலை செய்து வந்த பாங்கின் பணத்தை மோசடி செய்து, அதன் பலனுக்கு அஞ்சித் தூக்கிட்டுக் கொண்டதாக வெளியிட்டது. பாங்கியின் மானேஜர் தொகையை சரி செய்ய மூன்று நாள் தவணை கொடுத்திருந்தார். பார்வதி கல்கத்தா சேர்ந்து பதினைந்தாயிரம் ரூபாய்தான் சேர்க்க முடிந்தது என்று கூறியவுடன், ஒன்றும் பேசாமல் தன் அறைக்குள் போய்த் தாளிட்டுக் கொண்டு தூக்குப் போட்டுக் கொண்டு மாண்டான்.

அவரது மனைவியும், மருமகளும் கோபாலகிருஷ்ணனிடம் பேசவில்லை. எல்லோரும் மௌனமாகச் சவத்தைத் தகனம் செய்து விட்டு அன்றிரவே சென்னை வந்து விட்டனர்.

கோபாலகிருஷ்ணன் தம்மை மகனைக் கொன்ற குற்றவாளியாகக் கருதினார். பணத்திலும் சொத்திலுமுள்ள எல்லா ஆசைகளையும் துறந்தார். பார்வதியும் அவர்மீது கோபித்துக் கொண்டு பேசாமல் இருந்து விட்டாள். உண்மை நிலையை அறிந்த பின் ஜானகி அவர்பேரில் குற்றமில்லை யென்று உணர்ந்து பக்தியுடன் பணிவிடை செய்தாள். தன் பிள்ளைகள் பேரில் அவர் சொத்தை எழுதி வைத்து விட்டாலும் தனது புருஷனின் சகோதரிகளையும் ஆதரிப்பதாக வாக்களித்துப் பார்வதியையும் ஒருவாறு தேற்றினாள். உடைந்த பானையை எறிந்துவிடலாம். உடைந்த குடும்பத்தை என்ன செய்வது? எப்படியாவது ஒட்டி வைத்துச் சமாளிப்பது தன் கடன் என்று அவள் உணர்ந்தாள்.



# அரவ நாட்டு அரசி

த. நா. குமாரசாமி

ஆர் என்பது ஓர் அழகிய மலர். இளங் குழந்தையின் தாடைக்குரிய மென்மை அப்பூவுக்கு உண்டு. ஆத்தி என்றும் அதற்கு ஒரு பெயர். அந்த ஆத்தியின் பூப் பொலிவைக் கார்காலத்தில் காண வேண்டும். தொன்மையில் வடபுலத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் இடையே நின்று, இன்று சரித்திர நிபுணர்களின் ஆராய்ச்சிக்குப் புலனாகாத அரவர் என்னும் நாக மரபினர் அந்த ஆத்தியின் தளிரையும் மலரையும் தம் அடையாள மாலையாகத் தொடுத்தனர். சாதவாகனர் என்ற ஆந்திரப் பிரிய மன்னரின் ஆட்சிக்கு முன்னர் விந்தியச் சரிவிலுள்ள நாகபுரியிலிருந்து தமிழகத்து நாகபட்டினம் வரை நாக நாடு பரவி இருந்தது. அரவத்தை இலச்சினையாகக் கொண்டு வழிபாடு நடத்தியவர் நாகர். அமராவதி நாகார்ஜுன கொண்டா சிற்பங்களில் தென்படும் நாகப்படம் அணிந்த இயக்கர் கந்தருவர் உருவங்கள் அரவர் பயின்ற சிற்ப ரீதிகளைத் தழுவியன. நாக கவசம் பூண்ட சிவலிங்கம், அரசமரத்தின் கீழ் நடும் நாகக் கற்கள், திருமால் படுக்கும் பாம்பணை, இசையின் மூர்ச்சைத் தாங்கும் நாகச் சின்னம் என்ற இன்னியம், இன்று தெலுங்கரும் தமிழரும் புற்றுக்குப் பால் வார்க்கும் நாக பஞ்சமி நோன்பு, பெண்கள் தம் சடையில் அணியும் சடை நாகம், கையில் பூணும் நாக வொந்து, நாகத்தின் பெயரை மக்கள் கொள்ளுதல், புராண இதிகாசம், பௌத்த ஜாதகம், பண்டை இலக்கியம், இவற்றுள் பேசப்படும் நாகர், நாகலோகம் யாவும் அந்த அரவர்களையே குறிப்பனவாகும். பழந்தமிழ் இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய தெளிவான வரலாறு கிடைக்கவில்லை. அரவர் உன்னத நிலையில் இருந்த காலத்தில் தமிழ் நாட்டின் வடபகுதி காடு சூழ்ந்த பரப்பு. அரவ மரபினர் தமக்குரிய பண்புடன் ஒருபுறம் வடபுலத்தவரின் படையெடுப்புக்களையும், தென்னவரின் தாக்குதல்களையும் தாங்கிக் கொண்டு நீடித்த காலம் ஆட்சி செலுத்தினர். மலையாளத்து நாயர்கள் அந்த நாகர்களின் ஒரு பகுதியினரென்பதற்கு நியாயம் இருக்கிறது. மலையாளத்தில் பாம்புகளும் நாக வழிபாடுகளும் அதிகம்.

காடு சூழ்ந்த இடங்களில் அரவர் வாழ்ந்தாலும் வலிவான அரண்களை எழுப்பிக்கொண்டு நாகரிக வழியில் வாழ்வு நடத்தியவர். கதையால் கோயில்களை நிருமித்தனர். இல்லங்களை அமைத்தனர். இன்று ஆர்க்காடு எனப்பெயர் தாங்கிய ஊர் அரவ அரசன் ஒருவனுடைய தலைநகரே. பழந்தமிழ் இலக்கியம் கூறும் 'விரிதார் இயல் தேர் அழிசி' என்ற அஹிஸ்ரீ(பாம்பழகன்) அரவர் மன்னர்களில் புகழேந்தியவன். மணிமேகலையில் வரும் வளைவணன் அல்லது சங்கவர்ணன் ஓர் நாக அரசனே. அவனுடைய பெண்தான் பீலிவளை. இவளுடைய மகன் இளந்திரையனே அந்த அரவ நாட்டைச் செம்பியர்களுடன் சேர்ந்து வென்று தொண்டை நாடாக்கினான். இந்தத் திரையர் பாம்புக்குப் பகையான மயிலை இலச்சினையாகக் கொண்டவர். கடைசியில் பாம்பை மயில் வென்றது.

அரவர்களுடைய தெய்வம் திருத்தணிகையில் வீற்றிருக்கும் கடவுள். முருகன் தொழுகைக்கு வித்தூன்றியவர்கள், அரவர்களே. தொண்டையர்கோன் ஆட்சிக்கு வந்தபின் தணிகைப் பெருமானோடு வேங்கடமலையில் பெருமாளை வைத்து வணங்கினர். இவற்றைத் தவிர நாகராகிய அரவர்களைப்பற்றிய செய்தி அதிகம் இல்லை. தெலுங்கர் இந்தத் தொண்டை நாட்டினரை 'அரவ வாண்ரு' என்றும் கிரேக்க யாத்திரி 'அர்வர்னய்' என்றும், தமிழர் இவர்கள் நாட்டினை 'அருவாவடதலை' என்றும் குறிப்பிட்டனர்.

தக்கோலத்துக்கு அருகில்தான் இந்த அரவ அரசர்களின் கடைசி நாடகம் நிகழ்ந்தது. இன்று எட்டி, இலவம், சூரை, காரை, ஈங்கை, கள்ளி, வேலம், ஆலும் பின்னிய காட்டில்தான் அவர்களது நகரி இருந்தது. திருவாலங்காட்டு ஸ்டேஷன் பாலத்தின் மீது நின்று தென்புறமாக நோக்கினால் படிப்படியாக உயரும் ஒரு பச்சை மேடு தெரியும். நாக நகரி அல்லது போகபுரி இருந்த இடம் அதுவேதான்.



அரவரின் அரச பரம்பரை புன்னாகவதி என்ற புன்னை இளவரசியுடன் முடிவுற்றது. கச்சி நாட்டை வளைத்துக் கொண்ட தொண்டையர்களுக்குப் பயந்து தம் பதியை ஆர்க் காட்டிலிருந்து புகுதற்கரிய காட்டரண்கள் சூழ்ந்த நாக நகர்க்கு மாற்றிக் கொண்டனர் அரவர். இளந்திரையன் இந்தப் புன்னைமீது கண் வைத்திருந்தான். அரவர் எப்போதும் திரையருடன் மணத் தொடர்பு வைத்துக்கொண்டதே இல்லை. மேலும் தன் தொல்குடிக்குக் கேடு சூழ்ந்துவரும் போது வீர உள்ளம் படைத்த இளவரசி புன்னைக்கு மண வாழ்க்கையில் மனம் ஊன்றவில்லை. நாக அரசர்களுக்குப் படை திரட்டவும், புது அரண்கள் எழுப்பவும் தன் நிதியின் வாசலைத் திறந்து வைக்கும் வணிக சங்க பாலனுடைய மகன் மேகவண்ணனுக்கு அரவர் மாளிகையினுள் போவதற்குச் சலுகை இருந்தது. வணிக மகன் நிரம்ப அழகன். இசையில் வல்லுநன். அரவர் குமாரியின் கடைக்கண் ஏவல்களைப் புரிபவன். புன்னையும் மேகவண்ணனும் விரைவிலேயே ஒத்த மனத்தினராயினர். ஒருவரின்றி ஒருவர் இருக்கப் பொறுமல் துடிப்பவர். நெருங்கி வளர்ந்த இவர்களது நட்புக்கு இடையூறு அரசிளங் குமரியே விளைவித்துக் கொண்டாள். செட்டி மகனை மணந்தால் அரவர் குல பிருது குறைந்து போமென்ற நினைவு அவளை உறுத்தி வந்தது. இதைத் தன் காதலன் மேக வண்ணனுக்கு வெகு நாள் வரை வெளியிடவில்லை அவள்.

மேகவண்ணன் இளவரசியைக் கௌரவமாக மணந்து கொள்ள முன் வந்தபோது, ''நான் யோசித்துத்தான் சொல்ல முடியும்..'' என்று நாள் போக்கி வந்தாள். கடைசியாக ஒரு நாள் மேக வண்ணன் அவளைத் தனிமையில் சந்தித்து வற்புறுத்திக் கேட்டபோது அவள் குறுநகையாட, ''நம் காதலுக்கு மணம் அவசியமா? நான் சுதந்திரமுள்ள நாக இளவரசியாக இருக்க விரும்புகிறேன். நீ என்றைக்கும் என் காதலனே. உனக்கு நான் மனைவியாக முடியாது'' என்று மறுத்துக் கூறிவிட்டாள்.

இளைஞனுடைய உள்ளம் உடைந்தது. ஆர்க்காட்டைத் துறந்து அவள் நாகநகரிக்கு வரும் போது மேகவண்ணனை அழைத்து, ''என்னை என் மீது கோபமா? எங்கள் அரவர் குலத்தையே அழிக்கத் திரையர் முனைந்து விட்டனர். என் மரபினரைக் காப்பதே என் முதல் கடமை. அதற்கப்புறம்தான் காதல் வாழ்வு எல்லாம்.. எனக்கு உன் ஆசியைத் தா. போய் வருகிறேன்'' என்று சொன்னாள்.

வணிகமகனுக்கு முகத்தில் நின்ற பொலிவெல்லாம் மறைந்தது. இப்படி அந்த மெல்லியலாள் காதலுக்கும் இளகாத கல்மனத்தினளாவாள் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. இளவரசியை இழந்த அந்த ஆர்க்காடும் கலை இழந்தது; அவளை நேசித்த மேகவண்ணனின் உள்ளமும் வெற்றிடமாயிற்று. ''என்ன ஆசி தருவது புன்னை? 'நீ அழிந்து போக' இதுவே நான் கூறும் ஆசிச் சொற்கள்'' என்றான் மேகவண்ணன்.

நடுக்குற்றது நாகமகளின் உடற்கொடி. வெகு நேரம் தன் காதலனையே நோக்கினாள். அவள் முகம் அவள் அணிந்திருந்த ஆத்தி மலர் மாலை போலவே வெளுத்துத் துவண்டு விட்டது. மேகவண்ணனுடைய கண்களில் கனன்ற தீ அவளைச் சுட்டுவிட்டது.

''என் மீது இவ்வாறு சினம் காட்டுவதற்கு அர்த்தமே இல்லை'' என்றாள் புன்னை.

''ஆனால் இந்தக் காதலுக்கு அர்த்தமே இல்லைதான். அரவமகளிரே அகம்பாவம் பிடித்தவர். இதுவே உங்கள் அழிவுக்குக் காரணம்'' என்றான் மேகவண்ணன்.

''சரி....நீ தரும் இந்தச் சாப — ஆசியை நான் சிரமேற் கொண்டேன். உன்னுடைய விருப்பப்படியே ஆகட்டும்'' என்றாள் புன்னாகவதி பாம்பு சீறி எழுவது போல.

''எனக்கு விடை கொடு'' என்றான் மேகவண்ணன்.

''எதற்கு? நீ எங்கே போகிறாய்?'' என்று கேட்டாள் இளவரசி.

''என்னை நீ வெறுத்த பின் இந்தச் செல்வமோ சுகபோகமோ எதற்கு? இந்த வாழ்வுக்கு ஒரு கும்பிடு'' என்றான் மேகவண்ணன்.

அவன் வாயைப் பொத்தி இளவரசி, ''ஐயோ, என்ன கொடிய சபதம்....நீ போகக் கூடாது. என் மீது ஆணை! என்னை விட அழகிகள் உனக்குக் கிடைப்பார்கள்'' என்றாள்.

ஆனால் அன்று காதலியின் சொல்லைக் கூடத் தட்டிச் செல்லும் உறுதி மேகவண்ணனைப் பற்றிக் கொண்டது. அவன் அந்த இடத்திலேயே நிற்கவில்லை.

புன்னாகவதி அரசுக்கட்டிலை வலுவாக்கி அரசை ஏற்று நாக நகரியில் சிறப்புடன் விளங்கினாள். கூவத்து அருகில் பெரும் போரில் அவளுடைய தந்தை செம்பியரின் வேல் குத்தி இறந்து போனான். ஆண்மகன் இராத குலத்தில் இவள் தனிப் பெண்ணரசியாக நிற்க வேண்டியதாயிற்று. இவளுடைய படைக்கு அஞ்சிச் சில காலம் திரையரும் வளவரும் ஒதுங்கிக்கிடந்தனர்.

விறல் மிகுந்த இளையரை நடத்திச் சென்று கோவலத்தருகில் திரையர்களை முறியடித்துத் துரத்திய பெருமை இவளுக்குண்டு. அந்த இடத்தில் தன் வெற்றியைச் சிறப்பிக்கச் சூரபன்மனைத் தடிந்த சமர்புரிக் கடவுளுக்கு ஓர் வெண்கதைக் கோயில் எழுப்பினாள். அதுவே போரூர். எதற்கும் கல்வெட்டுச் சான்றுகளைத் தேடும் ஆராய்ச்சியாளர் இந்த உண்மையை ஒப்புக் கொள்ள மாட்டார்கள்!

இந்த நாகநகரிக்கு அணித்தாகவே அரிசிக்காடு. அங்கே ஒரு மயானவாசி தலையில் முஞ்சிப் புல் வளர்வது கூடத் தெரியாமல் நாள் கணக்காகத் தவம் கிடந்தார். அவர் மேகவண்ணன் என்பதை யாருமே அறியார். மக்கள் எல்லாம் அவரை முஞ்சிகேச முனிவென்றே அழைத்தனர்.

இதுவரை பின்னுக்கு வாங்கிய திரையர், தென்னாட்டுப் பெருவளத்தான் கரிகாலனுடைய உதவியைப் பெற்று மெல்ல அரவரின்காட்டரண்களை அழிக்கத் தலைப்பட்டனர். வளவர் ஒரு திசையிலும், தொண்டையர் வேறு திசையிலும் நாகநகரியை வளைத்தனர். ஒற்றர் மூலம் வேவு அறிந்து அரவ அரசி நாடெங்கும் அறிக்கை விட்டாள். கடைசி ஆள் வரை அரவர் தம் நாட்டையும் மானத்தையும் காக்கப் போராட வேண்டுமென்பதே அவள் ஆக்ஞை. அவளே தன் வெண்ணிறப் புரவிமீது ஏறிப் படையைச் செலுத்தினாள். ஆனால் வலிய மதி[illegible]ளாக்கும் எந்திரப் பொறிகளுடைய வளவர் எதிரே பஞ்சாய்ப் பறந்தனர் பல்லாயிர அரவர்கள். வேலும் வில்லும் தாங்கிய [illegible] மண்ணைக் கவ்வினர். அரவ அரசிக்கு [illegible] செலுத்திய குறுநில மன்னர்களும் ஒவ்வொருராகக் கரிகாலனிடம் அடைக்கலம் புகுந்தனர்.

கணக்கற்ற மக்களை இழந்த அரவர் ராணி சிறிதும் மனம் கலங்கவில்லை. அவளுடைய நாக நகரியை முற்றுகை இட வேண்டுமானால் வளவரும் திரையரும் விசேஷப் பயிற்சி பெற்றால்தான் முடியும். குறித்த நேரத்தில் காட்டையே தீக்கிரையாக்க வசதி எல்லாம் செய்து வைத்திருந்தாள் புன்னாகவதி. இளையர் தம் கூர்மையான வேல்களிலும், அம்புகளின் தலையிலும் கொடிய அரவின் நஞ்சைத் தோய்த்து வைத்திருந்தனர். படைக்கலங்[illegible]னிலும் விழுப்புண் தாங்கிய வீர சொர்க்க புரும் இளையர் நடுவிலும் கண் உறங்காது திரியும்



இம்மாதரசி தெய்விக ஒளி சூழச் சிறப்புற்று விளங்கினள்.

நாக பஞ்சமி அரவர்களுக்குச் சிறப்பான நோன்பு நாள். இளவரசி புன்னகவதி முழு உபவாசம் இருப்பவள். மாலைப் பொழுது அவள் தன் குலக் கடவுளான நாகலிங்கத்தைத் தொழக் கோயிலுக்குச் செல்ல இருந்தாள். அச்சமயம் அரண்மனை வாசலில் உரத்த இரைச்சல் கேட்கவே, அவள் திடுக்குற்று நின்றாள். தலையில் முற்றி முடிந்த சடையும், உடலில் சாம்பல் பூச்சுமான ஓர் ஆளைக் கயிற்றில் பிணைத்து ஆட்கள் அவள் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தினர்.

"அம்மணி, இவன் நிரையரின் ஒற்றன். நம் நகரில் இரண்டு நாட்களாகத் திரிகிறான். யாரோ சந்நியாசி என்று நினைத்தோம். வேஷம் போட்டு நடிக்கிறான்."

அந்த ஆண்டியின் முகத்தை நோக்கியதும் அரசிக்குத் தூக்கிவாரிப் போட்டது.

சிறை பிடித்தவர்களைப் பார்த்து, "இந்த ஆளை அவிழ்த்து விடுங்கள்" என்றாள் அரசி. அவள் கண்களில் நீர் அரும்பியது.

ஆண்டி, "ஆமாம், நான்தான்" என்றான். பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் மீண்டும் ஒருவரை ஒருவர் பார்க்கின்றனர். அதே நெருப்புப் பார்வை அவள் கண்களில். அதுகொஞ்சமும் அணையவில்லை. அவள் உள்ளம் கடுகாடாகி விட்டது.

அரவர் இளவரசியைச் சிறைபிடிக்காத வரை நாகநகரி கைக்குள் வராதெனக் கூறிக்காட்டு அரணுள் புகும் பல தந்திர வழிகளை எதிரிகளுக்குக் காட்டிக் கொடுக்கவும் அவனை என்னவோ ஒன்று தூண்டியது. காதல் ஏமாற்றத்துக்காக என்ன பயங்கர வஞ்சம்!

வளவரின் தண்ட நாயகன் புலிவிறற்கிள்ளி இளவரசியைச் சிறை பிடிக்க வழியைக் கேட்டபோது இச்சடையாண்டி, "சொல்லுவேன்.. ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில்தான்" என்று கூறினான்.

"என்ன நிபந்தனை, சொல்லும்."

"சிறை பிடித்து அவளை என்னிடமே சேர்த்து விடவேண்டும். அவள் மீது கை வைக்கக் கூடாது" என்றான் ஆண்டி.

"அப்படியே உறுதிதருகிறோம், எங்கள் புலிக் கொடியின் மீது ஆணையாக."

அரவ அரசியின் கோட்டைக்குள் புகும் வழியைத் தெரிந்து கொள்ள வந்த போதுதான் மெய்க்காப்பாளர் ஆண்டியைப் பிடித்து விட்டனர்.

புன்னகவதி வேதனை தோய்ந்த குரலுடன், "நீ இங்கே எதைத் தெரிந்து கொள்ள வந்தாய்?" என்றாள்.

"உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்."

அரசியின் பெரிய விழிகளில் நீர் சுரந்தது. 'சே, இவன் ஒற்றனன்று. என் காதலன். எத்தனையோ மன வேதனைகளை அநுபவித்து என் முகத்தை ஒரு முறை பார்க்க வருகிறான்' என்றது அவள் இளகிய நெஞ்சம்.

"என்னைப் பார்த்தாயிற்று? இனிமேல் உன் வழியைப் பார்த்துக் கொண்டு போகலாம்" என்றாள் புன்னகவதி.

ஆண்டி நகைத்தான்.

சற்று நேரம் திகைத்து நின்ற அரசி என்னவோ முடிவுக்கு வந்து, "சரி வா என்னுடன்" என்றாள்.

அரணைச் சுற்றியுள்ள அகழ் ஓரமாக நடந்து சென்றாள் நாக கன்னிகை. அவள் பின்னால் அந்த ஆண்டி, அவள் காதலன் சென்றான். எந்திரப் பொறி எதுவுமே பிளக்க முடியாத மதிலின் ஒரு புறம் வந்து நின்றாள் புன்னை. அங்கேதான் உட்புறம் செல்லும் ஒரு ரகசிய வாயில், எக்காலும் அமைக்கப் பட்டிருந்தது. "பார்த்தாயிற்று.... இனிமேல் இந்தப் பக்கம் வராதே. இளையர் அம்புக்கு இலக்காவாய். உன் உயிருடன் என் உயிரும் மாயும்" என்றாள் ராணி.

அதே இரவு, அந்த ரகசிய வாயிலைத் தகர்த்துப் பகைவர் படை திரள் போல் நகருக்குள் புகுந்து விட்டனர். இருளிலேயே பல்லாயிர இளையரை வெட்டி வீழ்த்தினர். பொழுது புலர்வதற்குள் எல்லாம் முடிந்துவிட்டது. நாகநகர் விழுந்தது. தொண்டையரின் மயில் கொடி அரணின் வாயில்மீது படபடவெனப் பறந்தது. பெருவளத்தாரின் இருச் சின்னம் விம்மியது. அரவரின் நாகச் சின்னங்கள் அழுதன.

அரண்மனைக்குள் கோயிலிலே, நாக லிங்கத்துக்கு முன்னால் தூண்டாவிளக்கு நிலைத்த சுடருடன் எரிந்து கொண்டிருந்தது. லிங்கத்துக்குப் பூவும் புனலும் தூவும் புன்னகவதியின் செவியில் வெளி உலகத்தின் ஓசை எதுவுமே கேட்கவில்லை. நிழல் ஒன்று அவள் முன்னால் லிங்கத்தின் கருமேனியில் படிந்தது. திரும்பிப் பார்த்தாள். பகைவர் சூழ்ந்து நின்றனர். புலிவிறற்கிள்ளியின் ஆட்களுக்குப் பயந்து எவரும் அவள் உடலில் கைவைக்கவில்லை.

மேகவண்ணன் அவள் எதிரே நின்றான். புன்னகவதி நிமிர்ந்து எழுந்தாள். "இதென்ன?" என்று அந்தப் பெண் அரவம் கூறுவதற்குள் பகைவர் அவளைச் சிவிகையில் ஏற்றித் தம் பாசறைக்குக் கொண்டு சென்றனர்.

இளையர், கோட்டை கொத்தளங்களில் உள்ள அந்தரங்க அறைகளையெல்லாம் தம் அருமை அரசியைத் தேடி அலைந்தனர். அவர்களுக்கு உணர்வெழுப்பிய அந்த ஒப்பற்ற அரவ மடந்தை நிர்மல மறையவே அவர்கள் திடத்தை இழந்து மயங்கின தோக்கிச் சிதறி ஓடினர். தொண்டையர் நாக நகரியைச் சூறையாடித் தீக்கிரையாக்கினர். விலை மதிப்பிலா மாணிக்கங்களையும் ரத்தினக் குவியல்களையும் வாரிக் கொண்டனர். கருவூலங்களில் பொற்பாளங்களை எடுத்து உருக்கிக் கச்சியிலுள்ள துர்க்கையான சாமக் கன்னியின் கோயிலுக்குப் பொற் கூரை வேய்ந்து புகழ் பெற்றனர்.

புன்னகவதி பகைவர்காவலிலிருந்தும் தப்பி ஓடி விட்டாள். அவள் எங்கே?

மேகவண்ணன், நிபந்தனையின் படி அரவ ராணியைக் கேட்டதற்குப் புலிவிறற்கிள்ளி, அரவர் ராணி மறைந்துபோன செய்தியைவெளியிட்டான்.

மேக வண்ணனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. எரிந்து பாழாகிய நாக நகரியை நோக்கி விரைந்தான், கண்ணீர் பெருக. சூழும், மனிதமுண்டங்களின் அழுகும்நாற்றம்.

ஆ, இதென்ன! ஆத்தி மலரின் இதழ்களா? வழி நெடுகச் சிந்திக் கிடந்தன. கடைசியில் ஆற்றிலுள்ள ஆழமான மடுவு வரை இவ்விதழ்கள் தென்பட்டன. நீரினுள் இறங்கித் துழாவினான், அந்த அசட்டுக் காதலன். அதன் ஆழத்திலா அவன் காதலி மறைந்து கொண்டு ஆட்டம் காட்டி அவனை அழ வைக்கிறாள்? நீர் மேல் ஆத்திப் பூவின் இதழ்கள் சில மிதந்து கொண்டிருந்தன.



இந்தப் பக்கம் புன்னகவதியின் நன்றி மறவாத இளையர் சிலர் கண்களுக்கும் இந்த ஆத்தி இதழ்கள் விழுந்திருப்பது தெரிந்தது. இதழ் சிந்திய வழியைப் பின்பற்றினர். கொத்தளத்தின் சின்ன எக்கு வாசலுக்கருகில் இருந்த புற்றுத் துளைக்குக் கொண்டு விட்டது. அதற்கு மேல் பூவிதழ் இல்லை. புன்னகவதி பாம்பாகத்தான் இதனுள் மறைந்து போயிருக்க வேண்டுமென்று அவர்கள் முடிவு கட்டினர். இன்றைக்கும் அவளுடைய உண்மை ஆட்கள் காடு மூண்டுப் போன தன் நகரியைப் பாம்பாகக் காவல் புரிந்து வருகிறாள் இந்த நாக அரசி என்று உறுதியாக நம்புகின்றனர்.

# கோவிந்தை திருமணம்



இராசமா புரத்தில் உள்ள ஆயர்களின் மாடுகளை எல்லாம் வேடர்கள் ஓட்டிக் கொண்டு சென்று விட்டனர். தங்களுடைய செல்வங்களைப் பறி கொடுத்த ஆயர்களும், ஆயர்குல மங்கையர்களும் அழுது துடித்துக் கொண்டிருந்தனர். தாயை இழந்து தவிக்கும் இளம் கன்றுகளைக் கட்டி அணைத்துக் கொண்டு பெண்கள் கதறி அழுதனர். தயிர் கடையும் பானையிலிருந்து துள்ளிச் சிதறும் வெண்ணெய் போல அவர்கள் உள்ளம் சிதறிக் கிடந்தது. இராசமாபுரமே அமைதி இழந்து கிடந்தது.

ஒரு நாள் இந்த அமைதியைக் குலைத்துக் கொண்டு வீர முரசம் முழங்கிற்று. நாலு வீதிகள் கூடும் மூலையில் நின்று யாரோ ஒருவன் முரசு கொட்டிக் கொண்டிருந்தான். முரசச் சத்தம் நின்றதும் கம்பீரமான குரலோசை கேட்டது. எல்லாரும் வியப்புடன் அந்தக் குரலோசையைக் கேட்டனர்.

''இராசமாபுரத்து மாடுகளை மீட்டுக் கொண்டு வருபவர் யாராயிருந்தாலும் அவருக்குத் தங்கக் கிளி போன்ற என் மகள் கோவிந்தையைக் கொடுக்கிறேன்.''

இது என்ன அதிசயம்? யார் இப்படி முரசு அறையச் சொல்லுகிறார்கள்? யாருடைய மகள் கோவிந்தை?

அனைவரும் ஆச்சரியத்தால் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

மீண்டும் முரசுச் சத்தம்! அதே குரலோசை!

''இராசமாபுரத்து மாடுகளை மீட்டுக் கொண்டு வருபவர் யாராயிருந்தாலும் அவருக்குத் தங்கக் கிளி போன்ற என் மகள் கோவிந்தையைக் கொடுக்கிறேன்.''

இராசமாபுரத்து வாலிபர்கள் தங்கள் மார்பை ஒரு தரம் குனிந்து பார்த்துக் கொண்டனர். மீசையை ஒருதரம் முறுக்கி விட்டுக் கொண்டனர். தொண்டையை ஒருதரம் கனைத்துக் கொண்டனர். தங்கக் கிளி போன்ற பெண்ணை அடைவது என்றால் எந்த வாலிபருக்குத்தான் ஆசை இராது! ஆனால் யார் வேடர்களுடன் போராடுவது?

இப்பொழுது அவர்கள் மத்தியில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ஒரு வாலிபன் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க வந்தான்.




''கேட்டீர்களா? முரசு கொட்டியதைக் கேட்டீர்களா? நம்முடைய தலைவர் நந்தகோன் மாடுகளை மீட்டுக் கொண்டு வருபவருக்குத் தம் மகளைத் தரப்போகிறாராம்'' என்றான்.

''ஓ! நம் தலைவர் நந்தகோன் மகளா? அவள் பெயர்தானா கோவிந்தை?'' என்று எல்லாரும் வியப்புடன் கேட்டனர்.

'மன்னர் கட்டியங்காரன் சேனைகளாலேயே வேடர்களைப் போரில் வெல்ல முடியவில்லை. வேறு யார் வேடர்களை வென்று மாடுகளை மீட்கப் போகிறார்கள்? மாடுகளும் வரப் போவதில்லை. நந்தகோன் மகள் கோவிந்தைக்குத் திருமணமும் நடக்கப் போவதில்லை' என்று அலுத்துக் கொண்டனர்.

இந்தச் சமயத்தில் அவர்களிடையே ஓர் இளைஞன் வந்து நின்றான். அவனுடைய கம்பீரமான தோற்றத்தையும், அழகையும் பார்த்து எல்லோரும் மலைத்துப் போய், 'யாரோ தேவகுமாரனே வந்து நிற்கிறானோ' என்று வியந்து போயினர்.

ஆயர்குல வாலிபர்களின் அருவழியும் முகங்களைப் பார்த்து அந்த வீர வாலிபன் சீவகன் சொல்வான்: ''வாலிபர்களே! கோவிந்தைக்குத் திருமணமே நடக்காது என்று வாய் கூசாமல் சொல்லிக் கொண்டு வாளா நிற்கிறீர்களே! இராசமாபுரத்தின் செல்வமே பறி போய் விட்டது. அதைக் கண்டு உங்கள் மனம் பதறவில்லையா? நீங்களும் தமிழ்நாட்டு வாலிபர்கள்தானா? இராசமாபுரத்தின் செல்வங்களை மீட்டு வருவேன். தமிழ்நாட்டின் வீரத்தைக் காப்பாற்றுவேன். கோவிந்தைக்குத் திருமணம் நடந்தே தீரும்.''

சீவகனின் சபதத்தைக் கேட்டு ஆயர்குல வாலிபர்கள் சிரித்தார்கள். சின்னஞ்சிறு வாலிபனான இவனால் எப்படி ஐம்பத்தாறாயிரம் வேடர்களுடன் போரிட்டு வெற்றி பெற முடியும் என்று சந்தேகித்தனர். ஆனால் சீவகனின் ஆணித்தரமான பேச்சும், வீரம் நிறைந்த வாதங்களும் ஆயர்குல வாலிபர்களின் ஐயத்தைப் போக்கி விட்டன.

சீவகன் போர்க்கோலம் பூண்டான். தன் தோழன் பதுமுகனைத் துணைக்கு அழைத்துக் கொண்டான். கையிலே நீண்ட வேலும், இடையிலே போர்வாளும் மின்னத் தன் தோழன் சகிதம் ரதமேறி மலைநாட்டு வேடர்களுடன் போர் புரியப் புறப்பட்டு விட்டான்.

சீவகன் ரதத்தின் வேகத்தால் கிளம்பிய புழுதி மேக மண்டலம் வரையில் சென்றது; சூரியனையே மறைத்து விட்டது.

தன் தோழனுடன் வரும் சீவகனைப் பார்த்து வேடர்கள் எள்ளிநகையாடினர். அவன்மீது ஆத்திரத்துடன் இரண்டொரு அம்புகளை எய்தனர். அந்த அம்புகளை யெல்லாம் சீவகன் தன் கையிலிருந்த வேல் கம்பினாலேயே தடுத்தான். புலியைப் போலச் சீறி வந்த அம்புகளைத் தடுத்து விட்ட சீவகனின் போர்ச் சாகசத்தைக் கண்டு வேடர்கள் திகைத்து விட்டனர். அடுத்த கணம் நாலாபுறங்களில் இருந்தும் சீவகனைச் சூழ்ந்து கொண்டனர். அவனை நோக்கி அம்பு மழை பொழிந்தனர். வானத்திலிருந்து மழை பொழிவது போல வந்து விழுந்த அம்புகளைத் தடுக்கச் சீவகன் சிறிதும் தயங்கவில்லை. தன் கையில் உள்ள வேல் கம்பைச் சக்கரம் சுழற்றுவது போலச் சுழற்றினான். ஏதோ மந்திரஜாலம் போல வேடர்கள் விட்ட விஷ அம்புகள் அவன்மீது பாயாமல் வேல் கம்பின் மீது மோதிக் கீழே விழுந்தன. சீவகனின் பாதங்களில் சரணாகதியடைந்தவைபோல அம்புகள் தரையில் தலை வணங்கிக் கிடந்தன. இதைப் பார்த்த வேடர்கள் வியந்து நின்றனர். சீவகன் தேரை ஓட்டிக் கொண்டு வேடர்களை நோக்கி வெகு வேகமாக முன்னேறினான்.

வேடர்கள் அம்பறாத் தூணியில் இருந்த அம்புகள் எல்லாம் காலியாகி விட்டன. அவர்களிடமிருந்த தைரியமும் அழிந்து விட்டது. ஐம்பத்தாறாயிரம் வேடர்கள் கண்களுக்கும் சீவகன் மாபெரும் மலைபோலக் காட்சியளித்தான். ஆயிரம் ஆயிரம் சீவகன்கள் அணிவகுத்து முன்னேறி வருவது போல் தோன்றியது. ஒரு கணம் அவர்களுக்கு என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தனர். அடுத்த கணம் உயிர் பிழைத்தால் போதும் என்று பயந்து பின்வாங்கினர். குன்றுகளுக்குப் பின்னால் பதுங்கிப் பதுங்கி ஓட ஆரம்பித்தனர். சீவகன் முன்நோக்கி ரதத்தை ஓட்டினான். பிறகு வெற்றிக்குக் கேட்பானேன்?

சிவகன் ஐம்பத்தாறுயிரம் வேடர்களேயும் அவர்களில் யாருக்குமே சேதமில்லாமல் விரட்டி அடித்து விட்டு மாடுகளே மீட்டுக்கொண்டு இராசமாபுரத்துக்குத் திரும்பினுன்.

வீட்டை நோக்கி வேகமாக வரும் மாட்டு மந்தையின் மணியோசை முன்னும் கட்டியங் கூற, பின்னும் ரதத்தில் சிவகனும் அவன் தோழனும் வெற்றி வீரர்களாக வந்தனர். அவர்களே வரவேற்க இராசமாபுரமே திரண்டு வந்து நின்றது. சிவகனின் அஞ்சா நெஞ்சமும், அவன் முகத்தில் பொங்கித் ததும்பிய வீர உணர்ச்சியும், ஈடு இணையற்ற கம்பீரமும் இராசமாபுரத்து மக்களுக்கு அவன் மீது பக்தியையும் மரியாதையையும் உண்டாக்கின.

ஆயர்குலத் தலைவன் நந்தகோன் ஆனந்தக் கூத்தாடினுன். அவன் மகள் கோவிந்தை குதூகலப்பட்டாள். ஆனல் மன்னன் கட்டியங்காரன் மட்டும் இந்த மகிழ்ச்சியில் கலந்து கொள்ள வில்லே. தன்னுடைய ஆயிரக் கணக்கான வீரர்களும், நூறு புதல்வர்களும், மைத்துனன் மதனனும் சாதிக்கமுடியாத காரி

[redacted]

சிரிப்பது போலத் தோன்றும். ஒரு பெரிய மரத்தடியில் பளிங்கு மேடை கட்டியிருக்கிறுன். அந்த மேடைமீது அமர்ந்து தன்னுடைய கன்றுக் குட்டியின் கழுத்தைப் பிடித்துக் கொஞ்சிக் கொண்டிருக்கும் கோவிந்தையைப் பார்த்தால் தேவலோகத்துக் கன்னி ஒருத்தி வந்து உட்கார்ந்திருப்பது போல் இருக்கும்.

''அவளுடைய முல்லேச் சிரிப்பு ஒன்றுக்காகவே ஐம்பத் தாறுயிரம் கொடிய வேடர்கள் என்ன? ஐம்பத்தாறு கோடி அசுரர்களிடம் வேண்டுமானுலும் போரிடலாம். பொறுமையில் பூமிதேவிக்கு நிகரானவள். அவள் உனக்கேற்ற மனேவிதான். நீ அவளே ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்றுன் நந்தகோன்.

சிவகன் மெதுவாகச் சிரித்தான். நந்தகோனைப் பார்த்து, ''மாடுகளே நான் மட்டும் தன்னந்தனியே சென்று மீட்டு வந்ததாக நினேக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

''ஐம்பத்தாறுயிரம் வேடர்களும் உன் பெயரைக் கேட் டாலே நடுங்குகிறுர்களே! அது ஒன்றே போதாதா?''

'' என் பெயரைக் கேட்டாலே நடுங்கு [redacted]

எங்கள் தீப்பெட்டிகளை ஆதரிக்கும் வியாபாரிகளுக்கும்
பொதுஜனங்களுக்கும் மனமார்ந்த

# தீபாவளி

## வாழ்த்துக்கள்




குச்சிகள் வெண்மையாகவும் எண்ணிக்கை சரியாகவும் உள்ளது. மழை காலத்திற்கும், காற்றுக்கும், குளிர்ப் பிரதேசத்திற்கும் உத்திரவாதமுள்ளது.

*

டிப்போக்கள் :

| | | |
|---|---|---|
| பாலக்காடு | விழுப்புரம் | கோயமுத்தூர் |
| பையனூர் | விஜயபுரம் | கடலூர் |
| பண்ருட்டி | திருச்சிராப்பள்ளி | நாகப்பட்டினம் |
| புதுக்கோட்டை | மதராஸ் | மதுரை |

# புறா

மார்க்

## தீப்பெட்டிகளை

## எல்லோரும் வாங்கி உபயோகியுங்கள்






HVB

# வருகின்ற எழில்பாராய்!

வருகின்ற எழில்பாராய்!—முருகன்
வண்ணப்பூங் கழல்சேராய்!
உருகிநிதம் கரைபவரின்—நெஞ்சம்
ஓங்குமொரு சிங்காரன் (வரு)

கோலமயில் மீதமர்ந்து—மருங்கில்
குலவுமிரு மாதருடன்
சிலஇசைச் சிலம்பொலிக்க—அன்பர்
சித்தமது மிகக்களிக்க (வரு)

உளமினிக்கும் தமிழ்கேட்க—நல்ல
உத்தமர்தம் குறைநீக்க
வளமளிக்கும் ஆறுமுக—வீர
வள்ளலெனும் பேரழகன் (வரு)

வேராகி வளர்ந்திருக்கும்—சமத்த
வினையாகும் மரம்சாய்த்து
நேரான சுகங்கொடுக்கச்—சக்தி
நெடுவேலைக் கரத்தேந்தி (வரு)

ஆணவத்தோர் அறியாத—தூய
அறிவுடையோர் மறவாத
மாண்புநிறை தமிழ்வாணர்—உள்ளம்
மகிழ்ந்தேத்தும் மால்மருகன் (வரு)

தருணமிதை நழுவாமல்—பெண்ணே!
தஞ்சமெனத் தாள்பணிவாய்!
அருமைமிகும் வாழ்வளித்துக்—கண்ணே!
அணைத்துன்னைக் கரைசேர்ப்பான்! (வரு)



என். எஸ். சிதம்பரம்




காலை நேரம். பூத்துக் குலுங்கும் உத்தியான வனத்தில் மாண்டவி உலாவிக் கொண்டிருந்தாள். ஒரு வண்டு பறந்து வந்து அவளைச் சுற்றி ரீங்காரமிட்டது.

"மாண்டவி!"

குரல் கேட்டது. ஆயினும் அவள் திரும்பவில்லை. முகத்தில் ஒரு புன்முறுவல் மட்டும் அரும்பியது. பவழவாய் மொட்டுப் போல் குவிந்தது.

"மாண்டவி!"

மறுபடியும் கோமளத்வனி காற்றில் வந்தது. மாண்டவியின் பவளவாய் மலர, சௌந்தர்யமும் அதிகரித்தது. மாண்டவி மெதுவாகத் திரும்பினாள்.

எதிரே அவள் அருமைக் கணவர் பரதன் நின்று கொண்டிருந்தார். "மாண்டவி! கூப்பிடக் கூப்பிடத் திரும்பிப் பாராமல் இருக்க நான் செய்த குற்றம்தான் என்ன?"

"இனிமையான குரலை அடைந்திருப்பது மன்னிக்க முடியாத குற்றமாயிற்றே! தங்கள் மனமோகனக் குரலினால் என் பெயரைக் கூப்பிடுவதை மௌனமாக நின்றுகொண்டு கேட்க எவ்வளவு ஆனந்தம் உண்டாகிறது. தெரியுமா? தேன் குடிப்பது போலிருக்கிறது."

"மாண்டவி! தேன்மொழியாளுக்கு எல்லோருடைய குரலும் தேனாகத் தோன்றிவிடும் போலிருக்கிறது. இங்கு சுற்றும் வண்டினங்களைக் கேள், உண்மை புலப்படும்" என்றார் பரதன்.

"சூரியன் ஒளி மறையும் வரையில் பூக்கள் மலர்ந்திருப்பது உலக நியதி தானே? பூக்களைவிட நான் பாக்யசாலி தான். சூரியன் தினமும் மறைந்து விடுகிறது. ஆனால் தாங்கள் எப்பொழுதுமே என் அருகில் இருப்பது என் பாக்கியம் தான்" என்றாள் மாண்டவி.

"மாண்டவி! நீ புத்திசாலி, உம்.... ஒரு விஷயம். நான் மாமன் வீட்டில் சிறிது நாட்கள் இருந்து விட்டு வர வேண்டும் என்பது பெற்றோருடைய விருப்பம். உன்னிடத்தில் விடை பெறவே நான் இங்கு வந்தேன்" என்றார் பரதன்.

மாண்டவியின் கண்களில் நீர் துளித்தது. அவளால் பதில் கூற முடியவில்லை.

பிறகு பரதன் மனைவியிடமிருந்து பிரியா விடை பெற்றார். நந்தவனத்தை விட்டு வெளியே சென்று விட்டார்.

மாண்டவியின் கண்களிலிருந்து முத்துக்கள்போன்று கண்ணீர்த் துளிகள் விழுந்தன. ஐயோ, இதென்ன! வலது கண்ணும் வலது தோளும் ஏன் இப்படித் துடிக்கின்றன? கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டாள். துடிப்பு மேலும் அதிகமாயிற்று. அவள் பயந்து விட்டாள். உடனே அருகிலிருந்த தோழியைக் கூப்பிட்டு, "வாஸந்தி! ஓடு, என் நாதனை உடனே திருப்பி அழைத்து வா. கண்ணீரை எவ்வளவு தடுத்தும் அது முத்துப் போல் தெறி விழுகின்றது. வலது கண்ணும், தோளும் அடங்காமல் துடிக்கின்றன. ஐயோ! நான் என்ன செய்வேன்? என்ன ஆபத்து நேரப் போகிறதோ! அடி, ஏன் நிற்கிறாய்? ஓடு, என் கணவரைக் கூப்பிடு. ஆபத்தின் வாயில் அவரை விழ விடமாட்டேன்" என்று கூக்குரலிட்டாள் மாண்டவி.

"அம்மா! பிரயாணம் புறப்பட்டு விட்ட மனிதரைக் கூப்பிடுவது சகுனத் தடை" என்று கூறினாள் வாஸந்தி.

மாண்டவி பொத்தெனப் படுக்கையில் விழுந்தாள். அவள் மனத்தில் இனம் தெரியாத ஒரு பயம் கவ்வியது.

* * *

"வாஸந்தி! மல்லிகா! சுபசந்திரா! ரோஹிணி! எழுந்திருங்கள். நன்றாக இருக்கிறது, உங்கள் தூக்கம். இன்று எங்கள் அண்ணா, மன்னியின் பட்டாபிஷேக வைபவத்தை மறந்து விட்டீர்களா?" என்று கூறிக் கொண்டே வந்தாள் மாண்டவி.

தோழிகள் அவசரம் அவசரமாக எழுந்திருந்தனர். மாண்டவி நீராடி விட்டு, கூந்தலை அழகாய் முடிந்து, மலர்களால் கொண்டையை அலங்கரித்திருந்தாள். முகத்தின் காந்தி நான்கு புறமும் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அவள் உடலில் அணிந்திருந்த பட்டும், ஜரிகைப் பூக்களும் நான்கு புறமும் பளிச்சென

ஒளி வீசிக் கொண்டிருந்தன. செவ்விதழ்களில் ஒரு புன்னகை யாவரையும் மயக்கிக் கொண்டிருந்தது.

மாண்டவியைத் தாங்கள் எழுப்பிஅலங்கரிப்பதற்குப் பதிலாக, அவளே தானே அலங்கரித்துக் கொண்டு தங்களை எழுப்ப வந்து விட்டாளே என்று தோழிகள் வெட்கினர். பட்டாபிஷேக வைபவத்தின் ஆனந்தம் அல்லவா மாண்டவியை இவ்வளவு குதூகலத்திலும், சுறுசுறுப்பிலும் ஆழ்த்தி விட்டது!

தோழிகள் புடைசூழ மாண்டவி புறப்பட்டபோது கூனி எதிர்ப்பட்டாள்.

கூனல் உடம்பில் பட்டை சரிகை வஸ்திரம்; காதில் தங்கக் குண்டலங்கள்; கழுத்தில் சுமக்க முடியாத மாலைகள்; கை நிறையக் கற்கள் பதித்த வளைகள். யாவற்றையும் பார்த்த மாண்டவியும் தோழிகளும் கலகலவென நகைத்தனர்.

"அடி வாஸந்தி! இப் பட்டாபிஷேக வைபவத்தில் கிழங்களுக்கும் அலங்காரம் செய்து கொள்ள ஆசை பிறக்கிறது. பார்த்தாயா?" என்றாள் மாண்டவி.

"ஆமாமடி என் கண்ணே! நீ என் குழந்தை போல. அதற்குத்தானே இவ்வளவு ஏற்பாடுகளும் செய்தேன். உன் பட்டாபிஷேக வைபவத்தைக் காண. அம் மகிழ்ச்சியில் இப்பொழுதே அலங்கரித்துக் கொண்டுவிட்டேன். நீ என் ராஜாத்தி!" என்று கூறிய கூனி, மாண்டவியின் இரு கன்னங்களையும் தடவி திருஷ்டி கழித்தாள். மாண்டவிக்கு அவள் வார்த்தைகளெல்லாம் விளையாட்டாகவே பட்டன.

"அடி அம்மா, நீ இந்தமாதிரி விளையாட்டுக்குக் கூடப் பேசக் கூடாது. எனக்குச் சொப்பனத்தில் கூடப் பட்டமகிஷியாக விருப்பமில்லை. ராஜா ராணியாக இருந்து கொண்டு, பிரஜைகளைத் திருப்திப்படுத்தும் பாரத்தை யாரால் சுமக்க முடியும்? நல்ல வேளை, என் கணவர் மூத்த மகனாகப் பிறக்கவுமில்லை, ராஜ்யத்தை ஆள வேண்டிய பொறுப்பை அடையவும் இல்லை. அதுவும் என் பாக்கியம்தான்" என்றாள் மாண்டவி.

"போடி, பைத்தியமே! பட்டமகிஷி என்ற யோக்கியதை அடைய என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும், தெரியுமா? அப்பப்பா, உன் மாமியாரின் மனத்தை மாற்ற எவ்வளவு கஷ்டப் பட்டுவிட்டேன், தெரியுமா? என் கனவும் நிறைவேறிற்று" என்று கூறினாள் கூனி. பிறகு அவள் கைகேயியிடம் சென்று அவள் மனத்தை மாற்றித் தசரத மகாராஜாவிடம் வரம் கேட்கச் செய்தது, தசரத மகாராஜா தாம் கொடுத்த வாக்கை மீற முடியாமல் மூர்ச்சித்து விழ, விடியற் காலையிலேயே ராமனைக் கூப்பிட்டு விஷயத்தைக் கைகேயி கூறியது — எல்லாவற்றையும் ஆதியோடந்தமாக மாண்டவியிடம் கூறினாள்.

முழுவிஷயங்களைக் கேட்டதும் மாண்டவிக்குக் கோபம் கொந்தளித்து வந்தது. "சீ, என்ன மோசம் செய்து விட்டாய் மூத்த மகன் இருக்கும்போது இளையவர் ராஜ்யத்தை ஆளுவது எங்காவது கேட்டிருக்கிறாயா? மேலும் ஸ்ரீராமன் எங்களுக்குத் தந்தைபோல. அவரிடம் மாறு அன்பு கொண்டிருக்கும் என் கணவர் இந்தச் செய்தி கேட்டால் துடிதுடித்துப் போவார். மேலும் அண்ணாவையும் மன்னியையும் காட்டுக்கு அனுப்பிய பெரும்களங்கத்தை எங்கள்மீது நினைத்து விட்டாயே? பாவி, நல்ல பாம்புக்குப் பால் வார்த்ததுபோல் உன்னை வளர்த்த என் மாமியார், உன்னால் என்றும் அழியாக் களங்கத்தை அடைந்து விட்டார். என் முன் நில்லாதே, போய் விடு..... வாஸந்தி! வா, என் மாமியிடம் எல்லா விஷயங்களையும் கூறி, பேதலித்து விட்ட அவளுடைய மனத்தைத் திருப்புவோம்" என்று கூறிவிட்டு வேகமாக வாயில்புறம் சென்றாள் மாண்டவி.

ஆனால் பாவம், அவள் முயற்சி பலிக்காமல் போய்விட்டது. (தேவர்கள் குறுக்கிட்டோ!) போன வேகத்தில் கால்கள் படிக்கட்டுகளில் இடற, மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டாள். தலையில் அவளுக்குப் பலமான காயம் பட்டது. மாண்டவி அன்று முழுவதும் மூர்ச்சித்த நிலையில் இருந்தாள்.

* * *

ஆற்றின் நடுவே ஒரு செந்தாமரை மலர். கரையில் ராமனும் சகோதரர்களும் மனைவிமார்களுடன் கூடி விளையாடுகின்றனர். சட்டென எல்லோருடைய பார்வையும் அப் புஷ்பத்தின் மீது விழுகிறது. ராமன் ஆற்றில் இறங்குகிறார். ஆனால் சட்டென்று பரதன் மாண்டவியை இழுத்துக் கொண்டு, ராமனைத் தள்ளி விட்டு மடுவில் இறங்கி விடுகிறார். திடீரென்று எங்கிருந்தோ ஒரு புயல் கிளம்புகிறது. மாண்டவி புயலில் நடு ஆற்றில் சிக்கி விடுகிறாள். அவள் கைகளை உதறி எறிந்த பரதன் பிறகு கண்களுக்குப் புலப்படவில்லை. இதற்குள் ஒரு முதலை வாயைப் பிளந்தவாறு கிளம்புகிறது. சுழலில் சிக்கித் தவித்த மாண்டவி, "ஐயோ, எங்கு சென்று விட்டீர்கள்?" என்று கதறுகிறாள். அவளை விட்டுப்



பிரிந்த பரதன் அவளிடமிருந்து வெகு தொலைவில் சென்று விடுகிறார்....

சட்டெனக் கண் விழித்தாள் மாண்டவி. எல்லாம் கனவு. இவ்வித பயங்கரக் கனவுகள் காண்பது இப்பொழுது அவளுக்குத் தினமும் வழக்கமாகி விட்டது. ஸ்ரீ ராமன் காட்டுக்குச் சென்றதும், தசரதர் அதன் காரணமாக இறந்ததும் மறக்க முடியாத சம்பவங்கள். இவற்றை நினைக்கும் போதெல்லாம் அவளுடைய உடல் நடுநடுங்கும்.

"அம்மா, தங்கள் கணவர் வந்து விட்டார்!" என்று கட்டியம் கூறியபடி வந்தாள் வாஸந்தி. ஆனால் அவள் முகத்தில் ஆனந்தம் காணவில்லை. மாண்டவியின் ஹிருதயம் படபடத்தது. இனம்அறியாத ஒரு பயத்துடன் கணவனை எதிர் கொண்டழைக்கக் கிளம்பினாள். ஏங்கிய மனத்துடனும், சோர்ந்த முகத்துடனும் அவள் கிளம்புவதைக் கண்ட வாஸந்தி, "தேவி, சற்று இருங்கள். நீங்கள் இப்பொழுது போக வேண்டாம். தங்கள் கணவர் முதலில் அவருடைய தாயாரைச் சந்திக்கப் போயிருக்கிறார். அங்கு எல்லா விஷயங்களையும் அவர் அறிந்துகொள்ளட்டும்" என்று கூறினாள்.

"போடி, பைத்தியக்காரி. இவ்வளவு நாட்கள் பழகியும் அவர் குணம் எனக்குத் தெரியாதா? தமையன் காட்டுக்குச் சென்றதைக் கேட்டால் துடிதுடித்துப் போவார். அவருக்கு இவ்விராஜ்யத்தின் மீது விருப்பமே கிடையாது. சகோதர சேவையில் அவர் இன்பம் காண்பவர். முதலில் நான் அவரிடம் சென்று எல்லா விஷயங்களையும் எடுத்துக் கூறி, அவரைத் தேற்ற வேண்டும். பிறகு, தமையனை மறு படியும் அழைத்து வரும் பணியில் இருவரும் ஈடுபட வேண்டும்" என்று கூறிய மாண்டவி வெளிக் கிளம்பினாள்.

ஆனால் அங்கும் விதி குறுக்கிட்டது. மாண்டவி போவதற்கு முன்பே, பரதனுக்கு விஷயமனைத்தும் தெரிய, கைகேயிக்கும் அவருக்கும் பலத்த வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. கடுவேகமாகச் சுழற்றி அடிக்கும் புயலாக மாறி இருந்தார் பரதன். மாண்டவி தயங்கித் தயங்கிச் சென்றாள். மாண்டவியைப் பார்த்துவிட்ட கைகேயி, "மாண்டவி! நீதான் இவனுக்கு எடுத்துச் சொல். சிங்காதனமேறி நாற்புறமும் புகழும் கீர்த்தியும் விளங்க, செங்கோல் செலுத்தும் பாக்கியத்தை இவனுக்கு வாங்கிக் கொடுத்தேன். ஆனால் இவனோ பெற்ற தாயின் அன்பை மறந்து, பாவியாகி, என்னை நிந்திக்கிறான். உங்கள் சுகத்துக்காகப் பாடுபட்ட நான் அடைய வேண்டிய பலன் இதுதானா?" என்றாள்.

மாண்டவி மாமியாரை எதிர்த்துப் பேசிப் பழக்கமில்லாதவள். ஆதலால் அவள் கண்களில் கண்ணீரைப் பெருக்கியவாறு நின்று விட்டாள். நியாயத்தை எப்படி எடுத்துச் சொல்வது? மாமியின் பிழையை எப்படி எடுத்துக் காட்டுவது என்று தயங்கி நின்றாள். ஆனால் மாண்டவியின் தயக்கம் பரதனுக்கு விபரீதமாகப் பட்டது. கண்களில் தீப்பொறி பறக்க, "அம்மா போதும், மேலே பேசாதே. மாமியாரும் நாட்டுப் பெண்ணும் சதி செய்து பிடுங்கிய ராஜ்யத்தில் எனக்குத் துளியும் பங்கு வேண்டாம். இனி நான் உனக்கு மகனில்லை. உன் நாட்டுப் பெண்ணுக்கும் நான் கணவனில்லை" என்றார் பரதன்.



இவ் வார்த்தைகள் மாண்டவியின் தலையில் பேரிடி போல் விழுந்தன. இதயம் சுக்கல் நூறாக வெடித்தது. "ஐயோ! எனக்கு இதில் ஒன்றும் சம்பந்தமே இல்லை. இவ்வளவு நாட்களாகப் பழகியும் என் குணம் இன்னும் உங்களுக்குத் தெரியவில்லையா? என்னை நம்புங்கள். இப்பொழுதே நான் சென்று அண்ணாவையும் மன்னியையும் அழைத்து வந்து விடுகிறேன்" என்று கூறி மாண்டவி தேம்பித் தேம்பி அழுதாள்.

"ஹூம்.... இந்த நீலித்தனம் என்னிடம் பலிக்காது. பெண்களை நம்பக் கூடாது என்று நன்றாகத் தெரிந்து கொண்டு விட்டேன். ராமனிடம் இவ்வளவு நாட்கள் நீங்கள் செலுத்தின அன்பெல்லாம் பொய் என்பது இப்பொழுது நன்றாகத் தெரிகிறது. மாயாவிகள்! உண்மை அன்புள்ளவளாக இருந்தால் என் அண்ணனும், மன்னியும் வனத்துக்குப் புறப்படும் போதே அவர்கள் காலடியில் விழுந்து ஏன் தடுக்கவில்லை? தன் கணவரின் மரணத்துக்குக் காரணமான என் தாய் என்னும் பேயை ஏன் எரித்துச் சாம்பலாக்கவில்லை? பரதன் வருவான், சுகமாகச் சிங்காதனமேறிப் புகழும் கீர்த்தியும் வைபவமும் அடையலாமென்ற எண்ணத்தினால் அல்லவா நீ அவ்வாறு செய்யவில்லை? இனி உங்கள் எதிரில் நின்றாலும் உங்கள் பாபமும் என்னைச் சேர்ந்து விடும்." சுழன்று சுழன்று வரும் பேய்க்காற்றைப் போல் பரதனுடைய வாயிலிருந்து வெளிவந்த இவ் வார்த்தைகளைத் தாங்க முடியாமல் திக்குமுக்காடினாள் மாண்டவி. அவளுக்கு உலகமே சுற்றுவதுபோல் இருந்தது.

இதற்குள் அந்தப் பக்கம் வந்த சுமித்ரை, கீழே விழப் போன மாண்டவியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, "மாண்டவி!" என்றாள்.

மாண்டவி சற்றேகண்திறந்து சுமித்ரையைக் கட்டி அணைத்து, "அம்மா! நீங்களாவது என்னை நம்புவீர்களா? நான் குற்றமற்றவள். இப் பெரிய களங்கத்தை என்னால் சகிக்க முடியவில்லை. உங்கள் மகனிடம் 'உன் மனைவி குற்றமற்றவள்' என்று சொல்லுங்கள், வாருங்கள்" என்று கதறிக் கொண்டே கூறினாள்.

"பரதன் மிகுந்த கோபத்தில் இருக்கிறான். உன் களங்கமற்ற குணம் உலகத்துக்குப் புலப்பட இன்னும் சிறிது நாட்களாக வேண்டும். பொறுமையுடன் காத்திரு" என்றாள் சுமித்ரை.

"அம்மா, கணவரால் நிரஸ்கரிக்கப் பட்ட பெண்களின் மனம் எப்படித் துடிக்கும் என்று உங்களுக்குத் தெரியாதா? ஐயோ! இவ்வளவு நாட்களாகப் பிரிந்திருந்த விரக வேதனையை அனுபவித்தது கூடக் கஷ்டமாக இல்லை. அருகில் இருந்தும் கணவர் அன்பைப் பெறமுடியாமலிருக்கும் இவ் வேதனையை என்னால் தாங்கவே முடியவில்லை" என்றாள் மாண்டவி.

விம்மி விம்மி அழுத மாண்டவியைப் பலவாறு தேற்றி அழைத்துச் சென்றாள் சுமித்ரை. ராமாயணத்தில் சுமித்ரை ஒரு அற்புத சிருஷ்டி. அவள் எல்லோருக்கும் நல்லவள்.

* * *

வனத்திலிருந்து பரந்தாமனைத் திருப்பி அழைத்துவரப் பரதன் மற்றவர்களுடன் கிளம்பி விட்டார். வழி நெடுக, பரதன் எல்லோருடைய சௌகரியங்களையும், நன்றாகக் கவனித்துச் சென்றார். ஆனால் மாண்டவியையும், கைகேயியையும் திரும்பியும் பார்க்கவில்லை. மாண்டவி கணவனுடைய போக்கைப் பார்த்து நெஞ்சுருகிப் போனாள். கைகேயி பொல்லா மயக்கத்திலின்று விழித்து விட்டாள். மாண்டவி உருகிப் போவதைப் பார்த்து அவள் மனம் விம்மியது. "மாண்டவி! நான் மகா பாவி. என் கணவரின் மரணத்துக்கு மட்டுமல்ல, உங்கள் இருவரையும் பிரித்து வைத்த மகா பாபத்தையும் சுமக்கிறேன்" என்று கண்ணீர் விட்டாள் கைகேயி.

மாண்டவி தன் மாமியின்மீது பச்சாத்தாபம் கொண்டாள். இனி அவளைத் தேற்றும் பொறுப்பையும் அவள் சுமக்க வேண்டும். "அம்மா! விதியின் கையில் நாம் சிக்கிவிட்டோம். விதியை மதியால் வெல்ல முயலுவோம்" என்றாள். அவள் வேறு என்ன சொல்ல முடியும்?

# ஒட்டகம் மார்க் தீப்பெட்டிகள்




பொதுஜனங்களுக்கும் "ஒட்டகம் மார்க்" தீப்பெட்டிகளை ஆதரிக்கும் மக்களுக்கும் வியாபாரிகளுக்கும்

எமது மனமார்ந்த

## தீபாவளி வாழ்த்துகள்



குளிர், மழை பிரதேசங்களுக்கு உகந்தது
பூரண உத்திரவாதம் உள்ளது

★

போலிகளைக் கண்டு ஏமாறுதீர்கள்

★

எல்லோரும் வாங்கி உபயோகியுங்கள்

## சௌத் இந்தியன் லூசிபர் மாட்ச் ஒர்க்ஸ் சிவகாசி.

தந்தி: LUCIFER. த.பெ.நெ. 26, போன். 81.

விற்பனை டிப்போக்கள்:

| | |
|---|---|
| மங்களூர் | ... 678, அஜிசுடின் ரோடு |
| கள்ளிக்கோட்டை | 2-3, பீச் ரோடு |
| கண்ணனூர் | ... 674, காம்ப் பஜார் |
| தலைச்சேரி | ... 7/233, மெயின் ரோடு |
| திரூர் | ... 127-A, மலப்புரம் ரோடு |
| கூனூர் | ... மார்க்கெட் |

பரதனுடன் அளவளாவி ஆனந்தம் எய்திய பிறகு, ஸ்ரீராமன் கைகேயியைத் தான் முதலில் குசலம் விசாரித்தார். அதற்குள் சீதை, மாண்டவி இருக்கும் இடத்தை நோக்கிச் சென்றாள்.

"ஐயோ, இதென்ன? மாண்டவி, நீ ஏன் இப்படி இளைத்துத் துரும்பாக இருக்கிறாய்?" என்று கேட்டாள் சீதை. மாண்டவி பதில் கூறவில்லை. சீதையை அணைத்தபடி கண்களிலிருந்து முத்து முத்தாகக் கண்ணீர் வடித்தாள். சுமித்திரை சீதையிடம், 'மேலும் ஒன்றும் கேட்காதே' என்று சைகை செய்தாள்.

பரதன் வேறு வழியில்லாமல் பாதுகைகளைத் தலைமேல் தாங்கி, மறுபடியும் அயோத்திக்குப் புறப்பட்டு விட்டார். பரிவாரங்களும் கிளம்பிவிட்டன. ஆனால் மாண்டவியோ உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து கிளம்பவில்லை. இதைக் கவனித்த சுமித்திரை, "மாண்டவி! நீ இன்னும் எழுந்திருக்கவில்லையா?" என்றாள்.

சுமித்திரையை ஏறிட்டு நோக்கின மாண்டவி, "நான் திரும்பி அயோத்திக்கு வரமாட்டேன். அங்கு வந்து நான் என்ன சுகத்தைக் காணப் போகிறேன்? நான் இங்கேயே தங்கிவிடுகிறேன். ஸ்திரீகளுக்கு வேண்டியது கணவனின் அன்பு. ஆனால் அந்த பாக்யம் எனக்குப் போய் விட்டது. அருகிலிருந்து கொண்டே ஏறிட்டும் பாராமல், என் கணவர் செய்யும் உதாசீனத்தை என்னால் சகிக்க முடியவில்லை!" என்றாள்.

"மாண்டவி! உன் வேதனை எனக்குத் தெரியும். என் மைந்தன் லக்ஷ்மணனை விட்டுப் பிரிந்து ஊர்மிளை அடையும் மனோ வேதனையை விட உன் வேதனை கொடியது என்று நான் அறிவேன். ஆயினும் நீ இங்கிருந்தால் ராம லக்ஷ்மணருடன் இருக்கிறாய் என்ற அபவாதத்தை அடைந்துவிடுவாயே. அம்மா! கொஞ்சம் பொறுமையுடன் இரு. காலம் மாறும். கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டு கணவனைப் பின்பற்றிச் செல்" என்று கூறினாள் சுமித்திரை.

சுமித்திரை சொன்னது மாண்டவிக்கு உண்மையெனப் பட்டது. அபவாதத்தை அடைய விரும்பாமல் கிளம்பி விட்டாள்.

* * *

நந்திக் கிராமத்தில் ஆசிரமம். ஆசிரமத்தில் மாண்டவி நடைப்பிணம்போல் சுற்றி வந்து கொண்டிருந்தாள். அவள் உடலில் இப்பொழுது ஆபரணங்கள் இல்லை. உடலை மறைக்க ஒரு வெள் பட்டு. அள்ளிச் செருகிய கூந்தல்.

வழக்கம்போல் ஆசிரமத்தைச் சுத்தம் செய்தாள். இப்பொழுது அவளுக்குத் தோழிகள் இல்லை; வேலைக்காரிகளில்லை. முத்து முத்தாகக் கோலம் போட்டாள். புஷ்பங்களினால் ஸ்ரீமந் நாராயணனின் படத்தை அலங்கரித்தாள். பூக்கள் கொய்து வந்து பூஜைக்குத் தயாராக எடுத்து வைத்தாள்.

இதற்குள் பரதன் வந்து விட்டார். மாண்டவியின் மனம் ஒரு கணம் விம்மியது. பிறகு கணவருடைய கால்களைக் கழுவினாள். இரு பூக்களை அர்ச்சித்துத் தலையில் வைத்துக் கொண்டாள். கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டபோது, சூடான இரு நீர்த் துளிகள், தினமும் கால்களில் விழுவதைப் பரதன் உணராமலில்லை. வரவரப் பரதனுடைய மனம் ஏதோ சொல்ல முடியாத வேதனையை அடைந்து தவித்தது. ஆயினும் மாண்டவியிடம் அவர் வாய் திறந்து பேசவில்லை.

இப்படிநான்கு வருஷங்களாக மாண்டவி நிதந்தோறும் அலுக்காமல் இப்பணியைச் செய்து வருகிறாள். பரதனுக்குக் கந்தமூல பழங்களைச் சாப்பிடக் கொடுத்த பிறகு கைகேயியிடம் செல்லுவாள். ஒரு மூலையில் முடங்கிக் கிடந்த அவளை, எல்லோரும் தூற்றுவதைப் பார்த்து அவள் மனம் துயரத்தில் மூழ்கும். நாட்டுப் பெண்ணின் வற்புறுத்தலின் பேரில் சாப்பிட்டதாகப் பெயர் செய்து வந்தாள் கைகேயி. பிறகு மாமியின் கெஞ்சுதலின் பேரில், மாண்டவி கணவர் வைத்த மிச்ச உணவைச் சாப்பிடுவாள்.

நாளுக்கு நாள் பரதனுடைய மனம், மிக்க கலக்கத்தை அடைந்தது. அண்ணா சுகமாகத் திரும்பி விடுவானா என்ற வேதனை ஒருபுறம்; மறுபுறம் எலும்பும் தோலுமாகத் தோற்றமளிக்கும் மாண்டவியின் உருவம்.



* * *

பரந்தாமனை எதிர்கொண்டு அழைக்கப் பரதன் விரைந்துசென்றார். பதினான்கு வருடங்கள் வனவாசம் முடிந்து வரும் ராமனைக் காண நகர மக்கள் அனைவரும் திரண்டு சென்றனர். பெண்களும், குழந்தைகளும், முதியவர்களும் போட்டி போட்டுக் கொண்டு பரந்தாமனை வரவேற்க விரைந்தார்கள். மாண்டவி வழக்கப்படி ஆசிரமத்தைச் சுத்தம் செய்வதில் ஈடுபட்டிருந்தாள்.

நகர மக்களும், ராணிகளும், மந்திரிகளும், பரதனும் மற்ற யாவரும் எதிர் வந்து அழைத்தும், ராமருக்குச் சூன்யமாகப் புலப்பட்டது. உடனே அவர் "பரதா" என்றார். பரதன் அவருக்குத் தலைவணங்கி நின்றார்.

"பரதா! என் தாய் கைகேயி எங்கே? எங்கள் அருமை நாட்டுப் பெண் மாண்டவி எங்கே?" என்றார். பரதன் பதில் கூறவில்லை. தன் பரிவாரங்களை அழைத்த போது தாயையும், மனைவியையும் கூப்பிடவில்லை என்று அண்ணனிடம் கூற விரும்பவில்லை அவர். சற்றுத் தயங்கினார். பிறகு அருகிலிருந்த சுமந்திரரைக் கூப்பிட்டு அவர்களை அழைத்து வரச் சொன்னார்.

ஆனால் ராமனோ "பரதா! நீ அவர்களுக்கு வைத்திருக்கும் மரியாதையும் அன்பும் நன்றாகத்தான் இருக்கிறது! நீயே சென்று அழைத்து வா. நீ போகாவிடில் நானே போகிறேன். எல்லாம் விதியின் செயல் என்பதை நீ ஒப்புக் கொள்ளவில்லை என்று தெரிகிறது. கைகேயி என்னைக் காட்டுக்கு அனுப்பியதைவிட, பெற்ற தாயை மதிக்காமல் நீ இன்னும் துச்சமாக நினைப்பது கொடும் பாபம். மாண்டவி உன் உடலில் பாதி அம்சம். அவள் உன் மனைவி. சுக துக்கங்களில் சமமான பங்கு எடுப்பவள். மனைவி குற்றம் செய்திருந்தாலும் அவளை மன்னிப்பது கணவனுடைய கடமை. குற்றமே செய்யாத மனைவியிடம் ஏன் இந்த அலட்சியம்? போ, போய் மாண்டவியை அழைத்து வா, இல்லையெனில் நானே போகிறேன்" என்று கூறியபடி புறப்படக் கிளம்பினார்.

அதற்குள் பரதன் அவரை வழி மறைத்து, "அண்ணா, பொறுங்கள், இதோ நானே போகிறேன். இவ்வளவு நாட்களாகப் பராமுகமாக இருந்தும், மனத்தில் வேதனை மட்டும் எப்பொழுதும் இருந்ததன் காரணம் எனக்கு இப்பொழுதுதான் தெரிகிறது. மன்னிப்பு என்ற பதத்தின் உயர்ந்த பொருளை அறியாமலிருந்து விட்டேன். உங்களைப் போல் சகல குணங்களும் பெறும் பாக்கியத்தை நான் அடையாமலிருப்பது என் துர் அதிர்ஷ்டமே" என்று கூறிவிட்டு, ஆசிரமத்தை நோக்கி ஓடினார்.

வழக்கம்போல் பரதன் வந்ததும், மாண்டவி அவர் கால்களைக் கழுவினாள். பரதனுடைய கண்களிலிருந்து இரு நீர் சொட்டுகள் மாண்டவியின் மீது விழுந்தன. மாண்டவி திடுக்கிட்டுத் தலையைத் தூக்கினாள். பரதனுடைய கண்களுடன் அவள் கண்கள் சந்தித்தன. சட்டென, பரதன் "மாண்டவி" எனக் கூறி அவளை அணைத்துக் கொண்டார்.

மாண்டவிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. ஒரு போதை தலைக்கு ஏறிக் கிறுகிறுத்தது. உன்மத்தம் பிடித்தவள் போல் ஆகிவிட்டாள் அவள். இங்கும் அங்கும் ஓடினாள். "அம்மா, இதோ பாருங்கள், என் அன்பரின் அன்பு எனக்குக் கிடைத்து விட்டது. கடவுளே, நான் பாக்கியசாலியாகி விட்டேன். பகவன்றே, இனி நான் என் புருஷனின் ராணி" என்று பிதற்றியபடியே நான்கு புறமும் சுற்றிச் சுற்றி ஓடின அவள், கடைசியில் தன் அருமைக் கணவர் பரதனின் மீதே மயக்கமாக விழுந்து விட்டாள். பரதனும் தம் மனைவியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார். நெடு நாட்களாக அனுபவித்த துயரமெல்லாம் கதிரவனைக் கண்டதும் பனித்துளி விலகுவதைப் போல நீங்கி விட்டதைக் கண்டு மாண்டவி அளவற்ற பூரிப்பில் ஆழ்ந்தாள். அவள் கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தன.

தன் செல்வக் குமாரன் பரதன், மாண்டவிமீதுள்ள கோபத்தை யெல்லாம் மறந்து ஏற்றுக் கொண்டு விட்டதைக் கண்டு கைகேயி அசைவற்று ஆச்சரியத்துடன் நின்றுவிட்டாள்!

கைகேயியைப் பார்த்ததும் ராமன் அவள் காலடியில் விழுந்து "அம்மா, ஆசீர்வதியுங்கள்" என்றார். சீதை மாண்டவியைக் குசலம் விசாரித்தாள்.

பிறகு ராமர் சிரித்துக் கொண்டே பரதனைப் பார்த்து, "பரதா, பாதுகை ராஜ்யத்திற்கு நீ இவ்வளவு அவப்பெயர் கொண்டு வருவாய் என்று நான் நினைக்கவேயில்லை. ராஜ்யத்தினுள் நுழையவே பயமாக இருக்கிறது" என்றார்.

பரதன் திடுக்கிட்டார். "என்ன அண்ணா சொல்கிறீர்கள் ?"

"குற்றங்களைத் தீர விசாரியாமல் மனைவிக்குக் கடுமையான தண்டனை கொடுத்து உருக்கிவிட்டாய். எலும்பும் தோலுமாக இருக்கும் உன் தாயையும் மனைவியையும் பார்த்தால் 'தாய் தாரத்தையே கவனியாமல் இருந்திருக்கும் நீ, பிரஜைகளின் க்ஷேமத்தை எங்கே கவனித்திருக்கப் போகிறாய்' என்று தோன்றுகிறது."

பரதன் வெட்கித் தலை குனிந்தார். ஆனால் மாண்டவியோ, "அண்ணா! பதினான்கு வருடங்களாக வேதனையே அனுபவித்த உங்கள் தம்பியிடம், மேலும் இம்மாதிரி கூறித் துன்புறுத்தாதீர்கள். பிரஜைகளின் சுகத்திலேயே கண்ணும் கருத்துமாக இருந்த இவருக்கு, தாய், தாரத்தைக் கவனிக்கக் கூட நேரமிருக்கவில்லை !" என்றாள் பளிச்சென்று. பதிபக்தி மிகுந்த மாண்டவியின் பதில் கூடியிருந்த அனைவரையும் தூக்கிவாரிப் போட்டது. பரதன் உள்பட அனைவரும் அவளை ஆச்சரியத்துடன் வைத்த கண் வாங்காமல் நோக்கினர்.

"அப்பாடியோ! கணவன் என்ன குற்றம் செய்தாலும் பெண்கள் அதை எப்பொழுதும் மறைக்கத்தான் பார்ப்பார்கள் போலிருக்கிறது" என்றார் ராமர் மந்தகாசத்துடன்.

* * *

அன்று தீபாவளித் திருநாள். வால்மீகியின் ஆசிரமம் முழுவதும் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வால்மீகியின் தேஜஸ் நான்கு புறமும் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. இந்த நிறைந்த நாளில் அவர் ராமாயண காவியத்தை ஆரம்பிக்கப் போகிறார்.

கலைமகள் தன்னுடைய கணவரிடம் அவசர அவசரமாக விடைபெற்றுக் கொண்டிருந்தாள். இன்று அவள் ஒரு சுப காரியத்தை ஏற்க வேண்டும். வால்மீகியின் நாவில் வீற்று ராமாயண காவியத்தைச் சுபமாக முடித்து வைக்க அவள் உதவ வேண்டும்.

தன் இருப்பிடத்தை விட்டுக் கிளம்பும் போதே சரஸ்வதி தேவி தன் பெயர் கூப்பிடப் படுவதை உணர்ந்தாள். திரும்பிப் பார்த்தாள். சரஸ்வதி தேவியைக் குறித்து மாண்டவி கடுமையான தபசில் ஈடுபட்டிருந்தாள். சரஸ்வதி தேவி முதலில் அவளிடம் சென்றாள். மாண்டவி அவளை வணங்கினாள்.

"மாண்டவி! நானே உன்னைச் சந்திக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் நேரம் கிடைக்கவில்லை. இன்று வால்மீகிக்கு அருள் புரிந்து ராமாயண காவியத்தை முடித்து வைக்கும் பாக்கியத்தை நான் அடையப் போகிறேன். அதில் தியாகத்தின் சின்னமான பரதனைப் பற்றியும், கணவனையே நம்பி மனோ வேதனையைப் பொறுத்து வெற்றிகண்ட உன்னைப் பற்றியும் எவ்வார்த்தைகளால் புகழச் செய்வது என்று தெரியாமல் மூளையைக் குழப்பிக் கொள்கிறேன்" என்றாள்.

"தேவி, ஒரு வரம் அருள வேண்டும். இல்லையென்று சொல்லக் கூடாது" என்று மாண்டவி பிரார்த்தித்தாள்.

"ஆகட்டும். நீ வேண்டியதைக் கேள். இல்லையெனச் சொல்ல மாட்டேன்" என்று கலைவாணி புன்முறுவல் தவழப் பதில் கூறினாள்.

"அப்படியானால் ராமாயண காவியத்தில், பரதனுடைய மனைவி மாண்டவி என்பதைத் தவிர, என் வரலாற்றைப் பற்றி ஒன்றும் விவரிக்கக் கூடாது. இது தான் என்னுடைய பிரார்த்தனை. தேவி! தாங்கள் கொடுத்த வாக்கை மீறாதீர்கள்" என்றாள் மாண்டவி.

சரஸ்வதி ஸ்தம்பித்து விட்டாள். "ராமாயணத்தில் சீதை ஊர்மிளையை விட நீ சிறந்தவளாயிற்றே. அவ்விருவரும் தங்கள் கணவனைப் பிரிந்திருந்தும், அவர்களுக்குக் கணவருடைய அன்பு பரிபூரணமாகக் கிடைத்திருந்தது. ஆனால் உன் நிலைமை வேறு. குற்றமே செய்யாமலிருந்தும் குற்றவாளியாக உன்னைப் பாவித்து, அருகிலிருந்து கொண்டே உன்னை ஏறிட்டுப் பார்க்காத பரதனை நீ துளியும் அலட்சியம் செய்யாமல், சேவை புரிந்து வேதனையால் உள்ளம் வெந்தும் அதைப் பாராட்டாமல், அவன் அருகிலேயே இருந்து கடைசியில் வெற்றி கண்ட நீ, பெண்கள் குலத்துக்கே ஒரு ரத்தினமாயிற்றே. அம்மா ! உன் பெயருடன் உன் கதையை எப்படி விட முடியும் ?" என்று கேட்டாள்.

"தேவி, மன்னிக்க வேண்டும். உங்கள் புகழுரையால் என் சேவையின் மதிப்பு குறைந்து விடும். பெயருக்கும் புகழுக்கும் பெண்கள் அடிமை என்று என் கணவர் அடிக்கடி சொல்வது போல், புகழுக்காகச் செய்யப்பட்டசேவையாக என்சேவையை எல்லோரும் கருத இடம் கொடுப்பது எனக்கு விருப்பமில்லை. மேலும் குற்றம் இல்லாத மனைவியைத் துன்புறுத்தினார் என்ற இழுக்குச் சொல் என்கணவரின் புகழுடன் சேர்வதை நான் விரும்ப மாட்டேன். என் கீர்த்தி அவருக்கு அபகீர்த்தி உண்டாக்குவதை நான் விரும்ப மாட்டேன். ஆதலால் தேவி, ராமாயணத்தில் என் வரலாறு வரக் கூடாது. கொடுத்த வாக்கைத் தவறாதீர்கள்" என்றாள் மாண்டவி.

சரஸ்வதி தேவி மிகுந்த ஆச்சரியத்துடன் திகைத்து நின்று விட்டாள். சரஸ்வதிதேவி, அன்று தான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டாளோ !





# சுந்தரம்
# ரீட்ரெட்டுகளை

## உபயோகியுங்கள்
## அவை பத்திரமானவை

13 வருடத் தயாரிப்பு அனுபவம்
எல்லா வகைப் பளுவைக் கொண்டு, எல்லா வகை ரஸ்தாக்களிலும்
(ஆண்டொன்றுக்கு) 1½ கோடி மைல்கள் அடிப்படை சோதனை
டி. வி. எஸ். வண்டிகளில் உபயோகித்து நிரூபணமான சிறப்பு

இந்தக் காரணங்களால் அநேகமாக பரிபூர்த்தியடைந்த டயர் புதுப்பிக்கும் முறை

## சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.

டி. வி. எஸ். தொகுதியில் சேர்ந்தது
முழு வட்ட அச்சுக்களைக் கொண்டு டயர்களைப் புதுப்பிப்பவர்கள்

தலைமை ஆபீஸ் :
புதுக்கோட்டை
தந்தி: "MOTOR" போன்: 33

சென்னை தொழிற்சாலை :
37, மவுண்ட் ரோடு, சென்னை-6
தந்தி: "SUNRETREAD" போன்: 86985

TVSZ-88




நீண்ட நாட்களுக்கு உழைக்கக் கூடிய
ஸ்டேயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களுக்கான
ஒரே டிரேட் மார்க் V. K. பிராண்ட்தான்

★

எங்கும் விற்கப்படும்

★

GRAM: "MANMUL" TEL: 71534

**MANUBHAI MULCHAND & CO.**

BEHIND MUMBADEVI P. O. BOMBAY. 2

# வெள்ளி விளக்கு



கோயில் மானேஜர் மணவாளனின் மகள் நாச்சியாரின் ஆண்டு நிறைவுக் கல்யாணம் விமரிசையாக நடந்தது. நண்பன் என்ற முறையில் அவ்விழாவில் கலந்து கொண்ட நான் அன்று மாலை நாச்சியார் கோயிலைச் சுற்றிப் பார்த்து வரக் கிளம்பினேன்.

கோயிலின் அழகை ரசித்தபடி பிராகாரத்தைச் சுற்றி வந்த நான் அனுமார் சந்நிதிக்கு எதிரில் நின்ற மகிழ மரத்தடிக்கு வந்ததும் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். மலர் குலுங்க நின்ற மரமும், அதை யடுத்துப் பூவுடன் நின்ற ரோஜாச் செடியும் என் மனத்தைக் கவர்ந்தன. நானும் ரோஜாவாகச் சில்லென்று விழுந்த பனித்துளியை உதறிவிட்டு, என் இதழ்களை விரித்து நாலாபுறமும் நோக்கினேன். 'ஆகா! எத்தனை அழகான இடம்!' என்று நான் வியந்து நிற்கும் போதே பக்கத்தில் நின்ற மகிழ மரம், 'கலகல' வென்று பேச ஆரம்பித்தது.

அன்று வெள்ளிக்கிழமை. வழக்கம் போல் தேவியின் புறப்பாட்டுக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. கோயில் கணக்குப் பிள்ளையும், மணியக்காரரும் என் கீழ் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போதுதான் மணவாளன் என்ற அந்தப் பையன் வந்து வணங்கித் தனக்கு ஏதேனுமொரு வேலை கொடுக்க வேண்டி நின்றான். படித்தவனாகவும், பெரிய குடும்பத்துப் பையனாகவும் காணப்பட்ட அவனுக்கு உகந்த வேலையொன்றும் காலியாக இல்லை என்று கணக்குப் பிள்ளை மறுத்தார். அவ்வாலிபன் விடவில்லை. அத்துடன் அவன் தனது வரலாற்றைச் சுருக்கமாகச் சொல்லி, 'எந்த வேலையானாலும் ஏற்றுச் செய்யத் தயார்' என்று கண்களில் நீர் மோதச் சொன்னதும் எல்லோருடைய மனமும் இளகி விட்டது.

'மணவாளனது தகப்பனார் ஜீவியவந்தராக இருந்தவரை அவரது ஒரே மகனான மணவாளன் நல்ல செல்வாக்கில்தான் இருந்தான். அவனது பணக்கார மாமா கூடத் தம் மகள் கமலத்தை அவனுக்கே கொடுப்பதாக முடிவு செய்திருந்தார். திடீரென்று அவன் தன் தந்தையை இழந்து விடவே அவன் செல்வாக்கை இழந்து ஏழையானான். அவனும் அவனது தாயும் வேறு புகலிடமின்றி மணவாளனின் மாமா வீட்டை யடைந்தனர்.

கிரிஜா



பெண் கொடுப்பதாக இருந்த மணவாளனின் மாமாவுக்கு ஏராளமான சொத்து இருந்தும், தாராளமான மனம் இல்லை. அதனால் ஏழைகளான மணவாளனையும், அவனது தாயையும் மிகக் கொடுமையாகப் பேசத் தொடங்கினார். மனம் மிக நொந்த மணவாளன் பல தினங்களாக வேலை தேடி அலைகிறான். இதுவே அந்த வாலிபனின் வரலாறு.

மனம் மிக இளகிய கோயில் நிர்வாகிகள் மணவாளனுக்குத் தோட்ட வேலை கொடுப்பதென்று முடிவு செய்தார்கள்.

சீக்கிரமே மணவாளன் தோட்ட நிர்வாகி வரதனின் அன்பையும், பிரியத்தையும் சம்பாதித்துக் கொண்டு விட்டான். வரதனுக்குச் சொந்த வீடு இருந்தது. அவனும் சாப்பாட்டுக்குத் தன் மனிதர் என்று யாரும் இல்லாததால், தானே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அதனால் வரதன் வற்புறுத்தலே மணவாளன் சீக்கிரமே தன் தாயையும் அழைத்து வந்து விட்டான். மணவாளனின் தாய் வரதனையும் தன் பிள்ளையாகவே எண்ணிச் சமைத்துப் போட்டு அவன் உடல் நலத்தையும் அக்கறையுடன் கவனித்துக் கொண்டாள்.

காலம் மெல்ல ஓடி வருடங்கள் இரண்டைக் கடந்து விட்டது.

வெகு நாட்களாக இந்தப் பக்கமே வராதிருந்த மணவாளனின் சின்ன மாமா தம் மகள் அங்கயற்கண்ணியுடன் மணவாளன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். சம்பாத்தியத்தின் பொருட்டுக் கல்கத்தா நகரம் சென்று விட்ட மணவாளனின் சின்ன மாமா மதனகோபால் நாளடைவில் உற்றார் உறவினரை நினைக்கவே மறந்து விட்டார். சமீபத்தில் அங்கயற்கண்ணியின் தாயார் இறந்து விடவே அவருக்குக் கல்கத்தா நகரம் கசக்கத் தொடங்கியது.

பல வருஷங்களுக்குப் பிறகு சந்தித்த தம் சகோதரனை அளவற்ற மகிழ்ச்சியுடன் வரவேற்றாள் மணவாளனின் தாய். தன் மருமகள் அங்கயற்கண்ணியை அப்படியே மார்போடு அணைத்துக் கொண்டு விட்டாள். அத்தையின் அணைப்பில் அளவற்ற ஆறுதல் பெற்ற அங்கயற்கண்ணி அங்கு நின்ற மணவாளனைக் கண்டு மலைத்து விட்டாள்.

அங்கயற்கண்ணியின் அழகிய முகத்தைக் கண்ட மணவாளனும் மலைத்து விட்டான். அவளது விழிகளைப் பார்க்கப் பார்க்க அவனது உள்ளத்தில் இன்பம் பொங்கிப் பெருகியது.

மணவாளனின் மாமாவும் அம்மாவும் பல விஷயங்களைப் பேசிப் பேசி மனத்தை ஆறுதல் செய்து கொண்டனர். கடைசியாக இருவரும் அங்கயற்கண்ணியை மணவாளனுக்கே மணம் முடிப்பது என்றும் முடிவு செய்தனர். அம் முடிவைக் கேட்ட மணவாளன் மகிழ்ச்சியுடன் அங்கயற்கண்ணியைப் பார்க்கவே, அவளொரு புன்முறுவலை உதிர்த்து விட்டுப் புள்ளிமான் போல் துள்ளி ஓடிவிட்டாள்.

ஒவ்வொரு நாள் மாலையும், மணவாளனின் தாயார்தான் நந்தவனம் சென்று பூக்களைப் பறித்துத் தொடுத்து மாலையாக்கிக் கொடுப்பாள். அதை மணவாளன் வாங்கிக் கோவிலுக்குள் கொண்டு வைப்பான். அங்கயற்கண்ணி வந்த பிறகு அவளையும் தன்னுடன் அழைத்துச் செல்லத் தொடங்கினாள் அங்கயற்கண்ணியின் அத்தை.

வழக்கம் போல் அன்றும் தாயார் கட்டிய மாலையை வாங்கிச் செல்வதற்காக நந்தவனத்துக்குள் நுழைந்த மணவாளன் சற்றே திகைத்தான். காரணம் அங்கயற்கண்ணி மட்டுமே பூத்தொடுத்துக் கொண்டிருந்ததுதான். மெல்லச் சந்தடி செய்யாமல் அவள் அருகில் வந்த மணவாளன், ''ஓ! உனக்குப் பூத் தொடுக்கவும் தெரியுமா?'' என்று வியப்புடன் கேட்டான்.

வெட்கத்துடன் கண்களைத் தாழ்த்திக் கொண்ட அங்கயற்கண்ணி, ''பூத் தொடுக்க மட்டுமில்லை; குறும்பாகப் பேசுபவர்களுக்குக் குறும்பாகப் பதில் சொல்லவும் தெரியும்'' என்றாள்.

அதன் பிறகு அவர்கள் தினமும் நந்தவனத்தில் சந்தித்து மணிக்கணக்கில் பேச ஆரம்பித்து விட்டார்கள். அன்று 'ஒப்பிலியப்பன் கோவில்மகாத்மிய'த்தை மணவாளன் ஆரம்பித்தான் :—

''அமுதத் திவலைகளினின்றும்பிறந்து அதி அழகுடன் விளங்கும் திருத்துழாய்த் தேவிக்கு மனத்திலொருகுறையொன்று இருந்தது. அக்குறையின் பாரம் தாங்கமுடியாமல் அத்தேவி ஒரு நாள் இலக்குமி கேள்வனை நோக்கிக் கேட்டாள் :— ''நாதா! தாங்கள் இலக்குமியை மார்பிலே தூக்கி வைத்துக் கொண்டாடியதால் மூவுலகமும் அவள் புகழ் ஓங்கிப் பெருகி விட்டது. அதனால் என்னை யாரும் லட்சியம் செய்வதில்லை. அடியாளிடத்தில் தங்களுக்கு அன்பு இருப்பது உண்மையாயின் அடியாளது புகழையும் ஓங்கச் செய்ய வேண்டும்'' என வேண்டினாள்.

''பூவுலகில் மார்க்கண்டேய முனிவர், 'என்னைத் தன் மருமகனாக்கிக் கொள்ள வேண்டும்' என்ற தமது நீண்ட நாளைய ஆவலைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகக் கடும் தபசை மேற்கொள்ளப் போகிறார். அவர் நிம்மதியாகத் தவத்தை மேற்கொள்ள ஒரு நல்ல வனத்தைத்



தேடுவோர். அதற்கு முன் நீ பூவுலகம் சென்று, காவிரியாற்றின் தென்புறத்தில், குடந்தை நகருக்கு அருகில் அழகிய துளசிவனம் ஏற்படுத்தி அவ்வனம் முழுமையும் நீ உன் சக்தியால் வியாபித்து நின்று மார்க்கண்டேய முனிவரது மனத்துக்குச் சாந்தி கொடுக்கும் பணியை மேற்கொள். தவமியற்றப் போகும் மார்க்கண்டேயரின் ஆவலைப் பூர்த்தி செய்ய யானும், லக்ஷ்மியும் அங்கு வருவோம். அப்போது உன் மகிமையும் உயரும். நானும் உன்னை மார்பில் அணிந்து மகிழ்வேன்'' என்று நிறுத்தினார்.

திருக்குடந்தைக்கு நான்கு மைல் தூரத்தில், கிழக்குத்திசையில், காவேரியின் தென்புறத்தில் பற்பல கனிமரங்களால் சூழப்பெற்றுப் பறவைகளின் இன்னொலி நிறைந்த ஒரு வனத்தில், திருத்துழாய்த் தேவி திருத்துழாய்ச் செடி வடிவில் எங்கும் வியாபித்து, அழகாக வளர்ந்து வாழத் தொடங்கினாள்.

மார்க்கண்டேயர் வனத்தின் மத்தியிலுள்ள ஒரு திருத்துழாய்ச் செடியின் கீழ் அமர்ந்து தவமியற்றத் தொடங்கினார். அத் திருத்துழாய்ச் செடியில் அழகே உருவான பெண் குழந்தை யொன்று விளையாடிக் கொண்டு நிற்பதைக் கண்டு பேராச்சரியம் கொண்டு நின்றுவிட்டார்.

உடல் சிலிர்க்க, உள்ளம் உவக்கக் குழந்தையை வாரி யெடுத்து அணைத்துக் கொண்டார் அவர். முனிவர் தோளில் தன் பொன் முகத்தைப் புதைத்துக் கொண்ட குழந்தை, ''அப்பா! அப்பா!'' என்று அழைத்தது.

கற்பனைக்கும் எட்டாத அற்புத அழகுடன் விளங்கும் தம் மகளைப் பார்க்கப் பார்க்க மார்க்கண்டேயரின் மனத்தில் கவலையும் ஏறத் தொடங்கியது. ''பருவ காலப் பெண்ணான இவளை நான் எப்படிப் பாதுகாப்பேன்?'' என்ற கவலை அவர் உள்ளத்தை அழுத்தியது.

பக்தனின் கவலையைக் கண்ட பரந்தாமன் பன்னக சயனத்தினின்றும் எழுந்தார். எழுந்தவர் வயது முதிர்ந்த அந்தணராக மாறிப் பூவுலகம் புகுந்தார். ''மகரிஷியே! இன்று என் விருப்பம் ஒன்று நிறைவேறினால் அன்றி ஊண் உறக்கம் ஒன்றையும் மேற்கொள்ள மாட்டேன். இது என் சங்கல்பம். நீர் மனம் வைத்தால் என் விருப்பம் கலயத்தில் நிறைவேற வழியுண்டு. ஆகையால் முதலில் என் சங்கல்பத்தை நிறைவேற்றித் தருவதாய் வாக்களிக்க வேண்டும்'' என்றார் அந்தணர்.

அதிதி பூஜையில் மதிமயங்கிய மார்க்கண்டேயர் அவ்விதமே, 'நிறைவேற்றித் தருவதாய்' வாக்களித்தார்.

''தவத்தால் மேம்பட்ட மார்க்கண்டேய மகரிஷியே! ஒடும். உடனே இந்த நன்னாளில் உமது மகள், 'பூமி நாச்சியாரை' எனக்கு மனைவியாக்கி மகிழும்'' என்று நிறுத்தினார்.

மார்க்கண்டேய மகரிஷி திடுக்கிட்டார். அவருக்குத் தலையைச் சுற்றி மயக்கமாக வந்தது. 'தம் அழகுச் செல்வத்தை இந்தக் கிழவருக்குக் கொடுப்பதா?' அதை நினைக்கவே அவரால் முடியவில்லை. 'அப்படியானால் அவர் முதியவருக்குக் கொடுத்த வாக்கு?' என்ன ஆவது?



மார்க்கண்டேயர் தம் மகளைக் கூவி அழைத்துக் கேட்டார்: "அம்மா, குழந்தாய்! இதோ நிற்கும் இவ்வந்தணர் உன்னை மணக்க விரும்பி என்னிடம் வந்துள்ளார். நீயும் மணப் பருவத்தை அடைந்துள்ள மங்கைதான். ஆதலின் உன் விருப்பத்தை மனம் விட்டுச் சொல்லு" என்றார்.

எதிரில் நின்ற முதியவரைக் கண்ட மங்கை பூமிநாச்சியாருக்குச் சிரிப்பும், சினமும் ஒருங்கே எழுந்தன. ஆயினும் பொறுத்துக் கொண்ட அப்பூங்கொடி, "அப்பா! பாற்கடலில் துயிலும் பரந்தாமனிடமே என் மனம் ஈடுபட்டு விட்டது. ஆதலின், நான் இவரை எங்ஙனம் மணக்க முடியும்?" என்று சொல்லித் தலை கவிழ்ந்தாள்.

மனக் குழப்பத்தைத் தாங்க முடியாத மார்க்கண்டேயர் தம் கண்ணுள் மணியாக வளர்த்த மகளிடம் நடந்த விஷயத்தைக் கூறி, எப்படியாவது தம் வாக்கைக் காப்பாற்ற வழி சொல்ல வேண்டினார்.

பரந்தாமனைத் தன் உள்ளத்தில் நிறுத்தித் தியானத்தில் ஆழ்ந்த மார்க்கண்டேயர் சிறிது நாழிகைக்குப் பின் கண் விழித்த போது அங்கே பெரும் அற்புதத்தைக் கண்டார். ஒப்பும், உவமையும் இல்லா அப்பனைச் சேவித்தார் மார்க்கண்டேய முனிவர்! ஆனந்தம் தாங்காமல் அவர் மீண்டும், மீண்டும் தொழுதார், ஆடினார், பாடினார்; ஆனந்த மிகுதியால் கண்ணீரைப் பெருக்கினார்.

"அப்பா! இவர் இத் திருக்கோலத்துடன் இங்கேயே தங்குவாரா? என்று கேளுங்கள். என்னை மணந்தவுடன், பழையபடி பாற்கடலுக்கு ஓடிப் படுத்துக் கொண்டு விடுவாரா?" என்றாள் அவள் கொஞ்சும் மொழியில். அவளது கண்களிலும் குறும்புத்தனம் துள்ளியது.

ஐப்பசி மாதத்துத் திருவோண நட்சத்திரத்தில் நல்ல சுப வேளையில் விவாக காரியங்கள் ஆரம்பமாயின.

மணக்கோலம் பூண்டு கண்களைக் கவரும் வண்ணம் வந்து மணையில் உட்கார்ந்தார் ஒப்பில்லா அப்பனாகிய சீனிவாசன். உடனே, விண்ணவர் துந்துபி முழக்க மகரிஷி மார்க்கண்டேயர் தம் அருமைச் செல்வியை, சீனிவாசன் கரத்தில் கன்னிகா தானம் செய்து கொடுத்தார்."

"பூ கட்டியாயிற்று; இல்லையா? மணியக்காரர் சத்தம் போடுகிறார். இன்றைக்குத் தாயார் புறப்பாடு இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே வந்த வரதனின் குரல் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள் அங்கயற்கண்ணி.

திடுக்கிட்டுத் திரும்பிய மணவாளனும் பரபரப்புடன் அங்கயற்கண்ணி தொடுத்த புஷ்பங்களை அவசரமாக எடுத்து வைத்துக் கொண்டு வேகமாக நடந்தாள்.

பூமிநாச்சியாரின் சந்நிதியிலிருந்து மீளாமலே தானும் போகத் திரும்பிய அங்கயற்கண்ணி, தன்னையே பார்த்துக் கொண்டு நிற்கும் வரதனைக் கண்டு திடுக்கிட்டு நின்று விட்டாள்.

மெல்லச் சிரித்த வரதன், "அங்கயற்கண்ணி! நீ எத்தனை அழகாய் இருக்கிறாய்! உன்னைப் பார்த்த அன்றிலிருந்து எனக்குத் தூக்கம் கசந்து விட்டது. அங்கயற்கண்ணி! நீ என்னை மணந்து கொள்ள மாட்டாயா? நான் உன்னை.." என்றபடி இரண்டடி முன்னால் வந்தான்.

அவனது பேச்சும், பார்வையும் அங்கயற்கண்ணிக்குப் பயத்தைக் கொடுத்தன. மெல்ல, "வழி விடுங்கள் நேரமாகிறது. நானும் போகவேண்டும்" என்றாள்.

வழியை மறிப்பதுபோல் நின்ற வரதன் கட கட வென்று பயித்தியக்காரன் போல் சிரித்தான். 'பளார்' என்று அவன் காதுக்குள் எழுந்தது ஒரு ஒலம்.



துடித்துப் போன வரதன், அவள்மீது பாய்ந்தான்.

"கிரீச்" சென்று அலறியபடி பின்னால் நகர்ந்தாள் அங்கயற்கண்ணி. நல்லகாலமாக அதே சமயம், "என்னம்மா! என்ன? என்ன?" என்று கேட்டபடி பதறி ஓடி வந்தாள் அங்கயற்கண்ணியின் அத்தை.

சட்டெனச் சமாளித்துக் கொண்ட வரதன், "நல்ல வேளையம்மா! இந்த மத்திக்கடா அங்கயற்கண்ணிமேல் பாய விருந்தது. நான் சமயத்தில் வரா விட்டால் அது அங்கயற்கண்ணியைக் கடித்துக் குதறி யிருக்கும்" என்று புளுகியபடி மரத்தில் உட்கார்ந்திருந்த குரங்கைச் சுட்டிக் காட்டினான்.

அவன் வார்த்தையை மெய்யென்று நம்பிய அத்தை அப்படியே மருமகளை அணைத்துக் கொண்டாள்." நல்ல காலம்; சமயத்தில் வரதன் வந்து உதவினான். நானும் அப்பொழுதே வந்திருப்பேன். திடீரென்று அண்ணாவுக்குக் கால் துவண்டு நிற்கமுடியாமல் போய் விட்டது. தைலம் தேய்த்து, தவிடு ஒத்தடம் கொடுத்துக் கொண்டு இருந்து விட்டேன். அதில் பொழுது போனது தெரியவேயில்லை" என்ற அத்தை, அங்கயற்கண்ணியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

தந்தைக்கு உடம்பு என்றதும் பதறிப் போன அங்கயற்கண்ணிக்கு மற்றதெல்லாம் மறந்து விட்டது.

அங்கயற்கண்ணி அன்று நடந்த சம்பவத்தை முற்றிலும் மறந்தே விட்டாள். ஆனால், வரதன் அதை மறக்கவில்லை. அங்கயற்கண்ணியைக் கண்டது முதல் வரதன் மனம் நிலைமாறித் தவித்தது. அங்கயற்கண்ணி தோட்டத்தில் நடந்து கொண்ட விதத்திலிருந்து, அழகிய இளம் வாலிபனான மணவாளனை மறந்து தன்னை மணக்கும்படி அவளைச் செய்ய நேர் வழியில் முடியவே முடியாது என்பதை நன்றாக உணர்ந்து கொண்டதும், அவன் மனம் முற்றிலும் கோணல் வழிகளில் திரும்பி வேலைசெய்யத் தொடங்கி விட்டது.

அங்கயற்கண்ணியின் தகப்பனார் பக்கவாதத்தால் பீடிக்கப்பட்டுப் படுத்தபடுக்கையானார். அவர் கலியாணத்துக் கென்று கொண்டு வந்த பணமும் கரையத் தொடங்கியது. அவரது உடம்பும் குணமாகவில்லை. கடைசியில் நம்பிக்கை இழந்த மதனகோபால் வைத்தியச் செலவை அத்துடன் நிறுத்திக் கொண்டு, மகள் அங்கயற்கண்ணியின் கலியாண விஷயத்தில் தமது கவனத்தைச் செலுத்தத் தொடங்கினார்.

கல்கத்தாவிலிருந்து அவருக்குப் பணம் கொஞ்சம் வரவேண்டியிருந்தது. ஆனால் அது வரத் தாமதம் ஆகும் என்று பட்டதால், கடன் வாங்கிக் கலியாணத்தை நடத்தி விட்டால், பிறகு பணம் வந்தவுடன் கடனை அடைத்து விடலாம் என்று மதனகோபாலுக்குப் பட்டது. வரதன், அது நல்ல ஆலோசனைதான் என்றும், தானே கடனுக்கு ஏற்பாடு செய்வதாகவும் சொன்னான். இப்படிப்பட்ட பொன்னான சந்தர்ப்பத்தையே எதிர் பார்த்துக் காத்திருந்த அவன், தன் நண்பன் ஒருவனிடம், 'நோட்'டெழுதி வாங்கிக் கொடுத்துப் பணத்தையும் வாங்கிக் கொடுத்தான். பிறகு தன் சூழ்ச்சி வலையையும் விரிக்கத் தொடங்கினான்.

கலியாணத்துக்குச் சில தினங்களே இருந்தன. அன்று வெள்ளிக்கிழமையாகையால் அங்கயற்கண்ணி மங்களஸ்நானம் செய்து, கோவிலுக்குச் சென்று அன்னை நாச்சியாரைத் தரிசனம் செய்து விட்டுத் திரும்பியவள், அத்தையுடன் சமையலுக்கு ஒத்தாசை செய்து கொண்டிருந்தாள். அப்போது தான் அந்த

விபரீதமான சமாசாரத்தை வரதன் கொண்டு வந்தான்.

"வழக்கமாகக் கோயில் வெளிப் பிராகாரத்தில் அனுமார் சந்நிதிக்கு ஏற்றி வைக்கும் வெள்ளி விளக்கைக் காணோம். தினமும் அந்த விளக்கைக் கடைசியாக எடுத்து வந்து, கணக்குப் பிள்ளையின் அனுமதியுடன், உள்ளே கொண்டு வைப்பது மணவாளனின் பொறுப்பு. நேற்று அவன் விளக்கை எடுத்து வைக்க மறந்து விட்டானாம். காலையில் பார்த்தால் விளக்கைக் காணோமாம். கோயில் நிர்வாகிகளுக்கு மணவாளன் சொல்வதில் நம்பிக்கை இல்லை." இதுவே அத்தையம்மாவிடம் வரதன் சொன்ன செய்தி.

இப்படி அங்கே அத்தையம்மாவிடம் சொன்ன அந்த வரதன், கோயில் நிர்வாகிகளிடம் சென்று "பாவம்! சிறு பையன்; குடும்பச் செலவோ அதிகரித்து விட்டது. அந்த விளக்கின் கிரயம் அவனுக்கு இப்போது அவசியம் தேவைதான். போனால் போகிறது. அவனை விட்டு விடுங்கள்" என்று குழைவாக வத்தி வைத்தான்.

மணவாளன் விளக்கை எடுக்க ஏனோ அன்று மறந்துவிட்டான். இப்படிப் பல தினங்கள் அவன் மறந்து விடுவான். மறுநாள் காலை நினைவு வந்து ஓடி வருவான். விளக்கையும் எடுத்து வைப்பான். திருட்டுப் போயிற்று என்பது அதுவரை இல்லை. அன்று மணவாளன் சென்ற சிறிது நேரத்துக்குப் பிறகு, முக்காடிட்டு வந்த ஒரு உருவம், விளக்கை அணைத்து எடுத்து மறைத்துக் கொண்டு மறைந்தும், பதுங்கியும் சென்று மறைந்து விட்டது. நடையிலிருந்து அந்த உருவம் வரதன்தான் என்பது எனக்குத் தெரிந்து விட்டது. எனக்குத்தெரிந்து என்ன பயன்?

மணவாளனோடு மாலையில் வேலை செய்தவர்கள், மணவாளன் வெகு நேரம் வரை இங்கு இருந்ததாகச் சாட்சியம் கொடுத்து விட்டனர். ஆகவே மறுத்துக் கூறுவதற்கு வழியேயின்றித் திகைத்தான் மணவாளன்.

கோயில் நிர்வாகிகளால் மணவாளன் இத்தகைய காரியம் செய்யக்கூடும் என்பதை நம்பவே முடியவில்லை. நம்புவதைத் தவிர வேறு வழியும் இல்லை. அவன்மீது அவர்கள் வைத்து விட்ட அனுதாபத்தால், விளக்கைத் திருப்பிக் கொடுத்து விட்டால் கூட மன்னித்து விடுவதாகக் கூறினார்கள். ஆனால் மணவாளனோ, 'எடுத்துவைக்க மறந்த குற்றம் தவிரத் தான் வேறு ஒன்றும் அறியாதவன்' என்று திரும்பத் திரும்பக் கூறவே, பொறுமையிழந்த கோயில் நிர்வாகிகள் அவனை அன்று முதல் வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள்.

மணவாளனோ மனம் குன்றி உட்கார்ந்து விட்டான். என்ன யோசித்தும் வெள்ளி விளக்கு போன வழி அவனுக்குப் புலப்படவே யில்லை.

அங்கயற்கண்ணியின் கண்கள் கண்ணீரைக் கொட்டின. அவளது அத்தையும் தந்தையும் செய்வதறியாது கலங்கிக் கண்ணீர் விட்டனர். கல்யாண ஏற்பாடுகளும் அப்படி அப்படியே நின்றன. முதலில் தானும் கலங்கித் தவிப்பதாக அவர்களுடன் சேர்ந்து நடித்த வரதன் பிறகு சற்றுக் கோபத்துடன் மணவாளனை அணைத்துக் கொண்டு சொன்னான்:

"இதோ பார் தம்பி! இவர்கள் செய்தது அநியாயம். போகட்டும். வேறு வேலையே கிடைக்காமலா போய்விடும்? கிளம்பு இப்பொழுதே; திருச்சியிலுள்ள என் நண்பன் ஒருவனுக்குக் கடிதம் தருகிறேன். அவன் உனக்கு வேலை தேடி வைப்பான்" என்று துரிதப்படுத்தினான்.

கடைசியில் வேறு வழியொன்றும் தோன்றாததால் வரதன் சொல்படியே மணவாளன் திருச்சி செல்வதென்றும், அவன் வேலை பெற்றுத் திரும்பி வரும் வரை வரதனே குடும்பத்தைக்கவனித்துக் கொள்வதென்றும் தீர்மானமாயிற்று. அதன்படி மணவாளன் விடை பெற்றுத் திருச்சிக்குப் பயணமானான்.

காலம் மெல்ல ஓடியது. மணவாளன் திருச்சி சென்றவுடன் இரு கடிதங்கள் எழுதினான். பிறகு அவனிடமிருந்து கடிதமோ, தகவலோ எதுவும் இல்லை. நாட்கள் ஓடிக்கொண்டே யிருந்தன. கல்யாண ஏற்பாடுகளுக்காக வாங்கிய கடன் இப்போது குடும்பம் நடத்துவதில் செலவாகி விட்டது. கல்கத்தாவிலிருந்து வரவேண்டிய பணமும் வரவில்லை. மேற்கொண்டு நாட்களைக் கழிப்பதற்கே வழி என்ன என்ற நிலை ஏற்பட்டு விட்டது.

துயரம் தாளாத அங்கயற்கண்ணியின் கண்களில் கண்ணீர்த் துளிகள் கொட்டிக் கொண்டே யிருந்தன. அவள் தினமும் தேவி நாச்சியாரை வணங்கி,

"என் அருமை அத்தானை என்னிடம் கொண்டு சேர்த்து விடு. என் தாயே! உன் அருளை நம்பித்தான் நான் உயிர் வாழ்கிறேன். என் அத்தான் வந்து சேர அருள் புரிய வேண்டும்" என்று திரும்பத் திரும்ப வேண்டுவாள். இப்படித் தினம் துதிக்கும் அந்த நேரத்தில்தான் அவள் மனம் சற்று அமைதியாக இருந்தது. ஓடி ஓடிக் குழைந்து குடும்பத்துக்கும் பல ஒத்தாசைகளும் செய்த வரதன், மெள்ள மதனகோபால் மனத்திலும் குழைவை உண்டாக்கித் தன்னிடம் அன்பு கொள்ள வைத்துக் கொண்டிருந்தான். மெள்ள ஒரு நாள் அவன், தன் நண்பன் முடைப்படுவதால் கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்பதாகச் சொன்னான். மதனகோபால் தவித்தார். நண்பன் பணத்துக்கு நெருக்குவதாகச் சொல்லித் தானும் தவிப்பதாக நடித்தான். 'மணவாளனுக்கும் வேலை கிடைக்க நாளாகும்' என்று தன் நண்பன் தனக்குக் கடிதம் எழுதி யிருப்பதாகவும் சொன்னான்.

இவை யெல்லாம் கேட்ட மணவாளனின் தாயும், மதனகோபாலும் அப்படியே இடிந்து உட்கார்ந்து விட்டனர். 'வியாதியஸ்தரான மதனகோபாலை அழைத்துக் கொண்டு எங்கே செல்வது? மணவாளனின் தாயார் கடைசியாக வரதனின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "அப்பா! நீ என் வயிற்றில் பிறந்த பிள்ளைமாதிரி. உடனே மணவாளனை வரவழைத்துக் கோயில் தர்மகர்த்தாவின் கால்களிலாவது விழச் சொல்லு. அவனுக்கு ஒரு வேலைசெய்துவைத்துவிடு. பிறகு எல்லாவற்றையும் சமாளித்துவிடலாம்" என்று கதறினாள்.

வரதனும் கூடவே முதலைக் கண்ணீர் விட்டு, "மறுபடியும் கோயிலில் வேலை கேட்பது நடக்காத காரியம். தானே அங்கயற் கண்ணியை மணந்து கொண்டு விட்டால் சிக்கல்கள் தீர்ந்து விடும். வீட்டின் பேரால் கடனையும் ஏற்றுக் கொண்டு விடலாம். பிறகு உறவினர் ஆட்சேபிக்க வழியும் இராது!" என்றான்.

மதனகோபால் இந்த ஆலோசனையைக் கேட்டதும் அவனை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டு விட்டார். அங்கயற் கண்ணியின் அத்தையும் 'அப்பாடா' என்ற பெருமூச்சுடன் அவன் ஆலோசனையை ஒப்புக் கொண்டாள். பாவம்! அங்கயற்கண்ணிதான் தலையில் இடி விழுந்தமாதிரி திடுக்கிட்டாள். அப்பாவிடம் ஓடி 'வரதனை மணக்கமாட்டேன்' என்று சொல்லிவிடத் துடித்தது அவள் மனம். ஆனால் வேறு புகலிடம்? 'ஐயோ! அப்படியானால், அருமை அத்தான் மணவாளனைமறப்பதா? அவருக்குத்துரோகம் செய்வதா? ஐயோ! தேவி! என்னால் தாளவே முடியாது' என்று தேவி நாச்சியார் முன் கதறிய அவளுக்கு அப்படியே மணிமுத்தா நதியிலே குதித்து உயிரை விட்டு விடலாமா என்று தோன்றியது. அதேசமயம் வியாதியஸ்தரான தந்தையின் பரிதாப நிலையும், அத்தையின் ஆதரவற்ற நிலையும் அவள் நினைவில் ஓடிவந்து 'உயிர் விடுவது பாவம், துரோகம்' என்று பயமுறுத்தின. 'எப்படியும் அன்னை நாச்சியார்தன்னைக் கைவிடமாட்டாள்.' என்ற நம்பிக்கையில், காலத்தைக் கடத்தினாள். வேண்டா வெறுப்பாக இந்தக் கல்யாணத்தைச் செய்துகொள்வதுபோல் நடித்த வரதன் வெகு துரிதமாகக் கல்யாண ஏற்பாடுகளைச் செய்தான். முகூர்த்த நாளும் குறித்து விட்டான். கோயில் நிர்வாகிகள் அனைவரிடமும் தன் பரோபகார சிந்தனையைப் பீடிகையுடன் வெளியிட்ட அந்தக் கயவன், கோயிலிலேயே தன் விவாகத்தை நடத்திக் கொள்ளவும் அனுமதி பெற்றுவிட்டான். அவனது பொய்யை உணராத நிர்வாகிகள் அவன் கல்யாணத்துக்கு ஒத்தாசைகளும் செய்தார்கள்.

முகூர்த்த நாள் காலைவரை கூட நாச்சியாரைத் தொழுத வண்ணம் நம்பிக்கையை விடாது நின்ற அங்கயற்கண்ணி முகூர்த்த வேளை நெருங்க நெருங்க உள்ளம் துடித்தாள். எல்லாம் தயாராகி வரதனும் மணையில் அமர்ந்து விட்டான்.

'பெண்ணைக் கூப்பிடு' என்ற அதே கணம் கோயில் வாசலில் ஒரு சச்சரவு எழுந்தது. "எது நடந்தால் என்ன? சட்டப்படிதான் நாங்கள் போக வேண்டும்" என்று கூறிக்கொண்டே உள்ளே வந்தார் ஒரு போலீஸ்அதிகாரி. அவரைத் தொடர்ந்து இரண்டு போலீஸ்காரர்களும் கையில் வெள்ளி விளக்குடன் ஒரு பத்தரும் உள்ளே வந்தார்கள்.

"இதோ மணையில் உட்கார்ந்திருக்கும் இவர்தான் இந்த விளக்கை என்னிடம் கொடுத்து உருக்கி விற்றுத் தரும்படி சொன்ன ஆள்" என்று பத்தர் வரதனைச் சுட்டிக் காட்டிச் சொன்னார். உடனே போலீஸார் கோயில் நிர்வாகிகளிடம் விளக்கைக் காட்டி, 'அது அக் கோயில் விளக்குத்தானா?' என்பதைக் கேட்டதும் அனைவரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். மெள்ள நழுவ முயன்ற வரதனை ஒரு போலீஸ்காரர் பிடித்துக் கொண்டார்.

விளக்கு கோயிலில் காணாமல் போன விளக்குத்தான் என்று நிர்வாகிகள் சொன்னார்கள். போலீஸார் வரதனைக் கைது செய்துகொண்டு புறப்பட்டனர்.

நிரபராதியான மணவாளன் நினைவும், பேச்சும் எழவே, அங்குள்ள எல்லோருடைய கண்களிலும் கண்ணீர் வரம்பு கட்டியது. அச்சமயம், "அத்தான்!" என்ற அங்கயற்கண்ணியின் குரல் அனைவரையும் திரும்பச் செய்தது. வேகமாக ஓடி வந்த மணவாளன் கீழே சாய விருந்த அங்கயற்கண்ணியை அப்படியே தாங்கிக் கொண்டான்.



"அத்தான்! நான் இதோ இருக்கிறேன்."
போட்டோ: பி. ருத்ரநீந்.

எல்லோருமே சற்று நேரம் திகைத்து நின்று விட்டார்கள். மணியக்காரர் பரபரப்புடன், "உம்; காரியம் மேலே நடக்கட்டும்" என்று உத்தரவு கொடுத்து விட்டு, மணவாளன் அருகில் வந்து, "தம்பி! எழுந்திரு; குழந்தையின் மயக்கம் நொடியில் தெளிந்து விடும். நீ எழுந்து ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வந்துவிடு; முகூர்த்த வேளை நெருங்குகிறது பார்!" என்றார்.

மணவாளன் வியப்புடன் நிமிர்ந்த போது அவனை அணைத்துக் கொண்ட மானேஜர், "அந்தக் கயவன் பேச்சை நம்பி எவ்வளவு பெரிய விபரீதம் செய்ய விருந்தோம்! உன் மாமன் மகள் அங்கயற்கண்ணியின் பூர்ண சம்மதத்தோடுதான் கலியாணம் ஏற்பாடு செய்வதாக எண்ணி ஏமாந்து விட்டோம். இந்தப் பெண்ணின் வாழ்வு பாழ்படக் காரணமாக நின்ற பாவத்திலிருந்து அன்னை நாச்சியார்தான் எங்களைக் காப்பாற்றினார்!" என்றார்.

கண்ணீரைத் துடைத்துக் கொண்ட மணவாளனும், "நானும்தான் அவன் பேச்சால் ஏமாந்து விட்டேன்! வேலை தேடித் தருவதாகச் சொன்ன அவனது நண்பன் பல தினங்கள் சாக்குப் போக்குச் சொல்லி என்னை அங்கேயே நிறுத்திக் கொண்டு விட்டான். அவனது சூழ்ச்சியை நான் அறிந்து கொண்டு விட்டேன் என்றவுடன் என்னை வீட்டின் ஓர் அறையில் வைத்துப் பூட்டி விட்டான். நேற்று வீடு தற்செயலாகத் தீப்பிடித்துக் கொள்ளவே, அந்த அமளியில் என் அறைக் கதவையும் திறந்து விட்டார்கள். இல்லாவிடில் இன்றுகூட நான் இங்கு வந்திருக்க முடியாது" என்றான்.

"உம்! எல்லாம் தேவி நாச்சியாரின் அருள். இனி வேலையைப் பற்றிக் கவலைப் படாதே. என் வேலை நாளை முதல் உன்னுடையது" என்றார் மானேஜர்.

"அடடா! மணியாகிறது. எழுந்து ஸ்நானம் செய்து புது வேஷ்டியைக் கட்டிக் கொள்" என்று துரிதப்படுத்தினார் மணியக்காரர். அரை மணியில் மீண்டும் மணவறை களைகட்டியது. கெட்டி மேளம் கொட்ட அங்கயற்கண்ணியின் கழுத்திலே மங்கள நாணைப் பூட்டினான் மணவாளன்.

தேவி நாச்சியாரும் புன்னகையுடன் நின்று அவர்களுக்கு ஆசி கூறினாள். மணவறையினின்றும் எழுந்த தம்பதிகள் எல்லோரையும் நமஸ்கரித்துப் பல ஆசிகளும் பெற்றுப் பின் என் கீழ் வந்தனர். அப்போது கண்களில் நீர் பொங்க அங்கயற்கண்ணி சொன்னாள்:

"அத்தான்! அன்று தாங்கள் சொன்ன கதையில், 'பூமி நாச்சியாரை மணக்க ஓடோடியும் வந்தார் ஒப்பில்லா அப்பன். அதுபோல் இன்று என்னை மணக்கத் தாங்களும் ஓடி வந்து விட்டீர்கள்" என்று கூறி அவன் கைகளைக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள்.

"கரைபுரண்ட ஆனந்தத்துடன் நானும் என் மலர்களை அக் காதல் தம்பதிகள் மீது பொழிந்தேன்" என்று கதையை முடித்தது மகிழ மரம்.

# தமிழ்ச் செல்வங்கள்

தென் ஆசிய நாடுகளும் கீழ்த்திசை நாடுகளும் விடுதலை பெற்றதன் பயனாகத் தமிழ் நாடும் ஏனைய நாடுகளும் புத்துணர்ச்சி பெற்றுப் பண்டைக் கால உறவினை மீண்டும் வளர்த்து வருகின்றன. முன்னொரு காலத்தில் ஐரோப்பா, அமெரிக்க நாடுகளைப் பண்பாடுள்ள நாடுகள் என்றும் சீர்பெற்ற சீர்மை என்றும் போற்றி வந்தோம். இன்று இந்தோனீசியா, கம்போடியா, பர்மா, மலேயா, வியட்நாம், தாய்லாந்து போன்ற நாடுகளுடன் புது உறவு கொண்டாடி வருகின்றோம். அத்தகைய உறவும் நெருங்கியநட்பும் மிகவும் பொருத்த முன் னவை.

தமிழ் மக்கள் இக்காலத்து மறுமலர்ச்சிக்குப் புது ஆற்றலையும் அறிவையும் பெற வேண்டுமாயின் அவர்கள் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் புத்துணர்ச்சிக்கு வேண்டிய ஆதாரங்களைக் காண்பர். அந்நாடுகளுக்குச் சென்ற பின்தான் நானும் தமிழரினுடைய பண்பாடு எங்கெங்கெல்லாம் பரவியிருந்தது என்றும், எத்துறைகளில் பரவியிருந்தது என்றும் உணர்ந்தேன்.

சுமத்ரா தீவில், சிம்பெரின் என்னும் வகுப்பினர் தம்மைச் சோழர், பாண்டியர், சேரர், மலையாளத்தார் என்று வகுத்து வாழ்ந்து வருகின்றனர். சாவகத்தில் தென்னாட்டிலிருந்து சென்ற அகத்தியர் வழிபாட்டிற்கும் கணபதி வழிபாட்டிற்கும் கணக்கற்ற சிலைகள் சான்றாக விளங்குகின்றன. எழில் மிகுந்த பாலித் தீவில் உள்ள நாட்டியக் கலை தென்னிந்திய நாட்டியக் கலையுடன் தொடர்புள்ளதாகத் தோன்றுகிறது. சைவ சித்தாந்தக் கோட்பாடுகளின்படி கோயில்களை அமைத்தனர் பண்டைக் காலத்துச் சாவக மக்கள்.

கம்போடியாவில் பல்லவர் சிற்ப முறைகளை அனுசரித்துக் கட்டடங்களை அமைத்திருக்கின்றனர். வியட்நாமில் உள்ள தூரான் எனும் நகர் உள்ள மாகாணத்துக்குச் சம்பா தேவியின் பெயரை அளித்திருக்கின்றனர். இவ்வாறு இந்த நாடுகளுக்குச் செல்லும் போதெல்லாம் வங்கக் கடல் தென்னாட்டவர்க்கு மத்தியதரைக் கடல் போல் விளங்கியதென்பதற்கும், தென்னாட்டுக் கப்பலோட்டிகள் இக் கடலைக் கடந்து தம் வாணிபத்தையும் தமிழ்ப் பண்பாட்டையும், மொழியையும் பரப்பினர் என்பதற்கும் எத்தனை எத்தனையோ சான்றுகளைக் கண்டு மகிழ்கின்றோம்.





ஜாவாவில் உள்ள அகத்தியர் சிலை. சோழ நாட்டுக் கலை வளத்துடன் கட்டப்பட்டிருக்கும் புத்த விஹாரம்.

தனிநாயக அடிகள்

தாய்லாந்துக்கு நான் சென்றிருந்த பொழுது அங்கு எதிர்பாராத முறையில் தமிழ்ப் பண்பாடு பரவியிருப்பதைக் கண்டேன். அங்குள்ள பியா அனுமான் என்ற பேரறிஞருடன் உரையாடிய பொழுது அவர் தாய் மொழியில் உள்ள ராமாயணம் தமிழ் ராமாயண நூல்களைத் தழுவி எழுதப்பட்டதென்றும், குபேரன், சுமந்தன், மாயன், தேவன், ஜீவன் என்று தமிழ்த் துறைகளில் பெயர் பெற்ற பாத்திரங்கள் உள்ளன என்றும் குறிப்பிட்டார். மயில் ராவணன் எனும் பெயரை **மயிராப்** என்று சுருக்கித் தாய்லாந்து ராமாயணத்தில் எழுதியிருப்பதாகவும் குறிப்பிட்டார்.

. . பாங்காக்கிலுள்ள அரசவைக்குச் சேவை செய்யும் ஹிந்து பிராமணக் குழுவினர் அங்கு வாழ்கிறார்கள். தாய்லாந்து அரசருடைய பட்டாபிஷேகச் சடங்கில் தமிழ்ச் செய்யுள் ஒன்றையும் அவர்கள் பாடுவதாகச் சில நூல்கள் குறிப்பிட்டிருந்ததால் அவர்கள் கோயிலுக்குச் சென்று அவர்கள் படிக்கும் அத் தமிழ்ச் செய்யுளை அறிய விரும்பினேன். மகராஜ குருக்கள் அவர்கள் என்னை வரவேற்றார்கள். அங்குள்ள தாய்மொழி ஏடுகளையும் கிரந்த ஏடுகளையும் எனக்கு எடுத்துக் காட்டினார்கள். அவ் வேடு ஒன்றிலிருந்து பட்டாபிஷேகத்தில் பாடும் தமிழ்ச் செய்யுளைப் பாடிக் காட்டினார்கள். அவர்கள் உச்சரிப்பு எத்தனை தவறு யிருந்தாலும் பல தலைமுறைகளாகப் பாடி வந்த "ஆதியும் அந்தமுமில்லா அருட்பெரும் சோதியே" என்று தொடங்கும் மணிவாசகப் பெருமானின் செய்யுளைப்

ஜாவாவில் உள்ள போதிசத்வரும் பல்லவ நாட்டுச் சிற்பக்கலை முறையில் அமைந்திருக்கும் புத்த விஹாரமும்.



பாடக் கேட்டு மட்டற்ற மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தேன். முன்னொரு காலத்தில் கீழ்த்திசை நாடுகளுக்குச் சோழ மன்னர் பேரரசராகிய நிலையில் இத்தகைய சடங்குகளும் செய்யுட்களும் கடல் கடந்து பரவி யிருத்தல் வேண்டும். மலேயாவின் சுல்தான்மார்களின் பட்டாபிஷேகச் சடங்குகளிலும் தமிழ்ச் செய்யுட்களைக் கையாண்டு வருகின்றனர். ஆனால் பாங்காக் பிராமணரும், சுல்தான் அரண்மனைக் குருக்களும் அறியாது கூறும் தமிழ்ச் செய்யுட்கள் பண்டைக் காலத்தில் தமிழ் பெற்ற பெருமையை உணர்த்துகின்றன.

மேலும் பாங்காக் நகரிலும் தாய்லாந்தின் வேறு சில நகர்களிலும் திருப்பாவை, திருவெம்பாவை என்னும் திருநாட்களை இன்னமும் கொண்டாடி வருகின்றனர். முன்னொரு காலத்தில் அரசரும் மக்களும் சேர்ந்து இத் திருநாட்களைக் கொண்டாடினார்கள் என்பதற்குப் பாங்காக் நகரின் நடுவில் இருக்கும் தொண்ணூறு அடி உயரமுள்ள பெரும் ஊஞ்சல் கம்பங்கள் சான்றாக நிற்கின்றன.



நான் எகிப்து நாட்டிலுள்ள லுக்ஸார் நகரத்தையும், தென் அமெரிக்காவில் பெரு நாட்டிலிருக்கும் மாச்சுப் பிச்சு எனும் இன்காஹார்களுடைய பழைய கோட்டைகளையும் கண்டு பெரு வியப்படைந்தேன். எங்கள் ஈழநாட்டிலுள்ள அனுராதபுரத்தின் பண்டைக் கால மண்டபங்களின் சிதைந்த நிலையைக் காணும்தோறும் வியந்து வருகின்றேன். அந்த நாளில் எப்பேர்ப் பட்ட காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள். எவ்வளவு பெரிய விஹாரங்களையும் சிலைகளையும் நிர்மாணித்திருக்கிறார்கள் என்று எண்ணி எண்ணிப் பெருமிதம் அடைந்து வருகிறேன். ஆனால் கம்போதியாவிலுள்ள அங்கோர் வாட் எனும் அரண்மனையையும் அங்கோர்தான் எனும் பெரும் நகரின் கட்டடங்களையும் கண்டுமெய்ம் மறந்தேன். அத்தகைய அரண்மனைகளை நான் உலகில் ஏனைய நாடுகளில் கண்டதில்லை. இத்தகைய இடத்தை உலகில் அறிஞர் அறியாதிருப்பது பெருங் குறையாகும்.



அங்கோர்தான் என்னும் நகரில் பெரும் அரண்மனைகளுண்டு. கற்களால் அமைத்த பெரும் கோபுரங்களுண்டு. ராமாயணம், மகாபாரதம் முதலிய காப்பியங்களின் காட்சிகளைக் காட்டும் அழகிய சிற்பங்கள் உள. ஐந்நூறு பேர்கள் ஒரே காலத்தில் நீராடக் கூடிய தடாகமுண்டு.

இந்த நகரை அமைத்த அரசரும் மக்களும் பெருமை வாய்ந்தவர்களும் உயர்ந்த சிந்தனை படைத்தவர்களும் ஆவார்கள் என்பது திண்ணம். இத்தகைய நகர்களைக் காணும் பொழுதெல்லாம் நம்முடைய சிறுமையைத் தெளிவாக உணர்கின்றோம்.

இச் சிறு கட்டுரையில் நான் வற்புறுத்த விரும்புவது இந்த ஒரு விஷயம்தான்: தமிழ் நாட்டு அறிஞர்களும் எழுத்தாளர்களும் வேற்று நாடுகளுக்குக் கடல் கடந்து பிரயாணம் செய்து அந்த நாட்டுச் செல்வங்களை நமது தெய்வத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வருதல் வேண்டும் என்பதே.

---

ஜாவாத் தீவில் பல இடங்களில் நமது விநாயகர் சிலைகள் இருக்கின்றன. இந்தப் பக்கத்தில் உள்ள கபால விநாயகர் ஜாவாவைச் சேர்ந்த சிங்கசாரி என்னும் ஊரில் இருக்கிறது. மேலே: கம்போதியாவில் உள்ள அங்கோர் வாட் என்னும் அரண்மனைக் கோயில் சுவரில் இருக்கும் ராமாயணக் காட்சிகள். வானர மன்னர்களான வாலி சுக்ரீவன் இருவரும் மூர்க்கமாகச் சண்டையிடும் சிற்பத்தைக் காணுங்கள்.

சுமார் ஒரு வாரத்துக்கு முன்னே பிரிந்த அவர்கள் இருவரும் இதைவிட நெருக்கடியான நிலையிலே மீண்டும் சந்தித்திருக்க முடியாது. எட்டுத் திக்கிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரை கொந்தளித்துக் குமுறும் கடல். அவர்கள் இருவரையும் விழுங்கி ஏப்பமிடுவதற்கு வெறி கொண்டு பேய்க் கூத்தாடும் பயங்கர அலைகள்.

'ஹோ, ஹோ' என்று புயற் காற்று சீறுகிறது. கடல் தலை விரித்தாடுகிறது. அலைகள் கொக்கரிக்கின்றன.

காளி தன் கட்டுமரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உயிருக்கு மன்றாடுகிறான். அலைகள் அவனைக் கட்டுமரத்தோடு சேர்த்து அம்மானையாடுகின்றன. ஐந்து நாட்களாக அவன் பட்டினி.

கங்கப்பன் அலைகளோடு போராடிக் கொண்டு தனது கட்டுமரத்தைக் காளியின் அருகே செலுத்த முயல்கிறான். ஐந்து நாட்களாக அவன் அரைப் பட்டினி. இருந்தாலும் அவன் தனது முயற்சியில் தளரவில்லை.

காளி அவனைப் பார்த்து விட்டான். பார்த்ததும் அவன் உள்ளத்திலே ஒரு பெரும் புயல் கிளம்பியது. வான வெளியிலே வீசிக் கொண்டிருந்த புயலைக் காட்டிலும் பயங்கரமான புயல் அது. கங்கப்பனுடைய உயிரைக் குடித்துவிட வேண்டுமென்ற கோபாவேசக் கொடுங்கனல் அது. தனது ஆத்திரத்தையெல்லாம் தீர்த்துக் கொள்ள அப்பொழுதாவது சமயம் கிடைத்ததே என்று அவன் சந்தோஷப்பட்டான். சாவதற்கு முன்னாலே வஞ்சம் தீர்த்துக் கொள்ள வழி ஏற்பட்டதைப் பற்றி அவனுக்கு அத்தனை திருப்தி.

கொம்மாளமிட்டுப் பேய்ச் சிரிப்பு சிரிக்கும் அலைகளிடையே கங்கப்பனுடைய துடுப்பு வலிமையோடு பாய்கிறது. காளியின் கட்டுமரத்தை எப்படியாவது அடைய வேண்டுமென்ற உறுதி அவனுக்கு என்றுமில்லாத வலிமையைத் தந்தது. அவனுடைய முழுக் கவனமும் கட்டு மரத்தைச் செலுத்துவதிலே ஈடுபட்டிருந்தது.

கங்கப்பன் வெகு சமீபத்திலே வந்து விட்டான். காளிக்கு அதற்கு மேலே பொறுத்திருக்க முடிய வில்லை. இன்னும் எதற்குப் பொறுக்க வேண்டும்? அரிவாளை வீசுவதற்கு அதுதான் சரியான தூரம். இப்பொழுது வீசினால் அரிவாள் கங்கப்பன் தலையை நிச்சயமாகத் துண்டித்துக் கொண்டு போய் விடும்.

ஏழு நாட்களுக்கு முன்புதான் காளி அந்தக் கொடிய அரிவாளைத் தன் இடுப்பிலுள்ள இரட்டை அரைஞாணிலே செருகினான். 'கங்கப்பன் தலையை வாங்காமல் இதை இடுப்பிலிருந்து எடுப்பதில்லை; கன்னியம்மன் மீது ஆணை' என்று சபதம் செய்து கொண்டிருந்தான். அந்தச் சபதம் நிறைவேறுவதற்கான தருணம் வாய்த்து விட்டது.

காளி அரிவாளை எடுத்தான். பட்டினி மயக்கத்திலும் அவனுடைய கோப வெறி ஒரு சக்தியைக் கொடுத்தது. கங்கப்பன் தலையைத் துண்டிக்கும் நோக்கத்தோடு பல்லைக் கடித்துக் கொண்டு அரிவாளை ஓங்கி வீசியெறிந்தான்.

வங்காளக்குடாக் கடலில் 1953-ம் ஆண்டு ஜூன் மாதம் 22-ம் தேதியன்று நடந்த சம்பவம் இது. ஆறு நாட்களுக்கு முன்னால் அதாவது பதினாறாம் தேதி இரவு சென்னைக் கடற்கரையை விட்டுச் சுமார் நூறு கட்டுமரங்கள் கோலா என்னும் ஒருவகை பறக்கும் மீன் வேட்டைக்குப் புறப்பட்டன. ஒரு கட்டுமரத்திலே சாதாரணமாக மூன்று நான்கு பேர்கள் போவார்கள். ஆனால் காளியும் கங்கப்பனும் இந்த முறை தனித் தனியாகவே சென்றார்கள்.

ஒவ்வொரு வருஷமும் ஜூன் மாதத்திலே இரண்டு மூன்று வாரங்களுக்கு இந்த மீன்கள் கூட்டம் கூட்டமாகப் பறந்து வரும். சென்னையை விட்டுச்





சுமார் நாற்பது மைல் கடலுக்குள்ளே சென்றால் அவை வரும் பருதியை அடையலாம். எளிதிலே அவர்களுக்குக்கொழுத்த வேட்டை கிடைக்கும்.

ஆனால் இந்த வருஷம் எதிர்பாராதபடி ஏற்பட்ட புயலால் மீன் பிடிப்பவர்களுக்கு வேட்டை கிடைக்காததோடு அவர்கள் உயிருக்கே ஆபத்தாக முடிந்தது. கட்டு மரங்கள் எல்லாம் திக்குக் கொன்றாகச் சிதறி விட்டன. திசை தெரியாமலும், புயலை எதிர்த்துக் கட்டு மரத்தைச் செலுத்த இயலாமலும் மீன் பிடிப்பவர்கள் தனியாய்த் தவித்தனர். ஒவ்வொரு நிமிஷமும் உயிர் போவதும் வருவதுமாக இருந்தது.

இந்த நிலையில்தான் கங்கப்பன் எப்படியும் காளியைத் தேடிப் பிடிக்க வேண்டுமென்று கட்டுமரத்தைச் செலுத்திக் கொண்டு வந்தான்.

புயல் சீறிற்று. அலைகள் குன்றுகளைப் போல் மேலெழுந்தன. கங்கப்பனுடைய கட்டுமரம் அவற்றிலே நாட்டியம் போல மேலெழுந்து மறுபடியும் கீழே பாய்ந்தது. [illegible] தலை [illegible]ரென்று கட்டுமரத்திலே மோதியது. ஆனால், நல்ல வேளை! அரிவாள் [illegible] போய் விட்டது. அதுகூட [illegible] பாய்ந்து மறைந்தது.

காளி வீசிய அரிவாளைக் கங்கப்பன் கவனிக்கவே இல்லை. காளியின் அருகே செல்லுவதிலேயே அவன் நாட்டமெல்லாம் நிலைத்திருந்தது. அடுத்த கணத்திலே அந்த எண்ணம் கை கூடி விட்டது.

"அண்ணே! உன்னைத்தான் சுத்திச் சுத்தித் தேடிக்குனு வந்தேன். எங்கே கையிலே துடுப்பைக் காணுேமே? அலையிலே அடிச்சுகினு போய்ட்டுதா?" என்று கூவினான் கங்கப்பன்.

"துடுப்பிருந்தா இப்போ உன் தலையை உடைச்சிருக்க மாட்டேனு?" என்று சீறினான் காளி. என்ன சீறினாலும் பட்டினிச் சிறல் தானே? அலையின் வெறிக் கூச்சல் அதை விழுங்கி விட்டது. கங்கப்பன் காதில் அது விழவில்லை.

கங்கப்பன் காளியின் கட்டு மரத்தைக் கையிலே பிடித்து விட்டான். கையை ஓங்கிக் கொண்டு கண்களிலே தீப்பறக்கத் தன்னை மறந்து எழுந்த காளியை ஒரு அலை கடலுக்குள்ளே தூக்கி யெறிந்தது. கங்கப்பன் ஒரே பாய்ச்சலில் பாய்ந்து அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கட்டு மரத்துக்குத் திரும்பி வந்து விட்டான்.

உள்ளத்திலே எழுந்த கோபப் பூகம்ப அதிர்ச்சியாலும் பட்டினிக் களைப்பாலும் காளி சோர்ந்து படுத்திருந்தான். கங்கப்பன் தான் உண்ணுமல் பத்திரமாகக் கொண்டு வந்த ரொட்டித் துண்டை எடுத்து அவனுக்குக் கொடுத்தான்.

காளி மௌனமாக அந்த ரொட்டியை வாங்கி வாயில் போட்டு மென்று கொண்டிருந்தான்.

"இந்த வருஷம் கோலா மீன் வேட்டை இப்படி ஆகும்னு யாரும் கனுவில்கூட நினைச்சிருக்க மாட்டார்கள்" என்று மெதுவாகப் பேச்சுக் கொடுத்தான் கங்கப்பன்.

காளி ஒன்றும் பேசவில்லை.

"எனக்குத் தெரிஞ்ச வரையிலும் கோலா மீன் வேட்டைக்கு இடைஞ்சலாக இந்த மாசத்திலே புயல் எப்பவும் வந்ததே இல்லே." கங்கப்பன் தான் மறுபடியும் பேசினுன். காளி ஒரே மௌனம்.

வெளியிலே புயல் ஓயவில்லை. காளியின் மனத்தில் வீசிக் கொண்டிருந்த புயல் இன்னும் ஓயவில்லை.

காளி கங்கப்பனை விட இரண்டு வயது மூத்தவன். அதனுல் கங்கப்பன் அவனை அண்ணுவென்றுகூப்பிடுவான். இருவரும் சென்ற வாரம் வரையிலும் உயிருக்குயிரான அண்ணன் தம்பிகளாகத்தான் இருந்தார்கள். ஒரே கட்டுமரத்தை வைத்துக் கொண்டு மீன் பிடித்து வாழ்க்கை நடத்தி வந்தார்கள். ஆனுல் இன்றைக்கு நிலைமை முற்றிலும் மாறி விட்டது. காளி தனியாகப் பிரிந்துவிட்டான். பிரிந்து போனதோடு அவன் கோபம் தீர்ந்து விடவில்லை. கங்கப்பனைக் கொன்று தீர்த்துவிட வேண்டுமென்றே கறுவிக் கொண்டிருந்தான்.



# புயல்

பெ. தூரன்

"அண்ணே! எப்படியாவது உன்னைத் தேடிப் பிடிக்கவேணும்னுதான் வந்தேன்" என்றான் கங்கப்பன்.

"என்னத்துக்கு? நான் உனக்கு என்னத்துக்கு வேணும்? நான் செத்துப் போனால் உனக்கு நல்லதுதானே?" காளியின் கோபம் அவனையும் அறியாமல் பொத்துக் கொண்டு வெளிப்பட்டது.

கங்கப்பன் கொஞ்ச நேரம் ஆலோசனை செய்தான். காளியின் வார்த்தைகள் அவனை உலுக்கின. புயற் காற்று கட்டு மரத்தை உலுக்கிற்று. ஆனால் காளியின் மனத்தை உலுக்கிய கோபப் புயலுக்கு இவை எல்லாம் இணை நிற்க முடியாது.

"கன்னியம்மன் கோயிலுக்குப் போய் வாக்குக் கேட்காமே முனியம்மா ஒண்ணுமே பண்ணமாட்டான்னு உனக்குத் தெரியாதா, அண்ணே? கன்னியம்மனைக் கும்பிட்டுத்தான் ருக்குமணி அவளுக்குப் பிறந்தாளாம்" என்று கங்கப்பன் விஷயத்தை ஆரம்பித்தான்.

"அந்தப் பேச்சு இப்போ என்னத்துக்கு? எதுக்கெடுத்தாலும் கன்னியம்மன் தலையிலே போட்டுட்டாத் தீந்து போச்சு. அம்மன் பேரைச் சொல்லி ருக்குமணியை உனக்குக் கண்ணாலம் பண்ணலாம்னு நினைச்சுக்கிட்டாளா அவள்?" என்று காளி குமுறினான்.

"அண்ணே, கன்னியம்மனிடத்திலே உனக்கு நம்பிக்கை இல்லையா? நீயும் அந்த அம்மன் கோயிலுக்குப் போகாமல் இருக்க மாட்டியே?"

"கன்னியம்மன் வாக்குக் கொடுத்தது மெய்யா? இதெல்லாம் வெறும் புரட்டு. இவளுக்குத் தன் மகளை உனக்குக் கொடுக்க வேணும்னு ஆசை. உனக்கும் அவளை நீயே கட்டிக்க வேணும்னு ஆசை. அதுக்குக் கன்னியம்மன் மேலே பழியைப் போட்டாச்சு, அவ்வளவுதானே?"

"முனியம்மா சொன்னவுடனே அப்படியே நான் நம்பலில்லே. கண்ணாலத்துக்கு ஒத்துக்கவும் இல்லே. எதுக்கும் நானும் அவங்ககூட ஒரு தடவை கோட்டை மைதானத்துக் கன்னியம்மன் கோயிலுக்குப் போய் பூ வெச்சுக் கேட்டு முடிவு பண்ணலாம்னு போனேன். இரண்டாவது தடவையும் பூ வெச்சுக் கேட்டோம்" என்றான் கங்கப்பன்.

"ம்....அப்ப என்னாச்சு?"

"செவப்புப் பூ வந்தா ருக்குமணியை நீ கட்டிக்கவேணும். வெள்ளைப் பூ வந்தா நான் கட்டிக்கவேணும் — அப்படின்னு கேட்டோம். வெள்ளைப் பூத்தான்னு அப்பவும் வந்தது."

"பின்னே கட்டிக்கிட்டு சொகமா இருக்கிறதுதானே? இங்கே சாகரத்துக்கு எதுக்கு இந்தப் புடலிலே வந்தாய்?"

"இல்லண்ணே, எனக்கு அவங்ககூட சமாதானமில்லே. நீயும் கன்னியம்மன் கோயிலுக்கு வரவேணும். எல்லாருமா சேர்ந்து போய் இன்னொரு தடவை பூ வெச்சுக் கேட்டுப் பார்த்திடுவோம். அம்மன் வாக்குக் கொடுக்கிறபடி சந்தோசமாப் பண்ணிக்குவோம். நீ இல்லாமெ கண்ணாலம் பண்ணிக்க எனக்கு மனசு கேட்கலே யில்லே."

"நானா? நான்தான் இப்பவே அரை உசிராக் கிடக்கிறேன். இப்படியே கடலுக்குள்ளே போய் விட்டால் எனக்கு நிம்மதியாப் போகும்."

"அண்ணே, நீ இப்படிச் சொல்லப்படாது. கடல்லே போனால் ரெண்டு பேருமாப் போயிடுவோம். பிழைச்ச குப்பத்துக்குப் போகிறதுன்னா உன்னை விட்டுட்டு நான் போக மாட்டேன். உன்னை விட்டுப் போகவா நான் இத்தனை கஷ்டப்பட்டு உன்னைத் தேடிக்கினு வந்தேன்? உனக்குக் கொடுக்க வேணும்னு அந்த ரொட்டித் துண்டைக்கூட நான் இரண்டு நாளா வாயிலே போடலையே?"

காளி பதில் பேசவில்லை. அவன் உள்ளத்திலே மறுபடியும் போராட்டம். கங்கப்பனுடைய செயலும் பேச்சும் காளியின் மனத்தில் தடால் தடாலென்று மோதிக் கொண்டிருந்தன. அலைகள் கட்டு மரத்தை மோதின.

எங்கிருந்தோ ஒரு கட்டு மரம் ஆள் இல்லாமல் அலைகளிலே ஊசலாடிக் கொண்டு வந்தது.

"அதோ, அப்படித்தான் இந்தக் கட்டு மரமும் ஆளில்லாமல் இன்றைக்கோ நாளைக்கோ போகப்போகிறது" என்றான் காளி நிராசையுடன்.

"கடல் அடிச்சுக்கொண்டு போனால் ரண்டு பேரையும் சேர்த்துத்தானே அடிச்சுக்கொண்டு போகும்? இத்தனை நாளாகப் பிரியாதவங்க சாகப் போறபோது எதுக்குப் பிரியவேணும்?" என்று அமைதியாகக் கங்கப்பன் பேசினான்.

"இப்போ தப்பிப் பிழைச்சுக் குப்பத்துக்குப் போறோம்னு வச்சுக்கோ. அங்கே போய் மறுபடியும் கன்னியம்மனை வாக்குக் கேக்கறோம்னு வச்சுக்கோ. வாக்கு எனக்குச் சாதகமா வந்துட்டா?" என்று காளி திடீரென்று கேட்டான்.

"எனக்கு முழுச் சம்மதந்தான். கொஞ்சங்கூட வருத்தமில்லே. இரண்டு பேருக்கும் ருக்மிணியைக் கட்டிக்க ஆசைதான். இருந்தாலும் முனியம்மா கன்னியம்மன் வாக்குப்படிதான் பண்ணுவாள். உனக்கு வாக்குக் கிடைச்சால் நீ பண்ணிக்கோ. எனக்குக் கிடைச்சாலும் நீ சந்தோசமா முன்னாலே நின்னு கண்ணாலத்தைப் பண்ணி வைக்கணும். நாம் எப்பவும் போல அண்ணன் தம்பியா இருக்கணும். உன்னை விரோதம் பண்ணிக்கினு எனக்குக் கண்ணாலமே வேண்டாம்."

கங்கப்பன் பேச்சை முடிப்பதற்கு முன்னே காளி தீர்மானத்துக்கு வந்து விட்டான். மூன்றும் முறை வாக்குக் கேட்க வேண்டியதில்லை என்று. இப்பொழுது அவனுக்கு நிச்சயமாகிவிட்டது. கங்கப்பன் சூழ்ச்சி யொன்றும் செய்யவில்லை என்று பூரணமாக அவனுக்கு விளங்கிப் போயிற்று. அவன் மனப்புயல் திடீரென்று ஓய்ந்துவிட்டது.

"தம்பி! உன்னைக் காப்பாத்திக் குப்பத்துக்குக் கொண்டு போகிறதுதான் எனக்கு இப்போ கவலை. எங்கே துடுப்பை இப்படிக் கொடு. இந்தப் புயலை ஒரு கை பார்க்கிறேன்" என்றான் காளி.

அதே சமயத்தில் இந்தியக் கடற்படையைச் சேர்ந்த 'ராணா' என்ற யுத்தக் கப்பல் அலைகளைப் பிளந்து கொண்டு திடீரென்று அருகிலே காட்சி யளித்தது. கட்டு மரத்தில் கெட்டியாகக் கட்டப் பட்டிருந்த ஓலைப் பாய்ப் பதியை வெடுக்கென்று பிடுங்கிக் காளி அதைத் தலைக்கு மேலே ஆவலோடு வீசி வீசிச் சமிக்ஞை செய்தான். பதிக்குள்ளிருந்த மற்றொரு ரொட்டி குழாயும் அலைகளிடையே விழுந்தது. அவர்களைக் கண்டு கொண்டதாகக் கப்பலிலிருந்து பதில் சமிக்ஞை வந்தது.

"யுத்தக் கப்பல் இப்போது எப்படி இங்கே வந்தது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் கங்கப்பன்.

"நம்ம ராசாங்கத்திலேதான் அனுப்பியிருப்பார்கள். நம்ம ராசாங்கத்துக்கு ஏழை எளியவங்கன்னு இரக்கமுண்டு" என்று நிச்சயத்தோடு பேசினான் காளி.

"அவர்கள் சொகமா இருக்கவேணும்" என்று கங்கப்பன் மனதார வாழ்த்தினான்.

"அவங்க அனுப்பினாலும் என் மனசிலே இருந்த அழுக்கு நீங்காதிருந்தா அந்தக் கப்பல் இந்தப் பக்கத்துக்கு வந்திருக்காது. கன்னியம்மன் அனுப்பமாட்டாள். அவள்தான் அந்த அலைகளையும் உன்னுடைய கண்ணுக்குப் படாமல் மறைத்திருப்பாள்" என்று காளி சொல்லிக் கொண்டிருந்தான்.

அவன் சொல்லுவது கங்கப்பனுக்கு விளங்கவில்லை. ஏதோ பசி மயக்கத்திலே அண்ணன் பேசுகிறானென்று அவன் எண்ணிக் கொண்டான்.



# பிரகாசமுள்ள வெண்ணிறப் பற்கள் மட்டுமல்ல, அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!

ஈறுகளைக் கெட்டியாகவும், ஆரோக்கியமாக வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப் பற்பசையில் டாக்டர் ஆர். ஜே. போர்ஹான் டி.டி.எஸ். அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ சாரப் பொருள் கலக்கப் படுகிறது. ரத்தக் கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பி விடும். ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்துப் பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப் படலாம்.

தந்த வைத்தியரால் செய்யப்பட்ட டூத் பேஸ்ட்

**Forhan's**
**for the gums**





## இந்தியாவில் மிகுந்த செல்வாக்குள்ள மோட்டார் கார்...

### ஹிந்துஸ்தான்

# லாண்ட்மாஸ்டர்



பல்வேறு கம்பெனிகளில் உற்பத்தியானதும் பலவித மாடல்களுமாகச் சற்றேறக்குறைய 150 வகை மோட்டார்கள் இன்று இந்திய ரஸ்தாவில் செல்கின்றன. ஆனால், கவனித்துப் பார்த்தால் ஒன்பது கார்களுக்கு ஒன்று ஹிந்துஸ்தான் காராக இருப்பது தெரியும்.







## அவ்விதம் இருப்பதற்குக் காரணம் இதுதான்...

### கீழ்க்காணும் வசதிகளுடன் விலையில் குறைவாக இருப்பதுதான்:

* பெரிய காருக்கு உண்டான தாராள இடவசதி, சுகம், இவற்றுடன் நன்றாக ஓடக் கூடியது
* பராமரிப்புச் செலவு ஆச்சரியப்படும்படி மிகக் குறைவு
* அழகும் ஒய்யாரமான தோற்றமும் கொண்டது
* மறுபடியும் நல்ல தொகைக்கு விற்கலாம்

## ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்., கல்கத்தா

கீழ்க்கண்ட இடங்களில் எமது டீலர்கள் உள்ளனர்:

ஆக்ரா, ஆஜ்மீர், ஆமதாபாத், அலகாபாத், பரோடா, பெங்களூர், பம்பாய், பரேலி, பனாரஸ், கல்கத்தா, கட்டாக், கோயமுத்தூர், திப்ருகர், டேராடூன், தன்பாத், இந்தூர், ஜெய்பூர், ஜோத்பூர், ஜல்கான், ஜோர்ஹட், ஜாம்ஷெட்பூர், ஜலந்தர் சிட்டி, ஜம்மு, கான்பூர், கோல்ஹாபூர், லக்னோ, சென்னை, மதுரை, மங்களூர் மான்யும், நாசிக், நாகபுரி, புது டில்லி, நேபாளம், பாட்னா, பூனா, ராஜ்கோட், ராஞ்சி, சம்பல்பூர், ஷில்லாங் செகந்திராபாத், ஸில்சார், ஸ்ரீநகர், தேஜ்பூர், திருச்சிராப்பள்ளி, திருவனந்தபுரம், விஜயவாடா, விஜயநகரம்


"அலையா அலையறேன், வேலையே கிடைக்கல்லே!"
"பில் கலெக்டர் வேலையில் இருந்தாயே! அதை ஏன் விட்டு விட்டாய்?"
"அது பெரிய அலையா பிழைப்பாய் இருந்தது. அதனால விட்டு விட்டேன்!"






"எஜமான், தீவுளி வருதுங்க."
"அட, ஊம்; தீவுளி வருதா? எப்படியப்பா கண்டு பிடிச்சே?"


"என் கையிலே கொடுடா குடையை; நான் பிடிச்சுண்டு வரேன். சமர்த்தோல்லியோ!"
"மாட்டேன்; நான் தான் பிடிச்சிண்டு வருவேன்!"


மாமனார்:- ஓ, மாப்பிள்ளையா! வந்துட்டேளா? புத்து தீபாவளியா வந்துட்டு எங்கே இந்த வருஷம் தீபாவளிக்கு வராமல் இருந்துவிடுவீங்களோன்னு நினைச்சேன்!


மிலிடரி காப்டன் தலைதீபாவளிக்கு வரும்பொழுது மைத்துனர்கள் தக்க மரியாதையுடன் வரவேற்கிறார்கள்!

# பாரிஸ் நகரில்

'பார்புகழ் பிரயாண நிலைய'த்தைக் கண்டு மயங்காத பிரயாணிகளே இல்லை. அவ்வளவு கவர்ச்சிகரமாக இருந்தது அந்த நிலையம்.

அந்த உலகப்பிரசித்தமான அலுவலகத்தின் முன்புற அறையின் வெளிச் சுவர் முழுதும் உலகப் படம் ஒன்று தீட்டப் பட்டிருந்தது. உள் அறைகளில் பளபளக்கும் எஃகு நாற்காலிகளும், கண்ணாடிப் பலகைகள் தாங்கி நிற்கும் மேஜைகளும் நிறைந்திருந்தன. கண்ணுக்கு இதமாயிருப்பதற்காக விளக்குகள் மங்கலாக எரிய வகை செய்யப்பட்டிருந்தது. சப்தத்தை உறியக் கூடிய அழுத்தமான அழகிய நீல நிறக் கம்பளங்கள் கீழே விரிக்கப்பட்டிருந்தன. உயர்தர நிர்வாகிகள் ஒவ்வொருவருக்கும் தனித் தனி அறைகள் ஒதுக்கப் பட்டிருந்தன. ஒரு அறைக்கும் மற்றொரு அறைக்கும் இடையில் கண்ணாடிச் சுவர்கள் பொருத்தப் பட்டிருந்தன. நிலையத்தின் அமைப்பும், அலங்காரமும், பிரயாணிகளுக்கான வசதிகளும் 'பார் புகழ் பிரயாண நிலைய'த்தின் உரிமையாளரான மோஹன் வல்வானியின் அழகுணர்ச்சிக்கு எடுத்துக் காட்டாயிருந்தன.

வல்வானி ஒரு சிந்தி லட்சாதிபதியின் இளைய குமாரன். உலகம் முழுதும் பரந்து கிடந்த தன் தந்தையின் பட்டு விற்பனை நிலையங்களைப் பன்முறை பார்வையிடச் சென்று வந்ததன் மூலம் பிரயாண ஆர்வம் அவன் ரத்தத்தில் ஊறித் தோய்ந்து விட்டது. இம்மாதிரி பிரயாணத்தின் போது பாரிஸ் நகரில் லாடின் பகுதியில் ஆறு மாதம் தங்கியதன் விளைவாக அவனுடைய கலையுணர்ச்சி பக்குவம் அடைந்து பரிமளித்தது.

'பார் புகழ்நிலைய' அமைப்பும் அலங்காரமும் தன் வாடிக்கைக்காரர்களின் பிரயாண ஆர்வத்தைத் தூண்டிச் சுடர் விடச் செய்தன. பிரயாணிகள் நலனைக் கவனித்து உபசரிக்கும் சிப்பந்திகளின் ஆடம்பர உடைகள், அவர்கள் பேச்சின் உச்சரிப்புகள்—எல்லாமே பிரயாணம் செய்பவர்களின் கற்பனா சக்தியைத் தூண்டிவிடும் முறையில் அமைந்திருந்தன. ஆனால் அந்தக் கண் குளிரும் அமைப்பில் ஒரு சிறு குறை.

வருகிறவர்களை வரவேற்று உபசரிப்பதற்காக நியமிக்கப்பட்டுள்ள புதிய





மங்கை கமலா காம்டேகர் கவர்ச்சிகரச் சூழ்நிலைக்குத் திருஷ்டி பரிகாரம் போல் இருந்தாள். ஒட்டி உலர்ந்த சரீரமும், மாநிறத் தோற்றமுமுடைய கமலா, 'பார்புகழ் நிலைய'த்தின் ஒயிலான தோற்றத்தில் கரும்புள்ளி மாதிரி காட்சியளித்தாள். அவள் எப்பொழுதும் நூல்சேலைதான் அணிந்திருப்பாள்!

'பார் புகழ் நிலைய'த்துக்கு அடிக்கொருதரம் வருபவர்கள் இந்தக் காய்ந்து கருகிய பெண்ணை வரவேற்பு அறையில் கண்டதும் திடுக்கிட்டுப் போவார்கள். அவர்களில் சிலர் "என்ன ஐயா, வல்வானி! எங்கே பார்த்துப் பிடித்து வந்தீரய்யா இந்த அவலட்சணத்தை? உங்கள் ஸ்தாபனம் நவீனமானது, கவர்ச்சிகரமானது, புத்தி சாதுர்யமுள்ள சிப்பந்திகள் கொண்டது என்ற நற்பெயருக்கே இழுக்கு தேடிவிட்டீரே, ஐயா!" என்று புகார் செய்தனர்.

ஆனால் மோகன் வல்வானி கமலாவை உபசரிப்பு மங்கையாக நியமித்ததற்குச் சமாதானம் கூறினர்

" நீங்கள் சொல்வது சரிதான்: முகப்பொலிவுள்ள மங்கைகளை அமர்த்தினால் ஸ்தாபனத்துக்கு அழகாகத் தானிருக்கும். ஆனால் இரண்டு மாதங்களுக்கொருதரம் புது ஆள் தேட வேண்டி வந்துவிடுமே. அப்படிச் சிரமப்பட்டு ஒரு அழகியைத் தயார்]செய்தால், அவள் அதிக நாள் இங்கே தங்கி யிருக்க மாட்டாள்! உம்மைப் போன்ற உல்லாச புருஷர் அவளைக் காதலித்துக் கொத்திக் கொண்டு போய் விடுவாரல்லவா?

"அந்த வங்காள அழகு சுந்தரி மாயா குப்தாவைத் தெரியுமோ இல்லையோ? தன் கண்வீச்சால் ஆளை விழுங்கும் அந்தப் பெண்மணி மூன்று ஆண்டுகள் ஆக்ஸ்போர்டில் படித்தவள். கவி புனைவதிலும், நாடகம் எழுதுவதிலும் புகழ் வாய்ந்தவள் என்ற பெயருடன் நம்மிடம் வந்து சேர்ந்தாள். எங்களிடம் வந்து ஒருமாதம் முழுசாக ஆகவில்லை. அவளைச் சர்மா என்ற இளைஞன் அழைத்துக்கொண்டு போய் விட்டான்.

"டயாஜுகாலின்ஸ் எனும் கோவா அழகி, நமது காரியாலயத்துக்கு செக் மாற்ற வந்த அமெரிக்க வட்சாதிபதியுடன் ஓடி விட்டாள். அதற்கப்புறம் அழகிகளை உபசரிப்பு மங்கைகளாக

ஆங்கில நவீனங்களிலும் அவள் கலைத்துப் படித்தவைகளை யெல்லாம் அனுபவித்துத் தீர்க்க வேண்டும் என்கிற பேரவாவும் உதயமாயிற்று.

இத்தனை சிரமங்களை வாழ்க்கையில் அனுபவித்த கமலா, 'பார்புகழ் பிரயாண நிலைய'த்தின் உபசரிப்பு மங்கைப் பதவி கிடைத்ததையே தனது கனவின் பூர்த்திக்கு அறிகுறியாக எண்ணினாள்.

ஆனாலும் அவள் கனவு காண்பதைக் கைவிடவில்லை. ஒவ்வொரு நாளும் மாலையில் காரியாலயத்தை விட்டு சர்ச்கேட்டிலிருந்து தாதருக்கு நெருக்கமான ரயிலில் பிரயாணம் செய்வதை ஐரோப்பாவிலேயே பிரயாணம் செய்வதாக நினைத்துக் கொள்வாள்! சந்து பொந்துகளைத் தாண்டித் தன் குடிலுக்குச் செல்வதைப் பாரிஸில் ஒரு சந்தில் செல்வதாக எண்ணிக் கொள்வாள்! பாரிஸ் செல்வதே எப்போதும் அவள் கனவா யிருந்தது.

திடீரென அயல் தேசப் பிரயாணம் செய்யும் அதிருஷ்டம் தனக்குக் கிட்டிவிட்டால் ஏமாந்து போய் விடலாகாது என்று யாருக்கும் தெரியாமல் அவள்பிரயாணத்துக்கான முன்னேற்பாடுகளுடன் எப்போதும் தயாராக இருந்தாள். அவள் மேஜை அறையின் அடியில் தனது பாஸ்போர்ட்டைப் பத்திரப்படுத்தி யிருந்தாள். இந்த பாஸ்போர்ட்டைப் 'பார் புகழ்நிலைய'த்தில் சேர்ந்த ஒரு வாரத்துக்கெல்லாம் வாங்கி வைத்து விட்டாள். என்றோ ஒரு நாள் பாரிஸ் போகும் சந்தர்ப்பம் வரலாமல்லவா?

ஆனால் அவள் கண்ட கனவு எதிர்பார்த்ததைவிடச் சீக்கிரமாகவே பலித்து விட்டது! ஒருநாள் மாலை பாரிஸ் நகர் செல்வதற்கான விமான டிக்கெட் அவள் கைக்குக் கிடைத்தது. அதுவும் அன்றிரவே புறப்பட வேண்டும்!

* * *

அதைப் படித்துப் பார்த்தாள். 'கமலா காம்டேகர்' என்ற பெயர் தெளிவாக எழுதப்பட்டிருந்தது. விமானம் அன்று நள்ளிரவில் ஜூஹூ நிலையத்திலிருந்து புறப்படப் போகிறது. இந்த அற்புதம் எப்படி நிகழ்ந்தது என்பதும் கமலாவுக்குத் தெரியும். எதிர்பாராத சந்தர்ப்பச் சேர்க்கையினால் இந்த அதிசயம் நிகழ்ந்தது. தேவிபாலா என்னும் புகழ் பெற்ற சினிமா நட்சத்திரம் ஓய்வு பெறுவதற்காகப் பாரிஸ் செல்ல விரும்பினாள். அவள் நடித்த காவிநார் என்னும் படத்தின் பொன் விழா அப்பொழுது தான் நடந்து கொண்டிருந்தது. ஜனங்களின் ஆரவாரங்களுக்குத் தப்பி வெளி நாட்டில் சில காலம் நிம்மதியாய்ப் பொழுதைக் கழிக்க விரும்பிய தேவிபாலா மாற்றுப் பெயர் பூண்டு பிரயாணம் செய்வதற்கு விரும்பினாள்.

தேவிபாலா கமலாவைப் பார்த்து, "இது நமக்குள் இருக்கட்டும். வேறு யாருக்கும் தெரிய வேண்டாம்" என்ற பூர்வபீடிகையுடன், இரண்டு வாரம் விமான மூலம் பிரான்ஸ், இத்தாலி, ஸ்விட்ஸர்லந்து முதலிய நாடுகளில் பிரயாணம் செய்ய விரும்புவதாகவும், இந்தக் காலத்தில் பெரும் பகுதியைப் பாரிஸில் கழிப்பதற்கு ஆசைப்படுவதாகவும் கூறினாள்.

"ஆனால் நான் பெயர் தெரியாமல் பிரயாணம் செய்ய விரும்புகிறேன்", என்று வற்புறுத்தினாள்.

இதைக் கேட்டுக் கமலா சற்று ஆச்சரியமடைந்ததைக் கண்ட அந்த நடிகை, "இந்தச் சினிமா விசிறிகள் கூட்டத்தைக் கண்டாலே என் நரம்புகள் கலகலத்து விடுகின்றன. இந்த இரண்டு வாரங்களாவது நான் தனிமையை நாடிச் செல்வதை நீ புரிந்து கொள்வாய். ஏனெனில் நீயும் பெண்ணாய்ப் பிறந்தவள்தானே!" என்று அந்தரங்கமாகக் கூறினாள்.

உடனே புகழ்பெற்ற தேவி பாலாவின் பிரயாணத் திட்டத்தை வகுக்கத் தொடங்கினாள் கமலா.

"எந்தப் பெயர் சூட்டிக் கொண்டு பிரயாணம் செய்ய விரும்புகிறீர்கள்?" என்று கேட்டாள் கமலா.

சதா தன்னைப் பற்றியே தியானம் செய்து கொண்டிருக்கும் அந்த நங்கைக்கு ஒரு பெயரும் தோன்றாததனால், "ஏன், கமலா காம்டேகர் என்ற பெயர் சூட்டிக் கொள்ளலாகாது? அது என் பெயர் தான்" என்றாள் கமலா.

தேவிபாலா உடனே இதற்கு இணங்கினாள். போகவர டிக்கெட்டுக்கான பணத்தைக் கொடுத்து விட்டு வெளியேறினாள். 'பார்புகழ் நிலைய'மும் டிக்கெட்டை வாங்கி வைத்து விட்டது.

ஆனால் புறப்பட வேண்டிய தினத்தன்று மாலை காரியாலயம் மூடவேண்டிய காலந்தாழ்த்து சில நிமிஷங்கள் இருக்கும். அப்பொழுது தேவிபாலா போன் செய்தாள். கமலா போனை எடுத்து 'என்ன விஷயம்?' என விசாரித்ததும்



அந்த நடிகை அனுபாசமாக, "நான் இன்று புறப்படவில்லை. நான் நடிக்கும் ஒரு படத்தின் படத்தளிக்கையாளரின் கத்திரிக்கோல் வேலையின் விளைவாகச் சில காட்சிகளைத் திரும்பி எடுக்கவேண்டி யிருக்கிறது" என்று கூறினாள்.

"அம்மணி! நீங்கள் பிரயாணத்தை ரத்து செய்வதில் பிரயோசனமில்லை. இன்னும் சில நிமிஷங்களில் விமானம் புறப்பட்டு விடும். அந்தக் கம்பெனி யார் பணத்தைத் திருப்பித் தரவும் மாட்டார்கள் ஆயிரக்கணக்கில் பணம் நஷ்டமாகும்" என்று சொல்லிப் பார்த்தாள் கமலா.

"அநேக லட்சம் செலவாகும் படம் பெரிதா? சில ஆயிரம் ரூபாய்கள் நஷ்டம் முக்கியமா?" என்று கூறி விட்டு, மறு மொழிக்குக் கூடக் காத்திராமல் நடிகை தேவி பாலா டெலிபோனைக் கீழே வைத்து விட்டாள்.

அதே டிக்கெட்தான் இப்பொழுது கமலாவின் மேஜை மேல் காட்சி யளித்தது.

* * *

சுவரில் மாட்டி யிருந்த கடிகாரம் மணியடிக்கத் தொடங்கிற்று. ஒன்று, இரண்டு, மூன்று! காலியா யிருந்த நிசப்தம் நிலவிய காரியாலயத்தில் இந்த மணி ஓசை வேற்றுலகத்திலிருந்து ஒலிப்பது போல் இருந்தது. நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு! விமானம் பறப்பதன் பேரொலி அவள் காதுகளைத் துளைத்தது.

அதிலே அவள் ஏறியும் விட்டாள். விமான விளம்பரத் தாள்களில் காட்சி யளிப்பதுபோன்ற உபசரிப்பு மங்கை, "எல்லோரும் தோல் பட்டையை வரிந்து கட்டிக் கொள்ளுங்கள்" எனப் பணிவாக வேண்டிக் கொள்வது அவள் காதில் விழுந்தது. அவள் அமர்ந்து விட்டதும் விளம்பரத் தாள்களில் காட்சியளிக்கும் பள பளப்பான பஞ்சு மெத்தை மேலே பறந்து போய்க் கொண்டிருந்தது. கீழே ஒளிப் பிழம்பில் மிதக்கும் பம்பாய் நகரம் கறுப்பு வெல் வெட்டில் வைரம் பதித்த மாதிரி காட்சியளித்தது. இன்னும் விமானம் மேலே போகப் போக இருளெனும் கடலில் பம்பாய் நகரமே மூழ்கிவிட்டது போலிருந்தது.

அதிகாலையில் கெய்ரோ பிரமிட் மேல் விமானம் பறக்கிறது. அப்புறம் ரோமாபுரி! கடைசியாகப் பிற்பகலின் மங்கும் வெயிலில் பாரிஸ் வந்தடைந்தனர்.

அந்நகரை நெருங்குகையில் பாரிஸே பூமியிலிருந்து பெயர்ந்து வருவது மாதிரி பிரமை தட்டியது. எப்பல் கோபுரத்தின் மேல் ஸ்தூபிகள், அரண்மனைக் கோட்டை மாதிரியுள்ள நாட்டர் டேம், வட்ட விமானம் அமைந்த சங்கீத நாடக மண்டபம், இருமருங்கிலும் வரிசையான மரங்கள் அமைந்த அகன்ற ரஸ்தாக்கள், அவைகளை ஒட்டுறுப்போல் அமைந்த சாம்ப் எலிஸிஸ். கடைசியாக வாபார்க் விமான நிலையம்.

"டாக்ஸி வேண்டுமா அம்மணி?" என்று வணக்கத்துக்கறிகுறியாகத் தனது தொப்பியைத் தொட்டுக் கொண்டு கேட்டான் டாக்ஸி டிரைவர். பணிவாக மோட்டார் கதவைத் திறந்தான். கமலாவுக்கு இந்த ஆளையும் எங்கோ பார்த்திருப்பதாகப் பிரமை தட்டியது.

அவள் டாக்ஸியில் ஏறியவுடன் "எங்கே செல்ல வேண்டும் அம்மணி?" என்று டிரைவர் கேட்டான்.

"ஏதாவது ஒரு ஹோட்டலுக்கு" என்றுசொல்லிவிட்டுச் சற்று நிதானித்து, "சாம்ப் எலிஸிஸ் ஹோட்டலுக்குப் போ" எனக் கல்லூரியில் படித்த அரை குறை பிரஞ்சு பாஷையில் கூறினாள். பிரயாணிகளுக்குச் சிபார்சு செய்த பழக்கத்தில் இந்த ஹோட்டல் பெயர் திடீரென அவளுக்கு ஞாபகம் வந்தது. அந்த



ஹோட்டலும் கனவுலகக் காட்சிபோல் அற்புதமாக அமைந்திருந்தது.

அவளுக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறை பிரமாதமா யிருந்தது. அஸ்தமன சூரியனின் ஒளியிலும் பிரகாசிக்கும் வானமும் தெரு ஓரங்களில் வரிசையாயிருக்கும் மரங்களில் இலைகள் அசைவதனால் எழும் இன்னொலியும் சேர்ந்து கமலாவை வெளியே உல்லாசமாக உலாவுவதற்கு அழைத்தன.

அறை ஆளை மயக்கும் முறையில் அமைந்திருந்தாலும், வானியே அவளை வெளியே அழைத்துச் செல்லவே அழைப்பதாயிருந்தது. களைப்பூட்டும் பிரயாணத்துக்கப்புறம் தண்ணீர்த் தொட்டியில் நிரப்பியிருந்த இதமான சுடு தண்ணீரில் நீராடியது அவளுக்கு இன்பத்தையே அளித்தது. நீராடிய பின் துடைத்துக் கொண்டிருக்கையில் அவள் மனத்தில் ஒரு சந்தேகம் உதித்தது. இதுதான் பாரிஸில் அவளுடைய முதல் நாள். இதுவே அந்நகரில் அவளுடைய கடைசி நாளாகவும் போய் விடலாம். இந்த ஒரு நாளில் நல்ல சேலை அணிந்து கொண்டு வெளியே வருவதா வேண்டாமா என யோசித்தாள். உடனே சற்று நடுங்கிக் கொண்டே தன் தோல் பையைத் திறந்தாள். என்ன ஆச்சரியம்? பைக்குள் இருந்த ஆடம்பரமான பட்டுப் புடவையும் சரிகை நிறைந்த ரவிக்கையும் தான் அவளை அப்படிப் பிரமிக்க வைத்தன.

நிதானித்துப் பார்த்தாள். பை அவளுடையதல்ல. ஒருவேளை தன்னுடன் விமானத்தில் பிரயாணம் செய்த இளம் ராணியின் பையும் தன்னுடையதும் கைமாறி விட்டதா? ஆனால் இந்த அதிசயத்தை, தற்செயலாக நேர்ந்த அதிர்ஷ்டத்தை ஆராய்ந்து பார்த்துக் கொண்டிருக்க இதுநேரமில்லை. வெளியே சென்று இயற்கைக் காட்சியின் இன்பத்தை நுகர்ந்து கொண்டிருக்க வேண்டிய சமயம் இது. பலரைச் சந்தித்து அவர்களுடைய காதலுக்கும் கவர்ச்சிக்கும் வசப்பட்டு ஆனந்தபரவசமடைய வேண்டிய தருணம் இது. ஆனால் அவளைக் கண்டு யார் காதலிப்பார்கள்? அவள் அவலட்சணம் அவளுடைய உள்ளத்தை சுட்டி கொண்டு குத்துவது போலிருந்தது. தன் தோற்றத்தை நினைத்து நினைத்து மனமொடிந்து இருந்த நிலையில் திடீரெனக் கண்ணாடியில் போய்ப் பார்த்துக் கொண்டாள்.

இங்கும் ஒரு அற்புதம் அவளுக்குக் காத்துக் கொண்டிருந்தது. கண்ணாடியில் அவள் கண்ட உருவம் அவளுடைய தல்ல. அந்தத் தோற்றம் தன்னுடையதா யிருந்தால் அவள் முகத்தில் ஏதோ அதிசய மாறுதல் ஏற்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் கண்ணாடியில் அவள் கண்ட முகம் அவலட்சணமாக இல்லை என்பது மட்டுமல்ல; அது கம்பீரமானதாக இருந்தது. அந்த முகத்தில் புன் முறுவல் தவழ்ந்தது.

ஒரு வேளை பாரிஸுக்கு வந்து விட்டோம் என்கிற மகிழ்ச்சி அவளுடைய தோற்றத்திலும் மனப்பாங்கிலும் இந்த இனிய மாறுதலை ஏற்படுத்தியிருக்க வேண்டும். இதுவும் ஆண்டவன் நிகழ்த்திய ஒரு அதிஅற்புதமான சாதனையா யிருக்குமோ?

இந்த நிலையில் அவள் ஹோட்டலை விட்டு வந்ததும் பலர் அவளைப் பார்த்து மயங்கியதில் அவள் ஆச்சரியமடைய வில்லை. அகன்ற வீதிகளில் அவள் நடந்து செல்லுகையில், தெரு ஓரத்தில் சிற்றுண்டி நிலையங்களில், அமர்ந்து காப்பி அல்லது மது அருந்திக் கொண்டிருந்தவர்கள் கமலாவைப் பார்த்து விட்டு மெய்ம் மறந்து திகைத்துப் போய் நின்றனர். அவர்கள் "அதோ இந்திய ராணி


மனைவி :—என்ன கொண்டு வந்திருக்
கிறேன்! சொல்லுங்கள் பார்க்கலாம்!
கணவன் :—நரசுஸ் காப்பி! அதான்
வாசனையிலிருந்தே தெரிகிறதே!
நரசுஸ்
காப்பி
நரசுஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி பிரைவேட் லி-ட்.
மதராஸ் & சேலம்.

போகிறுள் பார்'' என முணுமுணுத்துக் கொண்டிருந்தது அவள் காதில் விழுந்தது.

* * *

இப்படி அவள் சிந்தனையிலாழ்ந்திருக்கையில் எங்கிருந்தோ ஒரு இளைஞன் அவள் எதிரே வந்து நின்றான். அவன் மாதிரி வசீகரத் தோற்றமுள்ள யுவனை அவள் அதற்குமுன் பார்த்ததே யில்லை.

''அம்மணி! என்னை உங்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளலாமா?'' என்று அவன் பேச்சைத் தொடங்கினான்.

சற்றுத் தயக்கத்துடன் 'சரி' என்பதற்கறிகுறியாகத் தலையை அசைத்து விட்டு அவன் அன்புடன் அளித்த ஆசனத்தில் அமர்ந்தாள். அவளருகில் அவனும் உட்கார்ந்து ''நான்தான் எமில் வெர்டோ பிரபு'' என்று கூறினான். இந்தப் பெயர் கமலாவுக்குப் புதிதாயுமிருந்தது; எங்கோ கேட்டது போலவுமிருந்தது. எங்கே, எப்பொழுது என்கிற ஆராய்ச்சியில் அவள் அப்பொழுது இறங்க விரும்பவில்லை. இந்தச் சந்திப்பால் ஏற்படக்கூடிய இன்பத்தைத் துறக்க அவள் விரும்பவில்லை.

''உங்களை இன்று பாரிசுக்கு வரவேற்கும் பாக்கியம் பெற்றது பற்றிப் பெருமகிழ்ச்சியடைகிறேன். இந்த நகரைச் சுற்றிக் காட்டும் வாய்ப்புக் கிடைத்தது பற்றிப் பெருமிதம் கொள்கிறேன்'' என்றான் அந்த இளைஞன் அன்புடன்.

ஹோட்டல் பணியாளை அழைத்து சாம்பேன் எனும் உயர்தர மது பரிமாறச் சொன்னான். வெள்ளித் தொட்டியில் பனிக்கட்டித் தூளில் பதித்து வைத்த மது புட்டியை ஏவலாள் கொண்டு வந்ததும்தான் பம்பாய் மாதிரி பாரிஸில் மது விலக்கு அமுலில்லை என்பதைக் கமலா உணர்ந்து கொண்டாள்.

''நான் வருவேன் என்பது எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள் கமலா தட்டுத் தடுமாறும் ஆங்கிலப் பாஷையில்.

இளைஞன்: நீ கட்டாயம் வருவாய் என்பது எனக்கு நீண்ட நாட்களாகவே தெரியும். இந்த நாளை எதிர்நோக்கித்தான் என் ஆயுளெல்லாம் காத்திருந்தேன். இந்நாளைப் பற்றி நான் கனவு காணாத நாளில்லை.

கமலா: நீங்களும் கனவு கண்டு கொண்டிருந்தீர்களா?

இளைஞன்: ஆம். உன்னைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருந்தேன்.

கமலா: நானும் உங்களைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருந்தேன்.

அவள் தனது நாணத்தை மீறித் தன் உள்ளத்தைத் திறந்து காட்டி விட்டாள். அது மட்டுமல்ல. முதன்முறையாக அந்த இளைஞனின் திருமுகத்தை அன்புடன் உற்றுப் பார்த்தாள். அவனும் அதே சமயத்தில் அவளை விழுங்கி விடுவது போல் பார்த்து அவள் கரத்தை அன்போடு தன் கரங்களில் பற்றிக் கொண்டான். கமலா இனந் தெரியாத இந்த ஸ்பரிச இன்பத்தில் தன்னை மறந்தாள்.

அந்தி மங்கும் அந்த வேளையில், 'இருவரும் உலாவி விட்டு வரலாம்' என்று யோசனை கூறினான் இளைஞன். இந்த இனிய அநுபவத்தின் மூலம் கமலா தான் கண்ட கனவுகளெல்லாம் பலித்தன என்று பெருமிதம் கொண்டாள். பாரிஸ் வந்தாயிற்று. அங்கு அழகும் பண்பாடும் சிறந்து உருவெடுத்தாற் போலுள்ள ஒரு பிரபு வர்க்க இளைஞனைக் கைப் பிடித்தாயிற்று. அது மட்டுமல்ல. அந்த இளைஞன் துணிவும் திறமும் மிகுந்தவன் என்பதைக் காட்டும் ஒரு சம்பவம் அந்தச் சந்தர்ப்பத்தில் நிகழ்ந்தது. கமலாவைப் பார்த்து ஒரு போக்கிரி இளைஞன் சீட்டியடித்து அவளைக் கேலி செய்வது போல் இலேசாகக் கண்ணடித்தான்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த கணப்பொழுதில் கமலாவின் கைப் பிடித்த காதலன் காளை போல் சீறி அந்தப் போக்கிரி இளைஞனை வாட்போருக்கு அழைத்தான். இருவரும் தத்தம் சட்டைப் பைக்குள்ளிருந்து பளபளக்கும் பட்டாக்கத்தியை உருவினர். என்ன நிகழப் போகிறது என்பதைக் கமலா உணர்வதற்குள் அவளுடைய மானத்தைக் காக்க அவள் காதலன் கடுமையான வாட்போர் புரியத்தொடங்கி விட்டான்.

உடனே இந்தச் சமரைப் பார்க்க ஜனங்கள் கூடி விட்டனர். ஆனால் அவர்கள் யாரும் இந்தச் சண்டையைத் தடுக்கத் துணியவில்லை. கமலாவோ ஸ்தம்பித்து நின்று விட்டாள்.



திரைப்படங்களில் காண்பது போன்ற போர் நடந்தது. கடைசியில் கமலாவின் காதலன் அந்தப் போக்கிரியின் இதயத்தில் குத்தவே போக்கிரி யுவன் பொத்தென விழுந்தான். அவன் உடலிலிருந்து வாளை உருவுகையில் அதிலிருந்து ரத்தம் சொட்டுவதைக் கமலா பார்த்துக் கலங்கி விட்டாள். அச்சமயம் போலீஸ் ஊதச் சத்தம் கேட்டது!

'ஆ போலீஸா!' என ஆச்சரியத்துடன் கூறி விட்டு அந்த இளம் பிரபு தன் காதலியையும் மறந்து பக்கத்துச் சந்து வழியாக ஓட்டமெடுத்தான். கமலாவும் அவனைத் தொடர்ந்து ஓடினாள்.

சந்து, பொந்து, சேரிகள் வழியாக மூச்சுத்திணறக் கமலா ஓடினாள், ஓடினாள், ஓடிக்கொண்டே இருந்தாள். அவள் அந்தப் பிரபுவைப் பின் தொடர்ந்தாளே யொழிய அவனைப் பிடிக்க முடியவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் அவன் மற்றொரு சந்தில் வேகமாக ஓடித் திரும்பி மறைந்தே போய் விட்டான்.

போலீஸிடமிருந்து தப்புவதற்காகக் கமலா ஒரு வீட்டின் மாடிப்படியில் வேகமாக ஏறினாள். ஓடிவந்த வேகத்தில் படிக்கட்டு தடுக்கி விழுந்து அவள் மண்டையில் அடிபட்டு விட்டது. அப்புறம் ஒரே இருள், பிரக்ஞையில்லை.

* * *

அவள் விழித்துக் கொண்டபோது பம்பாயில் உள்ள தன் அறையில் கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தாள். அவளுடன் வசித்து வந்த வைத்தியக் கல்லூரியில் மூன்றும் ஆண்டு படிக்கும் மாணவி, ''நீ படிக்கட்டில் விழுந்து மண்டையில் பலத்த அடி. இரண்டு பகல் இரண்டு இரவாக நீ ஜுரவேகத்தில் பிதற்றிக் கொண்டிருக்கிறாய்'' என்றாள்.

''நான் என்ன உளட தரித்திருந்தேன்? என்னிடம் வேறு ஏதாவது இருந்ததா?'' என்று கேட்டாள் கமலா, இந்த விசித்திரமான கனவு நீங்கிய பிறகு.

''வழக்கமான நூல் சேலைதான் தரித்திருந்தாய். ஆனால் பாரிஸ் விமான டிக்கெட் ஒன்றைக் கெட்டியாகக் கையில் பிடித்திருந்தாய்'' என்று மறுமொழி கூறினாள் அவள் தோழி.

* * *

சில நாட்கள் கழிந்தன. அவள் குணமடைந்து மீண்டும் தன் காரியாலயத்துக்கு வந்தாள். வந்ததும் அவசரம் அவசரமாக விமான நிலையத்தாரிடம் போனில் பேசினாள்.

'' 'பார் புகழ் பிரயாண நிலையம்' பேசுவது. உங்களுக்கு முன்பே தகவல் கொடுக்காமலிருந்ததற்கு வருந்துகிறோம். மிஸ் கமலா காம்டேகருக்காகப் பாரிஸுக்கு வாங்கிய 'ரிடர்ன்' பிரயாண டிக்கட்டை ரத்து செய்ய வேண்டும்.''

விமான நிலையத்திலிருந்து கிடைத்த பதில் அவளைத் திடுக்கிடச் செய்தது.

''டிக்கெட்டை ரத்து செய்ய வேண்டும் என்று நீங்கள் கூறுவதன் பொருள் விளங்கவில்லை. கமலா காம்டேகர் பாரிஸ் போய்த் திரும்பியும் வந்து விட்டார். விமானப் பிரயாண டிக்கெட் தொலைந்து போயிற்று என்றார். நாங்கள் மாற்று டிக்கெட் கொடுத்தோம். அவர் பாரிஸில் ஒரு மாலைதான் தங்க முடிந்ததாம். இம்மாதிரி விசித்திரப் பிரயாணிகளைக்கூட எங்களிடம் அனுப்பி விடுகிறீர்களே!''

இவ்வாறு விமான நிலையத்தினர் கூறியதும் இது ஒரு விசித்திரமான கனவாக அல்லவா இருக்கிறது என்று கமலா வியப்புற்றாள். ஆனால் மறுநாள் பத்திரிகையில் வெளி வந்த பின்வரும் செய்தி அவள் வியப்புக்கு விளக்கம் தந்தது.

''தேவிபாலா எனும் பிரபல சினிமா நட்சத்திரம் மாறுபெயர் பூண்டு பாரிஸ் நகரம் சென்று அங்கு ஒரு மாலைப் பொழுதைக் கழித்தார். அதற்குள் அவரது ஸ்டுடியோ அதிகாரிகள் அவசரமாகத் திரும்பி வரும்படி கோரியதால், அன்றே அவர் புறப்பட்டுத் தாய்நாடு திரும்பி வந்து விட்டார்.''

# சிக்கனமும் சிறப்பும் வாய்ந்த நவீன வாகனம்

காரியாலயத்துக்கும், தொழிற்சாலைக்கும், வியாபார ஸ்தலங்களுக்கும் தினந்தோறும் செல்லுவோருக்கு இன்றியமையாத சாதனம்.

ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிளுடன் ஒரு சைட் கார் கோத்து விட்டால் அதில் ஒரு சிறு குடும்பமே சௌகரியமாகப் போய்வரலாம்.

காடு மேடுகளிலும் வயல் வெளியிலும் கூடச் சுலபமாகச் செல்லக்கூடிய வாகனம். இந்தியாவின் நிலைமைகளுக்குப் பொருத்தமானது.

## ராயல் என்பீல்ட்

மோட்டார் சைக்கிள்



## ROYAL ENFIELD

படிப்படியாய்த் தயாரிப்பவர்கள் :

**என்பீல்ட் இந்தியா லிமிடெட்**
36-C, மவுண்ட் ரோடு, சென்னை-2

விற்பனை ஏஜண்டுகள் :

**மதராஸ் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
38-C, மவுண்ட் ரோடு, சென்னை-2
21, ஜெயசாமராஜேந்திர ரோடு, பெங்களூர்
3778, பெய்ஜ் பஜார், தரியாகஞ்ச், டில்லி-7

SE/106




அத்ரி மகரிஷியின் தர்ம பத்தினியும் மகா பதிவிரதையுமான அனசூயை, சீதை இவ்வளவு இளம் வயதில் சௌபாக்காரங்களையும் துறந்து விட்டுக் கணவனுடன் விரத வாழ்க்கை மேற்கொண்டு காட்டுக்கு வந்த சீலத்தை நினைத்துப் பார்த்து, மனமுருகி விடுகிறாள். உடனே சீதைக்குத் தன்னிடமிருக்கும் எல்லா ஆபரணங்களையும் அணிவித்து சீதையின் சௌந்தர்யத்தைப் பருகிக் 'கண்களின் நீர் மல்க ஆசீர்வதிக்கிறாள்.

## கம்பர் தரும் காட்சி

கவிச் சக்கரவர்த்தி கம்பரை நாடகக் கவிஞன் என்றே உலகம் போற்றுகிறது. ஆற்றொழுக்காகச் செல்லும் ராமாயண காவியத்திலே பல நாடக நிகழ்ச்சிகளை அமைத்துப் பிரமிப்பு ஊட்டுகிறார் கம்பர். அத்தகைய அருமையான கட்டங்களில் ஒன்றை அந்த அற்புதக் கவிஞன் புனைந்த யுத்த காண்டத்தில் பார்க்கிறோம்.

யுத்த களத்திலே கும்பகர்ணனும் லட்சுமணனும் யுத்த சன்னத்தர்களாக நிற்கிறார்கள். இப்பெரும்போரைக்காண வானிலே தேவர்களும் தேவதைகளும் திரளாகக் கூடி விடுகின்றனர். இவர்கள் எல்லாம் சற்று மகிழ்ச்சிக் கடலில் ஆழட்டும், வீர வார்த்தைகள் பரிமாறிக் கொண்டு விட்டுப் பிறகு போர் தொடங்குவோம் என்று கும்ப கர்ணன் பேசத் தொடங்குகிறான்:

"இராமன் தம்பிநீ இராவணன் தம்பிநான் இருவேம்
போராதின் றேம், இது காணிய வந்தனர் புலவோர்!"

"லட்சுமணா! நாங்கள் அருந்தவம் செய்து ஓர் தங்கையைப் பெற்றோம், அவள் ஒரு தவறும் செய்யாதிருக்க அவள் மூக்கை அரிந்தாய்; கூந்தலைப் பற்றி இழுத்தாய். அந்தக் கையை அப்படியே வெட்டித் தள்ளுகிறேன், பார்!" என்று வீர கர்ஜனை புரிந்தான்.

அதற்கு லட்சுமணன்:

அல்லின் ஊற்செய்த நிறத்தவன் அனையது பகர
மல்லின் ஊற்செய்த தோளவன் 'மாற்றங்கள் நும்பால்
வில்லின் ஊற்சொல்ல தன்னது வெற்றிறல் வெல்லச்
சொல்லின் ஊற்சொலக் கற்றிலம் யாம்'எனச் சொன்னான்!

"பதில் பேச்சு வில்லினால் சொல்லக் கற்றிருக்கிறேன். வெற்றித் திரு வெட்கப்பட, சொல்லினால் சொல்லக் கற்றதில்லை" என்று எதிர் முழக்கம் செய்கிறான் லட்சுமணன்.

கம்பர் தரும் இருபெரு வீரர்களை நமது ஓவியர் மணியம் அற்புதமாக நம்முன் நிறுத்தி விட்டார்.

# துளஸிதாஸர் தரும் காட்சி

கங்கைக் கரை. குகனது படகு புறப்படச் சித்தமாக இருக்கிறது. படகில் ஏற வரும் ஸ்ரீராமரிடம் குகன், "ஏறுங்கள்! ஏறுவதா இருந்தால் காலைக் கழுவிக் கொண்டு ஏறுங்கள். ஏனென்றும் உங்கள் கால்களுக்கு ஒரு அற்புத சக்தி இருக்கிறதாம்; கல்லையும் பெண்ணாக்கி விடுகிறதாம். கல்லே பெண்ணாகி விடும் பொழுது, எனது இந்த மரக்கலம் எம்மாத்திரம்? எனது பிழைப்புக்கு ஒரே வழியான இந்த மரக்கலம் பெண்ணாகி விட்டால், பிழைப்புக்கும் பிழைப்பும் போய், குடும்பமும் பெருகி விடுமே!" என்று சொல்லுகிறான்.

குகன், ஸ்ரீராமரது பாதங்களைக் கழுவிக் கடைத் தேற எவ்வளவு அழகாக வழி தேடிக் கொண்டு விட்டான்! — துளஸிதாஸரின் கற்பனை இது.

மணியம்

எமது மனமார்ந்த

# தீபாவளி வாழ்த்துக்கள்

புனித ஸ்னானம் செய்து
புத்தாடை உடுத்தி
மகிழ்வுற்றிருக்கும்
உங்களுக்கு எங்கள்
மங்கள வாழ்த்துக்கள் !





மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை R.S. — சேலம் ஜில்லா.
மானேஜிங் ஏஜெண்டுகள் : சேஷசாயி பிரதர்ஸ் (பிரைவேட்) லிட்.


















# ஆடவல்லி








கையிலிருந்த பேனா இயந்திரம் போல் ஓடிக்கொண்டிருந்தது. 'சல சல' வென்ற கைவளையல்களின் ஓசை என் செவிகளுக்குக் கேட்டது. மங்கலான விளக்கின் ஒளியில் புன்னகை பூத்த முகத்துடன் ஒரு அழகிய மடந்தை நின்று கொண் டிருந்தாள்.

அடுத்த கணம், வகையறியாத பெரும் திகில்கள் என்னுடைய மனத்தில் வந்து சூழ்ந்து கொண்டன.

அவள் தன் புருவங்களை உயர்த்தியபடி, "நீ என்னைக் கண்டு எதற்காக இப்படிப் பயப்பட வேண்டும்? உன்னைக் கண்டு நானல்லவா இப்பொழுது பயமடைந்து கொண்டிருக்கிறேன்!" என்றாள்.

அவள் கூறிய செய்தி எனக்குச் சற்றே வியப்பை அளித்தது. அவள் குனிந்து நான் எழுதிக் கொண்டிருந்த காகிதத்தை உற்றுப் பார்த்தாள்.

அவள் குறும்புடன் "இதோ பார், நீ எழுதிக் கொண்டிருப்பதெல்லாம் எனக்கு ஓரளவுக்குப் புரிந்திருக்கிறது. அதனால் தான் 'நீ இல்லாத கற்பனைகளை யெல்லாம் புனைந்து எழுதுவதைக் காட்டிலும், உண்மையான வரலாற்றைக் கூறினால், அது பெரிய உபகாரமாக இருக்குமே' என்று எண்ணுகிறேன். ஆனால் நீ—" என்று கூறினாள்.

அவள் வார்த்தைகள் முடிவதற்கு முன்பே நான் பரபரப் படைந்தேன். "உண்மையில் நீங்கள் எக்காலத்தவர்? எதைப் பற்றி எழுத வேண்டும் என்கிறீர்கள்?" என்று வியப்புடன் கேட்டேன்.

"அதைத்தான் சொல்ல வந்தேன். நீ இன்று மேற்குக் கோபுர வாயிலின் வழியாக வரும் பொழுது அங்கிருந்த சிற்பங்களை யெல்லாம் வெகு உன்னிப்பாகக் கவனித்தா யல்லவா? அப்பொழுதே நீ யார் என்பதையும் அறிந்து விட்டேன். உன்னைப் போல் அச்சிற்பங்களைப் பார்த்தவர்கள் எத்தனையோ பேர்! புகைப்படம் எடுத்துக் கொண்டு போய்ப் பத்திரிகைகளில் பிரகரித்தவர்கள் எத்தனையோ பேர்! ஆனால் ஒருவராவது அந்தச் சிற்பங்களில் உள்ள நடனப் பெண்ணும் ஒரு மனித உருவமாக இருந்தவள்தான் என்று எண்ணியது கிடையாது. காரணம், அந்தப் பெண் சரித்திரத்தில் இடம் பெறாதது தான்" என்றாள் அம்மங்கை.

அவளுடைய வார்த்தைகளில் ஏதோ ஒருவிதத் துயரம் மிகுந்திருந்தது.

அவள் ஒரு முறை நாலாபுறங்களிலும் பார்வையைச் செலுத்தி விட்டு, "நீ இந்திய சரித்திரம் முழுவதும் படித்திருக்கிறாயா? முக்கியமாக, இந்தச் சோழ நாட்டைப் பற்றிய சரித்திரம் உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?" என்றாள்.

"இதென்ன கேள்வி? சோழ நாட்டிலேயே பிறந்து வளர்ந்த நான், இந்நாட்டின் சரித்திரத்தை அறியாமல் எப்படி இருக்க முடியும்?" என்றேன்.

"அப்படியானால் மகாராஜ சிம்மனைப் பற்றியும் உனக்குத் தெரிந்திருக்குமே?" என்றாள்.

நான் பெரும் குழப்ப மடைந்தேன்! அவளது முகத்திலோ ஏளனமான பாவம் கொந்தளித்தது!

* * *

சோழநாட்டின் சரித்திர ஏடுகளைப் புரட்டினால் தில்லைத் தலம் பெற்ற புகழும் பெருமையும் வேறெந்த நகரமும் பெற்றதில்லை என்பது விளங்கும். சோழ நாட்டின் மீது படையெடுத்து



வந்த எத்தனையோ பகைவரசர்கள், அநேக நகரங்களைக் கொள்ளையடித்து, சிற்றூர்களைப் பாழாக்கித் தகர்த்தெறிந்தும் இருக்கின்றனர்.

ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் சோழ வம்சத்தினரின் அஸ்தமன காலம் நிகழ்ந்து கொண்டிருந்தது. சோழ நாட்டின் உப்பைத் தின்று வளர்ந்த தண்டநாயகர்களின் ராஜத் துரோகமே இதற்குக் காரணமாகும்.

தண்டநாயகர்களுள், சோழக்கோனும் ஒருவர். தில்லை நகரின் பெருங் குடியிலிருந்த சோழக் கோனிடம், வேந்தர் பெருமதிப்பும், தனிமையான விசுவாசமும் கொண்டிருந்தார். அரசாங்கத்தின் இரகசியங்கள் பற்றியும் பொக்கிஷ நிலைமைகள் குறித்தும் அரசர் இவரிடம் ஆலோசனைகள் புரிவதுண்டு. இதனால், மற்றத் தண்டநாயகர்களின் உள்ளங்களில் சோழக் கோனைப் பற்றிப் பொறாமை வேரூன்றியிருந்தது.





சோழக்கோனார் நேர்மை தவறாதவர். தெய்வத் திருப்பணிகளிலும் முழு மனத்துடன் ஈடுபட்டிருந்தார் கோனார். வெகு காலம் வரையில் இல்லறப் பற்றே இல்லாமலிருந்தது அவருக்கு. அவரது மனைவியாருக்கு ஒரு பெண் மகவு பிறந்ததும் அவரது மனமும் மாறிவிட்டது.

வசீகரம் மிகுந்த அக் குழந்தையைச் சிறப்புடன் வளர்க்கும் முயற்சியில் கோனார் பெருமிதமடைந்தார். ஆடவல்லானின் அருளால் கிடைத்த அக் குழந்தைக்கு 'ஆடவல்லி' யெனப் பெயர் சூட்டி, மகளின் மனப்போக்குப் படியே, அவளுக்குத் தகுந்த ஆசிரியரின் மூலம், அந்த அற்புதக் கலையைப் பயிலுவிக்கத் தொடங்கினார் தந்தை.

ஆடவல்லியின் கலையறிவு இமயத்தின் சிகரமாக விளங்கிற்று. நடன சாஸ்திரத்தின் நாற்றெட்டு அம்சங்களையும் விளக்கக் கூடியவள் ஒருத்தி உண்டானால் அவள் ஆடவல்லிதான்.

இந்தக் காலத்தில் தான், சோழகத்தின் சரித்திரத்தில் கடும் சோதனையான நிகழ்ச்சிகள் தொடங்கின.

நாலா திசைகளிலும் இருந்த பகையரசர்கள் திடீரெனச் சோழ நாட்டின் மீது படையெடுத்தனர். நெடுங் காலமாக நேர்மைக்கும், தியாகத்துக்கும் பெயர் போன சோழ நாட்டின் தளபதிகளும் சேனை வீரர்களும் தேசத் துரோகிகளாகி, பல்லவ சைனியத்துடன் சேர்ந்த பின், அவரால் என்ன செய்ய முடியும்? இதே சமயத்தில்தான், தெற்கிலிருந்த சடாவர்மன் சுந்தர பாண்டியனின் சேனைகளும் தஞ்சையைச் சூழ்ந்துகொண் டிருந்தன. பாவம்! சரித்திரம் கண்டிராத இத்தகைய நெருக்கித் தாக்குதல்களினால் சோழ ராஜ்யம் பரிதாப நிலையை அடைந்தது. சோழ மன்னரான பெரியதேவர் தலைமறைவாகச் சென்று விட்டார்.

* *
*

கைதியாக்கப் பெற்ற சோழக் கோனாருக்கும் பல்லவ வேந்தருக்குமிடையே கடுமையான வாக்குப் போர் நிகழ்ந்தது. சோழ நாட்டின் இரகசியமான பொக்கிஷ நிலவறையைக் காண்பிக்குமாறு பல்லவ மன்னர் அவரை வற்புறுத்தினார். அஞ்சா நெஞ்சம் படைத்த கோனாரின் அசையாத உறுதியினால் பல்லவ மன்னர் தோல்வி அடைந்தார்.

பல்லவரின் படைத் தலைவர்கள், கோனாரைப் பெரிதும் கொடுமைப்படுத்தினர். தந்தையின் நிலையை அறிந்த ஆடவல்லி, அன்று தில்லைக்காளியின் சொரூபமாகவே மாறினாள்! கையிற் பிடித்த கத்தியுடன் அவள் தலைவிரிகோலமாகப் பல்லவர்களின் பாசறையை நோக்கி ஓடினாள்.

வாயிற்புறத்திலிருந்த காவலாளிகளின் தடைகளையெல்லாம் மீறிவிட்டு வந்திருந்த ஆடவல்லியைக் கண்ணுற்ற வேந்தர், பெரும் திகைப்பில் ஆழ்ந்தார். அதே கணம் மகளின் கோலத்தைக் கண்ணுற்ற சோழக் கோனாரின் உள்ளம் பதறிற்று.

"குழந்தாய்! நீ இங்கு ஏன் வந்தாய்? சோழ நாட்டின் உப்பில் வளர்ந்த இவ்வுடல், சோழ நாட்டின் இழுக்கைத் தாளாது மறைந்து விடப் போகிறது! நீ சந்தோஷமாக வீடு சென்று சுகமாக வாழ்! வருங்காலச் சரித்திர ஏடுகள் சோழக் கோனாரின் பெயரை மக்களுக்கு விளக்கும்!"—இந்த வார்த்தைகள் அவ்வீரக் கைதியின் வாக்கினின்றும் வெளியாயின.

ஆடவல்லியின் கண்கள் பெருவெள்ளத்தைச் சொரிந்தன. அவள் திடீரெனப் பகையரசரின் புறமாகத் திரும்பி, "வேந்தே! அப்பொக்கிஷங்களை நானே தங்களிடம் ஒப்புவிக்கிறேன்—என்னுடன் வாரும்!" என்றாள் நெடுங் குரலில்.

ஆனால், சோழக் கோனாரின் கண்டத்தினின்றும் பதற்றம் மிகுந்த சொற்கள் வெளிவந்தன: "ஆடவல்லி! வேண்டாம்! கேவலம் ஓர் உயிருக்காக இச் சோழகத்தின் மதிப்பிலாப் பொக்கிஷத்தைப் பகை வேந்தனிடம் கொடுத்து விடாதே!" என்று எச்சரித்தார். ஆனால் அவ்வார்த்தைகள் அவள் காதில்

ஸ்தாபகர்



தொ. ஆறுமுக முதலியார்

# சுதேசி

(ஸ்தாபிதம்: 1906)

டெலிபோன்: 8291

தந்தி: "புவனு"

இத் தீபாவளித் திருநாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் எங்களது மனமார்ந்த

## நல் வாழ்த்துக்கள்!

இதர எந்த தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும் கவர்ச்சியும் பொருந்தியன வாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும், "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும், அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவ ருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தொ. ஆ. சுப்பிரமணிய முதலியார்**

நிர்வாக பாகஸ்தர்

ஏறவில்லை. பல்லவ வேந்தர் கோப்பெருஞ்சிங்கர் ஆடவல்லியைத் தொடர்ந்து சென்றார்!

* * *

தில்லை நகரின் வீதிகளின் வழியே ஆடவல்லி பரபரப்புடன் நடந்து சென்றாள். பல்லவ மன்னவரான கோப்பெருஞ் சிங்கரும், அவரைச் சேர்ந்த நான்கு அமைச்சர்களும் அவளைப் பின்தொடர்ந்தனர்.

பல்லவ வேந்தரான மகாராஜ சிம்மன் கோப்பெருஞ்சிங்கரின் உள்ளத்திற்குள் திடீரென ஒரு மின்னலின் அதிர்ச்சி ஏற்பட்டது! பரம்பரைச் சோழ அரசர்களால் நிர்மாணிக்கப் பெற்றிருந்த அழகு நிறைந்த தூண்களையும், கலைச் சிற்பங்களையும், தில்லை மூவாயிரத்தான் சபையையும், நெடிதுயர்ந்த துவார பாலகரின்கம்பீரத்தோற்றங்களையும்கண்ணுற்ற அரசர் தன் நிலைமறந்த பித்தராகி விட்டார். அதன்றியும்,

**"கோத்தரைத் தேறல் குனிக்குந் திருமன்றம்**
**காதலாற் பொன்வேய்ந்த காவலனும்"—**

எனப் புகழ் கொண்ட சோழ சக்கரவர்த்தியின் அற்புதப் பணியான ஆடவல்லானின் அரங்க மண்டபம் பல்லவரின் இதயத்தைக் காந்தமாகக் கவர்ந்துவிட்டது. அக்கலைத் தெய்வத்தின் திருமுகம், பல்லவ அரசரின் இதயத்தில் ஒரு புதுமையான எழுச்சியையே தோற்றுவித்து விட்டது.

"பல்லவேந்திர பூபதி! ஏறக்குறைய நான்கு நூற்றாண்டுகளாகச் சோழ பரம்பரையினரால் சேர்க்கப் பெற்றதும், காப்பாற்றப்பட்டு வருவதுமான மதிப்பில்லாப் பொக்கிஷங்கள் இவை தாம்! இச்சிற்றம்பல இரகசியத்தைப் பற்றித் தங்களுக்கு நம்பிக்கை யில்லையேல், தாங்கள் இடும் எத்தகைய தண்டனைகளுக்கும் இப்பேதை சித்தமாக இருக்கிறேன்!—" இவ்வாறு கூறிய வண்ணம், அப் பெண் தன் கரத்திலிருந்த கொடுவாளை மன்னரிடம் நீட்டினாள்.

அடுத்த கணமே, அப்பகையரசரின் கண்கள் தம்மை யறியாது நீரைச் சொரிந்தன. அவர் மிகுந்த பரபரப்புடன், தம் அருகிலிருந்த அமைச்சரைக் கொண்டு, கைதியாக இருக்கும் சோழக் கோனரைத் தகுந்த மரியாதைகளுடன் உடனே இரதத்தில் அழைத்து வருமாறு கட்டளையிட்டார்.



சிற்றம்பலத்தானின் எதிரே கரம் குவித்து, கண் மூடி நின்று பரவச நிலையடைந்திருந்த பல்லவ வேந்தரைக் கண்டதும், சோழக்கோனார் பெரும் திகைப் படைந்து விட்டார். ஆனால் சிறிது நேரத்துக்குப் பின், அப் பகை அரசரின் இதயத்தை விட்டு வெளியான வார்த்தைகள், யாவர் மனத்தையும் உருக்கி விட்டன.

"சோழ நாட்டின் மாசற்ற வீரரே! புறக் கண்களைத் தவிர, அறிவுக் கண்களும் உண்டு என்பதை இன்றுதான் உணர்ந்தேன். சோழகத்தின் ஒப்பற்ற பொக்கிஷங்களை, தங்களது மகளின் மூலம் இன்று கண்டுவிட்டேன். இந்நாழிகை முதல், நான் இவ்வாடவல்லானின் அடிமை! இவனுக்குச் செய்யும் திருப்பணிகளின் மூலமே, நான் செய்துள்ள கொடுமைகளுக்குப் பரிகாரம் பெற எண்ணுகிறேன். உமது ஆலோசனையை வேண்டுகிறேன்!" என்றார்.

பகையரசரின் மன மாறுதலைக் கண்ட சோழக் கோனருக்கு, அவையனைத்தும் கனவு போன்றே ஒரு கணம் தோன்றிற்று.

அடுத்த கணம் கோனரின் உடல் சிலிர்த்தது. "வேந்தரே! இப்பேதைப் பெண் உண்மையில், தங்களுக்கு **மதிப்பில்லாப் பொக்கிஷங்களைத்**தான் அறிவித்தாள். ஆனால், சோழ நாட்டின் மதிப்புள்ள பொக்கிஷங்கள் இருக்குமிடத்தை இவள் அறிவித்திருந்தால், எனது வஞ்சகமான வாளுக்கு இரையாகி யிருப்பாள்! அவையிருக்கும் இரகசியமான இடத்தை எங்கள் மன்னரும், நானும், இவளுமே அறிவோம். தங்களது மன உறுதி கண்டு, நானே இப்பொழுது அவற்றைத் தங்களிடம் காட்ட எண்ணம் கொண்டு விட்டேன். ஆனால், அவை யாவும் இவ்வாடவல்லானின் திருப்பணிகளுக்கே பயன்பட வேண்டு மென்பதை மட்டிலும் தங்களிடம் அறிவுறுத்துகிறேன்."

கோனரின் வார்த்தைகளைக் கேட்ட அரசர் மகிழ்ச்சியுடன், "நண்பரே! அப்பொருள் மட்டிலுமென்ன? எனது போரின் வெற்றிப் பொருள்கள் அனைத்தையுமே இத் தில்லை நாயகனின் திருப்பணிக்கு அர்ப்பணிப்பேன்" என்றார்.

சோழப்பேரரசின் இரகசியமான பொக்கிஷ நிலவறையைப் பாதுகாத்து நின்ற தென்கோபுர வாயில், எழுநிலைக் கோபுரமாக உயர்ந்தது. அதன்றியும், போரின் வெற்றிப் பொருள்களால் கட்டப் பெற்ற அக்கீழ்த் திசைக் கோபுரம், அம்மன்னரின் பெயருக்கே புகழ்க் கோபுரமாகி விட்டது.

இதற்கிடையே ஆடவல்லியின் பவித்திரமான நடனக் கலையைக் கண்ட அரசர், பெரும் பரவசமுற்று ஆடவல்லியின் நூற்றெட்டு நடன பாவங்களையும் கல்லில் உருப்பெறச் செய்தார். இவைதாம் இன்றும் அக்கலைத் தெய்வத்தின் திருக்கோயிலில் கோபுர வாயிலின் நிலைகளில் காட்சி யளிக்கின்றன.

* * *

இரண்டாம் பிராகாரத்தின் மேற்கு வாயிலில் இடதுபுறமுள்ள கற்கம்பத்தைப் பார். அதிலும் உனக்கு நம்பிக்கை இல்லையானால், பைரவர் கோயிலின் வடபுறத்துச் சுவரிலுள்ள கல்வெட்டுக்களிலும் என் தந்தை சோழக் கோனருக்குச் சகல புவனச் சக்கரவர்த்தி மகாராஜ சிம்மரால், இத்தில்லையின் பிடாரியார் கோயிலைக் கட்டுவிக்க நிலம் சாசனம் செய்திருப்பதைக் காணலாம்.

கோபுர நிலைகளிலுள்ள எனது நடனத் தோற்றங்கள் பெரும்பாலோருக்கும் கற்பனையின் உருவாகவும், சிற்பியின் கைத்திறனாகவுமே இருந்து வருகின்றன. சரித்திரத்தில் இடம் பெறாத என்னைப் பற்றி, எல்லோரும் இதே போல் எண்ணுவதிலும் பிசகு ஒன்றுமில்லை" என்று முடித்தாள் ஆடவல்லி.

# வைரத்தோடு

து. ரா.

மீனுப் பாட்டிக்குக் கோபம் வந்தால் அவள் சள்ளு புள்ளென்று எரிந்து விழுவாள் என்பது சாருவுக்குத் தெரியும். அதனால் அவள், தன் 'வேஷ'த்தைக் கூடக் கலைக்காமல் மீனுப் பாட்டியின் வீட்டை நோக்கி அவசரம் அவசரமாக விரைந்தாள். மணி மூன்றரை ஆகிவிட்டது. அவள் வழக்கமாக மீனுப் பாட்டியின் வீட்டில் மூன்று மணிக்குள் இருந்து விடுவாள். அதற்கு மேல் தாமதம் ஆனால் பாட்டிக்குக் கோபம் வரும் என்பது தெரியும் அவளுக்கு. ஆனால் இன்று அவள் என்ன முயன்றாலும் மூன்று மணிக்குள் பாட்டியின் வீட்டில் இருப்பது என்பது முடியாத காரியம். இது அவள் பிசகு அல்ல. ஏனென்றால், இன்று அவளைப் பெண் பார்க்க வந்தவர்கள் ஒரு மணிக்கு வருவதாய்க் கூறிவிட்டு இரண்டு மணிக்குத்தான் வந்தார்கள். பெண் பார்க்கும் படலம் மூன்று மணி வரையில் ஆயிற்று.

சாருவின் தாயார் அவளுக்கு ராக்கொடி, ஜடை குச்சு எல்லாம் வைத்துப் பின்னி அலங்காரம் செய்திருந்தாள். இதெல்லாம் என்னவோ நாடகத்துக்கு வேஷம் போடுவது போல் தோன்றிற்று சாருவுக்கு. பெண் பார்க்க வந்தவர்கள் போன பின் அவகாசம் மட்டும் இருந்திருந்தால் இந்த வேஷத்தைக் கலைத்து விட்டுத்தான் அவள் வீட்டை விட்டு வெளிப்பட்டிருப்பாள். ஆனால் அவகாசம் தான் இல்லை. ஏற்கனவே மீனுப்பாட்டி வீட்டுக்கு இன்று அவள் லேட்!

போதாத குறைக்கு, சாரு பாதி வழி போய்க் கொண்டிருக்கையில் மழை சடசட என்று பெருந் தூறலாகப் பெய்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்த ஓடும் மேகங்கள் வேறு இப்படிச் சதி செய்ய வேண்டுமா? பாட்டி வீட்டு முற்றத்தில் காயவைத்த அப்பளங்கள் மழையில் நனையும். தான் வராததால் மீனுப் பாட்டி தன்னைச் சபித்துக் கொண்டு அப்பளங்களை அள்ளி வைப்பாள்! பாவம்! பாட்டிக்கு ஒரு கால் ஊனம். ஆகையால் அவசரம் அவசரமாக மழையில் நனையும் அப்பளங்களை அவள் எடுத்து வைப்பது என்றால் சிரமந்தான். அதுவும் அவள் வீட்டில் குடி இருப்பவருடைய குழந்தைகள் அராத்திய வால்கள். பாட்டி நொண்டி நொண்டி நடப்பதைப் பார்த்தாலே அவை சிரித்துக் கேலி செய்வது வழக்கம். அவள் மழையில் நனைந்து கொண்டு அவசரமாக அப்பளத்தை எடுப்பதைப் பார்த்தால் சொல்ல வேண்டுமா? அவளுக்கு அழகு காட்டிச் சிரித்து அவளுடைய கோபத்தை அவை இன்னும் அதிகப் படுத்தி விடும்.

இந்த அப்பளத்துக்காகத்தான் மீனுப் பாட்டி வீட்டுக்குத் தினம் இரண்டு நடை போக வேண்டும் சாரு. மீனுப்பாட்டி அப்பளம் இட்டு விற்று வந்தாள். சாருவின் வீட்டுக்கு மாசம் மூன்று கட்டு நாலு கட்டு அப்பளம் அவள் போடுவாள். அதற்குப் பணம் வாங்கிக் கொள்கிறதில்லை. அதற்குப் பதிலாகத்தான் அவளுக்குக் கூடமாட ஒத்தாசை செய்வது என்று ஒப்புக் கொண்டிருந்தாள் சாரு.

அவள் குடும்பம் சிரம தசையில் இருந்தது. அவள் தகப்பனார் லோகநாதனுக்கு மூத்த பையன் வகையாக இருந்திருந்தால் அவர்கள் சிரமம் ஒருவாறு விடிந்திருக்கும். ஆனால் அந்தப் பையனோ ஒன்றுக்கும் உதவாத ஓர் அரைப் பைத்தியம். இருபது வயசுக்கு மேல் ஆகியும் குடும்பத்துக்குப் பெரும் பாரமாக இருந்து வருகிறான். அடுத்தபடி எல்லாம் பெண்கள். சாருவும் அவளுக்கு அடுத்த சுலோசனாவும் கல்யாணத்துக்கு நிற்கிறார்கள். இவ்வளவு கஷ்டத்திலும், சிரமதசையிலும் வீட்டில் இன்னும் குழந்தைப் பேறு நிற்கவில்லை. இப்பொழுதுகூடச் சாருவுக்கு ஒரு தங்கை தான் பிறந்திருக்கிறாள், பாவம்!

இன்று சாரு விழித்த முகம் நல்ல முகம் தான். ஏனென்றால் மீனுப் பாட்டி கோபித்துக் கொள்ளாமல் சிரித்த முகத்துடனேயேதான் இருந்தாள். பாட்டிக்கு வயசு அறுபத்து ஐந்துக்கு மேல் இருக்குமே ஒழியக் குறைவாக இருக்காது. நெற்றியில் பளிச்சென்றிருக்கும் குங்குமமும், காதுகளில் ஜிலு ஜிலு என்று பிரகாசிக்கும் வைரத் தோடுகளும் அவள் முகத்துக்கு லக்ஷ்மிகரமான ஒரு சோபையைக் கொடுத்தன. அவள் இன்னும் கன்னிகைதான். கல்யாணமே செய்து கொள்ளவில்லை. நொண்டிப் பெண்ணை யார் கல்யாணம் செய்து கொள்வார்கள்? சாம்பசிவத்துக்கும் லோகாம்பாளுக்கும் பிறந்தவள் அவள் ஒருத்திதான். ஆகையால் அவர்கள் வைத்து விட்டுப் போன வீட்டில் இருந்துகொண்டு வாழ்க்கையில் பெரும் பகுதியை அவள் கழித்தாகி விட்டது. வீட்டின் ஒரு பாகத்துக்கு வாடகை வருகிறது. தவிர, பாட்டி அப்பளம் வேறு இட்டு விற்கிறாள். ஒரு மனுஷி வாழ்க்கை நடத்த இன்னும் என்ன வேண்டும்?



"என்ன சாரு! அப்பளத்தை எல்லாம் நான் எடுத்து வைத்த பிறகு வருகிறாயோ, ரொம்பக் காரியமாக?" என்று ஆரம்பித்த பாட்டி சாருவின் புதிய அலங்காரத்தைக் கவனித்ததும், "ஓஹோ! புதுசா இன்னிக்கி ஜடை சிங்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறாய்! அதனால் நாழியாகி விட்டது!" என்றாள்.

"இல்லே, பாட்டி! மத்தியானம் என்னைப் பெண் பார்க்க வந்தா...." என்று வெட்கத்தோடு இழுத்தாற்போல் கூறினாள் சாரு.

"பெண் பார்க்கவா?" என்றாள் பாட்டி. அந்த வார்த்தை அவள் உடலில் மின்சாரம் பாய்ந்தது போன்றதொரு உணர்ச்சியைக் கொடுத்தது. "திருட்டுப் பெண்ணே! என்னிடம் சொல்லவே இல்லையே நீ?"

"இல்லே, பாட்டி! காலையில் கூட எனக்குத் தெரியாது. பத்து மணித் தபால்காரன் கடுதாசி கொண்டு வந்தான். அதிலே மத்தியானம் வருகிறோம் என்று அவர்கள் எழுதி இருந்தார்கள்.."

"சரி! பெண் பார்க்க வந்தார்கள்! பார்த்தார்கள்! என்ன சொன்னார்கள்?"

"தெரியாது, பாட்டி! போய் எழுதுகிறோம் என்று அவர்கள் அப்பாவிடம் சொன்னார்களாம்."

மிகுதியாயிருந்த வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள் சாரு. பாட்டி யோசனையில் ஆழ்ந்தபடியே அவளைக் கவனித்தாள். பிறகு மெதுவாகப் பேசக் கொடுத்தாள்.

"என்னைக் கூடத்தான் ஒருவர் பெண் பார்க்க வந்தார்...."

"உங்களையா, பாட்டி?" என்று கண்களை அகல விழித்துக் கொண்டு வியப்போடு கேட்டாள் சாரு.

"ஆமாம்; என்னைத்தான்! என் கால் பிறக்கையிலேயே நொண்டி என்று நினைத்தாயா? அதுதான் இல்லை! பிறவியில் நன்றாகத்தான் இருந்தது. என்ன சொன்னேன்? பெண் பார்க்க வந்தார்கள் என்று சொன்னேன்? ஆமாம்; வந்தார்கள்...." என்று இழுத்தாள்.

"அப்புறம்?"

"சொல்கிறேன், அவசரப் படாதே! அதற்கு முன் நான் என் அப்பாவையும் அம்மாவையும் நச்சரித்துக் கொண்டே இருந்தேன், என் காதுகளுக்கு வைரத் தோடுகள் வேண்டுமென்று. உயர்வாக உள்ளவர்களைப் பற்றிப் பேசும் போது, 'அவளுக்கு என்ன குறைவு? வைரத் தோடு போட்டுக் கொண்டிருக்கிறாள்' என்று சொல்வதை நான் கேட்டிருந்தேன். அதனால் ஒரு பெண்ணுக்கு, முக்கியமாகக் கல்யாணத்துக்கு இருக்கும்

பெண்ணுக்கு — அத்தியாவசியமான யோக்கியதாம்சம் வைரத் தோடுதான் என்கிற அபிப்பிராயம் என் மனத்தில் ஏற்பட்டிருந்தது....''

சாரு சிரித்தாள். ''அப்புறம்?'' என்று தூண்டி விட்டாள்.

''அம்மாவுக்கும் எனக்கு வைரத்தோடு வாங்க விருப்பம்தான். ஆனால் அப்பாவுக்கு விருப்பம் இல்லை. 'கல்யாணத்துக் கென்று சேர்த்து வைத்திருக்கும் பணத்திலிருந்து எடுத்து வைரத் தோடு இப்போது வாங்கி விட்டால் எப்படி? அப்புறம் 'ஆடி, ஆறுமாசம் தீபாவளி என்று ஒன்றன் பின் ஒன்றாக வரப் போகின்றன. அப்போது செய்து கொண்டால் போகிறது' என்று சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் கடைசியில் அம்மாவும் என்னுடன் சேர்ந்து கொண்டு நச்சரிக்கவே அதற்கென்று பட்டணம் போய் ஒரு ஜதை வைரத் தோடுகளை வாங்கிக் கொண்டு வந்தார்—''

''இதோ போட்டுக் கொண்டிருக்கிறீர்களே, இதுதானே, பாட்டி?''

''இது வேறே. சொல்லுகிறதற்குள்ளே அவசரப்படுகிறாயே? வைரத் தோடு போட்டுக் கொண்டதும் எனக்குச் சந்தோஷம் தாங்க வில்லை. தோடு வந்தவுடனேயே என்னைப் பெண் பார்க்கவும் யாரோ வந்தார். இன்று வரப் போகிறார்கள் என்று வைத்துக் கொள். அன்று காலை தூக்கத்திலிருந்து எழுந்தேன். இந்தக் கால் மரத்துப் போனாற் போல் இருந்தது. எழுந்து நடக்கலாம் என்று பார்த்தால், கால் கீழே பாவாமல் துவண்டு துவண்டு போய் விட்டது. அன்றிலிருந்துதான் நான் இப்படி நொண்டியாகி விட்டேன்.''

''நிஜமாகவா பாட்டி?''

''ஆமாம்.''

''அப்புறம் அவர்கள் பெண் பார்க்க வந்தார்களா, பாட்டி?''



''வந்துவிட்டுத் திரும்பிப் போனார்கள் என்று வைத்துக் கொள்ளேன். அப்புறம் பார்க்காத வைத்தியம் இல்லை; செய்து கொள்ளாத பிரார்த்தனை இல்லை. என்ன பிரயோசனம்? அந்த வைரத்திலே தோஷம் என்று யார் யாரோ சொன்னார்கள். அதைக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுத்து விட்டு இந்தத் தோடுகளைப் பதிலுக்கு வாங்கிக்கொண்டு வந்தார் அப்பா. ஆனால் வைரமும் இன்னொன்றும் என்ன செய்யும்? நாம் கொடுத்து வைத்தது எவ்வளவோ அவ்வளவுதானே நமக்குக் கிடைக்கும்?'' என்று பெருமூச்செறிந்தாள் பாட்டி.

மீனுப் பாட்டியின் சோக சரிதையைக் கேட்டதும் சாருவுக்கு மனம் முறிந்து போய்விட்டது. உலகத்தில் பெண்களாகப் பிறந்துவிட்டாலே அவர்கள் கூடவே சோகமும் துக்கமும் துன்பமும் தோன்றி அவர்களை வாட்டி வதைக்கும் போலும்! ஐயோ பாவம்! மீனுப் பாட்டி அந்த இளவயதில் எத்தனை ஆகாசக் கோட்டைகள் கட்டி இருப்பாள்! அந்த வைரத்தோடு வாங்கிப் போட்டுக் கொண்டதும் அவள் மனம் எத்தனை எத்தனை இன்ப எண்ணங்களை எழுப்பி யிருக்கும்? அவையெல்லாம் அவளுக்கு இடிந்த மண் கோட்டையாக வல்லவா ஆகிவிட்டன....? அதைப் போலவே தன் வாழ்க்கையையும்.... சீச்சீ! என்ன தவறான எண்ணம்! இவ்வாறு தடம் திரும்பிச் சென்ற தன் எண்ண ஓட்டத்துக்கு அணைகோலினாள்.

சாரு வருத்தம் தோய்ந்த மனத்துடன் வீட்டுக்குத் திரும்பினாள். ''ஏன் அம்மா! மீனுப் பாட்டிக்குப் பெண் பார்க்க வந்த அன்றுதான் கால் நொண்டியாகப் போச்சாமே?'' என்று கேட்டாள் தன் தாயை.

''யார் சொன்னார்கள்?'' என்று கேட்டாள் அவள் தாயார்.

''பாட்டியேதான் சொன்னாள்.''

''அவள் கிடக்கிறாள் தூர்க்குணி! பிறவியிலேயே நொண்டி என்பது எல்லாருக்கும் தெரியும். நீ பெண் பார்க்க வந்தார்கள் என்று சொல்லி இருப்பாய். அதைக் கேட்டதும் பொறாமையும் வயிற்றெரிச்சலும் ஏற்பட்டிருக்கும். உன்னைப் பயமுறுத்துவதற்காக, தனக்குப் பார்க்க வந்த அன்றுதான் கால் நொண்டியாகி விட்டது என்று கதை கட்டிச் சொல்லி இருக்கிறாள், அவள் பொய்யும் அவளும்!'' என்றாள் அவள் தாயார்.

சாருவுக்கு இந்த மனப் பான்மை விளங்க வில்லை. 'இப்படியும் இருப்பார்களா?' என்று நினைத்து ஆச்சரியப் பட்டாள் அவள்.

தன் குறையை மறைத்துக் கொள்ள மீனுப் பாட்டி ஏதாவது காரணம் சொல்லித் திருப்திப்பட்டு வந்தாள். அந்தத் திருப்தியில் அவள் தன் குறையை மறந்து வந்தாள். மனக் குறை, உடல் குறை உள்ளவர்களுக்கு மற்றவர்கள் நல்வாழ்வு வாழ்ந்தால் அதை அவர்களால் பொறுத்துக் கொள்ள இயலாது. மற்றவர்களும் தங்களைப்போல் சிரமப்பட்டால்தான் அவர்கள்மனம் நிம்மதியடையும். இதற்கு மீனுப்பாட்டி விலக்கல்லவே?

அதன் பிறகு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளையும் சாரு வந்ததும் மீனுப் பாட்டி அவளைப் பார்த்து, ''சாரு! பெண் பார்த்து விட்டுப் போனார்களே, என்ன ஆயிற்று?'' என்று கேட்பாள்.

''ஒன்றும் தெரியவில்லை, பாட்டி! கடுதாசி ஒன்றும் வரவில்லை'' என்று அவள் கேட்கும் போதெல்லாம் பதில் கூறுவாள் சாரு. ஒரு வாரத்துக்குப் பின் ஒருதரம் பாட்டி இப்படிக் கேட்டபோது பதிலுக்குச் சாருவிடமிருந்து இதே பல்லவியை எதிர்பார்த்துக் கொண்டே தான் கேட்டாள். ஆனால் இன்றோ பாட்டிக்கு வேறு பதிலைத் தயாராக வைத்திருந்தாள் சாரு.

''இன்றைக்குத்தான் பாட்டி அவர்களிடமிருந்து கடிதம் வந்தது.''

''வந்ததா? என்ன பதில் வந்தது?''

''அவர்கள் பெண்பார்க்க வந்தபோது வரதட்சிணை ஐந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள், பாட்டி. அப்படியே கொடுப்பதாக அப்பா ஒப்புக் கொண்டார். இப்போது அவர்கள் கடிதத்தில், 'பெண்ணுக்குப் போட்டிருக்கும் நகைகள் போதாது. வைரத் தோடு போட வேண்டும்' என்று எழுதியிருக்கிறார்கள், பாட்டி!''

''அப்போ?'' என்று இழுத்தாள் மீனுப் பாட்டி.

''எப்படிப் பாட்டி எங்கப்பாவால் இப்பொழுது வைரத் தோடு வாங்கிப் போட முடியும்? கல்யாணத்துக்காக அப்பா இரண்டாயிரம் ரூபாய் கடன் வாங்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார். அதிலிருந்து வரதட்சிணை ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டால் பாக்கி இருப்பது கல்யாணச் செலவுக்கு வேண்டாமா? வைரத் தோடு என்றால் குறைந்தது ஆயிரம் ரூபாயாவது வேண்டுமே, பாட்டி?'' என்றாள் சாரு துயரத்துடன்.

''அப்படியானால் என்ன பண்ணப் போகிறார் உங்க அப்பா?''

''வைரத்தோடு போடுவதற்கு எங்களுக்குச் சக்தி இல்லை என்று எழுதிவிடப் போகிறார், பாட்டி!''

இந்தப் பதிலைக் கேட்டதும் மீனுப் பாட்டியின் மனதில் விவரிக்க முடியாத ஒரு திருப்தி ஏற்பட்டது.

சாருவைப் போல் தான் இருந்தபோது, வைரத்தோடு போட்டுக் கொண்டிருந்த போதே தன்னை மணந்து கொள்ள ஒருவரும் முன் வர வில்லை. கால் ஊனம் என்று எல்லோரும் ஒதுக்கி விட்டார்கள். அது தன் குற்றமா? இரண்டு வேளை சரியாகச் சாப்பிடக்கூட வழியில்லாத குடும்பத்தில் பிறந்த சாருவைக்கூடக் கல்யாணம் செய்துகொள்ளப் பிள்ளைகள் இசைய வில்லையா?—என்று அவள் மனத்தில் எண்ணங்கள் ஓடின. அப்பளத்தை எடுத்து டப்பாவில் வைத்துக் கொண்டிருந்த சாருவைப் பொறாமைக் கண்களுடன் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

அதன் பிறகும் அவள் சாருவைத் தினமும் விசாரிக்கத் தவறவில்லை. தன் தகப்பனுர் அவர்களுக்கு அவ்விதமே கடிதம் எழுதி விட்டதாகப் பாட்டியிடம் தெரிவித்தாள் சாரு.

''பதில் ஒன்றும் வரவில்லையா?'' என்று மேலும் விசாரிப்பாள் பாட்டி.

''இன்றுதான் பதில் வந்தது பாட்டி'' என்று ஒருதினம் தெரிவித்தாள் சாரு. அவள் முகம் ஒளி இழந்து காணப்பட்டது. கண்கள் கலங்கியிருந்தன.

''என்ன பதில் வந்தது?''

மீனுப் பாட்டி இவ்வாறு கேட்டதும் சாருவின் உள்ளத்தில் அமுங்கிக் கிடந்த துயரமெல்லாம் பொங்கிப் பிரவாகமெடுக்கத் தயாராகி விட்டது. அவள் கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது.

''என்ன எழுதியிருந்தது? சொல்லு!'' என்றுள் மீனுப்பாட்டி. விஷயத்தை அறிந்து கொள்வதிலுள்ள ஆர்வத்தில் அவள் இதயம் பானையாக இருந்தது.

''வைரத் தோடு போடா விட்டால் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று வந்து விட்டது, பாட்டி!''

மீனுப் பாட்டி நிமிர்ந்து உட்கார்ந்தாள். ''பின்னே என்ன? ஒரு வைரத்

வேலையைச் செய்து வயிற்றுப் பிழைப்பை நடத்துவாய்? படிப்பு ஓரளவுக்கு இருந்தாலாவது பள்ளிக்கூட உபாத்தியாயினி வேலையோ, அல்லது ஏதாவது குமாஸ்தா வேலையோ தேடிப் பார்க்கலாம். அதுகூட இப்பொழுது மிகவும் கஷ்டம். பெண்களெல்லாம் நிறையப் படித்துப் பெரிய பரீட்சைகளெல்லாம் தேறிப் பெரிய உத்தியோகங்களுக்கு ஆண்களுடன் போட்டி போடுகிருர்கள். காலம் இப்படி இருக்கும்போது நீ குடும்பத்தை விட்டு வெளியே போய் என்ன செய்வாய்? பிறந்ததிலிருந்து அப்பா அம்மாவையே சுற்றி வந்து கொண்டிருந்த உனக்கு வெளியூர் மனிதர்களோடு எப்படிப் பழக முடியும்? உலக விவகாரம் தெரியாத உனக்கு வீட்டை விட்டு வெளியேறிப் பிழைப்பது கஷ்டமென்று தோன்றியிருக்கிறது. நீ வெளியேறிவிட்டால் உன் பெயருக்குப் பயங்கரமாகக் களங்கம் கற்பித்து, உன்னைப் பற்றிக் கற்பனைக் கதைகள் ஜோடித்து உன் வருங்கால வாழ்க்கையே பாழாக்கி விடுவார்கள் .... அந்த விபரீத யோசனையை விட்டுவிடு'' என்றுள் பாட்டி.

இதைக் கேட்ட சாருவின்







மிருதங்கம் (கஞ்சிராவைப் பார்த்து):—
தம்பி! என்னமோ உன்னிடம்
நாலு காசு இருக்குதுன்னு
இப்படித் துள்ளாதே!












# ஒட்டாத உறவு

சாந்து விசிவிட்டுச் சென்ற கடிதத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள் மீனு. கடிதத்தில் ஓடிய கண்களின் கவனத்துக்குக் கூடத்துச் சம்பாஷணையில் லயித்திருந்த செவிப் புலன் அணை கட்டியது.

"எங்கிருந்து கடிதம் வந்திருக்கிறது? ஒரே மூச்சில் படித்துக் கொண்டிருக்கிறுளே?" என்று வினவினுள் பெரிய பெண் சியாமளா.

"அவள் தங்கைக்காரிதான் பக்கம் பக்கமாக வரிந்து தள்ளியிருப்பாள்." — இது சின்னவள் பத்மாவின் பதில்.

"என் கல்யாணத்துக்கு வந்து சேர். உன் பெண் கல்யாணத்தை அக்காமார்கள் நடத்திக் கொள்வார்கள் என்று எழுதியிருப்பாள்" என்றுன் பெரியவள்.

சம்பாஷணைத் திரை விலகியதும், அவளுடைய பார்வை மீண்டும் கடிதத்தில் ஓடியது.

அன்புள்ள அக்காவுக்கு,

நமஸ்காரம். இன்னும் முகூர்த்தத்துக்கு நாலே நாட்கள்தான் இருக்கின்றன. அம்மாவுக்கு நினைவு மாறி மாறி வருகிறது. கல்யாணம் வரை நல்லபடியாக இருக்க வேண்டுமே என்று யாவரும் கவலைப்படுகிறார்கள். அதனால் கல்யாணம் பொறுப்புகளையே வாசு மாமாதான் ஏற்றுக் கொண்டு, அவர் வீட்டில் வைத்து நடத்துகிறார். அம்மா இருந்தும் நான் கொடுத்து வைக்காதவள். மணப்பெண் என்ற மகிழ்ச்சி எனக்கில்லே. அங்கு உன் தாய் ஸ்தானத்தை நிறைநிறுத்த என்னைக் கைவிட்டுவிடாதே. உன் மூத்தாள் பெண் விவாகத்துக்கு இன்னும் ஒருவாரம் இருக்கிறதே. கட்டாயம் வந்து சேர்.

கமலி.

"சித்தி! தேங்காயை மாடி அறையில் போட்டுப் பூட்டச் சொல்லி விட்டேன்" என்று சாவியைக் கொடுத்தான் சீனு.

சாவியைப் பெற்றுக் கொண்டு கடிதத்தை அவனிடம் நீட்டினுள் மீனு. கடிதத்தை வாங்கி முன்னும் பின்னும் பார்த்து விட்டு, "கமலி போட்டிருக்கிறுளோ?" என்றுன் சீனு அலட்சியமாக. அதைப் பிரித்துக்கூடப் பார்க்காமல் அவன் வேகமாகப் போய் விட்டான்.

மீனுவின் மனம் துடித்தது. மனிதர்களிடம் எத்தனை துவேஷம் நிறைந்த அலட்சியம்! கொடுமைக்கென்றே படைக்கப்பட்டவர்க்கத்திலூடே புகுந்த மீனு பதினைந்து வருஷங்களை ஓட்டி விட்டாள். அந்த வீட்டின் இரவல் தாய் ஸ்தானத்தை இட்டு நிரப்ப வந்தவள்தான்! ஆனுலும், அதை ஊன்றச் செய்வதற்குள் அவள் அடைந்த அனுபவங்கள் பட்டுப்போனுலும் நினைவு மட்டும் பசுமையாக இருந்தது.

"மீனம்மா! பாகுக்குப் பதம் பார்த்துச் சொல்கிறீர்களா?" என்று சமையற்காரியின் குரல் கேட்டு அவள் உள்ளே சென்றுள்.

பெண்கள் வெள்ளிப் பாத்திரங்களைப் பெட்டியில் அடுக்கி வைத்துக் கொண்டிருந்தனர். கல்யாணப் பெண் வனஜா சகோதரிகளுடன் கலந்து கொள்ளாமல் பூஜைப் பாத்திரங்களைக் குழாயடியில் போட்டுத் தேய்த்துக் கொண்டிருந்தாள். எல்லோருக்கும் திருப்தியாக விவாகம் இடையூறின்றி இனிது முடிய வேண்டுமே என்ற கவலை ரேகை அவள் முகத்தில் காணப்பட்டது.

"வனஜா! இன்னும் ஒரு வாரத்துக்குக் கல்யாணப் பெண்ணுக வட்

கோமதி நாகராஜன்



"சனமாக இரு" என்று அவளை அன்புடன் கடிந்து எழுப்பி உள்ளே போகச் சொன்னாள் மீனு.

"ரொம்பக் கரிசனம். தாயாகத்தான் தாங்குகிறாள்" என்று கூறிக் கொடூரத்தைச் சிந்தினாள் பத்மா.

"போதுமே, ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத கதையைப் போல" என்ற சியாமளாவின் சொல்லம்பு மீனுவின் உள்ளத்தை விண்டு விரியச் செய்தது. மனப்பாரம் விசுவரூபம் எடுத்துக் கொண்டே வந்து பஞ்ச பூதங்களையும் நிறைத்த பொழுது, சரீரம் மடாரென்று பூமியில் சாய்ந்தது.

வனஜாவும் சமையற்காரியும் பதறியபடி ஓடி வந்து, அவளைக் கூடத்து அறையில் கொண்டு போய்ப் படுக்க வைத்தனர்.

உள்ளேயிருந்து அத்தைப் பாட்டி விரைந்து வந்தாள். மீனுவின் நிலையைக் கண்டு, "பெரியவர்கள் தோஷம் தான் கட்டையாகப் போட்டிருக்கிறது. பத்மா! உன் தாயாரை நினைத்துக் கொண்டு ஒரு ரூபாயை எடுத்து மஞ்சள் துணியில் சுற்றி வை" என்றாள்.

பத்மா ஒரு ரூபாயை எடுத்து மஞ்சள் துணியில் முடிந்தாள்.

அந்தப்பக்கம் வந்த சேது, "நான் டாக்டரை அழைத்து வரட்டுமா?" என்றான். அவன் ஒரு வெகுளி.

அத்தையும் பத்மாவும் அவனைப் பேசாமல் போகும்படி ஜாடை காட்டி அனுப்பினார்கள்.

முகத்தில் கொட்டிய தண்ணீரின் ஜிலுஜிலுப்பினால் தெளிந்த மீனு எழுந்து உட்கார்ந்தாள். சமையற்கார அம்மாளும் வனஜாவும்தான் அருகே நின்று கொண்டிருந்தனர். ஒரு டம்ளர் தண்ணீரை வாங்கிக் குடித்தாள். மறுபடியும் உணர்ச்சி வெள்ளம் இமைவட்டங்களிலே ஊற்றெடுத்துக் கண்களை நிறைத்தது.

அவர்களை வெளியே அனுப்பி விட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டாள் மீனு. மனம் கடந்த காலத்தை நோக்கி ஓடியது.

அம்மாவுடன் ராமாயண உபன்யாசம் கேட்டுவிட்டு வீடு திரும்பிய போது நடுக் கூடத்தில் தந்தையுடன் புதியவர் ஒருவரைக் கண்ட மீனு தலையைக் குனிந்தபடி உள்ளே வேகமாகப் போய் விட்டாள்.

நாலாபுறமும் சுகந்தத்தைப் பரப்பிய வாசனைத் திரவியங்களும், பளீரென்று துலங்கும் உடையும், தன்னென ஒளிர்ந்த மோதிரங்களும் அவர் வயதை நாற்பதுக்குத்தான் எடை போட்டன. முகத்தில் பாரம்பர்ய பணக்களை! அவரது விழுங்கும் கண்கள் அவளை உள்ளே விரட்டின.

அதற்குப் பிறகு காரியங்கள் துரித காலத்தில் முன்னேறின. மீனுவுக்குச் சிந்திக்கவும், முடிவு கூறவும் யாரும் அவகாசம் கொடுக்கவில்லை. சில நாட்களுக்குள் அவள் இளையாளாக அவர் கையைப் பிடித்தாள். தான் வகிக்கப் போகும் ஸ்தானத்தைப் பற்றிய பொறுப்பும், கவலையும் அவளுடைய சிந்தனையை நிறைத்தன.

வைகறையின் இருள் திரையைக் கிழித்துக் கொண்டு, மாட்டு வண்டி 'ஜல் ஜல்' என்று கிராமத்துக்குள் நுழைய மீனு புது உலகில் அடி எடுத்து வைத்தாள். வண்டியினின்று இறங்கியதும், முதன்முதலில் அவள் கண்ணில் தென்பட்டது, மடியை முட்டித் துன்புறுத்திப் பாலைச் சுவைத்துக் கொண்டிருந்த கன்றை, அன்புடன் நக்கி அணைத்துக் கொண்டிருந்த தாய்ப் பசுதான்! கன்றோடு கூடிய பசுவின் தோற்றம் அவளை மெய் சிலிர்க்கச் செய்தது. அந்த ஓர் இமை நொடியில் அவள் மனம் தாய்மை ஸ்தானத்துக்கு அடிமையாகி விட்டது.

உடம்பு அதிர நடந்து வந்து இரு பெண்கள் ஆரத்தி சுற்றிக் கொட்டி விட்டு உள்ளே போய் விட்டனர். மீனுவின் பிரமை தெளிவதற்குள் இரு பையன்கள் நிஜாரும் சட்டையுமாக ஜோடியாக வந்து நமஸ்கரித்தனர். கடைசிப் பெண் மீனுவைவிட நாலு வயது சிறியவள். இப்பொழுது தான் மணக்கலக்கம் தலை தூக்கியது. கணவரின் தோற்றமும், வயதும் இதுவரை அவளைப் பாதிக்கவில்லை. பாரதப் பண்பில் ஊறிய ரத்தத்தில், புலனடக்கமும், உள்ள நிறைவும்





உருவாகியிருந்தன. வரவேற்பிலிருந்த உஷ்ணமும், இளையாள் ஸ்தானத்தின் சூழ்நிலையும், முதன் முதலில் அவள் கண்களில் நீரை வரவழைத்தன.

அத்தைப் பாட்டியை விழுந்து நமஸ்கரித்தாள் மீனு. அவளது உதடுகளிடையே தெறித்த சொற்கள் ஆசிகளோ அல்லது வசவுகளோ மீனுவின் காதுவரை ஒலிக்கவில்லை.

பண உருவங் காட்டிப் பகட்டிய கணவன் செய்கையில் அரக்கனாக இருந்தான். தெருவில் செல்லும் பூக்காரனைக் கூப்பிட்டு இரண்டு பந்து மல்லிகைப் பூ வாங்குவார். அதை மீனு தன் தலையில் சூடி மகிழ்ந்தாள், உடனே அதைப் பறித்து முற்றத்தில் வீசி விடுவார். பீரோவில் ஜரிகைப் புடவைகள் தூங்கின. இவ்வாறு அவளுக்கு எத்தனையோ கசப்பு அனுபவங்கள்!

அத்தையின் அடுக்களை ராஜ்யத்திற்குள் செல்லவே மீனு நடுங்கினாள். அங்கே போனால் பாத்திரங்கள் பறக்க ஆரம்பித்து விடும்.

பெண்கள் இருவர் புக்ககம் சென்றனர். அதிலும் எவ்வளவோ சண்டை பூசல்கள். அத்தை தெரிந்தும், தெரியாமலும் வரிசைகளைப் பதுக்கி அனுப்பினாள். பாவம், மீனு வாய் மூடி மௌனியாக இருந்தாள்.

**வந்தவர்:**— என்ன ஸார்! இந்தப் புஷ்கோட்டுக்குத் தமாஷா வரி வேறு போட்டிருக்கீங்க?

**கடைக்காரர்:**—நீங்க இந்தப் புஷ்கோட்டைப் போட்டுக்கொண்டு வெளியே போனால் எத்தனையோ பேர் இதைத் தமாஷாகப் பார்த்துச் சிரிக்க மாட்டாங்களா? அதுக்குத்தான்!

கடைசியில் இந்த வாழ்வுக்கும் ஓர் முற்றுப் புள்ளி விழுந்தது. அவர் கண்ணை மூடி விட்டார். பூவும், மஞ்சளுமாக மீனு அனுபவித்த சுமங்கலி வாழ்வு சில வருஷச் சிறை அனுபவங்களே. கணவரை இழந்த நிலையில் அந்த நிழலைவிட்டு ஒதுங்க அவள் விரும்பவில்லை.

சின்னப் பெண் வனஜாவுக்கு ஏற்ற வரனைப்பார்த்து முடித்தான் சீனு. வந்திருந்த தமக்கைகள் இருவரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர். உழைப்பு மீனுவிடமும், அதிகாரம் அவர்களிடமும் இருந்தன.

இந்தச் சமயந்தான் அவள் தங்கை கமலிக்கும் விவாகம் நிச்சயமாகி, இந்த முகூர்த்தத்துக்கு இரண்டு நாட்கள் முன்னதாக நடப்பதாக இருந்தது. அவள் தாயாருக்கு வயிற்றில் ஆபரேஷன் ஆகி யமவாதனையில் இருந்தாள். தங்கையின் அழைப்பினால் மனம் நெகிழ்ந்திருந்தாலும், ஊராரின் ஏசல்களுக்குப் பயந்து வரமுடியாததைக் குறித்துக் கடிதம் எழுதித் தபாலில் சேர்த்தான் மீனு.

* * *

**வ**னஜாவின் கல்யாணம் விமரிசையாக நடந்தது. சம்பந்தி வீட்டார் "தாயில்லாத பெண். சித்தியின் மனம் எப்படியோ? பின்னும் செய்வார்களோ, மாட்டார்களோ?" என்று சீர்வரிசைகளைக் கேட்பதில் மிகவும் கண்டிப்பாக இருந்தனர்.

மீனுவின் இதயத்தைக் கீறிக்கொண்டு திருப்தி நிறைந்த பெருமூச்சு வெளி வந்தது. 'வெளி யுலகத்தாராவது அவளது உரிமையையும், ஸ்தானத்தையும் மதிக்கிறார்களே?' என்று அவள் தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டாள்.

"என்ன சம்பந்தி அம்மா, ஜவுளி இந்த ஊரிலா எடுத்தீர்கள்? இழை நெருக்கம் நன்றாகவே இல்லையே?" என்று ஜாடையாக இறக்கினாள் சம்பந்தி அம்மாள்.

"ஹூம். அதற்கென்ன? ஆறும் மாதம் தலை தீபாவளிக்கு நீங்களே பார்த்து எடுத்துக் கொள்ளுங்களேன்" என்றாள் மீனு.

"என்ன சம்பந்தி அம்மா! அவ்வப்பொழுது பாத்திரங்களோ சீர்வரிசைகளோ தாயாராக இருந்து பார்த்துச் செய்யுங்கள். உங்களுக்குத் தெரியாதா என்ன?" என்றாள் சம்பந்தி அம்மாள்.

வெம்மை படர்ந்த கண்களைக் கொட்டி இலேசாகத் தலையசைத்தாள் மீனு.

"அண்ணாவுக்குத் தங்கமான மனசு. அவன் வேண்டியதைப் பார்த்துத் தானாகவே செய்வான். ஒருத்தர் சொல்லித் தெரிய வேண்டுமென்பதில்லை அவனுக்கு" என்றாள் சியாமளா பொறுமையோடு.

இரவு உள்ளே வந்த வனஜாவிடம் பத்மா, "சித்திக்கு என்ன அகங்காரமோ தெரியவில்லை. அழுதழுது முகம் வீங்கிக் கிடக்கிறது. அடிக்கடி குழாயடியில் முகத்தைக் கழுவிக் கொள்கிறாள்" என்றாள்.

"மூன்று பெண்களுக்கும், நல்ல புருஷன் வாய்த்து விட்டானே என்ற பொருமல்தான்" என்றாள் சியாமளா ஆத்திரத்துடன்.

சம்பந்திகளை வழி அனுப்பிவிட்டு வந்த சீனு காமிரா அறையில் மீனு பெட்டியில் துணிகளை எடுத்து அடுக்கி வைத்துக்கொண்டிருப்பதைக் கண்டதும், "என்ன சித்தி! எங்கே பயணம்?" என்று வியப்புடன் கேட்டான்.

மீனு துயரத்தைப் பறைசாற்றும் கண்களை உயர்த்தி அவனைப் பார்த்தாள். "இதே ஒன்னரை மணி வண்டியில் என்னையும் ஏற்றிவிடு. நான் அப்படியே லால்குடியில் இறங்கிக் கொள்கிறேன்" என்றாள்.

"அப்படி என்ன அவசரம்?"

"இல்லை சீனு! நான் போய்த்தானாக வேண்டும்" என்றாள் மீனு. பெண்களின் கேலிப் பார்வை அவள் உறுதியை அசைக்கவில்லை.

"அவளுக்கென்ன? குஷாலாகப் போகட்டுமே. அங்கே தங்கையின் கழுத்தில் மூனு முடிச்சு ஏறியிருக்கிறது. போய்ப் பார்க்க வேண்டாமா? இங்குதான் இரவல் பொறுப்புகள் முடிந்ததே." அத்தையின் கொடுந் தொனி மீனுவைச் சுடவில்லை. வண்டி வந்ததும் பெட்டி படுக்கையுடன் ஏறி விட்டாள். அவளது இந்தப் பிடிவாதம் இது வரையில் யாரும் காணாதது.

**கா**ர்டின் விசிலைத் தொடர்ந்து பச்சை விளக்கு பேயாட்டம் ஆடியது. "கடைசியில் மாற்றாந் தாய் புத்தியைக் காட்டி விட்டாயே. கல்யாணச் சந்தடிகூட அடங்க வில்லை. வீட்டைப் போட்டு விட்டு இத்தனை அவசரமாகக் கிளம்பலாமா?" என்றான், ரயிலடிக்கு வந்திருந்த சீனு மிகுந்த கோபத்துடன்.

மீனு கைக்குள் வியர்வையில் நனைந்து கசங்கிக் கிடந்த காகிதச் சுருள் ஒன்றை அவனிடம் நீட்டினாள். நைந்து போன காகிதத்தில் இருந்த "அம்மா இறந்துவிட்டாள். புறப்பட்டு வரவும்.—'வாசுமாமா'" என்ற வாசகத்திலோடிய சீனுவின் கண்கள் முதல் நாளையத்தேதியைக் காணவும் குத்திட்டு நின்றன!

உடல் பதற அவன் நிமிர்ந்தான். மீனுவின் சோகம் நிறைந்த விழிகள் கண்ணீரில் நீந்தின. அந்த நிமிஷம் வரையில் அடக்கி வைத்திருந்த விம்மல்கள் வெடித்து வரத் துடித்தன. முகவிழி கூடக் கிடைக்காத தாயின் முகம் மீனுவின் அகக் கண்ணில் எழும்ப உள்ளக் குரலின் பிரலாபம் நெஞ்சை நிறைத்தது.

"நேற்றே தந்தி வந்து விட்டது. நான்தான் சுபமான வேளையில் இதைக் காட்டக்கூடாது என்று.." மீனுவின் தொண்டையை விக்கல் அடைத்து விட்டது.

ஒன்று.. இரண்டு.. பெட்டிகள் நகர்ந்தன. சீனுவும், சேதுவும் ஏக காலத்தில் 'சித்தி!' என்று கூவினர். அதில் ஒலித்த அன்பை அவள் உணரு முன்பே, வண்டியின் கூவல் காதை அடைத்தது. ஒட்டாத உறவை அறிவுறுத்துவது போல் அவர்களது இடைவெளி தூரத்தை அதிகரித்தபடி ரயில் வண்டி விரைந்து சென்றது!


தீபாவளி வாழ்த்துக்கள்
EWI
போனிக்ஸ்
டிலக்ஸ் ஜனதா
இஞ்ஜினீயரிங் ஒர்க்ஸ் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட், கல்கத்தா-4
தென்னிந்தியாவுக்குப்
எஸ். அண்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட், மதராஸ் - கிளை: மதுரை

# தீபம் சொன்ன கதை!

ஆலயத்தில் நவராத்திரிப் பண்டிகை ஆறாம் நாள். தேவியை அலங்காரம் செய்து கொலுமண்டபத்தில் வைத்திருந்தார்கள். கையில் சாமரத்துடன் வாணியும், ரமாவும் வீற்றிருந்தார்கள். தாயின் தனிக் கருணை முகத்தில் வீசியது. பளபளத்த திருமுகத்தில் உதடுகளிடையே அரும்பும் புன்னகை ஜீவஜோதியாய்த் திகழ்ந்தது. ஆண்களும் பெண்களும், குழந்தைகளும், கூட்டம் கூட்டமாக அலங்கார மண்டபத்தைச் சுற்றிக் கொண்டு வந்தார்கள். விளக்குகள் ஜகஜ்ஜோதியாய் மின்னின. கல்லுக்குள் இருக்கும் தேரைக்கும் படியளக்கும் தேவி அன்று பரமசிவனுக்குப் பிக்ஷை இடும் அலங்காரம். அன்ன பூரணியின் அழகிய கோலம். மண்டப அலங்காரத்தைப் பார்ப்பவர்களும், தேவியிடம் பிரார்த்தனை செய்கிறவர்களும் கூட்டத்தோடுகூட்டமாக அர்த்தமின்றிப் போகிறவர்களும் நிறைந்திருந்தார்கள்.

பிராகார மண்டபத்தில் கீழ்மங்கலம் சகோதரர்கள் நாதசுரத்தைப் பொழிந்து கொண்டிருந்தார்கள். வெட்ட வெளித் தரையில் ஆண்களும் பெண்களுமாக ஒரே கூட்டம். குழந்தைகள் குதூகலத்துடன் மண் வீடு கட்டி விளையாடி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

வெளியே இருக்கும் கும்பலுக்கு மேல் சன்னிதியில் அதிகக் கூட்டம். தேவியின் விக்கிரகம் கொள்ளாமல் மாலைகளும், பூக்களும் நிறைந்திருந்தன. தன்னுடைய பெரும்பான்மையான மக்களைப் பார்க்கும் தாய் பொங்கிப் பூரித்து நின்றாள். அர்ச்சகர்கள் வாய் ஓயாமல் அர்ச்சனை செய்தவண்ணமாயிருந்தார்கள். தேவியின் சன்னிதியிலிருந்து ஒவ்வொரு அர்ச்சனை முடிந்து ஒவ்வொரு தடவை வெளியில் வரும் போதும் நூற்றுக்கணக்கான கைகள் குங்குமப் பிரசாதத்துக்குக் கையை நீட்டின.

திடீரென்று பழம், வெற்றிலை, பாக்கு முதலிய அர்ச்சனைப் பொருள்கள் அடங்கிய மூங்கில் தட்டுகள் ஒன்றை ஒன்று போட்டி போட்டுக் கொண்டு அந்தரத்தில் நின்றன.

தினந் தவறாமல் கால் தேய நடந்து கண் குளிரத் தரிசித்து, வாயாரத் தேவியைத் தோத்திரம் செய்யும் சிவகுமாரன் அன்று தவறுவானா? அந்தக் கோவிலில் அவனுக்குத் தனிச் சலுகை. பல நாட்கள் அவன் அம்மன் சன்னிதியிலேயே படுத்துத் தூங்கி விடுவான். வாழ்க்கையில் ஒன்றிக் கட்டையாக இருக்கும் அவனுக்கு வீட்டுப் பற்றுதல் இல்லை. மனைவி இல்லை, வேறு மக்கள் இல்லை. அம்மனுக்கு, மலர் மாலை கட்டித் தரும் கைங்கரியம் செய்வதைவிட அவனுக்கு உலகில் ஒன்றுமே கிடையாது.

இரவு பதினொரு மணி வரையில் நாகஸ்வரக் கச்சேரி கேட்டுக் கொண்டிருந்தான். உற்சவ மண்டபத்திலிருந்து தேவியை கர்ப்பகிருகத்துக்கு எடுத்துக் கொண்டு வரும் போது மல்லாரி ராகம் வாசித்தார்கள். அதில்தான் என்ன ருசி! அழகையும், கலையையும் எல்லாரும் அனுபவிக்கிறார்களா? சிவகுமாரன் கொடுத்து வைத்தவன். லோகமாதாவின் புஷ்பத் தொண்டுக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டான். வெகு நேரம் ஆகி விட்டதால் அவன் தன்னை அறியாமல் அயர்ந்து படுத்து விட்டான். தூக்கம் கண்ணைச் சுற்றியது.

நடுவில் இருக்கும் பெரிய கிளைவிளக்கு நகர்ந்தது. ஓரத்தில் இருக்கும் விளக்கு நாச்சியார் இரண்டும் நடு விளக்கிடம் வந்து உட்கார்ந்தன. உடனே இரண்டு பக்கமும் தொங்கும் சரவிளக்குகள் சரசரவென்று இறங்கி நடுவில் வந்தன. அடுத்தபடியாகத் தோரண விளக்குகளும் இறங்கின. கர்ப்பகிருகத்தில் அம்பாளுக்கு அருகில் தொங்கும் தூண்டா விளக்கும் மெதுவாக வந்து கூட்டத்தில் கலந்து கொண்டது. கோடியிலுள்ள குத்துவிளக்குகள் அசைந்து அசைந்து வந்து இவைகளுடன் கூடின.



வசுமதி ராமசாமி

“இன்று பக்கிரிசாமியின் நாயன இசை எப்படித்தான் இருந்தது. என் மேல் யாரோ விழுது நெய்யை விட்டிருந்தார்கள். அவன் தோடி ராகம் வாசிக்கும் போது அந்த நெய் தானாக உருகி விட்டது!” என்றது கிளைவிளக்கு.

“ஆமாம், அக்கா! நானும் உருகி விட்டேன். அவன் வாசிப்பு இதயத்தையே பிழிந்து வடித்த மாதிரி இருந்ததல்லவா?” என்றது விளக்கு நாச்சியார்.

“ஆமாம், போன வருஷம் வயிற்று வலியோடு ரொம்பப் படுத்துக் கொண்டிருந்தானாம். வருஷா வருஷம் நவராத்திரி உற்சவத்துக்கு இங்கே வந்து வாசிப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டானாம். வயிற்றுவலி போய் விட்டதாம்.” இது சரவிளக்கின் குரல்.

“தேவியின் கருணைக்கு அளவேது? சில நாட்களாக ஒரு பெண் தினம் கோவிலுக்கு வருகிறாளே தெரியுமா?” என்றது தூண்டாவிளக்கு.

“ஆகா, தெரியுமே! இவ்வளவு நாட்களாக அவள் வரவில்லையோ, அல்லது நான்தான் கவனிக்கவில்லையோ, அந்தப் பெண்ணுக்கு என்ன குறை அக்கா?” என்று கேட்டது குத்துவிளக்கு.

“குறையென்ன? நிறையாக இருந்தால் கோவிலுக்கு வரக் கூடாதா? நன்றாயிருக்கிறதே, நீ சொல்வது!” என்றது கிளைவிளக்கு. அதன் பெரிய சரீரத்துக்கு ஏற்றவண்ணம் பெரும் போக்கு.

“இங்கே வெள்ளிக்கிழமை தரிசனத்துக்காக நூற்றுக்கணக்கானவர்கள் வருகிறார்கள். உற்சவ காலத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் ஆலயத்துக்கு வந்து வழிபடுகிறார்கள். அதற்காக அவர்களுக்கெல்லாம் மனக் குறை இருக்கிறதென்று அர்த்தமா?” என்று பொதுவாகப் பேசியது ஸ்தம்ப விளக்கு.

“அக்கா, என்ன இருந்தாலும் நிறையும் சிலர் வருகிறார்களல்லவா? அவர்கள் குறையும் நிறையும் உனக்குத்தான் தெரியும். நீதானே தேவியின் அருகில் இருக்கிறாய்!” என்றது அகண்ட தீபம்.

உடனே தூண்டா விளக்குக்கு உச்சி குளிர்ந்து விட்டது. இலேசாகத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு தனக்குத் தெரிந்ததைச் சொல்லுவதற்கு ஆரம்பித்து விட்டது:—

மாநிறமாய், நல்ல களை சொட்டும் முகத்துடன் ஒரு பெண் வருகிறாளே, அவளுக்கு அம்பாள் அனுக்கிரஹம் செய்துவிட்டாள். அந்தப் பெண்ணுக்குத் தினம் ஒரு தடவை இந்தக் கோவிலுக்கு வராவிட்டால் தூக்கம் வராது. நான் சொல்வது, பதினைந்து வருஷங்களுக்கு முன் நடந்த விஷயம். அவளுக்குக் கல்யாணம் ஆனதும், அவளுடைய கணவன் யுத்த சைன்யத்தில் வேலைக்குப் போய் விட்டான். இந்தப் பெண் அவனுடன் குடித்தனம் செய்யப் போகும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். யுத்தம் நடக்கும் இடத்துக்கு அவன் அனுப்பப்பட்டபோது இந்தப் பெண் தனித்துப் போய் விட்டாள். திரும்பி வருவானோ, வரமாட்டானோ என்று குடும்பத்தார் கவலைப் பட்டார்கள். தினம் பவளமல்லிகைப் பூ மாலையை அம்பாளுக்குச் சாத்துவாள். மனமுருகிப் பிரார்த்திப்பாள். ஒருநாள், சாத்தின மாலை கீழே விழுந்து விட்டது. பின்னால் உள்ள சாளரத்தின் வழியாக ஒரு சுழிக் காற்று என் ஒளியையும் அணைத்து விட்டது. அம்மன் முகம் சிறுத்தது. எனக்குப் பரிதாபமாக இருந்தது. அந்தப் பெண் அழுது அழுது விம்மினாள். அப்பொழுது அபிஷேகம் செய்ய வந்தவர்கள் என்னை ஏற்றி வைத்தார்கள்.

பிறகு ஒரு வாரம் அந்தப் பெண் ஆலயத்துக்கு வரவேயில்லை. நான் மனத்துக்குள் மறுகித் தவித்தேன். ஒரு வாரத்துக்குப் பின் மறுபடியும் வந்தாள். ஈரத் தலையை முடித்து, தலையில் பூவைச் சூட்டிக் கொண்டு வருவதைப் பார்த்ததும் எனக்கு மிகவும் சந்தோஷமாய் விட்டது. ஒளி வீசிக் கொண்டிருந்த நான் அவளை வரவேற்பதுபோல் அழகாக ஒரு தடவை ஆடி நிலைத்தேன். அந்தப் பெண் சந்துஷ்டியுடன் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். ‘அம்பிகே! போன வெள்ளிக் கிழமை அவருடைய உடைகளும் உடைமைகளும் வந்து விட்டன. அவர் இருக்கிற இடமும் தெரியவில்லையென்ற செய்தி வந்ததும் துடித்துப் போனேன். உன்னையும் திட்டினேன். நேற்று வரையில் எங்கள் வீடு பட்டபாட்டைச் சொல்லவும் வேணுமா? அச்செய்தி

என் மனத்தைக் குறுகி, முறுக்கிப் பிழிந்தது. காரிருளில் ஒரு மின்னல்போன்ற நல்ல செய்தி நேற்று வந்தது. உன் கருணை தானம்மா. அவர் உயிருடன் இருப்பதாகத் தகவல் தெரிந்தது. உன் சக்தியே! என்னிடம் அவரைக் கொண்டு சேர்ப்பது உன்பாரம்!'' என்று அவள் வாய் விட்டு சொன்னாள். நான் பொறிகலே [illegible] நிர்க்கக் காத்திருந்தேன். ஆனாலும் தாயினுடைய சம்மதமின்றிச் செய்துவிட முடியுமா? அம்பாளுடைய திரு முகத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தேன். தேவியின் உதடுகளில் புன்னகை அரும்பியது. கண்களில் கருணை நிறைந்தது. அதற்குத் தானே நானும் காத்திருந்தேன்? பரபர வென்று உதிர்த்துத் தள்ளினேன். அந்தப் பெண்ணுக்கு அம்பாளிடம் இணையற்ற பக்தி!''

''ஏன் அக்கா, குன்னமாக ஒரு பெண் தினம் சுற்றுகிறாளே! அவளுக்கு என்ன குறையோ? சில சமயம் அப்பிரதக்ஷணமாகக் கூடச் சுற்றுகிறாள்!'' என்று கூறியது சின்ன விளக்கு.

''அதை ஏன் கேட்கிறாய்? வைத்தியக்காரப் பெண்தான் அவள். முன்பு ஏழையாக இருந்தாள். தேவி வயிற்றுக்கு மட்டும் படி அளந்தாள். ஆசை விடுகிறதா? ஆவல் அடங்குகிறதா? அந்தப் பெண் பல மண்டலங்களாகப் பிரதக்ஷணம் செய்தாள். பிராகாரம் முழுவதும் நவம் நவமாகச் சித்திரக் கோலங்கள் போடுவாள். அவள் கணவனுக்கு நூற்றைம்பது ரூபாய் சம்பளம். 'அது போதவில்லை, நிறைய ஐச்வர்யத்தைக் கொடு'' என்று முறையிடுவாள். அம்பாளிடம் அவளுக்கு இருந்த பக்தி சொல்லிமுடியாது. இங்கே கோவிலுக்கு வரும்வரையில் அதே நினைவு. வீட்டுக்குப் போன பிறகு கோவிலைப்பற்றிய சிந்தனை. அதனால் அம்மன் சில நாள் அவள் வீடு வரையில் சென்றுவிடுவாள். அப்பொழுதெல்லாம் வெறும் சிலையைப் பார்த்துக் கொண்டு நான் நிற்பேன். அந்தப் பெண்ணின் பிரார்த்தனைக்கு அம்மை இறங்கி விட்டாள்.

''நூற்றைம்பது ரூபாயில் இருந்த அவள் கணவனின் வாழ்க்கையை மாற்றுவதற்கு அம்பாள் கண் திறந்தாள். அவனும் கெட்டிக்காரன்; உழைப்பாளி. யார் யார் எதை விரும்புகிறார்களோ அதைக் கொடுப்பதுதானே அம்பாளின் செயலும். சோம்பேறிக்குப் படுக்கை விரித்துக் கொடுப்பாள்; திருடனுக்கும் அவள் துணை போவாள்; நன்றாக உழைத்து முன்னுக்கு வர விரும்புகிறவர்களுக்கும் வேண்டிய வழி வகைகளைச் செய்து கொடுப்பாள். அதுபோல அவள் கணவன் நூற்றைம்பது ரூபாய் வேலையிலிருந்து முந்நூறு ரூபாய் வேலைக்குப் போனான். சில நாட்கள் கழித்து அவன் வேலை மேலும் உயர்ந்தது. அவன் இப்பொழுது மானேஜர் பதவிக்கே உயர்ந்து விட்டான். மானேஜர் பதவிக்கு உயர்ந்ததைக் கேட்டதும் அவன் மனைவி மகிழ்ந்து போனாள். அன்று இரவு அம்மனுக்கு விசேஷ பூஜைகள் நடப்பதற்கெல்லாம் ஏற்பாடு செய்தாள். அவள் மனத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சி முகத்தில் நன்றாகத் தெரிந்தது. அவள் சொன்ன ஒவ்வொரு சொல்லிலும் தெரிந்தது. அவளுடைய சொற்களைக் கேட்கும்போதெல்லாம் தேவியின் முகமும் அன்றலர்ந்த தாமரை போல மலரும். அதைப்பார்த்து நானும் சற்றுச் சுடர் விட்டுப் பிரகாசிப்பேன்.

''காலம் சென்று கொண்டிருந்தது. அவன் மானேஜர் பதவியில் மாதம் இரண்டாயிரம் ரூபாய் சம்பாதிப்பதில் திருப்தி கொள்ளவில்லை. இன்னும் அதிகமாகச் சம்பாதிக்க வேண்டும், தனக்குக் கீழே நூற்றுக்கணக்கானவர்கள் வேலை செய்ய வேண்டும் என்று விரும்பினான். அம்பாள் கண் திறந்து கருணை காட்டிக் கொண்டிருக்கும்போது அவனுடைய எண்ணங்கள் மேலே மேலே போய்க் கொண்டிருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கப் போகிறது. அவன் மானேஜர் வேலையை விட்டான். தன்னந் தனியாகவே தொழில் செய்ய ஆரம்பித்தான். அவன் தொழிலும் வளர்ந்தது. லாபமும் பெருகியது. தன்னிடம் வேலை செய்பவர்களுக்கெல்லாம் தாராளமாக வாரி வாரிக் கொடுத்துக் கொண்டிருந்தான். ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிக்கிறான். இரண்டு கார், பங்களா, வேலையாட்கள் ஆகிய சகலவித சௌகரியங்களும் அவனுக்கு இருக்கின்றன.''

''இதென்ன அக்கா! அதிசயமாக இருக்கிறதே! தேவி அவள் கேட்ட வரத்தைக் கொடுத்திருக்கிறாள். இன்னும் ஏன் அந்தப் பெண்ணுக்கு வருத்தம்? என்ன மானிடப் பிறவியோ! திருப்தியே இல்லையே?'' என்று தோளில் தலையை இடித்துக் கொண்டு ஏளனம் செய்தது குத்து விளக்கு.

''மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பாதிக்கும் போது கணவனும், மனைவியும் இணைபிரியாமல் இருந்தார்கள். சின்ன அறையில் குடி இருந்தாலும் அவனுடைய அன்பு இதயத்துக்கு அரசியாக இருந்தாள். இவள் கோவிலுக்குப் போய் வரும் வரையில் அவன் காத்திருப்பான். சாப்பாட்டைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இரண்டு பேருமாகப் பரிமாறிக் கொள்வார்கள். கிழிந்த கோட்டைப் போட்டுக் கொண்டு அவன் ஆபீஸுக்குக் கிளம்புவான். வாசல் வரை போய்ப் பிரியா விடை கொடுத்து அனுப்புவாள். தினந்தோறும் மாலையில் வாங்கி வரும் பூவை ஆசையாக அவளிடம் கொடுப்பான். அதைப் பெருமையாகச் சூட்டிக் கொள்வாள் அவள். அவர்கள் ஆனந்தத்துக்குக் கொஞ்சம் தடையாக இருந்தது பணம்தான்!''

''பணம் தடையாக இல்லை. அவர்கள் அப்படி நினைத்துக் கொண்டு ஏமாறுகிறார்கள் என்று சொல்லு'' என்று திருத்தியது, ஓரமாக ஞானி போல் இருந்த திருவிளக்கு.

தூண்டா விளக்கு தொடர்ந்தது: ''என்னமோ, இன்று அந்தப் பெண் மனம் படாதபாடு படுகிறது. இவள் கோரிக்கைப்படி அவன் பணக்காரனாகத்தான் இருக்கிறான். அவளும் பெரிய பங்களாவின் அரசியாக இருக்கிறாள்; ஆனால் அவனுடைய இதயத்தின் அரசியாக இல்லை. அதை விட்டு விரட்டப்பட்டிருக்கிறாள். தினமும் ஒரு பட்டுப் புடவையும் நிறைய நிறைய நகைகளும் அணிந்த வண்ணமாகத்தான் இருந்தாள். கணவனின் அன்பு என்ற ஆபரணமின்றிச் செயற்கை ஆபரணங்கள் தனக்குச் சோபிதத்தைக் கொடுக்கவில்லையென அறிந்து



ஒவ்வொன்றாகக் கழற்றி விட்டாள். அவன் செல்வச் செருக்கில் மாறி விட்டான். அவனுக்கு வலை பின்னவும் தாளம் தட்டவும் ஆட்கள் வந்து விட்டார்கள். மனைவியுடன் பேச அவகாசமின்றி வேலைத் தொந்தரவு. எளிமையாக இருக்க முடியாமல் படாடோபத் தோற்றம். இரவு வெகுநேரம் சென்று வீட்டுக்கு வருகிறான். அதன் விளைவு விபரீதம். அந்தப் பெண் அழுது சாகசம் செய்கிறாள். செல்வம் மிகுந்த அவன் அழுமூஞ்சியைப் பார்க்க வீட்டுக்கு வரப் பிடிக்க வில்லையெனக் கத்துகிறான். பயன் ஊடல், பூசல், சண்டை மனஸ்தாபம்! இப்படியாக அவர்களுக்குள் சண்டை முற்றிப் பகைமை வரையில் வளர்ந்து விட்டது.

''இந்தக் காலத்துப் புருஷர்களே அதிசயமானவர்களாக இருக்கிறார்கள். வேலையில் நிறைய ஓய்வு இருக்கும்போது அவர்கள் மனைவியை வளைய வளைய வருவார்கள். வேலை அதிகமாகி அதற்கு ஏற்றபடி அவர்களுக்கு நேரமும் இல்லாமல் தவிக்கும்போது எப்படி மனைவியிடம் கொஞ்சிக் குலாவிக் கொண்டு இருக்க முடியும்? இவள்தானே நிறையப் பணம் வேண்டும் செல்வந்தர்களாக வாழ வேண்டும் என்று விரும்பினாள். நிறையச் செல்வம் வேண்டும் என்றால் சில விஷயங்களைத் தியாகம் செய்யத்தான் வேண்டும். 'சிறுகக் கட்டிப் பெருக வாழவேணும்' என்று சொல்லுவார்கள். குறைந்த வருவாயில் மனம் நிறைந்த வாழ்வு வாழக் கற்றுக் கொள்ளவேணும்'' என்றது திருவிளக்கு.

''இந்த வேதாந்தம் எல்லாம் பேசி என்ன பயன்? செல்வமும் வேண்டும், கணவனின் அன்பும் வேண்டும் என்று அவள் தவித்தாள். அது நிறைவேறவில்லை. அத்துடன் அடிக்கடி மனக்கசப்பும், சச்சரவும் வேறு அவளைப் பாடாய்ப் படுத்தி வருகிறது'' என்று அனுதாபப் பட்டது சரவிளக்கு.

''ஐயோ, பாவம்! ஒரு குடும்பப் பெண்ணுக்கு வேண்டியதெல்லாம் கணவனின் அன்புதானே? கணவன் மனம் மாறி, எப்போதும் போல் தன்னிடம் அன்பாக இருக்க வேண்டும் என்று தினம் கோவிலுக்கு வருகிறாளா?'' என்றது குட்டி விளக்கு.

''அப்படி வேண்டினாலும் பாதகம் இல்லையே! செல்வமும் செல்வாக்கும் தனக்கு வேண்டாம் என்று வேண்டுகிறாள். அவள் கணவனின் அன்பைப்





பெறுவதற்குத் தடையாயிருப்பது அளவுக்கு மீறிக் கொழிக்கும் குபேர சம்பத்துத்தான். அன்று வறுமையில் உழன்று வாடிய போது, அவளுக்கும் அவள் கணவனுக்கும் செல்வமாகக் கருதி மகிழுவதற்குப் பரஸ்பரம் இருவருடைய உள்ளங்களிலும் மலர்ந்திருந்த காதலைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆகையினால், அந்தக் காலத்திலே ஒருவரையொருவர் காணும்போதெல்லாம் அளவு கடந்த அன்பு உணர்ச்சியில் கட்டுண்டு உள்ள நிறைவோடு இருந்தார்கள். இப்போது இருவருக்கும் இடையில் செல்வம் தடையாக நின்று உள்ள நிறைவைப் போக்கி விட்டது. அவள் கணவன் சதா காலமும் 'பணம், பணம்' என்று ஜபித்துக் கொண்டு மேலும் மேலும் செல்வத்தைத் திரட்டுவதிலேயே தன் முழு நோக்குடன் முனைந்தான்.

## அந்தரத்திலே!......



பணத்தினுடைய பயங்கரச் சக்தியே அதுதான். அது வந்து சேரச் சேர உள்ளத்தில் மேலும் பொருளீட்ட வேண்டும் என்னும் அசுரவெறி விசுவரூபமெடுத்து, மனித இதயத்தில் இயல்பாகச் சுரக்கும் அன்பு, கருணை முதலிய தெய்விக குணங்களையெல்லாம் செயலற்றவையாக்கி விடும். அதை இப்பொழுது பிரத்தியட்சமாக அவன் தன்னுடைய வாழ்க்கையிலேயே அநுபவிக்கிற படியினால், முன்பு கோரிப்பெற்ற பாக்கியங்கள் எல்லாம் போக வேண்டுமென்று அப்பிரதக்ஷிணமாகச் சுற்றுகிறாள்.''

''இப்பொழுது அவள் வேண்டிக் கொள்வதில் என்ன பயன்? இந்த ஞானமும், விவேகமும் தேவியைப் பிரார்த்தனை செய்து லக்ஷ்மி கடாட்சத்தைப் பெற்றபோது எங்கே போயிருந்தன? தேவியிடம் சுக வாழ்க்கை கோரிப் பெற்றபோதே முன் யோசனையுடன் 'செல்வத்தை மட்டும் கொடு. செருக்கைக் கொடுத்து விடாதே' என்று முந்தியே பிரார்த்தனை செய்திருக்க வேண்டும்'' என்றது விளக்கு நாச்சியார் மிகவும் அமைதியாக.

''அது எப்படி முன்னதாகக் கேட்க முடியும்? மனிதர்களுடைய இயல்பைச் சிறிதும் புரிந்து கொள்ளாமல் பேசுகிறாயே! மனிதனுக்கு மாத்திரம் நீ சொல்லுவது போல், முன் யோசனையும், நன்மை தீமைகளைப் பகுத்துணரும் திறமையும் இருந்து விட்டால், அவன் என்றைக்கோ அமரனாகி விடுப்பானே! பாமரர்கள் எப்பொழுதும் தங்கள் குறையைச் சொல்லித்தான் முறையிடுவார்கள். நல்லதோடு கெட்டதும் ஊடுருவிக் கொண்டு வருமென அவர்கள் கண்டார்களா?'' என்று கூறியது சர விளக்கு.

''அதென்னவோ இந்த அசட்டுப் பெண் 'எனக்குத் தேவையானதைக் கொடு' என்று கேட்டுப் பாரத்தை தேவியிடம் போட்டிருக்கலாம்'' என்று பெரிய மேதாவி போல் சொல்லியது குத்து விளக்கு.

மறுபடியும் தூண்டா விளக்கு கதையைத் தொடர்ந்தது:

''அம்பாள் இந்தப் பெண்ணின் மனப் பக்குவத்துக்காகக் காத்திருக்கிறாள். ஆனால் அந்தப் பெண்ணுக்கு இன்னமும் மனம் மாறியதாகத் தெரியவில்லை. அவளுக்கு அம்பாள் பேரிலேயே கோபம். அதனால்தான் அப்பிரதட்சணமாகப் பிராகாரத்தைச் சுற்றி வருகிறாள். கோபத்தில் அந்தப் பெண்ணுக்கு நியாய அநியாயம் கூடத் தெரியவில்லை. மனத்தில் கெட்ட எண்ணங்களையே வைத்துக் கொண்டிருப்பதால் அது பூதாகாரமாக வளர்ந்து அவளை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பேதைப் பெண் தன்னுடைய கெட்ட எண்ணங்களுக்கே அடிமையாகி விட்டாள். அதிலிருந்து அவள் விடுபட வேண்டும். இந்த வெறுப்பை வென்று வாழ அன்பு செய்ய வேண்டும். கெடுதலை ஒழிக்க நல்லதைச் செய்ய வேண்டும், பகைமையை ஒழித்துக்கட்டச் சிநேகத்தை விருத்தி செய்ய வேண்டும். இதையெல்லாம் இந்தப் பெண் உணரும் நாள் வரும்.''

''அப்படிச் செய்யவும் தேவியின் அருள்தானே வேண்டும்!'' என்று கவலைப் பட்டது தோரண விளக்கு.

''ஆமாம்! அவள் அருளால்தான் அவளை வணங்கும் வழியை அறிய முடியும்'' என்றது தூண்டா விளக்கு.

* * *

கீழ்வானம் வெளுத்துவரத் தொடங்கியது. புள்ளினங்கள் தங்கள் தீங்குரலை உயர்த்தி இன்னிசை பாடின. அந்த இன்னிசையை முற்றிலும் ஆமோதிப்பது போல் மந்தமாருதம் மெல்லென வீசியது. உழவர்களும் உழத்தியர்களும் நாட்டின் செழிச் செல்வம் உயரத் தங்கள் உழு படைகளுடன் வயல்களை நோக்கிச் சுறுசுறுப்பாகச் சென்றனர்.

எங்கேயோ காற்றில் பூபாள ராகம் மிதந்து கொண்டு வந்தது. தட தட வென்று கதவுகள் திறக்கும் ஓசையும் வெண்கல மணிச் சத்தமும் கேட்டன. சிவகுமாரன் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டான். அவனுக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. இரவு தேவியின் சன்னிதானத்தில்தான் தூங்கினது நினைவு வந்தது. இவ்வளவு நேரம் தீபங்கள் பேசின தெல்லாம் கனவா? எத்தகைய உயர்வான கருத்துப் பொதிந்த கதையை நாம் கனவில் கண்டோம். தேவியின் சன்னிதியில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் தீபங்களெல்லாம் என்ன சுவாரஸ்யமாகப் பேசின! அவைகள் பேசின பேச்சை நினைத்தால் இன்னும் மெய் சிலிர்க்கிறதே! மனித வாழ்வின் உயர்ந்த நிலையையும், மனித இனத்தின் ஆசாபாசங்களையும் பிரதிபலிக்கும் இந்தக் கனவு என்றென்றும் மறக்க முடியாதது என்பதில் ஐயமில்லை.

குருக்கள், ''நேற்று வந்த அபாரக் கூட்டம் விளக்குகளை இப்படித் தாறுமாறுகத் தள்ளி விட்டிருக்கின்றனர்!'' என்று சொல்லிக் கொண்டு வந்தார். ஆள்கள் அவைகளை யெல்லாம் அது அது இருக்க வேண்டிய இடத்தில் ஒழுங்கு படுத்தி வைத்தார்கள்.

சிவகுமாரன் கண்ணைக் கசக்கிக் கொண்டு நான்கு பக்கமும் பார்த்தான். பரமசிவனுக்குப் பிச்சையிட்ட அன்னபூரணி, சங்கரருக்கு ஞானப் பிச்சை இட்ட தாய், மந்தகாஸத்துடன் வீற்றிருந்தாள். ''அம்மனுக்கு அன்னபூரணி அலங்காரம் நேற்றுப் பிரமாதமாக அமைந்தது'' என்றார் குருக்கள்.

''காசி க்ஷேத்திரத்தில் தீபாவளி அன்று சுவர்ண அன்னபூரணியைத் தரிசிக்கவேணும். ஜன்மாவில் ஒரு தடவையாவது அந்த பாக்கியம் எல்லோருக்கும் கிடைக்கணும்!'' என்றார் ஒரு பெரியவர்.

''நாம் குழாய் ஜலத்தில் ஸ்நானம் செய்து விட்டுக் கங்கா ஸ்நானபலனைத் தீபாவளி அன்று அடைந்து விடுகிறோம் அல்லவா?'' என்றார் ஒரு இளம் வயதுள்ள அர்ச்சகர்.

கோவில் கட்டளை மேளக்காரர்கள் நாட்டை ராகத்தை வாசித்தார்கள். சிவகுமாரனும் மலர்மாலை கட்டும் கைங்கர்யத்துக்குப் புறப்பட்டான்.

It pays you to buy from

# The Modern Distributing Co.

65, SINGANNA CHETTY STREET, CHINTADRIPET, MADRAS-2

Phone: 85550 POST BOX 2241 Grams: JEEPSPARES

Wholesale Stockists of Spare Parts for

## JEEP, CHEVROLET, DODGE

AND

## PERKINS DIESEL ENGINES

---

# The Brilliant Trading Corporation Ltd.

TIMBER MERCHANTS

Phone: 3876 **4-A, BASIN BRIDGE ROAD, MADRAS-1** Grams: "YESKAR"




பம்பாய் மியூச்சுவல் கட்டிடம்

அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்
எங்கள் மனமார்ந்த
**தீபாவளி வாழ்த்துக்கள்**

சென்னையில் பிரதான இடமாகிய நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் பெரிய கட்டிடமாகிய "பம்பாய் மியூச்சுவல்" கட்டிடத்திற்கு நாங்களே முழுவதும் நயம் இரங்கூன் தேக்கு மரமாக சப்ளை செய்திருக்கிறோம். இதைப் போலொத்த பெரிய கட்டிடங்களுக்கும், பெரிய கம்பெனிகளுக்கும், பெரிய கண்டிராக்ட்காரர்களுக்கும் நயம் மரங்களாகவும் விலை சகாயமாகவும் சப்ளை செய்து வருகிறோம்.

புதிதாகக் கட்டிடம் கட்டுவோர் தங்களுக்கும் தேவையான ரங்கூன், மைசூர், மலபார் பலார்ஷா தேக்கு மரங்களுக்கும் சைஸ்களுக்கும் கருமருதி, வேங்கை, பிள்ளை மருதி, ஆயினி, கோங்கு, தூக்கமரம், மாம்பலகை வெந்தேக்கு மற்றும் எல்லா ரக மரங்களுக்கும் பிளைவுட் பலகைகளுக்கும் எங்களிடம் வாங் நம்படி கோருகிறோம்.

**கே. வி. எஸ். அண்ணாமலை நாடார்**
ஜெனரல் மானேஜர்

# விளையாட்டுக் காதல்

விளையாட்டு மைதானத்தில் கூட்டம் தேர்த்திருவிழா பாடுபட்டது. ஜாலராக்களின் ஒலி காதைப் பிளந்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பட்டாச வெடிகளின் சத்தமும், அதனால் எழுந்த குதூகல ஆரவாரமும் போட்டி விட்டன. எல்லாம் அன்று நடக்க விருந்த மாகாண கிரிக்கெட் ஆட்டப் பந்தயத்தைக் காண்பதற்காக வந்த ரஸிகர்களின் சந்தோஷ ஆரவாரந்தான்.

சரியாக மணி பத்து அடித்ததும் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் மைதானத்தில் வெற்றி நடை போட்டுச் சென்றனர். சென்னை ஆட்ட கோஷ்டியின் காப்டன் கோபால் வந்ததும் கரகோஷ ஆரவாரம் வான மண்டலத்தை எட்டியது.

"இன்று கோபாலன் ஒரு 'செஞ்சுரி' போட்டு விட்டுத்தான் திரும்புவான். சென்னையின் வெற்றி கோபாலனின் கையில்தானிருக்கிறது!" என்றார் கிரிக்கெட் ரஸிகர் ஒருவர்.

"அவன் எந்தப் பந்தயத்திலும் நூறுக்குக் குறைந்து போட்டதில்லை. இன்றைக்கு அவன் பிரமாதமாக ஆடுவதற்குக் கேட்பானேன்!" என்றார் மற்றொரு கிரிக்கெட் அபிமானி.

அவர்கள் பேச்செல்லாம் என்னைத் திக்கு முக்காட வைத்தன. எனக்கும் கிரிக்கெட்டுக்கும் காத தூரம். என் நண்பர்கள் சிலர் என்னை வற்புறுத்திக் கிரிக்கெட் ஆட்டம் பார்க்க அழைத்துச் சென்றிருந்தனர்.

முதலில் கோபாலன் மட்டையுடன் ஆட்டத்தை ஆரம்பித்தான். முதல் பந்தை வெகு வேகமாக அடித்தான். ஆனால்.. இதென்ன ? இரண்டாவது பந்தில் அவன் தோல்வியுற்று விட்டான்.

கோபாலன் 'அவுட்'டாகி விட்டான் என்பதே அனைவரையும் அளவற்ற திகைப்பில் ஆழ்த்தியது.

"ஸார்! இன்று கோபாலன் மைதானத்துக்குள் நுழையும் போதே தள்ளாடித் தள்ளாடித்தான் போனான். அவனுக்கு உடல்நிலை சரியில்லை போலும்!" என்று கூறினார் கிரிக்கெட் ரஸிகர்.

"ஆனால் நம் கண் முன்னாலேயே அவன் தோற்று விட்டதைக் கண்டோமே?" என்றேன் நான்.

"போங்க, ஸார்! உங்களுக்குக் கிரிக்கெட் ஆட்டத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது!" என்று என் முகத்திலடித்தாற்போல் கூறினார் அந்த ரஸிகர்.

இத்தருணத்தில் அடுத்த ஆட்டக்காரர் வந்து விளையாட ஆரம்பித்ததும் எங்கள் பேச்சு அத்துடன் நின்றது. ஆனால் எனக்கு நல்ல ஆட்டக்காரனான கோபாலன் எதனால் தோற்றுப் போனான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் பிறந்தது.

என்னுடைய அதிர்ஷ்டமோ என்னவோ, எனக்குப் பக்கத்தில் இரண்டு நாற்காலிகள் தள்ளி வந்து உட்கார்ந்து கொண்டான் காப்டன் கோபாலன். அவன் முகம் தோல்வியினால் வெளிறிப் போயிருந்தது. அவன் அருகில் உட்கார்ந்துகொண்டிருந்த கனத்த மனிதர்,— பிரபல தொழில் அதிபர் பத்மநாபன்,— "கோபால்! உனக்கு என்ன நேர்ந்துவிட்டது? இப்படி இரண்டாவது பந்திலேயே தோற்று வெளியே வந்து விடுவாய் என்று நாங்கள் எதிர்பார்க்கவேயில்லை!" என்று கூறினார்.

"ஸார், எனக்குக் கிரிக்கெட் ஆட்டமே வெறுத்து விட்டது. உலகமே வெறுத்துப் போய் விட்டது!" என்று கசப்புடன் கூறினான் கோபால். அவன் கண்கள் கலங்கி விட்டன. அவன் குரலிலிருந்து ஏதோ ஆழ்ந்த சோகம் அவன் மனதை வாட்டுகிறது என்பது தெரிந்தது.

"உனக்குத் திடீரென்று இத்தகைய அவநம்பிக்கை ஏற்படக் காரணம் என்ன? தோல்வியினாலா?" என்று கேட்டார் பத்மநாபன்.

"தோல்வியைக் கண்டு நான் சஞ்சலம் அடையவில்லை. அவள் என் உள்ளத்தைத்தான் உடைத்தாள் என்றால் என் வாழ்வையும் குலைக்க வருவாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை!"

"என்ன புதிர் போடுகிறாயே? கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லேன்" என்றார் பத்மநாபன்.

அவன் கிரிக்கெட் மைதானமென்று கருதாமல் தன் சோகக் கதையைச் சொல்லத் தொடங்கினான். கிரிக்கெட் மைதானம் எங்களுக்கு மறைந்து போயிற்று. கோபாலன் கூறிய கதையில் எங்கள் இருவருடைய மனமும் லயித்து





விட்டது. இப்படி எங்களை மெய்மறக்கச் சொன்ன கதை இதுதான் :

''எனக்குச் சின்னஞ் சிறு வயதிலிருந்தே விளையாட்டுக்களில் ஆர்வம் அதிகம். படிப்பை விட விளையாட்டே என் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது.

அன்று கல்லூரி மாணவர்களுக்குள் கிரிக்கெட் ஆட்டப் போட்டி நடக்கவிருந்தது. பிரமாத ஆட்டக்காரனான ரமணி என்னும் வாலிபன் எதிர்த்த கட்சியில் விளையாடுவதால் எங்களுடைய கட்சி தோல்வியுற்று விடும் என்று அனைவரும் எதிர்பார்த்தனர். எனக்கு ஏற்பட்ட உத்வேகத்தில் எப்படியாவது இந்த ஆட்டத்தில் வெற்றி பெற வேண்டும் என்று ஆவேசத்தோடு ஆடினேன். நூற்றைம்பது ஓட்டங்களுக்கு மேல் எடுத்து எங்கள் கட்சிக்கு வெற்றி பெற்றுக் கொடுத்தேன். அப்பா! அப்பொழுது குழுமியிருந்த மக்களின் கரகோஷ ஆரவாரம் இடிமுழக்கம்போல் மைதானமெங்கும் எப்படி எதிரொலித்தது, தெரியுமா?

மைதானத்திலிருந்து வெளியே வந்ததும் ஒரு பெண் என் முன்னே வந்தாள். அவளுடைய பேரழகு என்னை நிலை தடுமாறச் செய்தது.

''உங்கள் விளையாட்டு என்னைப் பெரிதும் கவர்ந்து விட்டது. உங்கள் கட்சி தோற்று விடும் என்று எதிர்பார்த்த எங்களை உங்கள் திறமையினால் திணற அடித்து விட்டீர்கள்'' என்று பாராட்டினாள் அந்தப் பேரழகி. அவளுடைய பாராட்டுதல் என்னை இன்பலோகத்துக்கே அழைத்துச் சென்று விட்டது.

''தங்கள் பாராட்டுதலுக்கு நன்றி'' என்று அவளிடம் என் வந்தனத்தைத் தெரிவித்துக் கொண்டேன்.

''பிரபல ஆட்டக்காரன் என்று கர்வம் கொண்டிருக்கும் ரமணியைத் தலைகுனிய வைத்த தங்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்'' என்று கூறினாள் அவள். இச் சமயத்தில் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு எங்களை நெருங்கியதால் அவளிடமிருந்து பிரியாவிடை பெற்றேன்.

அதற்குப் பிறகு அவள்,—பத்மா—எங்கு நான் கிரிக்கெட் ஆட்டம் ஆடினாலும் வந்து எனக்கு உற்சாக மூட்டி வந்தாள். அவள் உற்சாகமும் அன்பும் எனக்கு ஆட்டத்தில் ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் பெருக்கின. 'நீங்கள் ஒரு நாள் இந்தியாவிலேயே சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரராகத் திகழ்ந்து புகழ்பெற வேண்டும். அன்று தான் எனது ஆசை பூர்த்தியாகும்' என்றாள் பத்மா. அவளுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்காகப் பல இடங்களுக்கும் சென்று கிரிக்கெட் ஆட்டப் போட்டியில் கலந்து கொண்டேன். அவளுடைய காதலையும் அன்பையும் பெற்று விடலாம் என்ற ஆவலில் கிரிக்கெட் ஆட்டமேகதி யென்று ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருந்தேன்.




அந்த ஆசையை, அவளை அடையலாம் என்ற ஆசையை இன்று அவள் நிராசையாக்கி விட்டாள். நான் பந்து மட்டையோடு மைதானத்தில் பிரவேசிக்கும் போது பத்மா என் கண்ணில் பட்டு விட்டாள். அவளைக் கண்டதும் என் ஆர்வம் அதிகமாயிற்று. ஆனால்...ஆனால்...அவளுடன் ரமணியும் வருவதைக்கண்டு திகைத்தேன். 'கிரிக்கெட் ஆட்டக்காரன் ரமணி பத்மாவை மணந்துகொண்டு விட்டான். காதல் திருமணம்' என்று யாரோ கூட்டத்தில் கூறியது என் காதில் விழுந்தது அவ்வளவுதான்! என் நிலை கலங்கி விட்டது. இந்த உலகமே என் கால்களிலிருந்து நழுவுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. கிரிக்கெட் மைதானத்தை மறந்தேன். மக்களை மறந்தேன். என்னையே மறந்து விட்டேன். நான் கிரிக்கெட் ஆட்டத்தில் தோல்வியுற்றேன். காதலிலும் தோல்வி அடைந்தேன்''

என்று காப்டன் கோபாலன் தன்னுடைய ஏமாற்ற வாழ்வைக் கல்லும் கனிந்துருகும் வண்ணம் கூறி முடித்தான்.

''அடடா! காதலா உன் விளையாட்டுக்குச் சத்துருவாக முடிந்தது?'' என்று மனத்துக்குள்ளாகவே நான் அங்கலாய்த்துக் கொண்டேன்.

இச்சமயத்தில் கலகலவென்று நகைத்துக் கொண்டே பத்மா ரமணியுடன் அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தாள். கோபால் அவளைச் சுட்டிக் காட்டி, ''இவள்தான் என் வாழ்வைப் பாழ் படுத்தியவள்'' என்று கூறினான்.

பத்மாவும் ரமணியும் எங்களைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் பேசிக் கொண்டு வந்தது தெளிவாகக் காதில் விழுந்தது.

''பத்மா! காப்டன் கோபாலிடம் வேண்டுமானால் இரண்டு வார்த்தை ஆறுதல் மொழி கூறிவிட்டு வாயேன்!'' என்றான் ரமணி.

''நான் அவனை நேசிக்கவில்லை. அவன் விளையாட்டைத்தான் நான் பெரிதும் விரும்பினேன். அந்த விளையாட்டும் அவனிடமிருந்து போய் விட்டது. அவனைப் பார்த்துப் பேச வேண்டியதில்லை'' என்று பதிலளித்து விட்டுக் கோபாலைப் பார்த்தும் பாராததுபோல் போய் விட்டாள் பத்மா. அவளுடைய வார்த்தைகள் ஈட்டியைப் போல் கோபாலின் இதயத்தைத் தாக்கின.

''ஸார்! இன்றிலிருந்து கிரிக்கெட் மட்டையைத் தொடப் போவதில்லை. கிரிக்கெட் ஆட்டத்துக்கு இன்றே ஒரு முழுக்குப் போட்டு விடுகிறேன்'' என்று அழாக்குறையாகக் கூறினான் கோபால்.

''பேஷ்! நிஜமாகவா! அப்படியானால் உன் கிரிக்கெட் வாழ்வில் தோல்வியுற்றாலும் உன் மண வாழ்வில் நீ தோல்வியுறவில்லை!'' என்றார் பத்மநாபன்.

'என்ன?' என்று கேள்விக் குறியும் வியப்புக் குறியும் தோன்றப் பத்மநாபனைப் பார்த்தான் கோபாலன்.

''ஆமாம்! நீ எதிர்பார்த்தது போல் பத்மாவுக்குக் கல்யாணமாகி விடவில்லை. அவளுக்கு உன்மீதுள்ள அன்பும் குறைந்து போய் விடவில்லை!''

''நிஜமாகவா? அது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' அவன் மனத்தில் நம்பிக்கை சிறிது துளிர் விட்டது.

''அவள் என் பேத்தி. என் பேத்தியை மணந்து கொண்ட பின் நீ எங்கே கிரிக்கெட் ஆட்டமே கதியென்று அதில் மூழ்கிப் போய் விடுவாயோ என்று பயந்தோம். பிறகு என் பேத்தியின் வாழ்வு என்ன ஆவது? ஆகையினாலேயே...''

தோல்வியினால் முகம் கறுத்துப் போயிருந்த கோபாலின் முகத்தில் சிறிது பிரகாசம் தோன்றியது.

அடுத்த வாரம் கோபாலனுக்கும் பத்மாவுக்கும் திருமணம் நிச்சயமாகி முகூர்த்தப் பத்திரிகை வந்தது. அந்தப் பத்திரிகையில் 'பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர்' என்பது விட்டுப் போயிருந்ததைக் கண்டு கிரிக்கெட் ரசிகர்கள் திகைத்தனர். கோபாலின் திருமண வாழ்வு அவனுடைய கிரிக்கெட் ஆட்டத்தின் அஸ்தமனத்திலே உதயமாயிற்று என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்?

# Read Soviet periodicals

| Subscriptions | One Year | Half Year | Single Copy |
|---|---|---|---|
| SOVIET UNION | Rs. 6/12 | Rs. 3/6 | As. 12/- |
| SOVIET WOMAN | Rs. 4/4 | Rs. 2/2 | As. 8/- |
| SOVIET LITERATURE | Rs. 6/- | Rs. 3/- | As. 10/- |
| NEW TIMES | Rs. 6/- | Rs. 3/- | As. 3/- |
| INTERNATIONAL AFFAIRS | Rs. 6/12 | Rs. 3/6 | As. 12/- |
| NEWS | Rs. 4/8 | Rs. 2/4 | As. 4/- |
| MOSCOW NEWS | Rs. 8/- | Rs. 4/- | As. 1/6 |

INTERNATIONAL AFFAIRS

SOVIET LITERATURE

MOSCOW NEWS

SOVIET UNION

सोवियत संघ

NEWS

NEW TIMES

A WEEKLY JOURNAL

Soviet Woman

NEW CENTURY BOOK HOUSE, 199, Mount Road, Madras-2
NEW CENTURY BOOK HOUSE, C/17, Majestic Circle, Bangalore



V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.

adcrafts

*

# மைதீன் புகையிலை






அன்பர்களுக்கும்
அபிமானிகளுக்கும்
எமது நன்றி கலந்த
தீபாவளி
நல் வாழ்த்துக்கள்








## E.S. மைதீன் & கோ.

கும்பகோணம்

Grams "MYDEENCO" Phone: 41



எமது மங்களகரமான
தீபாவளி வாழ்த்துகள்
லைட்
&
இந்தியன் கேட்
தீப்பெட்டிகள் மேலானவை
○●○
முப்பது ஆண்டின் முயற்சி!
தென்னிந்தியாவின் வெற்றி !!
SUPERIOR
தயாரிப்பவர்கள்:
சாத்தூர் ஒரிஜினல் மாட்ச் கம்பெனி (1953)
சாத்தூர் (S-INDIA) TELEGRAMS: "ORIGINAL" கிளை: ஒலவக்கோடு (S-MALABAR)

தீபாவளி கல்கி

பாலர் மலர்

முகம் பார்க்கும் கண்ணாடியில் காட்டிப் பாருங்கள்!










கீழே ஒளவை வாக்கு மாறிக்கிடக்கிறது. அது என்ன சொல் பார்க்கலாம்




## மழை பெய்தது!

"வரப்போகும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு உலகத்தில் மழையே பெய்யப் போவதில்லை! பெரிய பஞ்சம் தலைவிரித்து ஆடப் போகிறது! மக்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, குடிக்க நீர் இன்றி வாடி வதங்கி மடியப் போகிறார்கள்!"—எங்கு சென்றாலும் இதே பேச்சு!

விவசாயத்தையே நம்பி வாழும் வேலன் காதுகளில் இந்தச் செய்தி பேரிடியாக விழுந்தது. மழை பெய்யாமல் வானம் பொய்த்து விட்டால், விவசாயம் நடைபெறுவது எப்படி?

வேலன் யோசித்தான், யோசித்தான்; அப்படி யோசித்தான். கடைசியில் தைரியமாக ஒரு முடிவுக்கு வந்தான். கொட்டிலில் சென்று மாடுகளை அவிழ்த்தான். ஏர் கலப்பையை எடுத்துக் கொண்டான். வயலை நோக்கிப் புறப்பட்டு விட்டான். அவனது அந்தச் செய்கை எல்லோருக்கும் வியப்பை அளித்தது. அதோடு அவன் பாளம் பாளமாக வெடித்துக் கிடந்த வயலை உழத் தொடங்கவே, அவனுக்குப் பைத்தியமோ என்று எல்லோரும் எண்ணலாயினர்.

அப்பொழுது ஆகாயத்திலே சென்று கொண்டிருந்த மேகங்களும் அவன் செய்கையைக் கண்டு அதிசயித்து நின்றன.

ஆவல் உந்தித் தள்ளவே, ஒரு மேகம் விறுவிறென்று கீழே இறங்கி வந்தது. "இதென்ன அசட்டுக் காரியம்? வயலில் நீர் பாயாமல் நிலத்தை உழுகிறாயே?" என்று வேலனைப் பார்த்துக் கேட்டது.

"என்ன செய்வது? இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மழை பொழியப் போவதில்லையாம். அவ்வளவு காலம் சும்மா உட்கார்ந்திருந்தால், எனக்குப் பயிர்த் தொழில் செய்வது மறந்து விடாதா? அதனால் தான் உழுகிறேன்!" என்றான் வேலன்.

மேகம் தன் தோழர்களை அணுகி, வேலன் கூறியதை அப்படியே கூறியது. வேலனின் சொற்கள் மேகங்களின் நெஞ்சில் தைத்தன. "பன்னிரண்டு ஆண்டுகள் மழை பெய்யாமல் இருக்க வேண்டி வந்தால், நாமும் மழை பொழிவதை மறந்துவிட மாட்டோமா? அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கக் கூடாது!" என்று அவை முடிவுக்கு வந்தன.

அவ்வளவுதான்! மேகங்கள் கறுத்தன. மயில்கள் மகிழ்ச்சியில் தோகை விரித்தாடின. தாரை தாரையாகப் பெரு மழை பொழியத் தொடங்கிவிட்டது. மடை வழியே வெள்ளம் பாய்வது போல் வேலனின் மனத்திலும் மகிழ்ச்சி கரை புரண்டு ஓடியது.

—அநுபம்.



தென்றலில் ஆடும் மலர் போலே
பூங்கொடி அசைந்திடும் புதுமைபோல்
கார்முகில் கண்ட மயில் எனவே - அவள்
கண் கவர் வண்ணம் ஆடிடுவாள்
'ஐ. இ. டபிள்யூ' பங்காவில்
அத்தனை இன்பமும் கிடைத்திடுமே !

IEW

*Makers of the Famous Fans*

**THE INDIA ELECTRIC WORKS LTD.,**

CHATNATH BUILDINGS, MOUNT ROAD, MADRAS-2



வித்தைக்காரன்
அழ. வள்ளியப்பா
வித்தைக்காரன், நல்ல வித்தைக்காரன்—ஜோராய்
வேடிக்கை காட்டிவரும் வித்தைக்காரன்
சத்தம் போட்டு அழைத்திடுவான்
தமுக்கை ஓங்கி அடித்திடுவான்
எத்த னையோ வித்தைகளை
எங்க ளுக்குக் காட்டிடுவான். (வித்)
கம்பம் ஒன்றில் ஏறிநிற்பான்
கரகம் ஒன்றைத் தலையில்வைப்பான்
பம்ப ரம்போல் சுழன்றுஆடிப்
பார்த்த பேரைத் திகைக்கவைப்பான். (வித்)
கொட்டை ஒன்றைத் தரையில்வைப்பான்
கூடை போட்டு மூடிவைப்பான்
எட்டு நிமிஷம் ஆகுமுன்னே
எடுத்துப் பார்த்தால், மாஞ்செடியாம்! (வித்)
மனதில் நாங்கள் நினைப்பதெல்லாம்
வாயை விட்டுச் சொல்லிடுவான்
பணத்தைக் கீழே புதைத்துவிட்டுப்
பையன் கையில் வரவழைப்பான். (வித்)
தரையி லுள்ள மண்ணை அள்ளிச்
சர்க்க ரையாய்த் தந்திடுவான்
மறைந்து போன மோதிரத்தை
வாழைப் பழத்தில் வரவழைப்பான் (வித்)
மாய வித்தை செய்திடுவான்;
மந்திர வித்தை செய்திடுவான்
ஆயி ரம்பேர் வாய்பிளந்து
'ஆஹா!' என்றே கூறவைப்பான்! (வித்)



காட்டு யானை ஒன்று தனக்குப் பிறந்த அழகான ஆண் யானைக் குட்டியைப் பார்த்துச் சந்தோஷப் படாமல் மிகவும் வருத்தம் அடைந்தது. அந்த யானைக் குட்டி பிறக்கும் பொழுது இரண்டு இறக்கைகளுடன் பிறந்து விட்டதுதான் யானையின் வருத்தத்துக்குக் காரணம்.

அந்த யானை தன் குட்டியைத் தும்பிக்கையினால் அணைத்துக் கொண்டு, "குழந்தாய்! நீ வெளியில் எங்கும் போகாதே; மனிதர்களுக்குத் தெரிந்தால் உன்னைப் பிடித்துக் கொண்டு போய் மிருகக் காட்சிச் சாலையில் வைத்து விடுவார்கள்" என்று எச்சரிக்கை செய்தது.

ஆனால் அன்று இரவே யானைக் குட்டி தன் தாய்க்குத் தெரியாமல் யானைக்குட்டிகள் விளையாடிக் கொண்டிருந்த இடத்துக்குப் போய்விட்டது. பறக்கும் யானைக் குட்டியைப் பார்த்து இதர யானைக் குட்டிகள் கேலியாகச் சிரித்தன. பறக்கும் யானைக் குட்டி மீது அவை பொறாமை கொண்டன. அதைக் காட்டை விட்டே துரத்தி விடச் சூழ்ச்சி செய்தன.

"என்னையும் உங்களுடன் விளையாடச் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று பறக்கும் யானைக் குட்டி பரிதாபத்தோடு கேட்டது.

"நாங்கள் எல்லாம் அதோ மாமரத்திலுள்ள மாங்காய்களைக் கல்லால் அடிக்கப்போகிறோம். நீயும் அடி" என்று மற்ற யானைக் குட்டிகள் கூறின.

உடனே பறக்கும் யானைக் குட்டி ஒரு கல்லை எடுத்து, தனது தும்பிக் கையினால் மாமரத்தின் மீது வீசி எறிந்தது. அப்போது வானத்தில் மின்னலும் இடியுமாக இருந்தன. அது வரை இடியின் சப்தத்தைக் கேட்டறியாத யானைக் குட்டி பயந்து விட்டது. "இது என்ன சப்தம்? எனக்குப் பயமாக இருக்கிறதே!" என்றது.

இதுதான் [ சமயம் என்று அந்தப் பொல்லாத யானைக் குட்டிகள், "நீ மரத்தின் மீது எறிந்த கல் வேகமாகப்போய் வானத்திலுள்ள சந்திரன் மீது விழுந்து விட்டது. அதனால் முழு வட்டமாயிருந்த சந்திரன் பின்னமாகப் போய் விட்டது. மின்னலும் இடியும் ஏற்பட்டது உன்னால்தான். பின்னமாகி விட்ட சந்திரனை, அதோ பார்!" என்று கூறித் துதிக்கையால் சுட்டிக் காட்டின.

"இந்தச் சமாசாரம் என் அம்மாவுக்குத் தெரிந்தால் கோபித்துக் கொள்வாளே! என்ன செய்வது?" என்று பயந்தது பறக்கும் யானைக்குட்டி.

"பயப்படாதே! உனக்குத்தான் பறக்கத் தெரியுமே. முதலில் நீ ஒரு எருமை மாட்டிடம் போய்க் கொஞ்சம் வெண்ணெய் வாங்கிக் கொண்டு சந்திரனிடம் பறந்து போய்ப் பின்னமாக இருக்கும் பாகத்தை வெண்ணெயால் தடவி விடு. சரியாகி விடும்" என்று யோசனை கூறின.

பாவம்! பறக்கும்யானைக் குட்டிஆகாயத்தைநோக்கி விர்ரென்று பறந்து சென்றது. மற்ற யானைக்குட்டி

# பறக்கும் யானைக்குட்டி

கள் 'ஹா! ஹா!' என்று சிரித்துக்கொண்டே "இந்த மூட யானைக்குட்டி இனி எங்கிருந்து திரும்பி வரப்போகிறது? அதை நாம் நன்றாக ஏமாற்றி விட்டோம்" என்று பெருமை அடித்துக் கொண்டன.

யானைக்குட்டி வெகு தூரம் பறந்து சென்றது. ஒரு மலை ஓரத்தில் ஒரு சிறுவன் எருமை மாடுகளை மேய்த்தபடி குழல் ஊதிக் கொண்டிருந்தான். யானைக் குட்டி அவனிடம் சென்று வெண்ணெய் தரும்படி கேட்டது.

"வெண்ணெய் தருகிறேன். அதற்குப் பதில் நீ என்னை உன் முதுகில் ஏற்றிக் கொண்டு சிறிது தூரம் பறந்து செல்ல வேண்டும்" என்றான் சிறுவன்.

யானைக்குட்டி சரி என்று ஒப்புக் கொண்டது. பிறகு சிறுவன் கொடுத்த வெண்ணெயை எடுத்துக் கொண்டு ஆகாயத்தை நோக்கிப் பறந்து சென்றது. மலை உச்சியில் போய்க் களைப்படைந்து உட்கார்ந்தது.

அப்போது அங்கே வந்த ஒரு பெரிய காட்டுப்பூனை யானைக்குட்டியை ஏமாற்றி வெண்ணெயை அபகரிக்கத் தீர்மானித்தது.

"நான் வெள்ளை வெண்ணெய் வைத்திருக்கிறேன். அதற்குப் பதில் மஞ்சள் வெண்ணெய் தருகிறாயா?" என்று கேட்டது யானைக் குட்டி.

"இதென்ன பிரமாதம்? அந்த வெண்ணெயை என்னிடம் கொடு. நான் சீக்கிரம் போய் மஞ்சள் வெண்ணெய் கொண்டு வருகிறேன்" என்றது காட்டுப் பூனை.

யானைக்குட்டியிடம் இருந்த வெண்ணெய் உடனே பூனைக்குட்டியிடம் போயிற்று. மஞ்சள் வெண்ணெயுடன் வருவதாகச் சொன்ன பூனை அப்புறம் திரும்பி வரவே இல்லை.

அப்போது அங்கே வந்த பச்சைக் கிளி, "யானைக்குட்டியே! நாலைந்து நாட்களாய் ஏன் இப்படித் தனியாக உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்டது.

யானைக்குட்டி விஷயத்தைச் சொல்லிற்று. அதற்கு அந்தக் குட்டிக் கிளி, "இப்பொழுதுதான் எனக்குச் சிறகுகள் முளைத்திருக்கின்றன. தைரியமாகப் பறக்க முடியவில்லை. நான் உன் முதுகில் உட்கார்ந்து கொள்கிறேன். நீ இந்தப் பள்ளத்தாக்கின் மீது பறந்து சென்று என் அம்மாவிடம் கொண்டு விடுகிறாயா?" என்று கேட்டது.

கிளியை முதுகில் ஏற்றிச் சென்றது யானைக் குட்டி.

குட்டிக்கிளி, யானைக்குட்டி செய்த உதவியைத் தன் இனத்தாரிடம் சொல்லவே கிளிகள் பெரும் கூட்டமாக யானைக்குட்டியிடம் வந்து, "உனக்கு என்ன வேண்டும்?" என்று விசாரித்தன. யானைக் குட்டி நடந்த விவரங்களைக் கூறியது.

"இதன் சிநேகிதர்கள் இதை வேணும் என்று ஏமாற்றி இருக்கிறார்கள்" என்று கிளிகள் பேசிக் கொண்டன.

பிறகு வயது முதிர்ந்த கிளி ஒன்று, "சந்திரனை நீ கல்லால் அடித்துப் பத்து நாட்களுக்கு மேலிருக்குமா?" என்று கேட்டது.

"இருக்கும்" என்று தலையை ஆட்டியது யானைக்குட்டி.

"நீ கவலைப்படாதே! நாங்கள் நேரில் போய்ப் பின்னமான சந்திரனை முழுச் சந்திரனாக மாற்றி விட்டு வருகிறோம்" என்று ஆறுதல் கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றன கிளிகள்.

கிளிகள் சற்று நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தன. ஆகாயத்தில் பூர்ண சந்திரனைப் பார்த்து மகிழ்ச்சியினால் குதித்தது யானைக்குட்டி. பொல்லாத யானைக் குட்டிகள் பறக்கும் யானைக்குட்டி திரும்பி விட்டதைப் பார்த்துத் திகைத்தன.

தன்னுடைய குட்டி திரும்பி வந்ததைக் கண்ட யானை மிகவும் சந்தோஷப் பட்டது. "உன்னை உன் சிநேகிதர்கள் ஏமாற்றி விட்டார்கள். நீ கல் எறிந்ததால் சந்திரன் பின்னமாக வில்லை. ஒவ்வொரு அமாவாசைக்குப் பிறகு சந்திரன் வளர்ந்து வளர்ந்து பௌர்ணமியன்று முழுச் சந்திரனாவது வழக்கம். இன்று பௌர்ணமி. அதனால்தான் முழுச் சந்திரனைக் காண்கிறாய்" என்று கூறியது.







# இதுவே டயர்ஸோல்ஸ் முறையில் புதுப்பித்த டயர்களில் மீண்டும் உங்களுக்கு புதிய டயர் மைலேஜ் கிடைப்பதற்கு காரணம்




(1) சீரான கேஸிங்குகளைத்தான் பராமரிக்கிறோம்

(2) விலையைப் பொருட்படுத்தாமல் நேர்த்தியான பொருள்களைத்தான் உபயோகிக்கிறோம்

(3) புது ரப்பரை விஞ்ஞான முறையில் வல்கனைஸ் செய்கிறோம்

(4) டயர்ஸோல்கள், ஒரிஜினல் கேஸிங் அமைப்பை சிறிதும் பாதிப்பதில்லை

(5) டயர்ஸோல்கள் சமநிலையாக்கப்பட்டவை

(6) விறைப்பான மிதி இணைக்கப் படுவதால் கீழ்க்கண்ட அனுகூலங்கள்:-

(a) குளுமையான ஓட்டம்

(b) அதிக மைலேஜ்

(c) மிதி சுத்திகரண வேலை

(d) அதிக ரஸ்தா பிடிப்புத் தன்மை

**டயர்ஸோல்ஸ்**

## ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட்,

கோயமுத்தூர்

தொழிற்சாலைகள் இருக்குமிடம்: திருச்சிராப்பள்ளி ரோடு, கோயமுத்தூர் ● 89, லைடன்ஹாம்ஸ் ரோடு, சூளை, மதராஸ்; டிப்போ: 7/1, பட்டுல்லோஸ் ரோடு, சென்னை ● என். எஸ். எச். மவுண்ட் போஸ்ட் ஆபீஸ், கோட்டயம் ● 13/90, பதி தெரு, விஜயவாடா ● 5, ஹைட் ரோடு, கிதர்பூர், கல்கத்தா

---

புதிய டிரெட்டின் பக்கங்களில் TYRESOLES என்ற டிரேட் மார்க் இருக்கிறதா என்று கவனித்து வாங்கவும்

# அமுத வாக்கு

ஸோமாஸ்

பொன்னம்பலம் பிள்ளை திருக்குற்றாலத்துக்கு வந்து தங்கினதற்குக் காரணம் ரொம்பப் பேர்களுக்குத் தெரியாது. சாதாரணமாகச் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றதும் அமைதியான ஓர் ஊரில் தங்குவதுபோல் இவரும் தங்கி விருப்பதாக நினைத்தார்கள். அவர்களுக்கு உண்மை தெரியாது. அவர் முகத்தில் படிந்திருந்த சோகம், அவரது மனத்துக்குள் குமைந்து கொண்டிருந்த ஏதோ ஒரு சோக நினைவின் நிரந்தர அறிகுறியாக விளங்கியது.

பொன்னம்பலம் பிள்ளை அந்த ஊரில் யாருடனும் சிநேகம் பிடித்துக் கொள்ளவில்லை. சதா தனிமையையே நாடினார். காலையில் எழுந்ததும் பொன்னம்பலம் பிள்ளை அருவிக்குச் சென்று ஸ்நானம் செய்வார்; பிறகு மீண்டும் பிறவா நெறியைத் தந்தருளும்படி பிறைசூடிய பெருமானைப் பிரார்த்தித்தவண்ணம் குற்றால நாதர் ஆலயத்துக்குச் செல்லுவார்; அங்கு இறைவன் சன்னிதியில் கண்களில் நீர் மல்க, உள்ளம் உருகித் தம்மை மறந்து நிற்பார்; மீண்டும் தம் நினைவு வந்ததும் வீடு திரும்புவார்.

இப்படித்தான் அவருடைய வாழ் நாட்கள் செலவாகிக் கொண்டு வந்தன.

அவருடைய தனிமையைக் கண்டு இரங்கித் தானோ என்னவோ, மண் சுமந்த பெருமான் பண்புள்ள நண்பர் ஒருவரை அவருடன் சேர்த்துவைத்தான்.

அம்பலவாண பிள்ளை தம் குடும்பத்துடன் திருக்குற்றாலத்துக்கு அருவி ஸ்நானம் செய்ய வந்திருந்தார். ஸ்நானம் முடிந்து அவர் ஆலயத்துக்குள் நுழைந்ததும் அவரது கண்களில் பட்டது பொன்னம்பலம் பிள்ளையின் திருவுருவந்தான். விபூதி பட்டை பட்டையாக அணிந்து சாந்தம் தவழும் முகத்துடன் வீற்றிருந்த அவரைக் கண்டதும் குற்றால நாதரையே நேரில் காண்பதுபோல் இருந்தது. அவரைக் கண்ட மாத்திரத்தில் அவரிடம் தம்மையும் அறியாமல் அம்பலவாண பிள்ளைக்கு அளவற்ற மதிப்பும் மரியாதையும் உதித்தன. இயல்பாகவே கறைமிடற் றண்ணல்பால் மாறாத நேயம் பூண்டு, அவன் அன்பில் அனலிடு மெழுகென உருகும் பக்தி யுள்ளம் படைத்த அம்பலவாண பிள்ளை, இறைவன் சன்னிதியில் வழிபாட்டை முடித்துக்கொண்டு சிவநேயச் செல்வரான பொன்னம்பலம் பிள்ளையிடம் ஓடி வந்தார்.

"உற்றாரை யான்வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன்
கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையும்
கூத்தாஉன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்
கசிந்துருக வேண்டுவனே"

என்று பொன்னம்பலம் பிள்ளை, பக்தி மிகுதியினால் கண்களில் நீர் பனிப்ப, கனிவும் கசிவும் கொண்ட குரலில் இறைவன் சன்னிதியில் மனம் உருகிப் பாடியதைக் கேட்ட அம்பலவாண பிள்ளை தம்மை மறந்து உணர்ச்சி வசப்பட்டு நெகிழ்ந்த மனத்துடன் நின்றார். உடனே அவர் பரபரப்புடன் ஓடி, பொன்னம்பலம் பிள்ளையின் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். அவருடைய மனைவியும், பெண்கள் மூவரும் உடனே அவரைத் தொடர்ந்து பொன்னம்பலம் பிள்ளையை வணங்கினர்.

"ஆகா! பரமசிவம்! பரமசிவம்...! நீங்கள் யார்? என்னை எதற்காக வணங்குகிறீர்கள்?" என்று திகைப்புடன் கேட்



டுப் பொன்னம்பலம் பிள்ளை அவர்களை வியப்புடன் நிமிர்ந்து நோக்கினார்.

"மன்னிக்க வேண்டும். நான் சென்னையிலிருந்து வருகிறேன். திருக்குற்றாலத்தில் சில காலம் தங்கியிருக்கும் உத்தேசத்துடன் வந்திருக்கிறேன். மதுரைச் சத்திரத்தில் தங்கியிருக்கிறேன். "உற்றாரை யான் வேண்டேன்" என்று தாங்கள் கம்பீரமான குரலில் உள்ளம் நெகிழ்ந்து பாடியது என் மனத்தை உருக்கி விட்டது......அவ்வளவுதான். தங்கள் பக்தி...." என்று அம்பலவாணபிள்ளை மேலே பேசுவதற்குள் பொன்னம்பலம் பிள்ளை குறுக்கிட்டார்: "அடடா! அதெல்லாம் ஒன்றும் இல்லை. என் பூர்வ கர்ம வசத்தினால் நான் சில வருஷங்களுக்கு முன்பு அடைந்து விட்ட மகத்தான துக்கம் என்னை எதிலும் விரக்தி கொள்ளச் செய்து விட்டது. சென்னையில் என் பிள்ளை வருமானவரி இலாக்காவில் அதிகாரியாக இருக்கிறான். அவனைத் தவிர என் குடும்பம் என்று சொல்லிக் கொள்ள இப்பொழுது எனக்கு வேறு யாரும் இல்லை. இளமையிலேயே வாழ்வை இழந்துவிட்ட என் தங்கை என்னுடன் இருக்கிறாள். எனக்கு உபகாரச் சம்பளம் என் தேவைக்கு அதிகமாகவே வருகிறது. அவன் அருளால் குடும்பம் சௌகரியமாக நடக்கிறது. நான் பாடிய மாணிக்க வாசகரின் வாக்கு தங்களை உருக்கி யிருந்தால், அப் பெருந்தகையாளரின் தெய்வீக வாக்கின் சக்திதான் அதற்குக் காரணமாயிருந்திருக்க வேண்டும். தங்கள் பெயர்...?" என்று கேட்டார்.

"...அம்பலவாணன். பூர்வீகத்துச் சொத்து நன்செய்யாக இருக்கிறது. அத்துடன் தஞ்சாவூரில் வியாபாரம் வைத்துக் கொண்டிருக்கிறேன். அடியேனுக்கு ஐந்து பெண்கள்; மூன்று பெண்களுக்கு எப்படியோ மணம் முடிந்து விட்டது. இன்னும் இரண்டு பெண்களுக்கு விவாகம் நடக்க வேண்டும். சரியான வரன் கிடைக்கவில்லை. பெண்ணுக்கு வயது வளர்ந்து கொண்டே போகிறது. அவளுக்கு அடுத்தவளுக்கு இப்பொழுது விவாக வயது வந்து விட்டது. சொந்த தகராறுகளினாலும், வியாபாரத்தில் பணம் முடங்கிவிடுவதினாலும் நான் தற்சமயம் பெண் கல்யாணத்துக்காக அதிகம் செலவழிக்க முடியாதவனாயிருக்கிறேன். நாலாவது பெண்ணுக்கு வரன் நிச்சயமாகி விட்டால், கடைசிப் பெண்ணைப் பற்றிக் கவலை யில்லை. அவளுக்கென்று அவள் அத்தை பிள்ளை காத்துக் கொண்டிருக்கிறான். எல்லாவற்றுக்கும் தங்களைப் போன்ற பெரியவர்களின் ஆசீர்வாதம் வேண்டும். இறைவன் திருவருள்தான் தங்களைப் போன்ற உத்தமர்களை அறிமுகம் செய்து வைக்கிறது!" என்று கூறி அம்பலவாணபிள்ளை புளகாங்கிதம் அடைந்தார்.

"பரமசிவத்துக்கு உகந்த பக்தர்கள் என்றால், அவர்கள்தான் என் உற்றார், உறவினர் எல்லாம். நீங்கள் தனியே சத்திரத்தில் சமைத்துச் சிரமப்பட வேண்டாம். என் வீட்டுக்கு வந்து விடுங்கள்!" என்று கனிந்த மொழிகள் பேசி அவரை அன்போடு இல்லத்துக்கு வரவேற்றார் பொன்னம்பலம் பிள்ளை.

அவரது அன்பு நிறைந்த அழைப்பை அம்பலவாண பிள்ளையால் தட்ட முடியவில்லை. சத்திரத்துக்குச் சென்று பெட்டி, படுக்கைகளை எடுத்துக் கொண்டு குடும்பத்தோடு பொன்னம்பலம் பிள்ளையின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். அன்றைய தினத்திலிருந்து அவர்கள் குடும்பமும் பொன்னம்பலம் பிள்ளையின் குடும்பமும் ஒரே குடும்பமாக இணைந்து விட்டன.

அம்பலவாண பிள்ளையின் நாலாவது பெண் அழகம்மையைப் பார்த்ததும் பொன்னம்பலம் பிள்ளையின் உள்ளத்தில் வாஞ்சை ததும்பியது. சின்னஞ் சிறு வயதில் சிவனடியை அடைந்த தம் பெண் மங்கையர்க்கரசியின் தோற்றம் அழகம்மையிடம் குடிகொண்டிருப்பதைக் கண்டார். நாளடைவில் அவளைத் தம் புத்திரியாகவே கருதலானார். அதனால் மனத்தில் ஓர் இனந்தெரியாத இதம் ஏற்படுவதை அவர் உணர்ந்தார்.



திருக்குற்றாலத்துக்கு வந்த வேளையோ என்னவோ அம்பலவாண பிள்ளையின் பெண்ணுக்கு ஒரு வரன் கைகூடிற்று. கோயமுத்தூரில் இருந்த அந்த வரனைப் பார்த்து விட்டுவர நினைத்து அம்பலவாண பிள்ளை கோயமுத்தூருக்குப் புறப்பட்டார்.

கோயமுத்தூருக்குப் போனதும் பொன்னம்பலம்பிள்ளைக்கு அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் மத்திய சர்க்கார் ஊழியனான அந்த வரன் இரண்டாந் தாரம் என்றும், ஆனாலும் அதிக வயசாகவில்லை, இருபத்தெட்டுத்தான் ஆகிறது என்றும், வரன் கண்ணுக்கு நன்றாய் இருப்பதாகவும், தம் நிலைமைக்கு ஏற்றபடி மிகவும் சௌகரியமாக முடிக்கக் கூடியதாயிருப்பதாலும் நிச்சயதார்த்தத்தை முடித்துக் கொண்டே திரும்பப் போவதாகவும் எழுதியிருந்தார். அத்துடன் பெண்ணின் புகைப்படத்தைப் பார்த்தே வரன் தன் பூரண சம்மதத்தைத் தெரிவித்து விட்டான். இன்னும் என்ன வேண்டும்?

முகூர்த்தம் விரைவில் குறிக்கப் பட்டது. அம்பலவாண பிள்ளை ஊரிலிருந்து உற்சாகமாகத் திரும்பினார். பொன்னம்பலம் பிள்ளைக்காகவே திருமணத்தைக் குற்றாலத்திலேயே வைத்துக் கொள்ளுவதென்று ஏற்பாடாயிற்று. பொன்னம்பலம் பிள்ளை திருமணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம், தம் சொந்தக் காரியம் போல் மிகவும் உற்சாகமாகச் செய்தார். அவருக்கு எப்படி நன்றி கூறுவது என்று தெரியாமல் அம்பலவாண பிள்ளை ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்.

முகூர்த்தத்துக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு பொன்னம்பலம் பிள்ளைக்கு அலைச்சல் காரணமாக, தலைவலியும் ஜுரமும் ஏற்பட்டு அவரைப் படுக்கையில் தள்ளி விட்டன. மாப்பிள்ளை அழைப்பின் போது அவர் இல்லாதது அம்பலவாண பிள்ளைக்குப் பெருங் குறையா யிருந்தது.

மறு நாள் மங்கள வாத்தியங்கள் முழங்க முகூர்த்தம் ஆரம்பமாயிற்று.

நாகசுரம் இசைத்த இன்னிசை ஊர் முழுவதிலும் பரவி, நாத வெள்ளத்தில் போதை கொள்ளச் செய்தது. ஜுரத்துடன் உள்ளே படுத்திருந்த பொன்னம்பலம் பிள்ளைக்கு முகூர்த்தத்தைக் கண்ணால் பார்க்க மிகவும் ஆசையா யிருந்தது. ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொண்டதில் அவர் உடம்பு சற்றுத் தென்பா யிருந்தது. ஆகவே, மெதுவாக வெளியே வந்து பிரம்பு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் கல்யாணச் சடங்குகளைக் கவனித்தார். அப்பொழுது மாங்கல்ய தாரண சமயமாதலால் 'கெட்டி மேளம்' பலமாக முழங்கியது.

மாங்கல்ய தாரணம் முடிந்ததும், மணமகனும் மணமகளும் எல்லோரையும் தனித் தனியாக நமஸ்கரித்தார்கள். அம்பலவாண பிள்ளை மணமக்களைப் பொன்னம்பலம் பிள்ளை அமர்ந்திருந்த இடத்துக்கு அழைத்து வந்தார். அவர்கள் இருவரும் வணங்கியதும் பொன்னம்பலம் பிள்ளை, "பரமசிவத்தின் அருளால் சகல சௌபாக்கியங்களும் பெற்று நீடூழி வாழ்ந்திருங்கள்!" என்று மஞ்சள் அக்ஷதையை அவர்கள் சிரங்களில் தூவி அகங் கனிந்து ஆசீர்வாதம் செய்தார்.

அவர் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகியது. அவர் கண்களைத் திறந்து மணப் பெண்ணையும் மணமகனையும் மகிழ்ச்சியோடு பார்த்தார். அடுத்த விநாடி பொன்னம்பலம் பிள்ளையின் முகத்தில் இருந்த ஆவல் மறைந்தது. மறு கணம் அவர் மயக்கம் அடைந்து பிரம்பு நாற்காலியில் சாய்ந்து விட்டார்.

அம்பலவாண பிள்ளை பரபரப்புடன் டாக்டருக்குச் சொல்லி அனுப்பினார். பொன்னம்பலம் பிள்ளை மயக்கமுற்றது



கல்யாண வீட்டையே கலக்கி விட்டது. மயக்கமுற்றுப் படுத்துக் கொண்டிருந்தாலும், அவர் முற்றிலும் தம் உணர்வை இழந்துவிட வில்லை. அவர் சிரமப்பட்டு மறந்து விட முயன்று கொண்டிருந்த அந்தப் பழைய சம்பவம் நினைவுத் திரையில் விரிந்தது.

ஐந்து வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த சம்பவம் அது. அப்பொழுது அவர் மகள் மங்கையர்க்கரசி இருந்தாள். அனைத்துலகையும் அளந்தெடுத்து ஈடாக வைத்தாலும்கூட, பொன்னம்பலம்பிள்ளையின் உள்ளத்தில் தம் மகள் மங்கையர்க்கரசிக்கு அவை ஈடாக மாட்டா என்றே தோன்றிவந்தது. சின்னஞ்சிறு குழந்தையாயிருக்கும் போதே தாயை இழந்து விட்ட அருமை மகள் மங்கையர்க் கரசியைத் தாமே தாயும் தந்தையுமாயிருந்து வளர்த்து வந்தார். உரிய வயது வந்ததும் தகுந்த வரனைத் தேடி மங்கையர்க் கரசிக்கு மணம் முடித்தார்.

அவரது மாப்பிள்ளை மாணிக்கவாசகம் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவனானாலும் மிகவும் நல்லவன். பள்ளிப் படிப்போடு நிறுத்தியிருந்த அவனுக்குப் பொன்னம்பலம் பிள்ளை சகல உதவிகளையும் செய்து கல்லூரிப் படிப்பு படிக்க வைத்தார். அவன் பி.காம். பரீட்சையில் தேறினான். பொன்னம்பலம் பிள்ளையின் முயற்சியினால் அவனுக்கு ரிசர்வ் பாங்கியில் உத்தியோகம் கிடைத்தது.

ஆனால் அந்தச் சந்தோஷத்தில் எதிர்பாராதவிதமாக ஒரு பேரிடி விழுந்தது. மங்கையர்க்கரசி குறைப் பிரசவத்தில் திடீரென்று இறந்து விட்டாள். அது தினமும் ஆலமுண்ட நீலகண்டனை நினைந்து உள்ள நிறைவோடு இருந்து வந்த பொன்னம்பலம் பிள்ளை துக்கம் தாளாமல் புழுவாய்த் துடித்தார்; திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் கோயில் கொண்டு எழுந்தருளி யுள்ள திருத்தலங்களுக் கெல்லாம் யாத்திரை சென்று உள்ளநிறைவை நாடியலைந்தார். யாவும் நில்லைக் கூத்தனின் திருவருள் என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஒருவாறு தேறி யிருந்த சமயத்தில், தம் மாப்பிள்ளையையே முற்றிலும் எதிர்பாராத விதமாக மணக் கோலத்தில் கண்டதும், திடமுற்றிருந்த அவர் மனம் திடம் இழந்து துயரத்தில் மூழ்கிப் பழைய நினைவுகளில் உழன்றது.

"திரிபுராந்தகா, உன் திருவடியே கதி என்று நினைத்துச் சதா உன்னை நினைந்து உருகும் எனக்கு நீ செய்யும் கைம்மாறு இதுதானா? முதலில் மனைவி இறந்தாள். பிறகு இரண்டு வருஷங்களுக்கெல்லாம் ஆசை மகனை, குலக் கொழுந்தை, ஏக புத்திரனை, அவன் பி. ஏ. பரீட்சையில் முதன்மையாகத் தேறி மகிழ்வூட்டிய அத்தருணத்தில், உன் திருவடி நிழலில் சேர்த்துக் கொண்டாய். தாங்க முடியாத புத்திர சோகத்தையும் தாங்கிக் கொண்டு உன் மீது பாரத்தைப் போட்டு உன் நினைவில் காலந் தள்ளி வந்தேன். பிறகு சில வருஷங்களில் அருமை மகள் மங்கையர்க்கரசியையும் என்னிடமிருந்து பிரித்து விட்டாய். உன் அருளால் அம் மாபெரும் துக்கத்தையும் மறந்து இருக்க முயன்று கொண்டிருந்த என்னை மீண்டும் சலனமடையச் செய்து விட்டாய்.

"நண்பர் அம்பலவாணபிள்ளைக்கு என் மருமகன் தானா மாப்பிள்ளையாகக் கிடைக்க வேண்டும்? பிறைசூடிய பெருமானே! இது என்ன சோதனை!" என்று நினைத்துப் பொன்னம்பலம் பிள்ளை உள்ளம் பொருமினார். 'வார்கடல் உலகில் வாழ்வெலாம் கண்டாய், வருக வென்றருள் புரியாயே!' என்ற திருவாசகப் பாடலை அவரையும் அறியாமல் அவர் வாய் முணுமுணுத்தது.

"பிள்ளைவாள், பிள்ளைவாள்!" என்று அம்பலவாண பிள்ளை நடுக்கம் கலந்த குரலில் கூப்பிடுவது பொன்னம்பலம் பிள்ளையின் செவிகளில் வெகு தூரத்திலிருந்து குரல் கொடுக்கிற மாதிரி கேட்டது. கண்ணை விழித்துப் பார்த்தார். அம்பலவாண பிள்ளையின் குடும்பமும், கல்யாணத்துக்கு வந்திருந்தவர்களும் பொன்னம்பலம் பிள்ளையின் பிரம்பு நாற்காலியைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்தனர். அவர்களை யெல்லாம் விலகி நிற்கும்படி டாக்டர் உத்தரவிட்டார்.



"பயப்படாதே! அது மஞ்சள் பட்டாசு; வெடிக்காது!"

—போட்டோ: கிருஷ்ணமூர்த்தி.

அதற்குள் பொன்னம்பலம் பிள்ளை முற்றிலும் தெளிவடைந்து பிரம்பு நாற்காலியில் இருந்தபடியே நிமிர்ந்து உட்கார்ந்தார்.

அம்பலவாண பிள்ளையின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

"பிள்ளைவாள், குற்றாலநாதன் திருவருள்தான்! நீங்கள் கண் விழித்து எழுந்தீர்கள். நான் ரொம்பவும் பயந்து போய் விட்டேன்...." என்றார்.

பொன்னம்பலம் பிள்ளையின் முகத்தில் தனிப் பொலிவும் அமைதியும் நிலவின.

"காலனைக் காலால் உதைத்த கருணாமூர்த்தியின் செயலுக்கு மாசு கற்பிக்க நான் யார்? திருவாசகத்தை ஓயாமல் ஓதுகிறேன். ஆனாலும் என் மனத்தில் எழுந்த அருவையும் குரோதமும் என்னை விட்டு நீங்கவில்லை. என்னுடைய பெண் மங்கையர்க்கரசி மண வாழ்வில் நிறைவைப் பெறவில்லை. அற்பாயுளில் போய் விட்டாள். ஆனால் உங்கள் பெண் அழகம்மைக்கு அவள் கணவன் வாழ்வில் பங்கு கொள்ளும் வாய்ப்பு கிட்டியிருக்கிறது. என் மாப்பிள்ளையையே உங்கள் மாப்பிள்ளையாகப் பார்க்கும் போது என் மனம் பொருமியது. என்னை மன்னித்து விடுங்கள், பிள்ளைவாள்! உங்கள் குழந்தையும் மாப்பிள்ளையும் தீர்க்காயுளாக இருக்கட்டும். குழல்வாய் மொழி அம்மை சமேதனான குற்றாலநாதன் திருவருள் என்றென்றும் அவர்கள் பால் நிலவட்டும்!" என்று கைகூப்பினார்.

"மாமா, நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியாது. இறைவன் அருளால், எதிர்பாராத விதமாக நாம் சந்தித்தோம்" என்று கூறி மாப்பிள்ளை பொன்னம்பலம் பிள்ளையின் காலில் விழுந்து வணங்கினான். இரண்டு மாமனார்களும் மாப்பிள்ளையை அன்போடு ஆசீர்வதித்தனர்.

பொன்னம்பலம் பிள்ளையின் கண்களில் நீர் முட்டி நின்றது.

"உனக்குச் சகல சௌபாக்கியங்களும் உண்டாகட்டும். யாரையும் எதற்கும் குறைசொல்லிப் பயன் இல்லை. அவன் அருளால் யாவும் நடக்கின்றன. இது பற்றி மணிவாசகப் பெருந்தகை கூறிய அமுத வாக்கை நான் மறந்திருந்ததனால் தான் என் மனம் அநாவசியமாக வேதனைப்பட்டு வாடியது.

" அன்றே என்றன் ஆவியும்
 உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னையாட்
 கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர்இடையூ றெனக் குண்டோ
 எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
 நானோ இதற்கு நாயகமே"

என்ற பாடலே இந்தச் சமயம் பரம உபதேசமாக நான் கொள்கிறேன்!" என்று கூறி ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார். அந்தச் சமயத்தில் எல்லோருடைய கண்களிலும் கண்ணீர் ததும்பியது.

# அதிசய நட்சத்திரம்!

துஷ்யந்தன்

முதல் படத்திலேயே பெரும் புகழடைந்த நட்சத்திரம் சந்திரிகா. பார்க்குமிடமெல்லாம் அவள் காட்சியளித்தாள், வண்ண ஓவியமாக. கேட்குமிடமெல்லாம் அவள் குரல் ஒலித்தது, இசைத் தட்டு மூலமாக. கண்டவர்கள், கேட்டவர்கள் அத்தனை பேரும் பெருமூச்சு விட்டனர்.

பத்திரிகைகள் தங்கள் திறமையெல்லாம் காட்டி அவளைப் பாராட்டிப் புகழ்ந்தன.

"நட்ட நடு நிசியிலே பளிச்சென்று உதித்த நட்சத்திரம் இது. இருள் சூழ்ந்த தமிழ்த் திரையிலே வெளிச்சம் காட்டும் தாரகை.." இப்படி ஒரு பத்திரிகை.

இப்படிப்பட்ட தேவதையைப் பார்த்து ஏதாவது விஷயம்கொண்டு வந்து ரசிக மகா ஜனங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்ற கருத்துடன் நான் போனேன்.

அம்பாள் தரிசனத்துக்குக் காத்திருக்கையில் வரவேற்பு அறையைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டேன். மகாகவி தாகூரின் கம்பீரமான உருவம் ஒரு பக்கம். உள்ளமெல்லாம் கொள்ளை கொள்ளும் மோகனக் கண்ணன் உருவம் ஒரு பக்கம். சிந்தனையைத் தேக்கி வைத்து அமைதியின் உருவமாக வீற்றிருக்கும் புத்தர் மற்றொரு பக்கம். கலையன்னை சரஸ்வதியின் வெள்ளைப் படிகச் சிலையின்னொரு பக்கம்.

என் மனசில் சிறு சந்தேகம் ஏற்பட்டது. இது நிஜமாகவே சந்திரிகாவின் வீடு தானா? இல்லை, வேறு ஏதாவது இடமா? "உட்காரக் கூடாதா?....வந்து ரொம்ப நேரமாச்சோ!" இப்படிக் கேட்கும் இனிய குரல் சந்திரிகாவுடையதுதான்.

"நமஸ்காரம்..நான்.." என் வாய்—அதுவும் வாயாடியென்று பெயர் வாங்கிய என்னுடைய வாய்—வார்த்தைகள் அகப்படாமல் தட்டுத் தடுமாறியது.

"தெரியும்..பேட்டி காண வந்திருந்தால் பேஷாகக் கேள்வி கேளுங்கள். சொல்கிறேன். முதலில்.."

"ஆமாம், முதலில் நீங்கள் சினிமாவுக்குப் புதிசு. அதனாலே எப்படி, எதனால், இந்த சினிமாவுக்கு வந்தீர்கள் என்று சொன்னால்.."

சந்திரிகா இலேசாகச் சிரித்தாள்.

சிரித்தது புதிசில்லை. படத்திலே எத்தனையோ தரம் பார்த்ததுதான். ஆனாலும் அவள் சொன்ன கதைதான் அதிசயமாயிருந்தது.

*

திருச்சி தேசியக் கல்லூரியிலே வாசித்துக் கொண்டிருந்த மாணவ மாணவிகளுக்குத் தேவகியைத் தெரியாமலிருக்காது. 1942ல் தேசீயம் குமுறியிருந்த போது, மாணவர்களுக்கு நடுவில் தலை நிமிர்ந்து நடந்தவள் அவள் ஒருத்திதான். தேசியக் கல்லூரி மட்டுமல்ல, திருச்சியின் மாணவர்கள் அத்தனை பேரும் தேவகியின் பேச்சுக்கு 'ஆமாம்' போட்டார்கள். பொங்கி வரும் காவேரியின் புதுப் புனல் போல இருக்கும் அவள் பேச்சு. வெள்ளை ஆதிக்கம் அவள் பேச்சுக்கு நடுங்கியது; தடை போட்டது. கல்லூரித் தலைவருக்கு அவளை அடக்கி வைக்கும்படி ஆணையிட்டது. ஆனால் அவள் பேசிக் கொண்டுதானிருந்தாள். கெடுபிடி அதிகமானபோது அவள் தலை மறைவாகப் போய் விட்டாள்.

போலீஸ் புலிகளுக்கு அவள் பெயரே தலைவலியைக்கொடுத்தது. எங்கேயாவது யாராவது தேவகி என்றால் போதும். ஒரு பட்டாளம் அங்கு போய் முற்றுகை போடும். அவள் அங்கே வரமாட்டாள். பக்கத்தில் நான்கு மைல்களுக்கப்பால் ஒருகூட்டம் நடக்கும் அமோகமாக.

"என்ன நாயுடு? ஏதாவது சேதி கிடைத்ததா?" என்று கேட்ட இன்ஸ்பெக்டர் மகேந்திரனுக்கு ஏட்டையா கொடுத்த பதில் இதுதான்:





" எனக்கென்னமோ சந்தேகமாகத்தான் இருக்குங்க. அவன் சாமானிய மனுஷியாகத் தெரியல்லே. நடு ராத்திரியிலே கூடப் பிசாசு மாதிரி மயானக் கரையிலே வருகிறதாகச் சொல்றாங்க. மந்திரக்காரி வாட்டமா வருகிறாளாம்."

"நான் பள்ளிக்கூடத்துப் பையன் மாதிரி போய் அவளைப் பிடித்துவிடுகிறேன்" என்று வேகமான நடை போட்டு வெளியே போன மகேந்திரனைப் பார்த்து, 'ஏட்' ஐயா மிகவும் வருத்தப்பட்டார். "ம்.. ..யார் யாரைப் பிடிக்கிறாங்களோ கடைசியில்....?"

மகேந்திரன் போய்க் கொண்டேயிருந்தான். உடல் நளர்ந்து தள்ளாடியது. உள்ளம் சோர்ந்து படுத்தது. சிந்தாமணிச் சேரிப் பக்கம் அந்திப் பொழுதில் அவன் நடந்து



கொண்டிருந்தபோது, அவனுக்குத் தேவகியின் நினைவு கூட இல்லை.

அந்தச் சமயத்தில்தான் அவன் போலீஸ் கண்கள் அவன் உதவிக்கு வந்தன. வெள்ளை உடை உடுத்து அங்குமிங்கும் நடக்கும் இளைஞர்களைச்சிந்தாமணியில்பார்த்தால்..! ஏதாவது விசேஷம் இருக்கத்தான் வேண்டும். மறு நிமிஷம் அவன் மூளை வேலை செய்தது.

" என்ன காம்ரேட், நான் சென்னையிலேயிருந்து வரேன். 'வா காலேஜ்'லே இருக்கேன். மூவ்மெண்ட் கலாட்டா அதிகம். போலீஸ் கெடுபிடி அதிகமாப் போச்சு. அதான் இப்படி வந்துட்டேன், தலைமறைவாக! இந்த இடம் எப்படி?"

மகேந்திரன் புளுகிய இந்தப் புளுகு, அந்த இளைஞனுக்கு விபரீதமாகப் படவில்லை.

" பேஷான இடம். போலீஸ் இங்கேதான் வரதில்லே. தேவகி கூட அதோ அந்தக் குடிசையிலேதான் இருக்கா.."

இன்ஸ்பெக்டர் மகேந்திரனுக்கு இது புதையல் கிடைத்தது போல இருந்தது. ஆனால் புதையலைக்காத்த பூதம் அவனையும் விழுங்கக் காத்திருந்ததை அவன் அப்போது உணரவில்லை.

மகேந்திரன் சிந்தாமணிச் சேரியில் தங்கி மூன்று நாட்களாகி விட்டன. தேவகிக்கு அவன் யார் என்று தெரியாது. ஆனால் மகேந்திரனுக்கோ தேவகியைத் தெரியும். அவள் பேச்சு வன்மையைத் தெரியும். அவளால் ஏற்படக் கூடிய அபாயங்களும் தெரியும். இதற்கெல்லாம் மேலாக இப்பொழுது அவள் எத்தனை அழகி என்பதையும் அவன் தெரிந்து கொண்டு விட்டான்.

குழம்பிக் கிடந்த அவன் மனம் தெளியுமுன்பே போலீஸ் இலாகா முடிவு கட்டி விட்டது, அவன் ஒரு காலி என்று. தந்தி மேல் தந்தி பறந்து மேலிடத்திலிருந்து உத்தரவு வந்து விட்டது. அவனைக் கண்ட விடத்தில் சுட்டு விடலாம் என்று. சண்டைக் காலம், கலகம் நிறைந்த காலம்; போலீஸ் உத்தியோகஸ்தன் மாணவர்களிடையே கலந்து விட்டால் விபரீதம் ஏற்படலாமென்பது அவர்கள் கருத்து.

சிந்தாமணியின் எல்லையிலே, காவேரி ஆற்றின் கரையிலே, முன்னிலவின் மங்கிய வெளிச்சத்தில், சிலு சிலுக்கும் ஆற்றுக் காற்றின் பிடியில் உள்ளத்தைப் பறி கொடுத்து உட்கார்ந்திருந்தான் மகேந்திரன்.

தேவகி பேசிக் கொண்டிருந்தாள். " அப்போது எனக்கு எதைக் கண்டாலும் பிடிக்கவில்லை. யாரைக் கண்டாலும் வெறுப்பு. மூன்று நாள் பழகினும் போதும், 'தேவகி! உன் கண்கள் எத்தனை பாஷைகள் பேசுகின்றன, தெரியுமா? உன் முகத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் போதும், அதற்காக என்னை ஒரு கண்ணாடியாக்கி உன் கரத்தில் வைத்துக் கொள். அழகு உன்னிடம் அபரிமிதமாக இருக்கிறது. பார்க்கிறவர்களைப் பைத்தியமாக்குகிறது அது..' இப்படியெல்லாம் அவர்கள் பிதற்ற ஆரம்பித்து விடுவார்கள்....."

காவேரியாற்றின் அழகிய நீர்ப் பரப்புக்கு அப்பால் நாணல் காட்டின் பக்கம் என்னமோ அசைவது போல இருந்தது.

மகேந்திரன் அந்தப் பக்கம் திரும்பினான்.

" டுமீல்!"

இப்படியும் அப்படியுமாக ஆடிக் கொண்டிருந்த மகேந்திரன் உள்ளம் ஓய்ந்தது. அவன் மனப் போராட்டம் நின்று விட்டது. எல்லாம் முடிந்தது.

குண்டு பட்ட அவன் உடல் காவேரியின் நீரிலே விழுந்து மூழ்கியது.

கண நேரத்தில் நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்ட தேவகி தடாலென்று காவேரியில் விழுந்தாள். அவளுக்காக வெளியான குண்டு அவளைத் தீண்டாமலே, அப்பால் விழுந்தது.

வெள்ளையரின் துப்பாக்கி ரவைக்குக் கூட அவளைத் தொடும் பாக்கியம் கிட்டவில்லை!

ஆனால் காவேரியில் மூழ்கி யெழுந்த காரணத்தாலோ என்னமோ, அவள் ஆவேச வெறியெல்லாம் குளிர்ந்து விட்டது. அதற்குப் பிறகு அவள் பெயரைக் கேட்கவே முடியவில்லை.

அமைதியாக அவள் சொந்த ஊரில், எர்ணகுளத்தில், வந்து உட்கார்ந்து விட்டாள். குழப்பமும் கலகமும் அவளை ஒன்றும் செய்து விடவில்லை.

கனல் கக்கிய அவள் வாய் இப்பொழுது பாரதி பாட்டை உள்ளுக்குள்ளே பாடிக் கொண்டிருந்தது.



விண் மறைக்கும் கோபுரம்!
கண் நிறைக்கும் ஒளிச்சரம்!

போட்டோ : பி. [illegible]

கையிலே அகப்பட்ட புத்தக மெல்லாம் படித்தாள். தேவகியின் ஆர்வ மெல்லாம் அடங்கிப் புத்தகங்களின் ஏடுகளில் ஒளிந்து கொண்டது.

"அந்தத் தேவகி நீங்கள்தான் இல்லையா?" என்றேன் நான் அவசரமாக.

"ஆமாம். ஆனால் கதை இன்னும் முடியவில்லை, கேளுங்கள்" என்று தொடர்ந்தாள் சந்திரிகா.

★

தேவகியின் தாய் தந்தையர்கள் அவளுக்குத் திருமணம் செய்து வைக்க ஏற்பாடு செய்தார்கள். எங்கோ பம்பாயில் வேலை பார்க்கும் ஒரு பையனைப் பிடித்தார்கள். அவர்களுக்கு அவன் குடும்பத்தைப் பிடித்திருந்தது. அவன் வேலை பிடித்திருந்தது. அவன் சம்பளத்தைப் பிடித்திருந்தது. தேவகியின் வாழ்வில் மலர்ச்சி ஏற்பட வேண்டுமானால், அவளுக்குத் திருமணம் செய்துவிட வேண்டும். புரட்சி உலகில் புதுமையாகத் திகழ்ந்த அவள் மனத்தை இன்பம் நிறைந்த இல் வாழ்க்கையின் மூலமாகத்தான் சமூகமாகத் திருப்ப முடியும் என்ற ஆழ்ந்த யோசனையின் மேல் தீர்மானம் செய்தனர், அவள் பெற்றோர். தேவகிக்கும் இந்தக் கல்யாண ஏற்பாட்டில் வெறுப்பு எதுவும் இல்லை. தன்னைப் பெற்றெடுத்தவர்களின் மனம் குளிருவதற்காகவாவது அவள் மணம் செய்து கொள்ள வேண்டும். தன் மண வாழ்வைப் பற்றிய சிந்தனை இது வரையில் அவள் உள்ளத்தில் இடம் பெறவில்லை என்பது உண்மைதான் என்றாலும், அவள் தனது பெற்றோர் விருப்பத்தை மீற விரும்பவில்லை.

ஆனால் கடைசி நேரத்தில் யாரோ பம்பாய் வரனுக்குத் தேவகியின் சிந்தாமணிக் கதையைச் சொல்லப் போக அந்த வாலிபன் மனம் மாறி விட்டது. இளைஞன் ஒருவனுடன் தனியாகச் சேரியில் வசித்தவள் தூய்மை கெடாது இருக்க மாட்டாள் என்று அவன் நினைத்துவிட்டானோ என்னவோ!

குளிர்ந்து கிடந்த தேவகியின் உள்ளம் மறுபடியும் பொங்கிக் கொதித்தது. அதன் பயனாக உருவானவள்தான் சந்திரிகா.

"குளிர்ந்த முகம் என்று சொல்லுகிறார்கள் பத்திரிகைக்காரர்கள். வேகும் என் நெஞ்சத்தைப் பார்க்கிறவர்கள் இல்லை...." சந்திரிகாவின் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் விழுந்தது.

நான் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்து விட்டுக் கேட்டேன்:

"நீங்கள் அந்தப் பம்பாய் இளைஞனை எப்பொழுதாவது, எங்கேயாவது பார்த்ததுண்டா?"

"இல்லை, படத்திலேகூடப்பார்க்கவில்லை. புகைப்படம் என்று யாரோ ரொம்ப நாளைக்குப் பிறகு காட்டினார்கள். அதைப் பார்க்கக் கூட இல்லை, கிழித்தெறிந்து விட்டேன். பெயர் மட்டும் தெரியும்—சுகுமாரன் நாயர்."

அத்துடன் பேட்டி முடிந்தது.

★

பத்திரிகைக் காரியாலயத்தின் தபால்களைப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"சந்திரிகாவின் வாழ்க்கை வரலாற்றைப் பிரசுரிக்க முடியுமா?" "சந்திரிகாவின் விலாசம் என்ன?" "சந்திரிகா முதல்தர நடிகை, உங்கள் அபிப்பிராயம் என்ன?" "சந்திரிகா ரொம்பக் கொடுத்து வைத்தவள், அதிர்ஷ்டக்காரி. இல்லையா?"—இப்படி ஆயிரமாயிரம் பேர்கள் கடிதம் எழுதியிருந்தார்கள். பம்பாயிலிருந்தும் சில இளைஞர்கள் எழுதியிருந்தார்கள். "சந்திரிகாவை நான் கல்யாணம் செய்துகொள்ள முடியுமா?" என்று கூடக் கேட்டிருந்தார் சுகுமாரன் நாயர் என்ற ஒருவர்.

இதே சுகுமாரன் நாயர் சந்திரிகா தேவகியாக இருந்தபோது கல்யாணம் செய்து கொள்ளவில்லை.

இன்றைக்கும் இது எனக்கு அதிசயமாகத்தான் இருக்கிறது.







# THE *Tasty* TRIO!

**ENERGY FOOD**

**ROYAL CREAM**

**SALTO**

உல்லாச பிரயாணத்திலும், வீட்டிலும்...... விருந்தினர்க்குத் தேநீர் அருந்தவரும்போதும், அல்லது சாப்பாட்டிற்கு இடையிலும் ஜெ. பி. மங்காராமின் பிஸ்கோத்துகள் எந்த நேரத்திலும் சிறப்பாகவே இருக்கிறது.

ஒவ்வொரு பிஸ்கோத்தும் ருசியுடனும், புஷ்டியளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது. காற்று புகாத அழகான டின்களிலும், அட்டைப் பெட்டிகளிலும் பாக் செய்யப்பட்டுள்ளது.

RICH IN VITAMINS
RICH IN FLAVOUR
CHOICE OF MILLIONS




ஜே. பி. மங்காராம் & கம்பெனி, குவாலியர்

கிளை ஆபீஸ்: 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை - 1

கவிதைச் சித்திரம்—1.



பாரதநாட்டுக் கவிகளுக்குள்ளே மகாகவி காளிதாஸனின் புகழ், உலகமெல்லாம் பரவியிருக்கிறது. காளிதாஸனின் மகா காவியங்களுள் "மேகதூதம்" என்பது மிகவும் புகழ் வாய்ந்தது.

குபேரனின் அழகாபுரியில் பணியாற்றும் ஒரு யக்ஷன் சாபத்தின் காரணமாகத் தன் காதலியைப் பிரிந்து ராமகிரியில் கிடந்து தவிக்கிறான். அவன் பிரிவாற்றாமை யெல்லாம் மேகத்தினிடம் கொட்டி, தன் காதலிக்குத் தூது அனுப்புகிறான்.

தன் காதலி தன் நினைவில் என்னவெல்லாம் செய்து கொண்டிருப்பாள் என்று கற்பனை செய்து பார்க்கிறான். அப்போது ஒரு காட்சி அவன் மனக் கண்முன் வந்து நிற்கிறது. அதையே மேகத்தினிடம் சொல்லி யனுப்புகிறான்.

"என் காதலி என் பெயரை வைத்துப் பாட்டை யாத்து, தன் மடியில் வீணையை வைத்து வாசித்துப் பாடிக் கொண்டிருப்பாள். நடுவே என் நினைவு காரணமாகக் கண் கலங்கி நீர் பொங்கித் துளிகள் தந்திகள்மீது விழுந்து ஸாரணையைக் கலைத்து விடும். எப்படியோ தேற்றிக் கொண்டு நனைந்த தந்திகளைத் துடைத்து மறுபடியும் ஸாரணைசெய்து கொண்டு பாட ஆரம்பிப்பாள். ஆனால் பாடிக் கொண்டிருந்த பாட்டில் விட்ட இடம் மறந்து மயங்கி வீற்றிருப்பாள்."





கவிதைச் சித்திரம்—2.



கவிகள் பெண்களின் காதலை மட்டும் பாடவில்லை. ஆண்களின் வீரத்தையும் காதலையும் பாடியிருக்கிறார்கள். ஒரு வீரன் ரதத்தில் வேகமாக வந்து கொண்டிருக்கிறான். காட்டு வழி. வானத்திலோ மின்னல் சூழ்ந்த மேகங்கள் தேரைவிட வேகமாக முன்னேறிச் செல்கின்றன. அதைப் பார்த்ததும், "என்ன முந்திக்கொண்டு இம் மேகங்கள் என் நகரத்துக்குப் போய் விட்டால் பெரும் ஆபத்து அல்லவா விளைந்துவிடும்! கார் காலத்துக்கு முன் திரும்பி வந்து விடுகிறேன் என்று என் காதலியிடம் சொல்லி விட்டு அல்லவா வந்தேன்! இந்த மேகங்கள் ஊர் போய்ச் சேர்ந்துவிட்டால், அவள் நான் சொன்ன கெடு கடந்து விட்டது என்று, தன் பிரிவாற்றாமை தாங்கமாட்டாது உயிரை மாய்த்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது?" என்று நினைந்து மேகத்தினிடம் சொல்லுகிறான்:

ஓடுகிற மேகங்காள்! ஓடாத தேரில்வெறும்
கூடுவரு தென்று கூறுங்காள் — நாடரிய
நந்தித் திருவாளன் மாநகரில் நன்னுதலைச்
சந்தித் திடுவீரேல் தான்.

நந்திக் கலம்பகம்.





கூர் சித்திரம்—4.

ஸ்ராவஸ்தி என்ற ஊரில் பஞ்சம் தாண்டவமாடியது. அப்போது பகவான் புத்தர் தம் சிஷ்யர்களைப் பார்த்து, "பசியால் வாடும் இந்த மக்களுக்குச் சோறு போடும் பணியை உங்களில் யார் எடுத்துக் கொள்ளப் போகிறீர்கள்?" என்று கேட்டார்.

ரத்னாகர் என்ற காசுக்கடைக்காரர், தலையைக் குனிந்து கொண்டு, "என்னிடம் இருக்கும் செல்வத்தைப் போல் பத்து மடங்கு செல்வமிருந்தால் அல்லவா இவர்கள் பசியைத் தீர்க்க முடியும்?" என்றார்.

ஜெயஸேனன் என்ற தளபதி, "என் உயிரை வேண்டுமானாலும் கொடுக்கத் தயார். ஆனால் இத்தனை பேருக்குச் சோறு போட என் வீட்டில் ஒன்றுமில்லையே?" என்றான்.

தர்மபால் என்ற மிராசுதார் "வானம் பொய்த்து என் வயல்கள் விளைவே இல்லை. நான் அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரிப்பணத்தை எப்படிச் செலுத்தப்போகிறேனோ, தெரியவில்லை" என்றார்.

அப்போது கிராம வைத்தியரின் மகள் சுப்பிரியா எழுந்தாள். அவள் எல்லோருக்கும் வணக்கம் செலுத்திவிட்டு, "நான் பசியால் வாடும் மக்களுக்குச் சோறு போடுகிறேன்" என்றாள்.

"எப்படி?" என்று எல்லோரும் வியப்புடன் கேட்டனர்.

"நான் உங்கள் எல்லோரையும் விடப் பரம ஏழை. அதுவே என் பலம். எனக்கு வேண்டிய சோறு உங்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்கிறது!" என்று கூறினாள் சுப்பிரியா. —ரவீந்திரநாத் தாகூர்.






**பல லக்ஷம் பேர்கள் விரும்புவது**

இவ்வழியே அக்பா காமிராவைக் கொண்டு அற்புதமான ஸ்னாப்புகள் எடுக்க உங்களுக்கு விசேஷத் திறமை அவசியமே யில்லை. கீர்த்தரக் கியாதிபெற்ற கிளாக் காமிராவில் B2 (120) பிலிமைப் பொருத்தி 8 தெளிவான படங்கள் (2¼"×3¼") எடுக்கலாம். கண்மட்டத்தில் ஒரு வியூபைண்டரும், உருவப்பட விசேஷ லென்ஸ் அமைந்ததும், இரு திறப்புகள், கேபிள் ரிலீஸ் ஸாக்கெட், இரவில் படம்பிடிக்க பிளாஷ் இணைப்புள்ள ஷட்டர் முதலிய வசதிகளுடன் கூடியது. இன்றே உங்கள் அக்பா டீலரிடம் பார்த்து ஒரு கிளாக் வாங்கி விடுங்கள்.

விலை ரூ. 29 மட்டும்




அக்பா பரம்பரையில் 1867-லிருந்து ஏற்பட்ட சிறப்பு பிரதிபலிக்கும் ஒரு காமிரா

**அக்பா இந்தியா பிரைவேட் லிட்.**

பம்பாய் ★ புது டில்லி ★ கல்கத்தா ★ மதராஸ்

---

**எமது தீபாவளி வாழ்த்துக்கள்**



| | |
|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ரூ. 8 கோடி |
| வழங்கப்பட்ட மூலதனம் | ரூ. 4 கோடி |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 2 கோடி |
| ரிசர்வ் நிதி | ரூ. 95 லக்ஷம் |

G. D. பிர்லா, சேர்மன்

S. T. சதாசிவன், ஜெனரல் மானேஜர்

**தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்., கல்கத்தா**

உறுதிக்கும், சேவைக்கும் பெயர் பெற்றது

# 1956 DODGE

*with jet-fin styling*



இந்த 1956ம் வருஷத்திய டாட்ஜ் கார், கம்பீரமான தோற்றத்துடனும் பல புதிய அம்சங்களுடனும் மிக மிகத் திறமையாக வேலை செய்கிறது. இதன் அம்சங்களைக் கவனியுங்கள்:

* புதிய 12 வோல்ட் சக்தி கொண்ட எலக்டிரிகல் அமைப்பினால் சீக்கிரமாகவும் சுலபமாகவும் காரை ஸ்டார்ட் செய்யலாம்; ஸ்பார்க் பிளக்கின் ஆயுட்காலத்தை நீடித்திருக்கச் செய்கிறது. அபரிமிதமான கரண்ட் சப்ளை.
* முன்னும் பின்னும் நன்கு பொருத்தப்பட்ட புதிய "விண்ட்ஷீல்ட்" மூலம் வெகு தூரம் வரையில் பார்வையைச் செலுத்த முடிகிறது.
* பிரயாணிகளின் பத்திரத்துக்குக் கதவுகளில் புதிய பாதுகாப்புத் தாழ்ப்பாள் அமைக்கப்பட்டிருக்கிறது.
* மாற்றி அமைக்கப்பட்டுள்ள முன்புறமுள்ள லைட்டுகள் மூலம் 80 அடி வரை இடது புறத்திலும் பார்க்கலாம்
* தனியாக உள்ள கை பிரேக் நெருக்கடியான சமயத்தில் தவறாமல் உதவுகிறது.
* பாதுகாப்பு ரிம் சக்கரங்கள், டியூப் இல்லாத டயர்கள் மற்றும் பல அம்சங்கள் உள்ளன.

அதிக சக்தியுடன் புதிய உறுதியும் வேகமும் உள்ளது

நம்பிக்கைக்கும் சிக்கனத்திற்கும் சிறந்தது
ஆறு சிலிண்டர் என்ஜின் என்பது
நிரூபிக்கப்பட்டுள்ளது





Upswept fin tails give the impression of speed to every line of the car

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்:

**தி பிரீமியர் ஆட்டோமோபைல்ஸ் லிட்.**
குர்லா, பம்பாய்

டீலர்:

**அடிஸன் அண்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
மவுண்ட் ரோடு, சென்னை-2

# நிலாவும் நிலமும்

## சுந்தா

வானத்திலே –

**தாரா :** சந்திரா ! ஏன் என்னுடன் பேசாமலே இருக்கிறாய் ?

**சந்திரன் :** நான் பேசாவிட்டால் நீ வாய் திறந்து பேசக் கூடாதா ?

**தாரா :** நான் பூலோகத்தையே கவனித்துக் கொண்டிருந்தேன்.

**சந்திரன் :** அப்படி என்றால், உன்னுடைய கவனம் வேறு திசையில் திரும்பி விட்டது என்று சொல்லு.

**தாரா :** அப்படியல்ல, சந்திரா ! பூலோகத்திலும் உன் அழகையே நான் கண்டு வியந்து கொண்டிருந்தேன். ஆறுகளில், குளங்களில், கடல்களில் உன் பிரதிபிம்பத்தைக் கண்டு மெய்ம் மறந்திருந்தேன். தென்றலோடு உன் ஒளி கலந்து, தருக்களிடையே உலாவுவதைப் பார்த்துச் சொக்கி இருந்தேன்.

**சந்திரன் :** என் புகழைப் பூலோக மக்கள் பாடிப் பரவுவதைக் கேட்டு நானும் மதி மயங்கி இருந்தேன்.

பூமியிலே –

உள்ளத்தினைக் கொள்ளை கொள்ளும் வெள்ளி நிலவே !
தேன்மழையே தண்ணொளியை வீசும் நிலவே !
நீலவானில் கோலமிடும் இன்ப நிலவே !
பாலமுதை ஞாலமிசை வீசும் நிலவே !
பூதலத்தில் காதலர்கள் நாடும் நிலவே !
ஓவியங்கள் காவியங்கள் போற்றும் நிலவே !
மண்ணுலகில் விண்ணொளியை ஊட்டும் நிலவே !
கண்ணருகே விண்ணழகைக் காட்டும் நிலவே !

வானத்திலே –

**தாரா :** உன் மீது நான் உள்ளன்பு கொண்டிருப்பதால், உன் புகழைப் பாடக் கேட்டு மட்டில்லா ஆனந்தம் அடைகிறேன். உனக்குப் பாமாலை சூட்டினால் எனக்கும் சூட்டினால் போலத்தான். நீ வேறு, நான் வேறு அல்ல.

**சந்திரன் :** உன் மனநிலை என்னைப் பூரிக்கச் செய்கிறது தாரா !

**தாரா :** சந்திரா ! உன் வடிவம் இனிமை ; உன் ஒளி இனிமை. உன் வாழ்க்கையே இனிமை. உன்னை உலக மக்கள் விரும்பி விரும்பிக் காண்கிறார்கள். இப்படிப்பட்ட உனது அன்பை நான் அடைந்திருக்கிறேன்.

**சந்திரன் :** உன்னைப் போலவே உலக மக்கள் அனைவரும் இன்பமும் ஆனந்தமும் அடைய வேண்டும் என்பதே என் விருப்பம்.

**தாரா :** உன் தொடர்பினால் நான் புனித அன்பை அடைந்தது போல், உலகத்துப்



பொருள்கள் யாவும், உன் ஒளியினால் புனிதஅழகுபெறு கின்றன. அற்பப் பொருள்களும் அற்புதமாகின்றன.

பூமியிலே —

கவிஞன்: திங்கள் பொழிந்திடும் முத்து மழையிலே
கங்கையே ஆகிடும் ஆறெல்லாம் பாரிலே!
காரெலாம் மாறிடும் வெள்ளிக் குவியலாய்;
ஊரெலாம் விண்ணகப் பட்டணம் ஆகிடும்!
மலையெலாம் வெண்பனி இமயமே ஆகிடும்;
அலைகடல் யாவுமே பாற்கடல் ஆகிடும்!

வானத்திலே —

தாரா: அதோ பார்! வெள்ளி உலகிலே வெள்ளி நகரங்கள்! வெள்ளி நகரங்களில் வெள்ளி வீதிகள்; வெள்ளி வீதிகளில் வெள்ளி வீடுகள்; வெள்ளி வீடுகளில் வெள்ளிப் பதுமைகள்!

சந்திரன்: என்னை இப்போது எத்தனையோ குழந்தைகள் வியப்புக் கண்களுடன் பார்க்கின்றன. எத்தனையோ சின்னஞ் சிறு கைகள் என்னை அழைக்கின்றன.

பூமியிலே —

தாயார்:

நிலா நிலா ஓடி வா
நிற்காமல் ஓடி வா
நிலாக் கதிர் கொண்டு வா
நிலா மலர் சூட்ட வா

சின்ன முகம் காண வா
இன்னமுதம் ஊட்ட வா
குஞ்சு முகம் காண வா
கொஞ்சும் மொழி பேச வா



வானத்திலே —

சந்திரன்: ஒவ்வொரு குழந்தைக்கும் நானே தாயின் முகமாயும், ஒவ்வொரு தாய்க்கும் நானே குழந்தையின் முகமாயும் இருக்கிறேன்.. அன்னையின் அன்புக்கு ஈடான அன்பு வேறு கிடையாது; தன்னலம்அற்றதுதாயன்பு.

தாரா: ஏன் காதல் என்ற அன்பு இல்லையா?

சந்திரன்: இருக்கிறது தாரா! ஆனால் அது தன்னலம் அற்றதல்ல. பரஸ்பர நலத்தை வித்தாகக் கொண்ட அன்பு அது.

தாரா: மக்களுடைய காதல் வாழ்க்கையைக் கவனிக்கையில் துக்கமாய் இருக்கிறது. அவர்களுடைய வாழ் நாள் சொற்பம். அதற்குள் அன்பின் எல்லையை எப்படி அவர்கள் காண முடியும்?

சந்திரன்: அவர்களுடைய வாழ்நாள் சொற்பந் தான்; ஆனால் ஆசையோ அளவு கடந்தது. ஆசை ஆசை என்று தவிக்கிறார்கள். நிலையில்லா வாழ்விலே நித்திய இன்பத்தைத் தேடுகிறார்கள்.

தாரா: தேடியதைக் காணாமல் கலங்குகிறார்கள்.

சந்திரன்: இன்று உள்ளது நாளை நிலைக்குமோ என்ற பதற்றத்துடனேயே எதையும் அனுபவிக்கிறார்கள்.

தாரா: அதனால்தான் வெண்ணிலா விளக்காமா என்று காதலர்கள் கேட்கிறார்கள் போலும்!

பூமியிலே —

காதலன்: நீலப்பூங் காவிலே வெள்ளிமான் ஓடுது
கோலக் கிளியே நீ எங்கு சென்றாய்?

வானத்துப் பொய்கையில் தாமரை பூத்தது
கானம் இசைத்திட வந்திடுவாய்!

மேகமாம் காட்டிலே அம்புலி பாயுது
வேகமாய் வந்திடு மோகினியே!

வானத்திலே —

சந்திரன்: ஆம், மானிடக் காதலர்களுக்கு என்னுடைய ஒளியை வீண் போகவிட மனம் இல்லைதான்.

தாரா: போன இரவு திரும்பாதல்லவா?

சந்திரன்: விதவித மனப்போக்கு உடையவர்கள் என்னைக் கண்டு விதம் விதமான ஆசைகளையெல்லாம் வெளியிடுகிறார்கள்.

பூமியிலே —

வெள்ளி நிலாவிலே வீற்றிருப்பேன்;
நெஞ்சை
அள்ளிடும் காவியம் கற்றிடுவேன்

*

கற்பனை வாகனம் ஏறிடுவேன் — ஒரு
அற்புத லோகத்துக் கேகிடுவேன்

*

கொஞ்சும் இதழ்களின் கொஞ்சல்கள்
ஒப்பந்திட
நெஞ்சோடு நெஞ்சினைச் சேர்த்திடுவோம்

*

நண்பரைக் கூட்டியே நல்விருந்
தூட்டியே
உண்பதைக் கண்டு மகிழ்ந்திடுவேன்

*

கூட்டிசை பாடியும் கோல வெறியுடன்
நாட்டியம் ஆடியும் இன்புறுவேன்

*

வெள்ளிக் குளத்திலே கள்ளம் கரைத்
தேந்தன்
உள்ளத்தைத் தூய்மைப் படுத்திடு
வேன்

*

தன்னை மறந்திட்டுக் கூடுவிட்டுப்
பாய்ந்து
உன்னதப் பேரின்ப வீடடைவேன்

வானத்திலே —

தாரா: மண்ணுலகத்து மக்கள், கண்ணுக்கு எட்டாத விண்ணுலகை, கருத்தால் எட்டப் பார்க்கிறார்கள். அதற்கு நீ உன்னுடைய தண்ணொளியினால் உதவி செய்கிறாய்!

சந்திரன்: கவிகளும் வேதாந்திகளும், மறைபொருளின் தன்மையைக் கருதிக் கருதிக் காண முயலுகிறார்கள். என் உதவியை நாடி இறைவனைத் தேட முயலுகிறார்கள்.

பூமியிலே —

வேதாந்தக் கவிகள்:

நீலக் கடலிலே கோலப் படகேறி
நித்திய மணி தேடுவோம்;

வானக் கடலிலே ஞானப் படகேறி
விண்ணின் மணி தேடுவோம்.




# மிகச் சிறந்ததே அவர்களுக்கு நல்லது

உங்கள் குழந்தைகள் நல்ல சுத்தமான காற்றை சுவாசிக்க, உல்லாசமாக விளையாட




*Crystal*

ஒரு கிரிஸ்டல்

அறையைக் குளிர்ச்சி செய்யும் சாதனம் சிறந்தது



# உரிமையின் எல்லை

“சாந்தா! நீங்கள் எப்போது திரும்பி வந்தீர்கள்?'' சாந்தாமலர்ந்த முகத்துடன் ''பத்து நிமிஷம் ஆகியிருக்கும் மாமி!'' என்று பதில் கூறினாள்.

இருபது வயதுக்குள்ள பூரிப்பு அவள் உடலில் இருந்தது. அதைத் தவிர விசேஷ ஆடை ஆபரணங்கள் ஒன்றும் அவளை அலங்கரிக்கவில்லை. தெருவில் மூட்டைக்காரனிடம் வாங்கிய ஆறு ரூபாய்ப் புடவை; கழுத்தில் கருகு மணியும், தங்க நிறப் பாசியும் கோத்த மாலை; மூக்கின் இரு பக்கமும் வேப்பங் குச்சி; காதில் மட்டும் எண்ணெய் இறங்கிய வெள்ளைக்கல் இளவார்; கையில் கண்ணாடி வளையல்கள். முகத்தில் என்றும் வாடாத ஒரு புன்னகை!

''நீ போய்விட்டு வந்தது என்ன விசேஷம்?'' என்று கேட்டாள் கமலா.

''ஒன்றுமில்லை; மயிலாப்பூரில் இவர் மாமா பெண் ஒருத்தி இருக்கிறாளே, அவளைப் பார்த்து நாளாகிறது என்று [...] போனோம். அப்படியே [...] போய்விட்டுவந்தோம்.''

''[...]தான் அவள்?''

[...] கொடுத்தாள். [...] கடலையும் வறு[...]ம்.''

''போதுமே [...] கமலா.

[...] என்ன [...] முடியும், [...]றதோ கண் [...]ர்க்க வேண்டு இருந்தது.



போனோம். அவளால் என்ன செய்ய முடியும்? மூன்று குழந்தைகளையும் வைத்துக் கொண்டு அதுகூட முடியவில்லை.''

''குழந்தைகளுக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு போனாயோ?''

''வாசலிலே வேர்க்கடலைப் பருப்பு வாங்கினேனே? அதை உருண்டை பிடித்தேனே நேற்று? அதைத்தான் கொண்டு போய்க் கொடுத்தேன்.''

''இந்தப் படாடோபம் நான் எனக்குப் பிடிப்பதில்லை. நீ எதற்கு அந்தக் குழந்தைகளுக்குக் கொண்டு போக வேண்டும்? உன்னைப் பார்த்தால் கருவேப்பிலைக்காரி மாதிரி இருக்கிறாய். நாலு காசு சேர்த்து மூக்குக்கு ஒரு தழுக்கு வாங்கிப் போட்டாலும் உண்டு.''

''இருக்கலாம், மாமி. கருவேப்பிலைக்காரி மாதிரி இருந்தாலும் ஆசை இருக்கும் அல்லவா?'' என்று சற்று அலுப்புடன் கூறினாள் சாந்தா.

''நீ போன இடத்தில் வேறு என்ன விசேஷம்?'' என்று வினவினாள் கமலா.

''கடற்கரையில் என் அத்தை பெண்ணைப் பார்த்தேன்.''

''அவள் எப்படி இருக்கிறாள்?''

''சந்தோஷமாக இருக்கிறாள். தீபாவளிக்குப் புடவை வாங்கி விட்டாள். பொட்டலத்தைப் பிரித்துக் காட்டினாள். நாலும் பட்டும் கலந்த கோடம்பாக்கம் புடவை. கறுப்பும் நீலமும் கலந்த உடலுக்கும், நட்சத்திர பார்டருக்கும் பார்க்க........''

''நீயும் தீபாவளிக்கு ஒன்று அப்படி வாங்கிக் கொள்ளேன். நீங்கள் இருக்கிற நிலையிலே உனக்கு என்ன பணம் அனுப்ப வேண்டியிருக்கு?''

''பெரியவர்கள் என்ன செய்வார்கள்? கிராமத்தில் புரோகிதத்தில் என்ன வரும்படி கிடைத்துவிடும்?''

''எல்லாம் சரிதான். தனக்கு மிஞ்சித்தானே தருமம்? அவர்களுக்கு அரிசி வருகிறது. கொல்லையில் இரண்டு விதை வைத் தெளித்தால் கீரையோ, காயோ வந்து விடுகிறது. யாரோ தானம் கொடுத்த பசு இருக்கிறது என்றும். வேறு என்ன வேண்டும்? வருகிற ஐம்பது ரூபாய்ச் சம்பளத்தில் பத்து ரூபாய் அவர்களுக்கு அனுப்பா விட்டால் என்ன வந்து விடும்? ஐந்து ரூபாய் அனுப்புவது மிருதியை ஓர் உண்டியில் போட்டு வைப்பது.''

இதற்குள் கமலாவின் பெரிய மகன் வந்து விடவே அவள் தன் இடத்துக்குப் போய் விட்டாள்.

சாந்தா தன் இடத்துக்குத் திரும்பியதும் கமலாவின் சொற்கள் அவள் மூளையில் ரீங்காரம் செய்தபடி இருந்தன.

அவளுக்கு மணமாகி வருடம் ஐந்து ஆகியிருந்தது. அதற்கு முன்னும் பிறந்த வீட்டில் பெரிய குடும்பத்தில் பொறுப்புடன் இருந்தவள். மணமான மறு வாரமே கணவனுடன் குடித்தனம்செய்ய வந்து விட்டாள். பணமுடை இருந்தாலும் மனமுடை இருக்கவில்லை. அவளும் சீதாராமனும் காலி வயிற்றுடனும், நிறைந்த உள்ளத்துடனும் சந்தோஷமாகவே வாழ்ந்து வந்தனர். தனக்கு ஒன்று இல்லையே என்று அவள் ஏங்கிய நாளே கிடையாது.

கமலா இருந்த வீட்டில் ஓர் அறையில் குடிவந்த நாள் முதல் சாந்தாவுக்கும் அவளுக்கும் நல்ல நட்பு ஏற்பட்டு விட்டது. அவள் சாந்தாவை விடப் பத்து வயது பெரியவளாக இருந்தாள். அதனால் சாந்தா அவள் பேச்சுக்கு மிக்க மதிப்பும் மரியாதையும் கொடுத்தாள்.



'மாமி சொல்வதில் என்ன தவறு? தக்க தருணம் வரும்போது அந்தந்த ஆசைகளை அநுபவிக்க வேண்டியதுதான். என்றைக்குத்தான் எனக்கும் பணம் சேர்ந்து, வேண்டியதை வாங்கிக் கொள்வேனோ!' என்று தனக்குள் நினைத்துக் கொண்டாள் சாந்தா.

அன்றுமுதல் வெறும் மிளகு தாளித்த ரசமும் சாதமும்தான் சீதாராமனுக்குக் கிடைத்தன. அவன் ஏன் என்று ஒரு வார்த்தை கூடக் கேட்கவில்லை.

சாந்தா ஒரு மண் உண்டி வாங்கிக் கொண்டாள். அதில் சில்லறை சில்லறையாகப் போட்டு வந்தாள்.

தீபாவளிக்கு முன்னால் அவள்கணவன் வந்து ஒரு செய்தியைச் சொன்னான். அவன் வேலை செய்து கொண்டிருந்த கடையின் மயிலாப்பூர் கிளைக்கு அவனை மாற்றி விட்டார்கள். தனக்கு அன்றாடம் வேலைக்குப் போவதற்குச் சௌகரியம் என்று மயிலாப்பூரிலேயே ஓர் இடம் பார்த்து விட்டான்.

ஜாகை மாற்றிக் கொண்டு போகும் போது சாந்தாவுக்குக் கமலாவை விட்டுப் பிரிவது மிகவும் சிரமமாக இருந்தது.

மயிலாப்பூருக்குச் சென்றதும் அவளுக்கு ஒரு தோழி கிடைத்தாள். இவர்களுக்கென்று கட்டி விட்டது போல ஒரு கூடம், அதன் இருபுறமும் இரண்டு அறைகள்—இப்படி ஒரு வீடு இருந்தது. அதில் ஓர் அறையை இவர்கள் எடுத்துக் கொண்டார்கள். மற்ற அறையில் ஒருவர் இருந்தார். அவருக்கு ஓட்டலில் வேலை. கூடம் இருவருக்கும் பொதுவாக இருந்தது. புதிய சிநேகிதி முத்து சாந்தாவிடம் மிக்க அன்பாகப் பழகிக் கொண்டாள்.

தீபாவளிக்கு ஒரு வாரம்தான் இருந்தது. சாந்தா தன் உண்டியை உடைத்துப் பார்த்தாள். எப்படியோ கமலா சொன்னது போலத் தன் வாயையும் வயிற்றையும் கட்டி, கணவனுக்கு வெறும் மோரும் சோறும் போட்டு, பத்து ரூபாய் வரை சேர்த்து விட்டிருந்தாள். கணவனிடம் மெதுவாக நீலப் புடவை விவரத்தைச் சொன்னாள்.

"அதற்கென்ன, சாந்தா? எனக்கு எப்படியும் ஒரு வேஷ்டியும், துண்டும் கடையில் கொடுத்து விடுவார்கள். உன்னிடம் இருக்கும் ரூபாயோடு கூடக் கொஞ்சம் போட்டுப் புடவை வாங்கி விடலாம். வா, இன்றைக்கே போகலாம்" என்றான் சீதாராமன் மிகுந்த உற்சாகத்துடன்.

அவள் கேட்டுக் கொண்டிருந்தபடியே நீலப் புடவை மயிலாப்பூரிலேயே கிடைத்து விட்டது.

'எப்பொழுது தீபாவளி இரவு வரும், புடவையைப் பிரிக்கலாம்' என்று சிறு குழந்தை போல ஏங்கித் தவித்தாள் சாந்தா. ஆனால் அன்று மாலை சீதாராமன் சொன்ன விஷயம் அவளது உற்சாகத்தைச் சிறிது பாதித்தது. ஆயினும் அவள் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

"சாந்தா! நம்ப ருக்குவும் மாப்பிள்ளையும் நாளை சாயங்காலம் சென்னைக்கு வருகிறார்களாம். தீபாவளிப் பண்டிகைக்கு இங்கே அழைக்கலாமா?" என்று கேட்டான் சீதாராமன்.

சீதாராமனுக்குத் தன் தங்கையிடத்தில் அபார வாஞ்சை. அவள் நல்ல ஸ்திதியில் இருந்தாள். டில்லியில் அவள் கணவன் அறுநூறு ரூபாய்ச் சம்பளத்தில் இருந்தான். அவள் இரண்டு வருஷங்களுக்கு ஒரு முறைதான் தமிழ் நாட்டுக்கு வருவது வழக்கம். அது அந்தக் குடும்பத்தில் ஒரு விழாவாக முடியும்.

"என்ன அப்படிக் கேட்கிறீர்களே?"

"காரணத்தோடு தான் கேட்கிறேன், சாந்தா. ருக்கு வந்தால் அவளுக்குப் புடவையும், மாப்பிள்ளைக்கு வேஷ்டியும் தர வேண்டாமா? உன் புடவை...."

"நன்றாகச் சந்தேகப் பட்டீர்கள்? அவளுக்குக் கொடுக்க எனக்குத் தயக்கமா? நீங்கள் உடனே போய்ப் புடவை வாங்கின கடையில் கணக்கில் ஒரு நல்ல வேஷ்டியும் வாங்கிக் கொண்டு வந்து விடுங்கள். மெள்ளக் கொடுத்து விடுவோம். எனக்குத் தான் இப்போ

# அநுத்தமா

பணத்தைச் சேர்க்கத் தெரிந்து விட்டதே?" என்று சிரித்தாள் சாந்தா.

உடனே சீதாராமன் போய் ஒரு ஜதை வேஷ்டி வாங்கிக் கொண்டு வந்து விட்டான். அன்று கொஞ்சம் பட்சணத்தை எடுத்துக் கொண்டு கமலா வந்தாள். சாந்தா தன் நாத்தனார் வருகையைப் பற்றிச் சந்தோஷத்துடன் கூறினாள். ஆனால் கமலா அவ்வளவு உற்சாகத்துடன் அதை ஏற்கவில்லை.

"போதுமே உன் எக்களிப்பு! எத்தனையோ நாட்களாய் பட்டினியிருந்து ஒரு புடவை வாங்கிக் கொண்டாளாம். அதற்கு ஒருத்தி பங்குக்கு வந்து விட்டாளாம்! உன் கும்மாளத்தைப் பார்த்தாலே எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது. ஏதாவது சொல்லித் தட்டிக் கழித்து விடு. பண்டிகை முடிந்த பிறகு வரட்டுமே? ஒரு நாள் வைத்துச் சாப்பாடு போட்டால் கிடக்கிறது. இருபத்தைந்து ரூபாயாவது இல்லாமல், தீபாவளி வந்து விட்டுப் போகாது."

கமலா போன பிறகு சாந்தா யோசித்தாள். அவள் சொல்வதில் நியாயம் இருப்பதாகவே பட்டது சாந்தாவுக்கு. ரயிலுக்குப் போய் அழைத்தால்தான் அவர்கள் இங்கு வருவார்கள். போகாமல் இருந்து விட்டால் அவர்கள் நேரே ருக்குவின் நாத்தனார் வீட்டுக்குப் போய் விடுவார்கள். சாந்தாவின் மூளை வெகு தீவிரமாக வேலை செய்தது.

* * *

"என்ன சாந்தா ஏன் தொண்டு இறாய்?" என்று மிகுந்த கவலையோடு கேட்டான் சீதாராமன்.

"ஜுரமாயடிக்கிறது. சறுக்கி விட்டது. நன்றாகச் சுளுக்கிக் கொண்டு விட்டது. குனிய முடியவில்லை, நிமிர முடியவில்லை." அநுப்பாக வந்தது சாந்தாவின் குரல்.

"அப்பொழுது ருக்கு வந்தால் உன்னால் காரியம் செய்ய முடியுமா?" என்று கவலையோடு கேட்டான் சீதாராமன்.

"என்ன செய்வது? முடியாதுதான்."

"சாந்தா! ஒன்று செய்கிறேன். ரயிலுக்குப் போனால் இங்கு அழைக்காமல் இருக்க முடியாது. போகாமல் இருந்து விடுகிறேன். அவர்கள் அங்கே போய் விடுவார்கள். பிறகு பண்டிகை அன்று காலை கங்கா ஸ்நானம் முடிந்த பிறகு, புடவையும் வேஷ்டியும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வந்து விடுகிறேன்" என்றான் சீதாராமன்.

ஆனாலும் வெகு தூரத்திலிருந்து பல நாட்கள் கழித்து வரும் தன் தங்கையை அழைக்க முடியவில்லையே என்று சீதாராமன் மிகவும் வருந்தினான். அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

தன் கால் சுளுக்கினால் காரியம் கெட்டு விட்டது என்று சுட்டிக் காண்பிக்காமல் இருப்பதோடு அல்லாமல், மனதை மாற்றி மகிழ்ச்சியோடு இருக்கும் தன் கணவனைக் காணக் காணச் சாந்தாவின் உள்ளம் பெருமிதம் அடைந்தது. கமலா மாமியைப் போல நல்ல தோழி தனக்கு எங்கே கிடைக்கப் போகிறாள் என்று மனத்துக்குள் எண்ணி மகிழ்ந்தாள் சாந்தா.



"சாந்தா! கங்கா ஸ்நானம் முடிந்ததும் நீ ஆசையோடு வாங்கிக் கொண்ட புடவையை நீயே கட்டிக் கொள். ருக்குவுக்கு வேறு ஏதாவது பார்த்துக் கொள்ளலாம்" என்றான் சீதாராமன்.

சாந்தா இரவு படுக்கையில் படுத்தாள். சீதாராமன் மட்டும் வாசலிலேயே திண்ணையில் அமர்ந்திருந்தான். தன் மனதின் ஏக்கத்தையும் ஏமாற்றத்தையும் சாந்தாவுக்குக் காட்ட மனமில்லாமல் காற்று வாங்குவதாகச் சாக்குச் சொல்லி வாசலிலேயே இருந்தான்.

சாந்தா! கண் உறங்கி விட்டாள். அப்பொழுது மணி பதினொன்று இருக்கும். வாசலில் ஒரு கார் வந்து நின்றது. ருக்குவும் அவள் கணவரும் இறங்கி வந்தனர். அந்தச் சந்தடி கேட்டுச் சாந்தா விழித்துக் கொண்டு வெளியே வந்தாள். உள்ளே வந்த ருக்கு, "மன்னி!" என்று சாந்தாவை அணைத்துக் கொண்டாள்.

"அண்ணா! நீ ஏன் ரயிலடிக்கு வரவில்லை? எனக்கு அழுகைகூட வந்து விட்டது" என்றாள் ருக்கு. சீதாராமன் அசடு வழியச் சிரித்து மழுப்பினான். மாப்பிள்ளை வேறு, "ஆமாமப்பா, சீதாராமா! எங்களுக்கு நீ இல்லாதது மிகவும் ஏமாற்றமாக இருந்தது. இந்தத் தடவை நேரே இங்கேதான் வந்து இறங்கி விடுவது என்ற தீர்மானத்தில் வந்தோம். என் தங்கை வீட்டுக்கார் வந்ததும் அதில் அவர்கள் வீட்டுக்குப் போகாமல் இங்கே எப்படி வருவது? அங்கே இரவு விருந்து சாப்பாடு உண்டோம். உடனே அவர்கள் வண்டியையே கேட்டுக் கொண்டு இங்கே புறப்பட்டு வந்தோம். ஏனப்பா, தீபாவளிக்கு மாப்பிள்ளையாக வேட்டகத்துக்குப் போவதற்குச் சமானம் ஏது உண்டு?" என்று கேட்டான்.

சீதாராமன் நெஞ்சில் உணர்ச்சி உருண்டது. அவன் பேசவே யில்லை. எல்லோரும் படுத்துக் கொண்டனர். சீதாராமனின் அறையில் மாப்பிள்ளை படுத்தார். பெண்கள் மூவரும் கூடத்தில் படுத்தார்கள். சீதாராமனும் குடித்தனக்காரரும் தெருத் திண்ணையில் ஒண்டிக் கொண்டனர். சீதாராமனுக்கு உறக்கமே வரவில்லை. எல்லா ஓசைகளும் அடங்கின. பிறகு மெதுவாகச் சீதாராமனிடம் பேச்சுக் கொடுத்தார் அவன் வீட்டுக் குடித்தனக்காரர்.

"சார், ஏன் கவலைப் படுகிறீர்கள்? எங்கள் ஹோட்டலில் தீபாவளிக்காக ஸ்பெஷல் பட்சணப் பாக்கெட் ஒன்று கொடுத்திருக்கிறார்கள். உங்கள் மனைவிக்கு நடக்க முடியாவிட்டால் பரவாயில்லை. என் மனைவி ஒத்தாசை செய்வாள். நாம் இருவரும் ஒன்றாகவே பண்டிகை கொண்டாடுவதாக இருந்ததாகவே காட்டிக் கொள்வோம். இரண்டு வீட்டில் இருக்கும் சாமான்களை நிரவி வைத்துக் கொண்டு சமாளித்து விடலாம். நீங்கள் ஏன் கலங்குகிறீர்கள்? ஏன் சார், ஒரு சமயத்துக்கு உதவாத மனிதர் எதற்கு?" என்றார். அந்தச் சொல்லைக் கேட்டதும் சீதாராமன் அப்படியே வியப்பும் மகிழ்ச்சியும் மேலிட்டு உணர்ச்சி வசப்பட்டான்.

விடியற்காலையில் வெந்நீர் போட்டு மங்கள ஸ்நானம் செய்தார்கள். ஒரு தட்டில் நீலப்புடவையையும் மாப்பிள்ளை வேஷ்டியையும் வைத்துக் கொண்டு வந்தாள் சாந்தா. சீதாராமன் இரு மணைகளைப் போட்டு ருக்குவையும் அவள் கணவனையும் இருக்க வைத்தான்.

புடவையும், வேஷ்டியும் பெற்றுக் கொண்டு ருக்குவும் மாப்பிள்ளையும் எழுந்தனர். மாப்பிள்ளை புத்தாடை உடுத்திக் கொண்டு வந்தான்.

"ருக்கு! புடவை கட்டிக் கொள்ளவில்லை?" என்று பாதி வருத்தமும், பாதி சந்தேகமுமாகக் கேட்டான் சீதாராமன்.

"இல்லை, அவள் இப்பொழுது ஒன்றும் புதிது பிரித்துக் கட்டிக்கொள்ள வேண்டாம் என்று என் அம்மாவின் உத்தரவு" என்றான் மாப்பிள்ளை தயங்கியபடியே.

ருக்கு முகத்தை மூடிக்கொண்டு உள்ளே ஓடிவிட்டாள். அவள் நாணத்தைக்கண்டு களித்துக் கொண்ட யாவரும் மகிழ்ச்சியோடு புன்னகை பூத்தனர். உள்ளே ருக்கு தன் மன்னியிடம் "மன்னி! உனக்கு ஒரு புடவை வாங்கி வரவேண்டும் என்று இவர் சொன்னார். நான்தான் வேண்டாம் என்றேன். அண்ணா வருத்தப்படுவான் என்றேன். நீங்கள் எனக்குப் புடவை தருவீர்கள் என்று தெரியும். இதே சமயம் உனக்குத் திருப்புவது போல வாங்கலாமா?" என்றாள்.

பிறகு ருக்குவின் வற்புறுத்தலின் மீது நீலப் புடவையைச் சாந்தாவே பிரித்துக் கட்டிக் கொண்டாள். சாந்தாவும் அவள் தோழி முத்துவும் விருந்து சமைத்து எல்லோருக்கும் போட்டு, உபசரித்துச் சுறுசுறுப்பாக வேலை செய்தனர். எல்லோரும் உண்டு விட்டுச் சற்று இளைப்பாறினர். இதற்குள் ருக்குவின் நாத்தனார் வீட்டிலிருந்து கார் வந்து விடவே ருக்குவும் மாப்பிள்ளையும் அங்கே போய்ச் சற்று இருந்துவிட்டு வருவதாகக் கிளம்பினர். நண்பர்களைப் பார்த்து விட்டு வரச் சீதாராமனும் முத்துவின் கணவரும் புறப்பட்டனர்.

முத்துவும், சாந்தாவும் கூடத்தில் படுத்துக் கொண்டு ஏதோ கதை பேசிக் கொண்டிருந்தனர். கமலா அப்பொழுது வந்தாள். சாந்தாவைக் குறிப்பாக அழைத்துக்கொண்டு அவள் அறைக்குள் புகுந்ததும், முத்துவும் சமயோசிதமாக அங்கிருந்து நழுவி விட்டாள்.

கமலா சாந்தாவிடம் பண்டிகை விவரம் விசாரித்தாள். சாந்தா எல்லாம் சொன்னதும் கமலா சூள் கொட்டினாள். "அவளுக்கு அந்தப் புடவை அந்தஸ்துக்கு ஏற்றதாகப் பட்டிருக்காது. அதற்கு ஏதோ சொல்லித் தட்டிக் கழித்திருக்கிறாள். 'போதும்? இதோடு நிறுத்திக் கொள். இன்னமும் அவளை இங்கே பத்து நாட்கள் இருக்கும்படி உபசரிக்காதே" என்றாள் கமலா.

"அவள் எவ்வளவு அன்போடு அண்ணா வீட்டுக்கு ஓடி வந்திருக்கிறாள். அவள் அன்பு இருக்கட்டும். மாப்பிள்ளைதான் என்ன அன்போடு பழகினார்? அந்த அன்பைப் புறக்கணிக்க முடியுமா மாமி?" என்று கேட்டாள் சாந்தா.

"அப்படியென்றால் நான்தான் உனக்கு வேண்டாதவளா? நான் போகிறேன்" என்று கடகடப் பேசிவிட்டுத் தாம்பூலம் கூட வாங்கிக் கொள்ளாமல் கிளம்பி விட்டாள் கமலா.

சாந்தா அவள் சென்ற திக்கையே நோக்கிக் கொண்டு நின்றாள். இத்தனை நாட்கள் பழகின ஒரு தோழி போய் விட்டாளே என்ற வருத்தம் ஒரே ஒரு விநாடி தோன்றி மறைந்து விட்டது.

'அண்ணாவின் மனசு புண்படும் என்று எனக்குப் புடவை வாங்கவில்லையாம். அவள் மட்டும் ஒன்று வாங்கி என்னிடம் கொடுத்திருந்தால், அவர் தன் ஏழைமையைக் கட்டிக் காட்டியதாக எண்ணி வருத்தப்பட்டிருப்பாரே? அத்தகைய அன்பான ஒரு பெண் என் நீலப் புடவையைக் கொண்டு போய் விடுவாளே என்று யோசித்து விட்டேனே ஒரு கணம்! என் ருக்குவின் ஆழ்ந்த அன்பே அன்பு!' என்று எண்ணி எண்ணி மகிழ்ந்தாள் சாந்தா.












# T·A·S·ரத்தினம்

## பட்டணம் பொடி

நிறைந்த காரம், இனிய மணம், பொன்நிறம் உள்ளது

துணிகளின்
பாதுகாப்பிற்கும்
சிக்கன சிலவிற்கும்
தூய வெண்மைக்கும்
சிறந்தது!

# பவர்லைட் சோப்

POWERLIGHT
SPECIAL SOAP
TRADE MARK
BEST FOR WASHING
KUMBAKONAM

பவர்லைட் சோப்

POWER LIGHT SOAP

P.G.K.& Bros.

**பவர் லைட் சோப்**

நியூ சோப் ப்ரொடியூஸர்ஸ், கும்பகோணம்

போன் : 22
தந்தி : Powerlight

---

On this happy DEEPAVALI occasion we offer our heartiest greetings to all our well-wishers, friends and customers

# A. S. MANICKAM & CO.

**PAINT MERCHANTS**

46, VENKATACHALA MUDALI STREET, PARK TOWN, MADRAS-3

Telegrams: "SHELLPAINT" Telephone: 3642

*

*Direct Importers and Main Stockists for:*

Messrs **Jenson & Nicholson (India) Ltd.**
Messrs **Shalimar Paint, Colour & Varnish Company Private Limited**
Messrs **British Paints (India) Limited**
Messrs **East India Paint & Chemical Works Ltd.**
Messrs **Asian Oil & Paint Company (India) Private Ltd.**
Messrs **Noble Paint & Varnish Co. Private Ltd.**
Messrs **Swaika Oil Mills**
Messrs **Gangson's Brushware**



SUPPLIERS TO:

CORPORATION, GOVERNMENT DEPARTMENTS, INDIAN STORES DEPARTMENTS PUBLIC BODIES, PORT TRUSTS, MILLS, RAILWAYS AND STATES ETC.

உடனே, தாமதமின்றி மால்வா ராஜ்யம் மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெறுவதாகக் குதித்தான் கர்ஷாப் மாலிக்.

இதைக் கேட்ட டில்லி சுல்தான் ஜலாலுதினுக்கு உடல் சிலிர்த்தது.

"இந்தியா முழுவதற்கும் தாங்கள் ஏக சக்ராதிபதியாக விளங்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை" என்றான் மாலிக் தொடர்ந்து.

ஜலாலுதின் சிம்மாசனத்திலிருந்து துள்ளி எழுந்தான். கோபத்தினால் அல்ல; மண்ணாசை அவனை அவ்விதம் உந்தித் தள்ளியது.

"பேஷ்! நீதான் என் உண்மையான மருமகன்; என் மீது அளவு கடந்த பக்தியும் விசுவாசமும் உள்ள மாப்பிள்ளை" என்று மாலிக்கைத் தட்டிக் கொடுத்தான்.

சுல்தானிடம் விடைபெற்றுக் கொண்டு தர்பாரிலிருந்து கர்ஷாப் மாலிக் வெளியே சென்ற அதே சமயத்தில், தர்பார் மண்டபத்தின் பலகணியிலிருந்து ஒரு பெண்ணின் உருவம் ஆத்திரத்தினால் பெருமூச்சு விட்டுக் கொண்டு அப்பால் நகர்ந்து சென்றது.

பலகணி வழியாக மேற்படி நாடகத்தைக் கவனித்துக் கொண்டிருந்த பீகம் ஜலாலுதீன், மாலிக்கின் கண்களில் தாண்டவமாடிய வஞ்ச வெறியைக் கவனிக்கத் தவறவில்லை!

அரண்மனையில் இருந்து வந்த மாலிக்கையும் அவனது தாயாரையும், வேலைக்காரர்களைப் போல் பீகம் இழிவாக நடத்தி வந்தாள். அதன் காரணமாக மாலிக்கின் மனம் கொதித்துக் கொண்டிருந்ததை டில்லி மகாராணியாக விளங்கிய ஜலாலுதினின் மனைவி நன்கு அறிவாள்.

எனவே, மாலிக்கின் மனத்தில் ஏதோ ஒரு பயங்கரமான திட்டம் உருவாகி வருவதை அவள் உணர்ந்து கொண்டாள்.

மாலிக்கோ சிறிதும் தாமதமின்றி டில்லி மாநகரை விட்டுப் புறப்பட ஏற்கனவே ஏற்பாடுகள் செய்திருந்தான். எனவே, அவனை இனித் தடுத்து நிறுத்த முடியாது என்பதைப் புத்திசாலியான பீகம் தெரிந்து கொண்டாள்.

அவ்வளவுதான்! விதி வேலை செய்யத் தொடங்கியது!

* * *

பன்னிரண்டாவது நூற்றாண்டின் இறுதியில்தான் டில்லியில் மொகலாய சுல்தான்களின் ஆட்சி நிலை பெற்றது. அதிலிருந்து நூறு ஆண்டுகள் வரையில் அவர்களுடைய திருவிளையாடல்கள் வட இந்தியாவின் எல்லைக்கு உட்பட்டே இருந்தன. அதன் பிறகுதான் விந்தியமலைக்கு இப்பால் அவர்களின் கொடிய படையெடுப்பு ஆரம்பமாயிற்று. அந்தப் படையெடுப்பை ஆரம்பித்து வைத்து, அதில் மகத்தான வெற்றியும் பெற்றவன் சுல்தான் ஜலாலுதீனின் நெருங்கிய உறவினனான கர்ஷாப் மாலிக்தான்.

இவன்தான் பிறகு சுல்தான் அலாவுதீனாக விளங்கியவன். கொலை, கொள்ளை, கொடிய போர்களில் தான் செங்கிஸ்கானுக்குச் சீடன் என்பதையும், தனக்குப் பிறகு ஆட்சி புரிந்த பல மொகலாய மன்னர்களுக்கும் குரு என்பதையும் நிலைநிறுத்தியவன்!

ஜலாலுதீனை முறியடித்துச் சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தினாலன்றி, [ராணியின் மீது தான் வஞ்சம் தீர்க்க முடியாது என்பதை உணர்ந்த அலாவுதீன், மால்வா மீது படையெடுத்து வெற்றி பெற்றதுடன் நிற்கவில்லை. மேலும் தென்னிந்தியாவை நோக்கிப் படையெடுத்து மளமள வென்று முன்னேறி வந்தான்.

கடைசியாக, யாதவ ராஜ்யமும் அதன் தலைநகரான தேவகிரியும் அலாவுதீன் இச்சையின் கொடுமைக்கு இலக்காயின. (அன்றையத் தேவகிரியே இன்று தௌலதாபாத் என்று வழங்கி வருகிறது.)]

அப்போது அந்த ராஜ்யத்தை ஆண்டு வந்த ராமதேவ மன்னர், போர் வெறி பிடித்த அலாவுதீனை அதிக காலம் எதிர்த்து நிற்க விரும்பவில்லை. வெற்றி தோல்வி எப்படியாயினும், அலாவுதீனை எதிர்த்துப் போரிட்டால், அவன் நிரபராதிகளான பெண்களையும் குழந்தைகளையும் படுகொலை செய்யமுற்பட்டுவிடுவான் என்பதை உணர்ந்த ராமதேவர், அவனுடன் சமரசம் செய்து கொள்வதே புத்திசாலித்தனமும், ராஜ தந்திரமும் ஆகும் என்று தீர்மானித்தார்.

ராமதேவரின் புதல்வனான சங்கமன் அப்போது ஏராளமான துருப்புகளுடன் தொலைவில் சென்றிருந்ததால், பிரஜைகளுக்கு அதிகக் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படுமுன் அலாவுதீனுடன் சமரசம் செய்து கொள்வதே சிறந்தது என்று அவருக்குத் தோன்றியது.

எனவே, ராமதேவர் அலாவுதீனுக்குத் தமது பொக்கிஷத்தில் ஒரு பகுதியைக் கொடுத்ததுடன், ஏராளமான தங்கப் பாளங்களையும் யானைகளையும் குதிரைகளையும் சமாதானப் பரிசாக வழங்கினார்.

அலாவுதீனின் மண்ணாசைக்கும் பொன்னாசைக்கும் எல்லையுண்டா? ராமதேவரின் பொக்கிஷங்களும் பொருள்களும் அலாவுதீனுக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை!

ராமதேவருடைய பெண்களின் அழகைப் பற்றி ஒற்றர்கள் மூலம் கேள்விப்பட்டிருந்த அலாவுதீன், "நம்முடைய நட்பு நீடித்திருக்கத் தாங்கள் மற்றொரு பரிசு தர வேண்டும்" என்றான் மெதுவாக.




ராமதேவரின் ஹிருதயம் துணுக்குற்றது. தமது சமரச முயற்சி இறுதியில் வீணாகி விடுமோ என்று அவருக்குத் திகில் உண்டாயிற்று. அவர் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரச் சிறிது நேரமாயிற்று.

"அந்தப் பரிசு என்னவோ?" என்றார் ராமதேவர் கடைசியாக.

"என் படையில் ஒரு மகாராஷ்டிரத் தளபதி இருக்கிறார். அவருக்குத் தங்கள் பெண்களில் ஒருத்தியைத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும்" என்றான் அலாவுதீன்.

என்ன, என்ன? அலாவுதீன் படைக்கு ஒரு மகாராஷ்டிரர் தளபதியாக இருக்கிறாரா?

ராம தேவருக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. மொக





வாயர்களுடன் சேர்ந்து ஒரு மகாராஷ்டிரர் அவ்விதம் நாட்டுக்குத் துரோகம் செய்வதென்றால், அதை யார்தான் நம்ப முடியும்?

இருந்தாலும் ராமதேவ மன்னர் தயங்கவில்லை. அந்நிலையில் அவர் என்ன செய்ய முடியும்? அலாவுதீனின் கோரிக்கைக்கு இணங்காவிடில், படுகொலையிலிருந்து பிரஜைகளைக் காப்பாற்றுவதற்காகத் தாம் செய்த சமரச முயற்சிகள் எல்லாம் வீணாகி விடும் அல்லவா?

''சரி, அப்படியே செய்து விடுகிறேன்'' என்றார் ராமதேவர். பக்கத்திலிருந்த அமைச்சர்களும் தளபதிகளும் திடுக்கிட்டனர்.

அதைப் பார்த்த அலாவுதீன் ஆனந்தத்தினால் வாய்விட்டுச் சிரித்தான்.

* *

ராமதேவரின் மகள் மேகலாவுக்கும் மகாராஷ்டிர தளபதிக்கும் ஆடம்பரம் எதுவுமின்றி ஓரளவு இரகசியமாகவே விவாகம் நடந்தது! ஏனெனில் அப்போது ராமதேவரின் மனோநிலை சரியாக இல்லை. அந்தத் திருமணத்தை ராமதேவரின் அமைச்சர்களோ, பொது மக்களோ ஆதரிக்கவில்லை. எனவே, பெயரளவில் திருமணம் நடந்தேறியது.

அலாவுதீன் அந்தத் திருமணத்துக்கு வரவில்லை. அவன் தன் படைகளுடன் மால்வாவுக்குச் சென்றுவிட்டதாக அவனது தூதர்கள் ராமதேவருக்கு அறிவித்தனர். அதுதான் சமயமென்று திருமணத்தை நிறுத்திவிட வேண்டுமென ராமதேவரின் அமைச்சர்கள் வற்புறுத்தினார்கள்.

எனினும், அதற்கு ராமதேவர் இணங்கவில்லை. தாம் கொடுத்த வாக்குறுதியை மீற முடியாதென்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். தவிர, அதை மீறினால் கொடிய அலாவுதீன் தமது ராஜ்யத்தில் படுகொலைப் படலத்தில் ஈடுபட்டு விடுவான் என்ற பீதியும் அவர் மனத்தில் சுழன்று கொண்டிருந்தது.

* * *

ராமதேவரின் தியாகத்தினால் யாதவ ராஜ்யத்தில் அமைதி ஏற்பட்டதெனினும், அவரது மனம் அமைதி இழந்து தவித்தது. தாம் அலாவுதீனுடன் சமரசம் செய்து கொண்டதைக் கேட்டதும், தமது மகன் சங்கமன் கொதித்து எழுவான் என்பது அவருக்குத் தெரியும்.

இச் சந்தர்ப்பத்தில் அவரது மன அமைதியை அடியோடு குலைத்து அவரைத் துடிதுடிக்கும்படி செய்யும் மற்றொரு செய்தியும் வந்தது.

மேகலாவிடம் அலாவுதீன் தகாத முறையில் நடந்து கொண்டு வருவதாயும், அவனது பகட்டில் மயங்கி

மேகலா விழ்ச்சியடைந்து விட்ட தாயும் தூதர்கள் வந்து ராமதேவ ரிடம் முறையிட்டார்கள். ராமதேவ ரின் பொறுமை எல்லை கடந்தது.

'' அலாவுதீன் செய்த துரோகத் துக்கு வஞ்சம் தீர்க்காமல் விடமாட் டேன் '' என்று கர்ஜித்தார்.

சில சிப்பாய்களுடன் அலாவுதீ னின் முகாமுக்குப் புறப்பட்டார். அவரது மனத்தில் பெரும் புயல் அடிக்கத் தொடங்கியது. அவரது கண்களில் கோபக் கனல் வீசியதைக் கண்டு அவரது சிப்பாய்களே அஞ் சினர். ராமதேவரின் அத்தகைய கோப நிலையை அவர்கள் தங்கள் ஆயுளில் கண்டதேயில்லை. தங்கள் மன்னரின் ஆவேசம் எதில் வந்து முடியுமோ என்று அவர்கள் நடுங்கி னர். எனினும், இறுதிவரையில் தங்கள் மன்னருக்குத் துணையாக நின்று, அவர் வெற்றி பெறும்படி செய்ய உறுதி கொண்டார்கள்.

ராமதேவரின் நிலையைக் கண்ட அலாவுதீனின் சிப்பாய்கள் கூடக் கலங்கி வழி விட்டனர்.

* * *

முகாமுக்குள் ராமதேவர் கண்ட காட்சி அவரை மேலும் நிலை குலை யச் செய்தது. அவரது தலை சுழன் றது. அலாவுதீனின் முகாமும் சுழன்றது. கோபாவேசத்தினால் அவரது கண்களின் பார்வை மங்கி யது. எங்கும் அந்தகாரம் சூழ்ந்து பூமியே சுக்கல் சுக்கலாக வெடிப் பதுபோல் அவருக்குத் தோன்றியது.

இந்த நிலையிலிருந்து ராமதேவர் தம்மைச் சமாளித்துக் கொள்ளச் சிறிது நேரமாகியது.

மஞ்சத்தில் சேர்ந்தாற் போல் உட்கார்ந்து கொண்டிருந்த அலா வுதீனும் மேகலாவும் திடுக்கிட்டுப் போய் எழுந்து நின்றதைக் கண்ட தும்தான், ராமதேவருக்குச் சுயப் பிரக்ஞை வந்தது.

'' என்ன அநீதி ! என்ன அக்கிர மம்! மேகலா! நீ என் பெண் அல்ல; என் குடும்பத்தைக் குட்டிச்சுவ ராக்க வந்த பேய் '' என்று பூமியே அதிரும்படி கர்ஜித்தார்.

இச்சந்தர்ப்பத்தில் அலாவுதீன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான். ஆனால், ராமதேவ மன்னர் முந்திக் கொண்டார்.

'' அயோக்கியப் பதரே ! உன் னைக் காட்டிலும் நன்றி கெட்டவன் இந்த உலகில் இருக்க முடியாது. இதோ உன் வாழ்வின் இறுதிக் கட்டம் வந்து விட்டது '' என்று அலாவுதீனைப் பார்த்துக் கூறிய ராமதேவர் உறையிலிருந்து தமது பட்டாக்கத்தியை உருவினார்.

எதற்கும் அஞ்சாத கொடிய அலாவுதீன் கூட ராமதேவ மன்ன ரின் கோபாவேசத்தைக் கண்டுநடுங்கிவிட்டான்.

அலாவுதீன் தன்னைச் சமாளித்துக் கொள்வ தற்குள், மேகலா ஓடி வந்து தன் தந்தையின் இரு கால்களையும் பிடித் துக் கொண்டு விம்மி



விம்மிக் கதறினாள். அவளால் பேசவே முடியவில்லை.

வாயடைத்துப் போய் நின்ற அலாவுதீன் தன்னைச் சமாளித்துக் கொண்டு பேசலானான்:

"யாதவ மன்னரே! மேகலாவின் தந்தையைத் தவிர வேறு யாராவது இவ்விதம் கூறியிருந்தால், அத்தகையோரின் உதிரத்தை இதோ என் வாள் உறிஞ்சியிருக்கும். ஆனால், தாங்கள் அலாவுதீன் சுல்தானின் பட்டமகிஷியினுடைய தந்தை என்ற காரணத்துக்காக நான் தங்களுடைய பதற்றமான வார்த்தைகளைப் பொறுத்துக் கொள்கிறேன்" என்றான் அலாவுதீன் நிதானமாக.

இதைக் கேட்டதும் ராமதேவரின் கோபம் இன்னும் அதிகமாகியது.

"வெறி பிடித்த இந்தத் துரோகி உன் பட்டமகிஷியல்ல . ."

"போதும், நிறுத்துங்கள். ஒரு விஷயத்தை உங்களிடம் நான் மறைத்தது என்மீது குற்றம்தான். அன்று மகாராஷ்டிர தளபதியாக உங்கள் புதல்வியின் கரம் பிடித்தவனும், இதோ உங்கள் முன் நிற்கும் அலாவுதீனும் ஒருவனேதான். அலாவுதீனுக்குப் பெண்ணைக் கொடுக்க உடன்பட மாட்டீர்கள் என்றே நான் மகாராஷ்டிர தளபதியாக மாறினேன். என்னை மன்னியுங்கள்" என்றான் அலாவுதீன்.

அவனுடைய வார்த்தைகளைக் கேட்ட ராமதேவ மன்னர் 'ஆ' என்று அலறி விட்டார்.

உடனே அவர் தன் கால்களைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விட்டுக் கொண்டிருந்த மேகலாவை அன்புடன் தூக்கி நிறுத்தினார்.

"கண்ணே! அழாதே" என்று ஆறுதல் கூறினார்.

ராமதேவரின் கண்களிலும் நீர் துளித்து நின்றது.

மேகலாவின் அன்றைய நிலைக்கு அரசர் ராமதேவர்தான் பொறுப்பாளி அல்லவா?

"அம்மா, யாரோ மகாராஷ்டிர தளபதியாம். முன்பின் தெரியாத அவனை மணந்து கொள்ள உனக்கு விருப்பமா?" என்று கேட்டதற்கு மேகலா அளித்த பதில் அப்போது அவருக்கு ஞாபகத்துக்கு வந்தது.

"நீங்கள் எப்படிச் செய்தாலும் சரி; ஒரு காலத்திலும் உங்கள் விருப்பத்துக்கு மாறாக நடந்து கொள்ள மாட்டேன், அப்பா" என்று கூறி விட்டாள் மேகலா.

அப்படிப்பட்ட உத்தமியான சாதுப் பெண்ணை, ஆய்ந்தோய்ந்து பாராமல் ஒரு கொடுங்கோலனுக்கு மணம் செய்து கொடுத்து விட்டு, இப்போது அவள் மீது காரணமின்றி ஆத்திரம் கொண்டு அவள் மனம் புண்ணாகும்படி பேசியதை எண்ணி எண்ணி ராமதேவரின் மனம் உருகியது. தன் விருப்பத்துக்காக அந்தத் திருமணத்துக்குச் சம்மதித்த மேகலாவின் மனம் என்ன பாடுபடுகிறதோ என்று அவரது ஹிருதயம் துடித்தது. யாதவ ராஜ்யத்தையும் மக்களையும் காப்பாற்றத் தாம் செய்த தியாகத்தைக் காட்டிலும், மேகலா செய்த தியாகமே மகத்தானது என்பதை ராமதேவர் உணர்ந்தார்.

* * *

சங்கமன் படைகளுடன் தன் ராஜ்யத்துக்குத் திரும்பி வந்தபோது, அங்கு ஏற்பட்டிருந்த மாறுதல்கள் அவனைத் திடுக்கிட வைத்தன. தன் தந்தை அலாவுதீனுக்குப் பணிந்து விட்டதையும், தன் சகோதரியை அவனுக்கு மணம் செய்து கொடுத்த கொடுமையையும் நினைக்க நினைக்க அவனுக்கு ஆத்திரம் பொங்கியது.

உடனே, அவன் அலாவுதீனைப் பணிய வைப்பதற்காகப் படையெடுத்துச் செல்ல முற்பட்டான். அவனைத் தடுத்து நிறுத்துவதற்கு ராமதேவரும் அமைச்சர்களும் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமன்று.

தென்னிந்தியாவில் பல இடங்களில் வெற்றிபெற்ற அலாவுதீன், ஜலாலுதீனைக் கொன்று, டில்லி சுல்தான் பதவிக்கு வந்தது சரித்திரம் கண்ட உண்மையாகும்.

கி. பி. 1312-ம் ஆண்டில் ராமதேவர் காலமான பிறகுதான், அவர் ஏற்கெனவே அலாவுதீனிடம் சமரசம் செய்து கொண்டது எவ்வளவு புத்திசாலித்தனமான காரியம் என்பது எல்லோருக்கும் தெரிந்தது.

அவர் ஜீவியவந்தராக இருந்த வரையில், யாதவ ராஜ்யத்துக்கு யாதொரு ஆபத்தும் நேரவில்லை. அவருக்குப் பிறகு சங்கமன் சுல்தானை எதிர்க்க முற்பட்டதால், அவன் ராஜ்யத்தை இழந்து தலைமறைவாக ஓட நேர்ந்தது.

யாதவ ராஜ குடும்பம் நிர்மூலமாகி, அந்த ராஜ்ய மக்கள் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்கானதுடன், தேவகிரி ஆலயமும் நகரமும் அடியோடு அழிந்தன.

மொகலாயர்கள் தர்ம யுத்தத்தைக் கைவிட்டு, நிரபராதிகளான மக்களைப் பலி யிடுவதையும், கோவில்களை இடிப்பதையும், நகரங்களை அழிப்பதையுமே தங்களுடைய போர் முறையாகக் கொண்டிருந்ததால், இந்திய மன்னர்களில் பலரும் அவ்வளவு விலை கொடுத்து வெற்றி பெறுவதை விரும்பவில்லை.

எனவே, மொகலாய சாம்ராஜ்யத்துக்குப் பின் பாரத நாட்டில் பல புனித ஆலயங்கள் அழிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டதற்கு மூல கர்த்தாக்கள் யார் எனில், அவர்கள் ராமதேவரைப் போன்ற மன்னர்களே ஆவர். அவர்கள் மொகலாயர்களிடம் அடி பணிந்ததால், அந்த மன்னர்களின் வீர தீர பராக்கிரமத்துக்கு அணுவளவும் களங்கம் ஏற்படவில்லை. அதற்கு மாறாக அச் சம்பவங்கள் இந்திய மன்னர்களுடைய ராஜ தந்திரத்தின் சிறப்பையே காட்டுகின்றன.

எனவே, மண்ணாசையும் போர் வெறியும் கொண்ட கொடுங்கோலர்களிடமிருந்து மக்களையும் புனித ஆலயங்களையும் காப்பாற்றிய மன்னர்களுக்குப் பாரத நாடும் பாரத நாட்டு மக்களும் என்றென்றும் நன்றிக் கடன் பட்டிருக்கிறார்கள்.






# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்.

போன்: 250 (5 லைன்) - மதுரை - தந்தி: "ஹார்வி"



சகல நெசவாளர்களும் பெரிதும் விரும்பும் சிறந்த நூல்களை பல்வேறு ரகங்களில் தயாரிக்கும் பிரபல ஸ்தாபனம்

○✱○

5,00,000 நூற்கும் கதிர்கள் : நெ. 80 வரை நூல்கள்

○✱○

மில்கள் : மதுரை : தூத்துக்குடி : அம்பாசமுத்திரம்

○✱○

கைத்தறி, இயந்திரத்தறி, பின்னல் தறிகளுக்கான சகலவிதமான நூல்கள்

○✱○

விசேஷ ரகங்கள் : கயிறுகள், விழுதுகள், கித்தான்கள், நாடாக்கள் முதலியவைகளுக்கான விசேஷ நூல்கள்-தையல் நூல்-முறுக்கேற்றிய திரித்த சரடுகள் முதலியன

○✱○



# புனலூர் பேப்பர் மில்ஸ் லிமிடெட்.

புனலூர் (திருவாங்கூர்-கொச்சி ராஜ்யம்)

போன்: 15 :: தந்தி: பேப்பர்மில்ஸ்

கிரீம்லெய்ட், போஸ்டர், லெட்ஜர், மணில்லா, ரொப்டு, பிரவுன், மாட்ச், பிரிண்டிங், முதலிய சகல விதமான காகிதங்கள் தயாரிக்கும் சிறந்த ஸ்தாபனம்





# ரஞ்சிதத்தின் ராசி

'கடகராசிக்காரர்களுக்கு இந்தவாரம் எடுத்த காரியம் யாவிலும் வெற்றியே கிட்டும். அவர்கள் தொட்டது துலங்கும்; கைபட்டது பொன்னாகும். தனாதாதன் வலுப் பெற்றிருப்பதால், ஸ்பெகுலேஷன், போட்டி, பந்தயம் போன்றவற்றில் ஈடுபாடு கொண்டவர்களுக்கு இந்த வாரம் அதிசயிக்கத்தக்க பலனே கூறவேண்டும். நீசனான கேது உச்சனான சூரியனைப் பார்ப்பதால் குடும்பத்தில் சிறு சச்சரவுகள் நிகழ ஹேது இருக்கிறது. குடும்பத் தலைவனின் கோபத்துக்குச் சிலர் இலக்காகவும் நேரலாம். ஆயினும் தம்பதிகளிடையே பிணக்கு ஏற்படுவதால் சௌஜன்யமாகவே தீரும். எங்கும் இந்த ராசிக் காரர்களது பேச்சே மேலோங்கி நிற்கும்.'

மனோரஞ்சிதம் அப்பொழுதுதான் தபாலில் வந்திருந்த "கிரகசாரம்" பத்திரிகையைப் பிரித்து வைத்துக் கொண்டு கடக ராசியின் பலனே உரக்கப் படிக்கத் தொடங்கி விட்டாள்.

அதைக் கேட்கக் கேட்க மணவாள நாயுடுவுக்கு மனம் துடித்தது. ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. அவருக்கோ சோதிடம் என்றால் கட்டோடு பிடிக்காது. அவளுக்கோ அதுவே உயிர்.

"நீயும் உன் சோதிடமும்! உன் சோதிடத்தில் தீயை வைக்க!" என்று நாயுடு புஸ்வாணமாகச் சீறினார்.

மனோரஞ்சிதத்தின் மனம் உஷ்ணம் அடைந்தது. அந்த உஷ்ணத்தில் அவள் கடசுடப் பதில் அளித்தாள். பதிலுக்குப் பத்து டிகிரி அவரது உஷ்ணம் ஏறியது. இப்படியே ஏறிக் கொண்டுபோய் அது எரிமலையாக வெடித்தது.

அப்புறம் ஞானோதயம் பிறந்தது மனோரஞ்சிதத்துக்கு. "கடக ராசிக் காரர்களுக்குத்தான் குடும்பத் தலைவனின் கோபத்துக்கு இலக்காகவும் நேரலாம் என்று போட்டிருக்கிறதே! அப்படி யிருக்கும் பொழுது நாம் வாய் கொடுக்கலாமா?" என்று போய் விட்டாள்.

'நமக்குத்தான் அவளது சுபாவம் நன்கு தெரிந்திருக்கிறதே! நமக்கு ஏன் இந்த விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வரவில்லை? அவள் வழியே விட்டுத் திருப்புவது அல்லவா நல்லது?' என்று எண்ணினார் மணவாள நாயுடு.

ஆனால் இருவரது உள் மனமும் ஒருவரை யொருவர் தம் தம் வழிக்குத் திருப்ப வேண்டும் என்றே தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்தது.

ஆயினும் ஒரு குடும்பத் தலைவி தனது காரியத்தைச் சரிவரச் செய்ய வேண்டாமா? காப்பி கொடுக்கும் நேரம் வரவே, மனோரஞ்சிதம் பேசாமல் காப்பியைக் கொண்டு போய் அவரது மேஜை மீது வைத்து விட்டுத் திரும்பினாள்.

"மனோரஞ்சிதம்!" என்று அழைத்தார் நாயுடு.

அவள் எதிரே வந்து நின்றாள்.

"என் மேல் கோபமா?"

"நன்றாகச் சொன்னீர்கள்! நானும் போய் உட்கார்ந்து யோசித்தேன். இனிமேல் எப்பொழுதாவது நான் சோதிடப் பகுதியைப் பற்றி உங்களிடம் பேசினால் என் பெயரை மாற்றி அழையுங்கள்!" என்றாள் மனோரஞ்சிதம்.

"பார்த்தாயா, என் மேல் கோபம் இல்லாவிட்டால் இப்படிப் பேசுவாயா?"

"உண்மையாகவே சொல்கிறேன். எனக்கு உங்கள் மேல் ஒரு கோபமும் இல்லை. இந்த ராசி பலன் எதற்குமே பிரயோசனம் இல்லை. ஏதோ எல்லோருக்கும் பொதுவாகப் போட்டு விடுகிறார்களே ஒழிய..."

"பொதுவாகப் போட்டாலும் சோதிடம் சோதிடம்தானே? அவர்கள் போட்டிருப்பது போலவே, கடக ராசிக் காரியான உன் மேல் நான் கோபித்துக் கொண்டு விடவில்லையா?"

நாயுடு மாறி விட்டதில் மனோரஞ்சிதத்துக்கு உள்ளூற மகிழ்ச்சிதான். இருந்தாலும் சோதிடத்தை வெறுப்பவள் போல் காட்டிக் கொண்டாள்.

"ரஞ்சிதம்! நீ என்ன வேண்டுமானாலும் தையாண்டி செய். எனக்கு அக்கறையில்லை. "ஸ்பெகுலேஷன்", போட்டிப் பந்தயம் ஆகியவற்றில் கடக ராசிக் காரர்கள் அதிசயிக்கத் தக்க பலனே அடைவார்கள் என்று போட்டிருக்கிறது. இன்றைக்கோ ஞாயிற்றுக்கிழமை. கிண்டிக்குப் போய் உன் பெயரில் ஒரு குதிரைக்குப் பணம் கட்டிப் பார்க்கலாம் என்று எண்ணுகிறேன். நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"வேண்டாம்; கிண்டிக்குப் போனால் மேலுக்கு மேல் பணம் கட்டத் தோன்றும். ஏராளமாக நஷ்டம் வந்து விடும். ஒன்று செய்வோமே!"

"என்ன?"

"எவர் சில்வர் பாத்திரத்துக்கு இப்பொழுது சீட்டுப் பிடிக்கிறார்களாம். ஐந்து ஐந்து ரூபாய் மாதம் கட்ட வேண்டுமாம். முதல் மாதத்திலேயே நம் பெயருக்குச் சீட்டு விழுந்தால் நூற்றைம்பது ரூபாய்க்கு எவர்சில்வர் பாத்திரங்களாகக் கொடுத்து விடுகிறார்களாம். எனக்கு இதில் எல்லாம் நம்பிக்கை இல்லை. இருந்தாலும் நீங்கள் சொல்கிறீர்களே என்பதற்காக வேண்டுமானால் ஒரு சீட்டுக் கட்டி விட்டு வருகிறேன். அப்படியே அந்த வைரத்தோட்டையும் பார்த்து விட்டு வந்து விடட்டுமா? ஆயிரத்துக்குக் கொடுத்தால் கொடு. இல்லா விட்டால் வேண்டாம். அதற்கு மேல் ஒரு சல்லிக் காசு கூடக் கொடுக்க முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லி விடுகிறேன்!" என்றாள் மனோரஞ்சிதம்.

"அதுவும் சரிதான். இன்று உன் ராசிப்படி பார்த்தால், உன் பேச்சுத்தான் எங்கும் மேலோங்கி யிருக்கும் என்று போட்டிருக்கிறான். அதனால் கடைக்காரன் உன் பேச்சுக்குக் கட்டுப் பட்டுத்தானே ஆகவேண்டும்! சரி,சரி! நாழிகையாகிறது. உன் இரண்டு காரியங்களையும் முடித்துக்கொண்டு ராகு காலத்துக்கு முன்னால் வந்து சேர்!" என்றார் மணவாள நாயுடு.

மனோரஞ்சிதம் கலுக்கென்று சிரித்தாள். "ஏது? ஏது? சோதிடத்தில் எனக்கு இருந்த நம்பிக்கை போய் விட்டது. ஆனால் என்னைக் காட்டிலும் உங்களுக்கு அதிகமாகி விட்டதே!" என்று கூறிக் கொண்டே புறப்பட்டு விட்டாள்.

நாயுடு அவள் நகர்ந்ததும் இரண்டு இடங்களுக்கு அவசரம் அவசரமாகப்

போன் செய்தார். பிறகு முகத்தில் புன்முறுவல் தாண்டவமாடத் தமது சாய்வு நாற்காலியை அடைந்தார். அவரது கரங்களை ஒரு புத்தகம் அலங்கரித்தது.

புத்தகத்துக்கும் தூக்கத்துக்கும் தான் என்ன கொண்டாட்டம்! அப்படியே புத்தகம் மார்பைத் தழுவ ஆழ்ந்த நித்திரையில் மூழ்கி விட்டார்.

"என்ன, பகற் கனவு காண ஆரம்பித்து விட்டீர்களே!" என்று மனோரஞ்சிதம் எழுப்பவேதான் அவருக்கு இவ்வுலக நினைவு வந்தது. "அட! நீ வந்து விட்டாயா? போன காரியம் என்ன ஆயிற்று? பழுத்தானே?" என்று கேட்டவாறு கண்களைத் துடைத்தார்.

அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. வைரத்தோட்டுப் பெட்டியை எடுத்து அவர் எதிரே வைத்தாள்.

"அட! வைரத்தோடு வாங்கி விட்டாயா? என்ன விலை?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் நாயுடு.

"நான் சொன்ன ஆயிரம்தான். அதற்குக் கொடுத்தால் கொடு, இல்லாவிட்டால் வேண்டாம் என்று நான் அடித்துச் சொல்லவே, பேசாமல் கொடுத்து விட்டான்!"

"பேஷ்! பேஷ்! ராசி பலன்காரன் போட்டது சரியாகத்தான் போயிற்று. அது போகட்டும். எவர்சில்வர் பாத்திரங்களுக்குச் சீட்டுக் கட்டினாயோ?"

"கட்டினேனு என்று கேட்டீர்களே? ஐந்து ரூபாய் கட்டப் போய் நூற்றைம்பது ரூபாய்ப் பாத்திரமும் எனக்கே கிடைத்து விட்டது!" என்றாள்.

அவள் வாக்கியத்தை முடிக்கக் கூட இல்லை. கார் டிரைவர் எவர்சில்வர் பாத்திரங்களை மணவாள நாயுடுவின் எதிரே கொண்டு வந்து வைத்தான்.

"நீ என்னவோ சொன்னாயே! சோதிட சாஸ்திரத்தை நம்பாமல் இனி ஒரு கணமும் என்னால் இருக்க முடியாது!"




மணவாள நாயுடுவின் வாயிலிருந்து இந்தச் சொல்லைக் கேட்டபின் மனோரஞ்சிதத்தினாலும் பேசாமல் இருக்க முடியவில்லை. ஒருத்தி எத்தனை நாழிகைதான் தன் உள்ளத்தை அழுத்தி வைத்துக் கொண்டிருக்க முடியும்? "அப்பா! இப்பொழுதாவது உங்களுக்கு நம்பிக்கை வந்ததா?" என்று கேட்டாள்.

எகத்தாளமாக அடங்காத சிரிப்புச் சிரித்தார் நாயுடு.

"அப்படியானால் உங்களுக்குச் சோதிடத்தில் நம்பிக்கை இல்லையா?"

"இல்லை என்று எங்கே சொன்னேன்? எனக்கு என் சோதிடத்தில் பரிபூரண நம்பிக்கை இருக்கிறதே!" என்று மார்பு தட்டினார் மணவாள நாயுடு.

"என்ன? நீங்கள் சொல்வது ஒன்றுமே விளங்க வில்லையே!"

"விளங்குமாறு சொல்கிறேன், கேள். அங்கே அம்மா இப்படிக் காரில் ஏறி உட்கார்ந்தாளா? இங்கே ஐயா அப்படிப் போனை எடுத்தார். எவர்சில்வர் பாத்திரக் கடையைக் கூப்பிட்டார்...."

"கூப்பிட்டு..."

"சொல்வதற்குள் அவசரப்படுகிறாயே! குலுக்குகிற அத்தனை சீட்டிலும் அம்மா பெயரையே எழுது. பாத்திரத்துக்குள்ள கிரயம் பூராவும் நான் கொடுத்து விடுகிறேன். அம்மாவிடம் மட்டும் மறந்து போய்க்கூடச் சொல்லி விடாதே என்றார். உனக்குப் பரிசு கிடைக்கச் செய்தது உன் சோதிடம் இல்லை, சாக்ஷாத் இந்த மணவாள நாயுடு தான்! தெரிந்து கொள்" என்றார் அவர் நகைத்துக் கொண்டே.

முகத்தைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்ட மனோரஞ்சிதம், "நீங்கள் சொல்கிறதைக் கடைக்காரன் கேட்டு விட்டானாக்கும்!" என்றாள்.

"நான் சொல்கிறதைக் கேட்டாலும் கேட்கா விட்டாலும் வெள்ளையப்பன் சொல்கிறதைக் கேட்டுத்தானே ஆக வேண்டும்? அப்புறம் அதே கையோடு நகைக் கடையையும் கூப்பிட்டு...."

"...அம்மா வந்து கேட்டால் வைரத் தோட்டை ஆயிரத்துக்குக் கொடுத்து விடு. அதிகப்படியான தொகை அப்புறமாக நான் தருகிறேன் என்று சொல்லி விட்டீர்கள். அப்படித்தானே....?"

"ஆமாம். எப்படி இவ்வளவு சரிதமாகக் கண்டு பிடித்தாய்?"

"உங்களைப் போன்ற அசட்டை நான் பார்த்ததே இல்லை. என் ராசி பலன் படி இன்றைக்கு எனக்கு லாபதினம். நீங்கள் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் எனக்குக் கிடைக்க வேண்டியது கிடைத்திருக்கப் போகிறது. கிடைத்தும் விட்டது....ஆமாம், உங்களுக்கு இன்று நஷ்ட தினமோ?..இருங்கள் இருங்கள்! பார்த்துச் சொல்கிறேன்!" என்று கூறி விடுவிடென்று வேகமாக உள்ளே சென்று அன்றைக்கு வந்த பத்திரிகையைக் கொண்டு வந்து அவர் முன் போட்டாள். மிதுனத்துக்குக் கஷ்ட தினம், வீண் செலவு, அநாவசியமான மனக்கவலைகள் என்று பலன் போட்டிருந்தது. அதைப் படித்த மணவாள நாயுடுவின் தலை வேகமாகச் சுழன்றது!



முன் காலத்திலெல்லாம் கார் வருவது அது போடும் சத்தத்திலிருந்து தெரிந்து...



விலகினார்கள். பிறகு ஹாரன் வசதி வந்தது.



அப்புறம் காதைச் செவிடாக்க எலக்டிரிக் ஹாரன் வந்தது.




இனிமேல் அந்தச் சப்தமும் போதாமல் வெடிகளைக் கொளுத்திப் போட்டு எல்லோரையும் விரட்டலாம்.



"இந்த நாய்கள் ஏன் இப்படி காலைக் கட்டிக் கொண்டு பயந்து ஓடுகின்றன?"
"இல்லையென்றால் பிள்ளைகள் வாலில் பட்டாசைக் கட்டிக் கொளுத்திடுவார்களே"



தாத்தா: குழந்தையைச் சமாதானப்படுத்திக் கொண்டு வருகிறேன் என்று போயிருக்கிறார்.

வந்தவர்: எங்கே! ஐக்கிய நாட்டு சபைக்கா?



நோயாளி: ஏன் டாக்டர், கை சரியாகப் போனவுடன் பிடில் நன்றாக வாசிக்க முடியுமா?
டாக்டர்: ஓ! பேஷாக வாசிக்க முடியும்!
நோயாளி: அப்படியா? உங்க வைத்தியம் ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறதே!
டாக்டர்: ஆச்சரியம் என்ன? உண்மையைச் சொன்னேன்!
நோயாளி: எனக்குப் பிடில் வாசிக்கவே தெரியாதே!

# ஹாஸ்யக் களஞ்சியம்

சாமா






பாகவதர் ஒருவருக்கும்...



..தெரியாமல் பொடி டப்பியை வாங்கி....



......அங்கும் இங்கும் எப்படி மறைத்தாலும், கடைசியில்...



எல்லாருக்கும் தெரியும்படியாகப்



பகிரங்கமாக மூக்கில்தானே போட்டுக் கொள்ளவேண்டியிருக்கிறது?

# "பாம்புக்கு ராஜா மூங்கில் தடி..."

## சங்கரராம்

வேட்டையான்பட்டியைச் சுற்றி அடர்ந்த காடுகள் இருந்த போதிலும் உபயோகத்துக்கு வரும் மர வகைகள் அவ்வளவாக இல்லை. அத்தி மரங்களே ஏராளமாக இருந்தன. ஒரு பகுதியை அத்திக் காடுகள் என்று கூடச் சொல்லுவார்கள். பலாமரங்களும் ஆங்காங்கே சிதறிக் கிடந்தன. அப்படியிருந்தும் வேட்டையான்பட்டிக்கென்று தனியாக ஒரு 'கார்டை'யும் நான்கு காவலாளிகளையும் காட்டு இலாகா நியமித்திருந்தது. காரணம், அவ்வூர் மலைத்தேனுக்கு மிகவும் பிரசித்தி பெற்றது. மூலைக்கு மூலை செங்குத்தான பாறைகள் கோபுரங்களைப் போல் நின்றன. அவைகளுடைய பிளவுகளில் தேனீக்கள் பெரிய அடைகளைக் கட்டியிருந்தன.



சர்க்காருக்கு இவற்றால் நல்ல வருமானம். ஏலம் போடும் வரையில் தேன் திருட்டுப் போகாமல் பாதுகாக்க வேண்டியதே 'கார்டு'க்கும் காவலாளிகளுக்கும் வேலை.

பெருமாள் நாயுடு வேட்டையான்பட்டி 'கார்டா'க நியமிக்கப்பட்டான். வயது இருபத்தைந்துக்குள்ளாகவே இருக்கும். இளங்கன்று பயமறியாது என்பது போல், சில சமயங்களில் தன் காவலாளிகளை நம்பாமல் அவன் தனியாகச் சுற்ற ஆரம்பித்தான். தேன் அடைகள் எவ்வாறோ குறைந்து கொண்டு வந்தனவென்று அவனுக்கு ஒரு சந்தேகம். அவனுக்கென்று, காட்டு இலாகா பங்களாவில் ஒரு சிறு இடத்தைக் கொடுத்திருந்தார்கள்.

பெருமாள் அநேகமாய்த் தனியாகத்தான் அந்த ஒதுக்கமான இடத்தில் வசிக்க வேண்டியிருந்தது. சிலசமயங்களில் கிராமத்தில் செல்வாக்குள்ளவர்கள் பலர் வந்து பேசிக் கொண்டிருப்பார்கள். அவர்களில் முக்கியமாக, கல்லாண்டிதான் அடிக்கடி வருவான். எழுபது பிராயம் தாண்டியவன். நற்குணமுடையவன். அவனுக்குப் பெருமாள் மீது ஒரு வித அன்பு பிறந்தது. "கார்டு ஐயா, நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதீங்க. நீங்க தனியாய்ப் போவதை மட்டும் விட்டு விடுங்க" என்று அந்தக் கிழவன் கூறினான்.

பெருமாள் சிரித்தபடி, "ஏன் யாராவது என்னை அடிச்சுடு வாங்களா?" என்று கேட்டான்.

"யாரை யார் அடிக்கிறதுங்க? எங்க ஊராங்க அந்த வேலைக்குப் போக மாட்டாங்க."

"அப்போ, எதுக்காகப் பயப்படுறீங்க?— இந்தக் காடுகளிலே புலியே கிடையாதுங்கிறாங்களே" என்றான் பெருமாள்.

"யார் சொன்னதுங்க? பெரிய புலி இல்லாமல் இருக்கலாம். ஆனால் சிறுத்தை வகை ஏராளமாக இருக்குதுங்க. ஒண்டி சண்டியாய் அகப்பட்டுக் கிட்டால் ஒரு கை பார்த்துடும். இப்போ அத்தி பழுக்கிற காலமுங்க. அமோகமாய் அதுங்க வந்து விழும். நீங்க ரொம்ப ஜாக்கிரதையாய் இருக்கவேணும். அதுங்க பக்கம் போகாமல் இருந்தால் சரி!" என்றான் கிழவன்.

"நான் ஏன் போறேன், தாத்தா?"

இந்தச் சமயத்தில் கிழவன் அருகிலிருந்த அருச்சுனன் "இதோ பாருங்க, கார்டய்யா! எனக்குப் பெரியப்பா மகன் ஒருத்தன் இருந்தானுங்க. சூராதி சூரன். அவன் ஈட்டியாலே எத்தனையோ காட்டுப் பன்றிகள் மடிஞ்சிருக்குது. அப்படிப்பட்டவன் ஒரு நாள் ஒரு கரடிக்கு நேர் நேராய் வந்து விட்டான். அதன் வம்புக்குப் போகாமல் அவன் வந்திருக்கலாம். ஆனால் விதி விடவில்லையே? அதை எதிர்த்துக்கிட்டுப் போய், சமயம் பார்த்து ஈட்டியாலே மூணு குத்து குத்திவிட்டான். ரத்தம் ஆறாய் ஓடுது. அப்படியிருந்தும் அது அவன் மேலே விழுந்து ஒரே அடியாலே மூளையைச் சிதற அடித்தது. இரண்டாவது அடியிலே குடல் சரிந்தது. அதுவும் செத்தது; அவனும் செத்தான்" என்று முடித்தான்.

"ஆம்பிள்ளைன்னா, அவன் தானுங்க" என்று கல்லாண்டிக் கிழவன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே, பனைமரம்போல் வளர்ந்திருந்த சுமார் பதினாறு வயதுள்ள ஒரு வாலிபன் அங்கே வந்தான். அவன் முகம் புன்முறுவலால் பூத்திருந்தது. "இவன் என் பேரப் பிள்ளைங்க. காட்டுக்காளியின்னு பேரு" என்று கிழவன் பெருமையுடன் சொல்லிக் கொண்டான்.

"உங்க பேரனா இவன்? குறும்புக்காரப் பையன் தான்!" என்றான் பெருமாள்.

"என்ன செஞ்சானுங்க?"

"அவனையே கேளுங்க" என்றான் பெருமாள், சிரித்த முகத்தோடு.

காட்டுக்காளிக்குப் பொங்கி வந்த சிரிப்பை அடக்க முடியவில்லை.

'' ஒண்ணும் இல்லே, தாத்தா ! நம்ம தொப்புளான் வீட்டோரமாய்ப் பனை ஓலை கிடக்குதல்லே, அதிலே நாலு நாளைக்கு முந்தி ஒரு நல்ல பாம்பு புகுந்திடுச்சு. தடியும் கையுமாய் வந்தவங்க ளெல்லாம் அதைச் சீண்டி வெளியே வரச் செய்யப் பயந்தாங்க. அப்போது 'கார்டு' ஐயா 'பாம்புக்கு ராஜா மூங்கில் தடி' என்று கூறிக் கொண்டே பனை ஓலையைக் கிளறி, பாம்பு தலை யெடுத்ததும் கொம்பாலே கழுத்தை நசுக்கிட்டாரு. ஆளுக்கொருஅடி போட்டுக் கொன்று விட்டாங்க. அப்போ நாங்க எல்லாரும் 'பாம்புக்கு ராஜா மூங்கில் தடி'ன்னு விளையாட்டுக்குக் கூச்சல் போட்டோம்'' என்றான் காட்டுக்காளி.

'' சிறு வயது ஆச்சே, விளையாட்டுத்தனம் இருக்கா துங்களா! எங்க வீட்டுப் பெண் பிள்ளைங்ககூப்பிடறுப் போல இருக்குது, போய் வாறேன். அறியாப் பிள்ளைங்க; ஒரு கண் பார்த்துக்கிங்க'' என்று ஒரு கும்பிடு போட்டுவிட்டு, தன் பேரனுடன் கிழவன் சென்றான். அர்ச்சுனனும் அவனைப் பின் தொடர்ந்தான்.

ஒருவாரத்துக்குப் பிறகு, பெருமான் தன் காவலாளி களுடன்அத்திக்காட்டைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டான். அப்பொழுது அர்ச்சுனனும் அவர்களோடு கலந்து கொண் டான். 'கார்டு' ஐயாவைக் 'காக்காய் பிடித்து' ஒரு நல்ல நுகத்தடியைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டு மென்பது அவன் எண்ணம். ஒரு மணி நேரம் அலைந்து திரிந்துவிட்டு அவர்கள் எல்லோரும் 'ஒணான் பாறை'யின் மீது ஏறினார் கள். ஒணான் பாறை கிட்டத்தட்ட நூறு அடி உயரம் இருந் தது. ஏறும் வழி ஒணான் உடலை ஒத்திருந்த போதிலும் அதன் சரிவுகள் மாத்திரம் செங்குத்தாகவே இருந்தன.

அவர்கள் உச்சிக்கு வந்ததும் விதம் விதமான கூக்குரல் களும் இடி' முழக்கம் போன்ற சத்தமும் கேட்டன. அர்ச்சுனன் ஓடி மெள்ளக் குனிந்து பார்த்தான். பிறகு சத்தம் போடாமல் வரும்படி ஜாடை காட்டினான். நூறடிக் குக் கீழே நாலைந்து கரடிகள் உதிர்ந்த அத்திப் பழங்களை அவ்வளவு மகிழ்ச்சியோடு பொறுக்கித் தின்று கொண்டிருந் தன. ஒரு பெரிய கரடி, மரத்தில் ஆள் உயரத்துக்கு ஏறிக் கிளைகளை உலுக்குவது போலத் தோன்றியது. பெருமான் கண் கொட்டாமல் பார்த்தான். மரத்திலிருந்த கரடியின் முகம் தெரியவில்லை. '' அது மூளிக் கரடியா ?'' என்று ஒருவன் மெள்ளக் கேட்டான்.

''சே, சே! அவரு பலாப்பழமல்ல சாப்பிடுவாரு! தனிக் காட்டு ராஜா வாச்சே! அதன் உயர மென்ன ? பருமன் என்ன? நின்றால் ஆளுக்கு மேலே ஒரு முழம் உயரம் இருக் குமே!'' என்று அர்ச்சுனன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது ஒரு கரடி தலையைத் தூக்கி மேலே பார்த்தது. அவ்வளவுதான்! ஒரே கூக்குரல், ஒரே குழப்பம். எல்லாம் விழுந்தடித்துக் கொண்டு காட்டுக்குள் ஓடி விட்டன.

'' அவைகளுக்குப் பாம்புக் காது போல இருக்கே! நாம் காதோடு காதாய்ப் பேசினது அவைகளுக்கு எப்படியோ கேட்டுட்டுதே!'' என்றான் பெருமான் சிறிது வியப்போடு.

''காது இல்லே 'கார்டு' ஐயா, அவைகளுக்கு மோப்பம் பிடிக்கும் சக்தி அவ்வளவு அதிகம். மூளிக் கரடின்னு சொன்னரே, அது ஆள் இருக்கிறதை அரை மைலுக்கு அப்பாலே இருக்கும்போதே கண்டு கொள்ளும். அது இங்கே வராதுங்க; அந்தக் காட்டிலேயே பலா மரங்களைச் சுற்றிக் கிட்டுத் திரியும் '' என்றான் அர்ச்சுனன்.

''அங்கே தேனுக்கும் பஞ்சமில்லை'' என்றான் பெருமான்.

''ஊம். அந்தக் காலம் மலை ஏறிப் போச்சுங்க. எப்போதாவது காற்று மழையடிச்சு ஒரு அடை சரிஞ்சு கீழே விழுந்தால்தான் உண்டு!'' என்றான் அர்ச்சுனன்.





"அது ஒண்டிக் கழுதையிங்க! தான் தின்றபோது எதையும் பக்கத்திலே வர விடாது. அதற்கும் பொல்லாத அறிவுங்க. பேச்சு ஒண்ணுதான் கடவுள் அதற்கு வைக்காமல் போயிட்டாரு" என்றான் ஒரு காவலாளி.

"சரி, வந்தது வந்தோம். அந்தக் காட்டையும் கொஞ்சம் சுற்றிப் பார்த்துவிடலாமே. தேன் கூடுங்க இப்படி நிறைந்து கிடக்கிறதை நான் எங்குமே பார்த்ததில்லே. அதுக்குத் தேன் காடுன்னு பெயர் வைக்கணும் — இல்லே?" என்று பெருமாள் அர்ச்சுனனைக் கேட்டுக் கொண்டே, அவர்களை அங்கே அழைத்துச் சென்றான்.

பெருமாளுக்குச் சந்தேகம் பிறக்கத்தான் செய்தது. அடைகள் கீழே விழக் கூடிய இடங்களைச் சோதித்துப் பார்த்தான். புலன் கிடைக்கவில்லை. அர்ச்சுனன் முகத்தை உற்றுப் பார்த்தான். அவனுக்கும் அதே அபிப்பிராயம் இருக்கிறதைப் பெருமாள் உணர்ந்து கொண்டான். பிறகு இளைப்பாற, எல்லோரும் நடு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டார்கள்.

"கார்டு அய்யா, அந்தப் பலா மரத்தைப் பார்த்தீங்களா?" என்று கூறிக் கொண்டே அர்ச்சுனன் ஒரு பக்கமாகச் சுட்டிக் காட்டினான்.

"ஊம், ஊம்! என்ன காய்ப்பு காய்ச்சிருக்குது. அடே! எவ்வளவு பெரிய பழம்! எதுவோ பாதியைத் தின்னுட்டுதே" என்று பெருமாள் எல்லோருடனும் அம்மரத்தண்டை போனான்.

"இது மூனிக் கரடி வேலேங்க. பாவம், முழுப் பழத்தை அதாலே சாப்பிட முடியவில்லே. நல்ல ஜாதியிங்க. முன்னு எவ்வளவு பெரிது பார்த்திங்களா?— தம்பி, இதுக்கு மேலே இருக்கிற காயைப் பறிச்சுக் கொண்டா. அது பழுத்திட்டுது. அய்யா ருசி பார்க்கட்டும்" என்று அர்ச்சுனன் அருகில் நின்ற ஒரு காவலாளியிடம் சொன்னான்.

"ஐயோ, வேண்டாம். வேலே நெருக்கடியிலே காய்ச்சலைக் கிச்சலைக் கொண்டாந்து விடப் போவுது" என்றான் பெருமாள்.

"நீங்க ஒரு பக்கம், முழுப் பழத்தைத் தின்னாலும் ஒண்ணும் செய்யாதுங்க. இங்கே இருக்கிறவங்களுக்கு அந்தப் பழம் ஒரு சுத்துக்குக் கூட வராதுங்க. நீங்க ஒரு சுளையைத் தின்னுட்டு அப்புறம் சொல்லுங்க" என்று அர்ச்சுனன் பழத்தைத் துண்டு போட்டான். ஆளுக்கொருவராகச் சுளைகளைப் பிரித்து எடுத்தார்கள். பழம் உண்மையில் மிகவும் இனிப்பாக இருந்தது. ஒன்று இரண்டு போதுமென்று சொல்லிக் கொண்டே பெருமாளும் ஏழெட்டுச் சுளைகளைத் தின்றான்.

"மலைத்தேன் என்னாத்துக்குங்க? இதுக்குமுந்தி அது என்ன செய்யும்? ஆனால், மூனிக் கரடிக்குத்தான் வயிறு எரியும். பத்து நாட்கள் போனால் ஒழிய ஒரு காய் கூட மரத்திலே பழுக்காது" என்றான் அர்ச்சுனன்.

பிறகு, அனைவரும் கிராமத்துக்குத் திரும்பினர்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு, இராச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, பெருமாள் பீடி பிடித்துக் கொண்டு தனிமையில் உட்கார்ந்திருந்தான். அப்பொழுது, சுனன் வந்து ஒரு கும்பிடு போட்



"என்ன?...குடும்பத்தில் பாகப் பிரிவினையோ...?"

டான். கூனனுக்கும் பழம் பெருச்சாளியான காவலாளிக்கும் பிடிக்காது என்பது பெருமாளுக்குத் தெரியும். "யசமான், அடுப்பெரிக்கக் காஞ்ச சருகைக்கூட நான் தொடக்கூடாதின்னு எட்டிப்பாளையம் காவலாளி அய்யா தடை போடுறாரே? இப்போ அவர் என்ன செய்துட்டார் தெரியுமா? பத்து டின்னு தேனைக் காட்டிலே யிருந்து அப்புறப்படுத்தி விட்டாரு!"

"என்னது? உனக்கு எப்படித் தெரியும்?" என்றான் பெருமாள்.

"நீங்களே நாளைக்குப் போய்ப் பாருங்க. ரெண்டு, மூணு நாளைக்கு முந்திப் போனீங்களே, அதே இடம் தான். ஒன்பது, பத்து மணி நேரத்துக்குத் தனியாய்ப் போங்க. என் பேரை மட்டும் வெளியே சொல்லி விடாதீங்க, யசமான்! என்னைக் கொன்று போட்டுடுவாங்க. நான் வரேனுங்க" என்று கூறிவிட்டு அங்கே தங்கப் பயந்தவன் போல், கூனன் மறைந்து விட்டான்.

பெருமாளுக்குத் தூக்கம் வரவில்லை. கூனன் சொன்னது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். எட்டிப்பாளையம் காவலாளி ஒரு வரம்புக்குக் கட்டுப்பட்டவனல்ல என்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்து விட்டது. இந்த விஷயமும், ருசுவாகி விட்டால் அவனை ஒழித்து விடுவதென்று தீர்மானித்துக் கொண்டான். காலையில் தனக்கு உடல் நலமில்லை யென்று நான்கு காவலாளிகளையும் வெவ்வேறு இடங்களுக்கு அவன் அனுப்பினான். பிறகு, சுமார் ஒன்பது மணிக்கு யாருக்கும் தெரியாமல் அவன் நினைத்த இடத்துக்கு விரைந்து சென்றான். அநேக தேனடைகள் காணவில்லை. விழுந்த இடத்திலாவது புலன் கிடைக்குமா என்று தேடிப் பார்த்தான். ஒன்றும் பயனில்லை. ஆத்திரத்தோடு அலைந்து திரிந்ததால் களைப்புத்தான் அதிகமாக இருந்தது; பழம் அறுத்துச் சாப்பிட்ட பலா மரத்தண்டை வந்தான்.

அதே கணத்தில் "மரமேறுங்க! மரமேறுங்க! சூளிக் கரடி வருகிறது, வருகிறது!" என்று அம்மரத்தின் உச்சியிலிருந்து ஒரு கூக்குரல் வந்தது. பெருமாள், கைகால்கள் பதற ஊதலும் குறிப்புப் புத்தகமும் தவறிக் கீழே விழ, 'செத்தேன், பிழைத்தேன்' என்று மரத்தின் மீது ஏறினான். "நான்தான் காட்டுக்காளி, வாங்க! வாங்க!" என்று காட்டுக் காளி கை கொடுத்துப் பெருமாளை மெள்ள, மெள்ள மரத்தின் மேலே இழுத்துக் கொண்டான்.

இதற்குள் கரும்பூதம் போன்ற கரடியும் மரம் ஏறத் தொடங்கி விட்டது. ஆறடி உயரத்தில், அடிமரத்திலிருந்து முதன் முதலாகப் பிரிந்த கிளைக்கும் வந்து விட்டது. அவர்களை விட்டு விடுவதாக அதற்கு எண்ணம் இல்லை. அதற்கு மேலேயும் ஏற யத்தனித்தது. ஆனால் சரியான பிடிப்பு இல்லாததால் சற்றுத் தயங்கியது.

ஆனால், அதனுடைய பளு மரத்தைச் சாய்த்து விடும்போல இருந்தது. காட்டுக்காளியும் பெருமாளும் தொத்திக் கொண்டிருந்த கிளை அவ்வளவு பருமனுள்ளதல்ல. அதை அசைத்து ஒடித்து விடலாமென்று அக்கரடி நினைத்தது போலும். அது அக்கிளையை உலுக்க ஆரம்பித்ததும் 'கிரீச்' 'கிரீச்' என்ற சத்தமும் கேட்டது. பெருமாள் சீக்கிரத்தில் கிளை ஒடிந்து விடுமென்பதை உணர்ந்தான். சாவு நெருங்கி விட்டதென்று தெரிந்து விட்டது. மூளையும் இருதயமும் குழம்பித் தவித்தன. மரக் கிளையில் ஒரு பிரிவு மெள்ள ஒடிவது போலச் சத்தம் செய்தது.

அதே கணத்தில் "ஹா! ஹா!" என்று எதையோ நினைத்துக் கொண்டவன் போல், காட்டுக் காளி தன் பையிலிருந்து ஒரு பீடியையும் தீப்பெட்டியையும் எடுத்தான். பீடியை எறிந்து விட்டு, ஒரு தீக்குச்சியைப் பற்ற வைத்து அதன் மேல் போட்டான். கரடி வெகு சாமர்த்தியமாகத் தப்பித்துக் கொண்டது. ஆனால் அதற்கும் திடீரென்று ஒரு கிலி பிடித்துக் கொண்டது போல், கிளையை ஆட்டுவதை நிறுத்தி அவர்களை உற்றுப் பார்த்தது. அப்பொழுதுதான் கறையான் அரித்தாற்போலிருந்த அதன் உருவத்தையும் பார்த்துப் பெருமாள் கதி கலங்கினான். அடுத்த நொடியில், எல்லாம் ஒரே நொடியில் சம்பவித்தன வென்றுகூட சொல்லலாம். காட்டுக் காளி தன் இடுப்புத் துணியைக் கிழித்துத் தீக்குச்சியால் பற்ற வைத்து அக் கரடியின் மேல் போட்டான். அவ்வளவுதான்! காடெல்லாம் எதிரொலிக்கும்படி கூச்சலிட்டுக் கொண்டு அது தலைகீழாகக் குதித்து, நாலுகால் பாய்ச்சலில் குட்டிக்கரணம் போடுவது போல் காட்டுக்குள் வேகமாக ஓடியவாறே இருந்தது.

கரடி மரத்தின் மேலேறித் தாக்கும் என்று எதிர்பார்த்துப் பயந்து கொண்டிருந்த பெருமாளுக்கு அது தொலை தூரம் ஓடிய பிறகுதான் பயம் நீங்கியது. இருந்தாலும் எங்கேயாவது பதுங்கியிருந்து திரும்பித் தாக்குமோ என்ற திகிலும் அவனுக்கு இருந்தது.

"இனி வராது 'கார்டு' அய்யா! இறங்குங்க! இறங்குங்க!" என்று கூறிக் காட்டுக் காளி பெருமாளையும் மெள்ள இறக்கிவிட்டு, அவனைக் குறுக்கு வழியாக இழுத்துக் கொண்டு ஓடினான்.

"அரைக் கல்லுதானுங்க; கழனிகளில் இந்நேரத்தில் ரொம்ப ஆளுங்க வேலைசெய்துக்கிட்டு இருப்பாங்க. வேகமாக ஓடி அதுவரைக்கும் போயிடலாம். பயப்படாமல் வாங்க" என்று தைரியம் சொல்லிக் கொண்டே காட்டுக்காளி ஓடினான். பின்னோடு பெருமாளும் ஓடினான். பத்து நிமிஷங்கள் பெருமாளுக்குப் பத்து வருடங்கள் போலிருந்தன. அவனுக்குக் குடல் அறுந்து விழுந்து விடும்போல் இருந்தது. வர, வர, கழனியில் வேலை செய்வோரின் குரல் கேட்டது. பிறகு கிராமத்தார்களும் புலப்பட்டார்கள். பெருமாளுக்கு 'இனி பயமில்லை' என்ற நம்பிக்கை வந்தது. "தம்பி, காட்டுக்காளி! கொஞ்சம் உட்காராட்டி உயிர் போய்விடும் போலிருக்குது, அப்பா!" என்று பெருமாள் உட்கார்ந்து கொண்டான். காட்டுக் காளி தலையை அசைத்தான்; பிறகு அவனை யறியாமல் அவனுடைய கோமாளித்தனம் மேலிட்டது.

"பாம்புக்கு ராஜா மூங்கில் தடி, கரடிக்கு ராஜா தீக்குச்சி!" என்று அவன் கூத்தாட ஆரம்பித்தான்.



## கண்ணன் பிறந்தான்!

சீதக் கடலுள் அமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி............

— பெரியாழ்வார்

கண்ணன் சிறைக்கூடத்திலே பிறக்கிறான். கண்ணனைப் பெற்ற தேவகி அதே நேரம் தன் குழந்தையை யசோதையிடம் தன் கணவர் வசுதேவர் மூலம் அனுப்பி வைக்கிறாள். கொட்டு மழையில் குழந்தைக் கண்ணனை வசுதேவர் தூக்கிக்கொண்டு யமுனை நதியைக் கடக்கிறார். ''கண்ணன் மழையில் நனைகிறானே!'' என்ற ஏக்கம் ஆதிசேஷனுக்கு ஏற்படுகிறது. ஆதிசேஷன் படமெடுத்துக் கண்ணன் மீது மழை விழாமல் குடையாகத் தடுத்துக் காப்பாற்றுகிறான். ஆதிசேஷனுக்கு இருந்த பக்தியை ஆழ்வார் பெரிதும் அனுபவித்து, ''சென்றால் குடையாம்!'' என்றார்.

இப்படிக் கண்ணன் சிறையில் பிறந்து கோகுலத்தில் யசோதையின் பாலகனாக வளர்ந்து லீலைகள் புரிந்த கதை யுகம் யுகமாகப் பாரத மக்களைப் பரவசப்படுத்தி வருகிறது. கண்ணன் பிறந்த தினத்தை ''கோகுலாஷ்டமி'' என்றும் ''ஸ்ரீ ஜெயந்தி'' என்றும் காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை யாவருமே கொண்டாடி மகிழ்கிறோமல்லவா!

கல்கி தீபாவளி மலர் 1956



## வன மகோற்சவம்

"மறைகளை மறைந்து போய்
வனத்துள் வைகுவான் !" — கம்பர்

பாரதத்தின் பண்பாடு, வனங்கள் அளித்த பண்பாடு என்று மகாகவி ரவீந்திரர் கூறுவார். பாரதத்தின் புராதன கால ரிஷிகள் நகர்ப்புறங்களை விட்டு வனத்தில் வாழ்ந்தனர். மலைகளுடனும், மேகத்துடனும், மரங்களுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டு இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை நடத்தினர். அதனாலேயே இறைவனின் சாந்நித்தியம் அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது.

சுதந்திர பாரத நாட்டிலே புது வாழ்வுக்குப் பல வகைகளில் வழிவகைகள் பார்த்து முன்னேற்றப் பாதையில் செல்லும்போது நம் புராதன பண்பாட்டையும் மறந்துவிடலாகாதல்லவா? பார்க்கப் போனால் புராதன பண்பாட்டின் அஸ்திவாரத்தின்மீது புதுவாழ்வின் கட்டடம் எழுப்புவதே நியாயமல்லவா!

அம்முறையில் நம் நாட்டின் வன வளத்தைப் பெருக்க வேண்டும் என்று பாரத சர்க்கார் ஒரு புதுத் திருவிழாவே உண்டாக்கி விட்டார்கள்! ஆண்டுதோறும் சமீப காலங்களில் வனமகோற்சவங்கள் வெகு சிறப்பாக நடந்து வருகின்றன!

பெரிய தலைவர்களை வரவழைத்து மரங்களை நடச் செய்து வனமகோற்சவம் கொண்டாடி வருகிறோம். ஆனால் அது உண்மை தேசிய விழாவாக வேண்டுமானால் நமது ஓவியர் காண்பித்துள்ளபடி ஒவ்வொரு வீட்டுப் பெண்களும் மரங்களையும் செடிகளையும் வளர்க்க வேண்டும் என்கிறோம். ஓவியரின் கற்பனைச் சித்திரம் நடைமுறைச் சித்திரம் ஆகவேண்டும்.

கல்கி தீபாவளிமலர் - 1956



## தீபாவளி

பண்டிகை தீவாளிப் பண்டிகையாம் — இந்தப்
பாரதநாட்டுக் கோர் பண்டிகையாம்.
தண்டிகை மன்னர் ஏழை எளியவர்
சந்தோஷம் கொண்டாடும் பண்டிகையாம்.

—கவிமணி

தீபாவளிப் பண்டிகை பாரதநாடு முழுதும் கொண்டாடும் ஓர் பண்டிகை. இமயம் முதல் பொதிகை வரையில் தீபாவளித் திருநாளன்று குதூகலமாகக் காணப்படுகின்றனர். சாதிபேத உணர்ச்சியின்றி ஏழை பணக்காரன் பாகுபாடின்றி அனைவரும் கொண்டாடும் திருநாள் தீபாவளித் திருநாள்.

தீபாவளிப் பண்டிகை அனுஷ்டிக்கும் முறையில்தான் வேறுபாடேயொழிய ஆனந்தத்தில் வேறுபாடும் கிடையாது, குறைவும் கிடையாது!

தீபாவளித் திருநாளில் தீபங்களை வரிசையாக ஏற்றி வைத்து வடநாட்டினர் கொண்டாடுகின்றனர். நாம் இம்முறையைக் கார்த்திகைக்குக் கொண்டு போய் விட்டோம்.

தீபாவளித் திருநாளன்று விடியற்காலை கங்கா ஸ்நானம் செய்து, புத்தாடை உடுத்தி ஆண்டவனை வணங்குகிறோம்.

குழந்தைகள் மத்தாப்புகளையும் பட்டாசுகளையும் கொளுத்திக் குதூகலிக்கின்றனர்.

இவ் வருஷம் கல்யாணமான பெண்களும் இளைஞர்களும் இன்பக் காதல் பேச்சுக்களில் ஈடுபட்டுத் தங்கள் தலை தீபாவளியை வாழ்வில் என்றும் மறக்க முடியாத தலையாய தீபாவளியாகக் கொண்டாடுவார்கள். இப்படி இவ்வருஷத்திய தீபாவளியிலும் பாரத தேசமெங்கும் ஆனந்தம் பொங்கிப் பெருகுவதாக!



## வில்லை வளைத்தான்!

'முடிப்பென் இன்றொரு மொய்கணை யால்'எனுத்
தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினன்

— கம்பர்

கண்ணன் பிறந்த தினத்தைக் கொண்டாடுவது போலவே ராமன் பிறந்த நவமியையும் ஸ்ரீராம நவமி என்று தமிழ் நாட்டில் கொண்டாடுகிறோம்.

அரக்க சக்தியை ஸ்ரீ ராமன் அழித்து வெற்றிக் கொடி நாட்டிய வைபவத்தை வட நாட்டிலே நவராத்திரி சமயத்தில் வெகுவாகக் கொண்டாடுகிறார்கள். "ராம லீலா" உற்சவம் என்றே நவராத்திரியில் கொண்டாடுகிறார்கள்.

கண்ணனின் கதையைப் போலவே சக்கரவர்த்தித் திருமகனுகிய ராமனின் கதையும் பாரத மக்களுக்கு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உள்ளத்தில் பக்தி, சீலம், தியாகம், வீரம் ஆகிய உயரிய பண்புகளை வளர்த்து வந்திருக்கிறது. அந்த ராமனின் வீரத்தைக் காட்டும் சித்திரத்தை மேலே பாருங்கள்!

ராமன், "இந்த அரக்கனை ஒரு அம்பினுலேயே தொலைத்து விடுகிறேன்!" என்று மனத்தில் கொண்ட உறுதி கம்பர் வாக்கில் தோனிக்கிறது. அந்த உறுதி ஓவியக் கலைஞர் கனுதேசாய் சித்திரத்திலும் பிரதிபலிக்கிறது!

# கொள்ளேகால் உருமாலை

சியாமா

### காட்சி 1.

**சர்மா:** விசாலம்! ஏ, விசாலம்! உன்னைத்தானே! மாப்பிள்ளையின் மோதிரம் வந்து விட்டது. உன் இஷ்டப்படி நடுவிலே பச்சைக் கல், இரண்டு பக்கங்களிலும் வைரங்கள். இப்போதுதான் வருகிற வழியிலே தட்டானிடமிருந்து வாங்கி வருகிறேன். என்ன, உனக்குத் திருப்திதானே!

**விசாலம்:** எனக்கென்ன இதிலே திருப்தியும், அதிருப்தியும்? ஏதோ உங்கள் பெண் கேட்டாள், அதை வாங்கிக் கொடுத்தீர்கள்!

**சர்மா:** பார்த்தாயா, பார்த்தாயா! இதுதானே கூடாது என்கிறேன். ஆமாம், கவிலா எங்கே?

**கவிலா (வந்து கொண்டே):** இந்தா அப்பா, காப்பி!

**சர்மா (குறும்பாக):** விசாலம், உன் பெண்ணைக் கவனித்தாயா? அவள் கணவனுக்கு மோதிரம் வந்து விட்டது என்று எனக்கு ராஜோபசாரம் நடக்கிறது.

**கவிலா (பொய்க் கோபத்துடன்):** போ, அப்பா! உனக்கு எப்போது பார்த்தாலும் பரிகாசம்தான்.

**நாண்டு (வந்து கொண்டே):** இது பரிகாசம் பண்ணுகிற 'சீஸன்'தானே? அக்கா! கிட்டத்தான் வந்து பாரேன்! கழுத்து சுளுக்கிக் கொள்ளப் போகிறது!

**கவிலா (கொஞ்சலாக):** போடா, தடியா!

**சர்மா:** வேஷ்டி, புடவை, மோதிரம்—என் அயிட்டமெல்லாம் வாங்கியாச்சு. உன்னுடைய சமையல் திட்டங்கள்தான் பாக்கி, விசாலம்!

**விசாலம்:** ஆமாம், மாப்பிள்ளையிடமிருந்து ஏதாவது கடுதாசி வந்ததா? கூட யாராவது வரப்போகிறார்களாமா?

**கவிலா:** தீபாவளிக்கு முதல் நாள் மாலை ஆறரை மணி பாசஞ்சரில், அவர் மட்டும் வரப் போவதாகத் தான் எழுதியிருக்கிறார்!

**சர்மா:** பார் விசாலம், யாருக்கோ தகவல் வந்திருக்கிறது! என்னை வந்து கேட்கிறாய்?

**விசாலம்:** எனக்கு என்ன தெரிகிறது, இந்தக் காலத்துப் பழக்க வழக்கமெல்லாம்? நமக்கும் கல்யாணமாகி நாற்பது வருஷம் முடிந்து போச்சு. நான் இன்னும் ஒரு லெட்டர் எழுதினதில்லை!

**நாண்டு:** பாரப்பா! அம்மாவின் குறையை.... நீயாவது எழுதியிருக்கக் கூடாது?

**சர்மா:** நான் எழுதினேன் கண்ணு! கல்யாணமாகி ஆறும் நாளே எழுதினேன், உங்கம்மாவிற்கு என்று தெரியாமல்! அந்த லெட்டரைக் கிராமத்திலே பள்ளிக்கூட வாத்தியாரிலிருந்து பட்டாமணியம் வரை காட்டியிருக்கிறாள். தலை தீபாவளிக்குப் போயிருக்கிற பொழுது ஊரிலே அத்தனை பேரும் அந்த லெட்டரை உருப்போட்டு ஒப்பிச்சு என் மானத்தை வாங்கி விட்டார்கள்.

**விசாலம்:** நல்ல வெட்டிப்பேச்சு, குழந்தைகளுக்குச் சரியாக! எனக்குச் சமையல் அறையிலே ஏகப்பட்ட வேலை கிடக்கிறது. நான் போய்க் கவனிக்கிறேன்!

**சர்மா: (நினைவு வந்தவர்போல்)** ஆமாம், பர்வதம் எங்கே?

**பர்வதம்:** இங்கேதான் இருக்கிறேன், அண்ணு எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு.

**நாண்டு:** (பாதி தனக்குள்) அத்தை சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. அவள் கைகள் ஜப மாலையை உருட்டும். காதுகள் இரண்டும் 'பிரத்யேக' வெளி உலக நிருபர்களாகிவிடும்!

**சர்மா:** பர்வதம்! இப்படி வந்து மாப்பிள்ளைக்கு வாங்கி யிருக்கிற மோதிரத்தைப் பார்!

**பர்வதம்: (சிறு தாமதத்திற்குப் பின்)** மோதிரம் நன்றாகத்தான் இருக்கிறது. இந்த நாளில் தீபாவளிக்கே ஒரு கல்யாணச் செலவு அல்லவா செலவழிக்க வேண்டியிருக்கிறது! உங்கப்பாவின் தலை தீபாவளிக்கு நான்தான் கூடப் போயிருந்தேன். ஒரு இழை ஜரிகை போட்ட சாதாரணப் பட்டுப் புடவைதான் எனக்கு வாங்கியிருந்தார்கள். உங்கள் அப்பாவுக்கு ஜரிகை வேஷ்டியோடு ஒரு கொள்ளேகால் உருமாலை—அவ்வளவு தான்.

**சர்மா:** நீயே கேட்டுக்கொள், கவிலா! எத்தனை சுலபமாக என்னை ஏமாற்றி விட்டார்கள் என்று!

**நாண்டு:** அதென்னப்பா கொள்ளேகால் உருமாலை?

**விசாலம்:** அந்த நாளிலே அதுதான் 'பாஷன்'! 'ஸ்பெஷலா'த் தீபாவளிக்கு என்று உங்கள் தாத்தா கொள்ளேகாலத்திலிருந்து நேரில் தருவித்திருந்தார்.

**சர்மா:** அடேயப்பா, பெருமையைப் பாரு, பெருமையை!

**நாண்டு:** அதை இப்போது வைத்திருக்கிறாயா, அப்பா?

**சர்மா:** ஓ! கொஞ்சம் நிறந்தான் மங்கிப் போயிருக்கிறது!

**பர்வதம்:** என்னைக் கேட்டால் அதைக்கூடத் தீபாவளியன்று மாப்பிள்ளைக்கு ஓதியிட்டு விடலாம். ஆதிவந்த பண்டம்.

**சர்மா:** முதல்தரமான 'ஐடியா!' அது மாப்பிள்ளைக்கு என்னுடைய தனிப்பட்ட பரிசாக இருக்கட்டும்.

**கவிலா:** (சிணுங்கி) போ, அப்பா!

**விசாலம்:** நன்றாகத்தானிருக்கிறது. வாங்கி நாற்பது வருஷங்கள் ஆகப்போகிறது! மாப்பிள்ளை ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்!

**சர்மா:** உங்கம்மாவை நம்பாதே, கவி! அவள் அப்பா வாங்கினதை நான் எங்கே கொடுத்துவிடப் போகிறேனோ என்று பயப்படுகிறாள். அத்தனையும் சுயநலம்.

**கவிலா:** அம்மா வெற்றிலைப்பாக்கு வைத்துக் கொடுத்தால் கூட எனக்கு அது வேண்டாம். நான் அந்தப் பட்டை உன் பீரோவில் பார்த்திருக்கிறேன். கைலிமாதிரி கட்டம் கட்டமாக ஜரிகை வேறு போட்டு...பார்க்கச் சகிக்காது.

**பர்வதம்:** கவி! நன்றாகத்தான் இருக்கிறது நீ பேசுகிறது! பெற்றவள் ஆசையோடு கொடுக்க வருகிறதை வேண்டாம் என்று இப்படியா உதறித் தள்ளுகிறது?

**கவிலா:** உன்னை ஒன்றும் கேட்கவில்லை, அத்தை!



**சர்மா** (காரமாக): யார் தடுத்தாலும் சரி, அந்தப் பட்டைத் தீபாவளியன்று மாப்பிள்ளைக்கு ஒதியிடா விட்டால் என்னுடைய பெயர் சர்மா இல்லை!

**விசாலம்**: இப்போது எதற்கு இப்படிப் படபடக்கிறீர்கள்? அவனுக்கு வேண்டாம் என்றால் விட்டுத் தள்ளுங்களேன்.

**பர்வதம்**: ஆனாலும் பெண்களுக்கு இத்தனை அகங்காரமும், வாய்த் துடுக்கும் கூடாது.

**சர்மா**: அது என் குற்றம் பர்வதம், அது என் குற்றம்... ஆமாம், முனுசாமி எங்கே?

**முனுசாமி**: என்னங்க, எசமான்!

**சர்மா**: நான் ஒரு பட்டு மேல்வேஷ்டி தருகிறேன். அதைக் கொண்டு போய் லாண்டிரியிலே கொடுத்து அர்ஜண்ட் சலவை பண்ணச் சொல். நாளை நீக்கி உருப்படி திரும்ப வேண்டும்.

*[பீரோவிலிருந்து உருமாலையை எடுத்து வருகிறார்]*

## காட்சி 2

*[அடுத்த நாள் நடுப்பகல் கூடத்தில் நாண்டு ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருக்கிறான்.]*

**விசாலம்** (வந்து கொண்டே): என்ன நாண்டு! நேற்றிரவிலிருந்து கமலா சாப்பிட மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்துவருகிறாள்.

**நாண்டு**: என்னை என்னம்மா செய்யச் சொல்கிறாய்?

**விசாலம்**: உங்கப்பாவின் மனசை மாற்றுவதற்கு உன்னால்தான் முடியும்.

**நாண்டு**: உண்மை. ஆனால் பக்கத்திலே அத்தை இல்லாமல் இருக்கணும்....ஆமாம்; அத்தை இப்போ எங்கேபோனாள்?

**விசாலம்**: எழும்பூரிலே தன் பெண் கமலத்தைப் பார்த்து வரப் போயிருக்கிறாள். அதற்குள் ஏதாவது யோசனை செய்து உங்கப்பாவின் மனசை மாற்றியாகணும்.

**நாண்டு**: அதற்கு அப்பா இங்கே இருக்க வேண்டாமா? அவரும்தான் வெளியில் போயிருக்கிறாரே!

**விசாலம்**: எனக்குத் தலைசுற்றுகிறது. போ!..கமலா பயப்படுகிறது நியாயந்தானே? அவளோ படித்த பிள்ளை, கலெக்டர் வேறு! நைந்து போன பட்டை ஓதிவிட்டால் நன்றாயிருக்குமா?

**கமலா** (வந்து பேச்சில் கலந்து கொண்டு): தன்னை வேணும் என்று அவமரியாதை செய்வதாக அவர் நினைத்தால்..

**நாண்டு**: ஏன், அம்மா ஒன்று செய்தால் என்ன? லாண்டிரியில் கிழிந்து விட்டது என்று முனுசாமியை விட்டு அப்பாவிடம் சொல்லச் சொன்னால்....

**முனுசாமி**: சின்ன எசமான்! உங்களுக்குக் கோடிப் புண்ணிய முண்டு. இதிலே என்னை மாட்டி விடாதீங்க. பெரிய ஐயா கோபத்துக்கு முன்னே நான் உளறிக் கொட்டி விசயத்தைச் சொல்லி விடுவேன்.

**கமலா**: வீட்டுக்கு வந்த பிறகு பட்டை ஒளித்து வைத்து விட்டால் என்ன?

**நாண்டு**: பட்டை முனுசாமியிடமிருந்து வாங்கி அப்பாவே பீரோவில் வைத்துப் பூட்டி விடுவார். அப்பா இல்லாத சமயத்திலே நாம் அவர் பீரோவுக்கு மறு சாவி போட முயன்றால், அவரிடம் தகவலை அஞ்சல் செய்ய அந்த ருத்திராட்சப் பூனை காத்துக் கொண்டிருக்கிறது.

**முனு**: ஏன், சின்ன எசமான்! தீபாவளிக்கு முந்திய நாள் அத்தையம்மா அது மகள் வீட்டுக்குப் போகாது? அப்பொழுது எடுத்து ஒளித்து விட்டால்?....

**விசாலம்**: ஆமாம், அது நல்ல யோசனைதான்.

**கமலா**: அவ்வளவு தூரம் கொட்டு வாயில் கொண்டு வைத்துக்கொள்ளக் கூடாது. அது அனர்த்தத்தில் வந்து முடியலாம். ஒரு வேளை அன்று அப்பாவே வெளியே போகாமல் வீட்டிலே இருந்து விடலாம். அல்லது அத்தையே தலைதீபாவளி என்கிற சாக்கில் கமலத்தின் வீட்டுக்குப் போகாமல் தங்கி விடலாம்.

**நாண்டு**: அதோடு மறுசாவி போட்டுப் பீரோவைத் திறக்கிறது என்பதும் அத்தனை இலேசப்பட்ட விஷயமில்லை.

**விசாலம்**: அதைப் பற்றி நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம். உங்கப்பாவின் பீரோவுக்கு இரண்டு சாவிகள் இருக்கின்றன. ஒன்று அவரிடமும், இன்னொன்று என்னிடமும். அதனாலே வேறு சாவி போட்டுத் திறப்பதற்காகத் திண்டாட வேண்டிய தேவை இல்லை.

**நாண்டு**: போகிறது! இப்பொழுதாவது சொன்னாயே! எதற்கும் அந்தச் சாவியை என்னிடம் கொடுத்து வை.

**முனுசாமி**: சின்ன எசமான்! அத்தையம்மா கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே வந்து கொண்டிருக்கிறாங்க.

**நாண்டு**: மகிழ்ச்சிக்கு உரிய இத்தனை நல்ல தகவலைக் கொடுத்த உனக்கே அந்தப் பட்டாடையைப் போர்த்தி விட்டால் போகிறது!

**முனுசாமி** (திடுக்கிட்டு): என்னங்க?

**நாண்டு** (சிரித்து): இப்போ நீ இங்கிருந்து போகிறாயா, இல்லை......

## காட்சி 3

*[தீபாவளி தினத்தின் பிற்பகல். டிபனும் முடிந்து கூடத்தில் மாப்பிள்ளை; சர்மா, நாண்டு முதலியோர், பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]*

**சர்மா**: இப்படி அவசரப்படுகிறீர்களே! ஒரு வாரம், பத்து நாள் தங்கிப் போகக் கூடாதோ?

**மாப்பிள்ளை**: போகலாம்தான். இருந்தாலும் டிவிஷன் புதிசு, வேலை புதிசு; பாருங்கள்! அதனால்தான்....

**சர்மா**: நாண்டு! அந்தப் பட்டைப் பீரோவிலிருந்து எடுத்து வா! இப்பொழுதே மாப்பிள்ளைக்குக் கொடுத்து விடுவோம்.

**மாப்பிள்ளை**: எதற்கு மாமா, இப்பொழுது எனக்குப் பட்டும், கிட்டும்?

**சர்மா**: இது சாதாரணப் பட்டு இல்லை, மாப்பிள்ளை! கொள்ளை காலத்திலே ஸ்பெஷலாக நெய்தது. உங்களுக் கென்றே நான் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன்!

**மாப்பிள்ளை**: நான் எங்கே பட்டு போட்டுக் கொள்ளப் போகிறேன்?

**சர்மா**: பட்டைப் பார்த்தால் அப்படிச் சொல்ல மாட்டீர்கள்! ஏண்டா, நாண்டு, இன்னும் போகாமல் நிற்கிறாய்?

**நாண்டு**: இல்லை, அப்பா..வந்து, வந்து..

**சர்மா** (சிரித்து): பீரோச் சாவியைக் கொடுக்க மறந்து விட்டேனா? அதை வாயைத்






The past few years have brought about many changes. Some have been surface changes only. Some have driven deep into the fabric of the nation.

There is one thing that has not changed and will never change...the desire of the man in the street for a better way of life. In the constant effort to realise this ideal the people of today recognise the need to improve and raise their standards of health and living. Only then they have gained a foothold on the future.

The struggle to fight dirt and disease is made easier today. The responsibility which the textile man owes to the one [in the street is told in the continual effort to widen the base of the distribution of Textile products and to stabilise prices at a leval which can be comfortably afforded by everybody.

One organisation which has linked arms with the consumer in India since 1923 in this desire to raise the standards of life is RADHAKRISHNA MILLS, which remains constant in its aim to provide high quality and fair prices to a loyal and growing public that has purchased textile goods for all these years. In continuing to meet the increasing demands of the Nation RADHAKRISHNA uses its skill in perfecting the latest methods in their honest endeavour to give the man in the street a square deal.

**RADHA KRISHNA MILLS, LTD.,**

**PEELAMEDU P.O., COIMBATORE**

*MAKERS OF HIGH CLASS YARN, GADAS, LONGCLOTHS & MULLS*

ந்திரிகை என்ற பெயருக்குப் பொருந்தாதபடி அவன் அப்போது 'போர்க்கோலம்' கொண்டிருந்தான்.

"உத்தியோகமா? குடும்பமா?" பெண்களுக்கு எது மேன்மையையும் உயர்வையும் தரக்கூடியது?" மேற்படி தலைப்பில் கேள்விகளைக் கேட்டு ஒரு பத்திரிகையின் ஆசிரியர் வாசக நேயர்களின் கருத்துக்களைக் கேட்டிருந்தார்.

"பெண்ணுக்கு உரிய இடம் வீடுதான்; பொருள் தேடுவது ஆணின் கடமை" என்று ஆரம்பமாகும் கடிதம் ஒன்று அதில் வெளியாகி யிருந்தது. அந்தக் கடிதம் வருமாறு:

"**நா**ன் விஞ்ஞானக் கல்வி பயின்ற பட்டதாரி. பட்டம் பெற்றபின் ஒரு கல்லூரியிலே ஆசிரியையாக உத்தியோகமும் ஏற்றிருந்தேன். சில நாட்களில் பொறி இயல் வல்லுநர் ஒருவரை மணந்து கொண்டேன். அவர் பரந்த நோக்கம் கொண்டவர்தான். எனவே நான் உத்தியோகம் செய்ததை அவர் தடுக்கவில்லை. ஆரம்பத்திலே மிகச் சில நாட்களே வாழ்வின் இனிமையில் மாற்றுக் குறையவில்லை. ஒரு தாய்க்குரிய பொறுப்புக்கள் என் மீது விழுந்ததும் சமாளிக்க முடியவில்லை. அலுத்துச் சோர்ந்து வீடு திரும்புபவளை அழும் குழந்தையும் அலங்கோலமான வீடும், பொறுப்பற்ற வேலைக்காரியும் வரவேற்றால் அவள் சந்தோஷ மடைவது எப்படி? குடும்பத் தலைவனுக்கு அத்தகைய மனைவியும் வீடும் எப்படி மகிழ்ச்சியைக் கொடுக்க முடியும்? நான் இப்போது வேலையை விட்டு விட்டேன். வருமானம் குறைந்தாலும் இரண்டு குழந்தைகளோடு எங்கள் குடும்பப் படகு அமைதியாக, ஆனந்தமாக வாழ்விலே மிதந்து செல்கிறது. ஆண்களோடு சரிநிகர் சமானம் என்று பெண்கள் எல்லா விதங்களிலும் போட்டியிடுவது மடத்தனம்.

பிரபா."

சந்திரிகை இதைப் படித்து விட்டு ஆத்திரமாகப் பேனாவை ஓடவிட்டான்.

ஆசிரியர் அவர்களுக்கு,

தங்கள் பத்திரிகையில் வெளியாகி யிருந்த திருமதி பிரபா அவர்களின் கடிதத்தைப் படித்தேன்...என்று கடிதத்தை ஆரம்பித்தான்.

இந்தச் சமயம் மேலிருந்து காரைக் கட்டிகளும், சுண்ணாம்புமாக மேஜைமீது எதிர்பாராத விதமாக விழுந்தன.

சந்திரிகை திடுக்கிட்டு மேலே நிமிர்ந்து பார்த்தான். பதினேழாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட அந்த வீட்டின் மாடியை அமெச்சூர் நாடக சங்கம் ஒன்று வாடகைக்கு எடுத்துக் கொண் டிருந்தது. அவர்கள் அங்கே ஒத்திகை நடத்திக் கொண் டிருந்தனர்!

குடும்பம், குடித்தனம் என்று பொறுப்பில்லாத முப்பது ஆண்பிள்ளைகள் நாடக ஒத்திகை என்ற பெயரில் கூத்தடித்தால், அந்தப் பழைய நாளைய வீடுதான் எப்படித் தாங்கும்?

அவன் பேனாவை அப்படியே வைத்து விட்டு மாடிக்கு ஏறினான். "டொக்.... டொக் டொக்...." பதில் இல்லை.

சந்திரிகை பல்லைக் கடித்து ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு கத்தினான்.

அவன் முன் மூக்குக் கண்ணாடியும் 'ஸில்க் ஷர்ட்டுமா'க ஓர் இளைஞன் பிரசன்னமானான். சந்திரிகை தன் விழிகளைக் குரோதம் பொங்க உருட்டி, "நீங்கள் ஒத்திகை நடத்துவதற்குள் கீழே உள்ளவர்கள் சட்னி ஆகவேண்டியதுதான் போலிருக்கிறது!" என்றான்.

கீழே வந்து பார்த்த அவன் "இனி இப்படி நேராது.." என்று கூறி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மெல்ல அங்கிருந்து நகர்ந்தான்.

சந்திரிகை அந்தக் கடிதத்தைத் தொடர்ந்து ஒரு மாதிரியாக எழுதி முடித்தான். திருமதி பிரபாவைப் போன்ற பட்டதாரிப் பெண் அடிமைத் தனத்தை ஆதரித்து, அடுப்படியோடு அழுந்திவிடும் அறியாமைக்குள் ஆழ்ந்து விடுவது மிகவும் வருந்தத்தக்கது என்று தன் கடிதத்தில் வற்புறுத்தி யிருந்தான்.

அவன் தபாலாபீசுக்குப் புறப்படுகையில், மாடியிலிருந்து வந்த சம்பாஷணை அவன் செவிகளில்புகுந்தது."பெண்ணே! நான் உன் அடிமை, என் உடல்,பொருள், ஆவி அனைத்தும் உன் வசம்...."

சந்திரிகை கதவைப் படார் என்று அறைந்துவிட்டுப் புறப்பட்டான்.

மறுநாள் சந்திரிகையின் கடிதம் பிரசுரமாயிற்று. ஆனால் 'இந்தத் தொடரில் இனி ஒரு கடிதமும் பிரசுரிக்கப்பட மாட்டா!' என்ற குறிப்பும் அதில் காணப்பட்டது.

மூன்று தினங்கள் சென்றபின் சந்திரிகை பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்து வீட்டுக் கதவைத் திறந்தபோது, அவனுக்கென்று உள்ளே ஒரு கடிதம் விழுந்து கிடந்தது. முத்து முத்தான கையெழுத்தில் திருமதி பிரபாதான் எழுதி யிருந்தாள்.

**"அன்புள்ள சந்திரிகை அவர்களுக்கு,**

**முற்றிலும் மாறுபட்ட கொள்கையுடைய தங்கள் கடிதத்தைப் பத்திரிகையில் கண்டேன். மனம் விட்டுத் தாங்கள் எழுதியிருப்பது மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. தங்களைச் சந்தித்துப் பேச மிக ஆவலாக இருக்கிறேன். எனக்கு அவகாசம் கிடைப்பது பகலில் இரண்டு மணிக்கு மேல்தான். எனவே, தாங்களே என் விலாசத்துக்கு வந்தால் சௌகரியமாக இருக்கும். தங்களை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்க்கும், பிரபா."**

இந்தக் கடிதம் சந்திரிகையை மகிழ்ச்சியால் துள்ளச் செய்தது என்றால் மிகையாகாது. ஆவலுடன் விலாசத்தைப்பார்த்தான்.என்ன ஆச்சரியம்! அடுத்த தெருவில்தான் பிரபா இருந்தாள்!

அந்த மாலையே அவன் பிரபாவைச் சந்திக்கக் கிளம்பி விட்டான்.

பிரபாவைப் பார்த்த போது அவளை எப்போதோ எங்கேயோ ஏற்கெனவே பார்த்தாற் போல் தோன்றியது, சந்திரிகைக்கு.

"ஆமாம்...நீங்கள்.. பிரபாதானே?"

"ஆமாம்" என்றாள் பிரபா. அப்பொழுது அங்கே வந்த பாலுவிடம், பிரபா "பாலு, இவர்கள் யார் தெரியுமோ?... பத்திரிகையில் கடிதம்...." என்று அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

அந்த வாலிபன் தன் வீட்டு மாடியில் நாடக ஒத்திகை நடத்திய வாலிபன் என்பதைச் சந்திரிகை அறிந்து கொண்டான்.

அவன் "ஓ....நீங்கள்தான் அந்தக் கடிதம் எழுதினீர்களா? ரொம்பச் சரியாக எழுதியிருந்தீர்கள்...." என்றான்.

"என் மைத்துனர்" என்று பிரபா அறிமுகம் செய்வித்தாள் அவனை.

"உங்கள் கருத்துக்களை நான் முழுதும் ஆமோதிக்கிறேன். நீங்கள் சொல்வது போல் பெண்களின் சுதந்திரம் பாதிக்கப் படுவதால் அவர்களுடைய திறமையே சோபிக்காமல் போய்விடும்."

"நீங்கள் எந்தக் கல்லூரியில் இருந்தீர்கள், பிரபா?" என்று விசாரித்தான் சந்திரிகை.

அவள் தன் மைத்துனனைப் பார்த்துக் கொண்டே, "கமலாபுரம் பெண்கள் கல்லூரியில் இருந்தேன். உங்களை எனக்கு எங்கோ பார்த்திருப்பது போல் தோன்றுகிறது. நினைவு வரவில்லை.." என்றாள்.

"மதுரையில் என் அண்ணன் இருக்கிறார். திருநெல்வேலியில் என் சித்தி இருக்கிறார். இந்த இரண்டு இடங்களுக்கும் நான் நான் போவேன். மதுரைக் கல்லூரியில்தான் படித்தேன். எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது.." என்றான் சந்திரிகை.

"ஓ, இருக்கும். மதுரையில் நாங்களும் இருந்தோம். இப்போதும் கூட அங்குதான் போக வேண்டும்...." என்று கூறிப் பிரபா சிரித்தாள்.

பாலு இடையிடையே இவர்கள்சம்பாஷணைக்கு விருவிருப்பை ஏற்படுத்தினான்.



"நீ அப்படியானும் தன்காலால் ஊன்றி நிற்கும் பெண்ணையே மணந்து கொள்வாயா பாலு?" என்று பிரபா சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"நிச்சயமாக; கொள்கையைக் காற்றில் பறக்க விடுபவன் நானல்ல. அவள் திறமைகள் வெளிப்பட அவசியம் சந்தர்ப்பம் அளிப்பேன்" என்றான் பாலு.

"அடிக்கடி வந்து கொண்டிருங்கள், சந்திரிகா! உங்கள் நட்பை நான் பெரிதும் விரும்புகிறேன்" என்று பிரபா சந்திரிகைக்குக் குங்குமம் தந்து விடை கொடுத்தாள்.

சில நாட்களில் சந்திரிகை ஜாகை மாற்றிக் கொண்டு இரண்டு மைல் தூரத்தில் உள்ள பெண்கள் விடுதி ஒன்றில் போய்த் தங்கினாள்.

சந்திரிகை கட்டுப்பாடுகள் நிறைந்த விடுதி வாழ்வுக்குப் பழக்கப் பட்டவள் அல்ல. அந்த விடுதியை ஒரு வயதான தம்பதிகள் மேற்பார்வை செய்து வந்தார்கள். சந்திரிகை அடிக்கடி பிரபாவின் வீட்டுக்குப் போகும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டாள்! ஒரு நாள் பிரபாவின் பெண்ணுக்குப் பிறந்த நாள் வந்தது. சந்திரிகை போயிருந்தாள்.

அன்று மாலை பிரபா வீட்டில் சந்திரிகை வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தாள். பேச்சு நேரம் செல்வது தெரியாமல் நீண்டு விட்டது. கைக் கடிகாரத்தைப் பார்த்த சந்திரிகை துள்ளினாள். "ஓ, மணி ஏழரையா? ஹாஸ்டலுக்கு எட்டு மணிக்குள் போயாக வேண்டுமே!" என்று கூறி எழுந்தாள்.

"என்னது? இங்கே சாப்பிட்டுவிட்டுப் போவாயாக்கும் என்று 'ஸ்பெஷல் பாயசம்' வைத்தேனே சந்திரிகா!" என்றாள் பிரபா.

தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவே அன்று சந்திரிகை சாப்பிட்டு விட்டுச் சாவகாசமாக ஒன்பது மணிக்கு விடுதிக்குக் கிளம்பினாள்.

விடுதி வாயிலில் சந்திரிகை ரிக்ஷாக் காரனுக்குச் சில்லறை கொடுத்து விட்டு உள்ளே செல்ல யத்தனித்த போது, "மிஸ் சந்திரிகா!" என்ற அம்மாளின் குரல் அவளைத் தடுத்து நிறுத்தியது.

"என்ன?" என்று சந்திரிகை விறைப்பாகவே கேட்டாள்.

"உனக்கு விடுதியின் விதிகள் நினைவிருக்கும் என்று எண்ணினேன்....!" என்றாள் குத்தலாக.

"உறவினர் வீட்டில் சாப்பிட்டுவரத் தாமதமாகி விட்டது. இதற்கு ஒரு கட்டுக் காவலா?" என்றாள் அவள்.

"கோபப்படாதே, பெண்ணே! அதற்கு முன் கூட்டித் தெரிவிக்க வேண்டும்" என்றார் கிழவர்.

அன்று முதல் சந்திரிகை மாலை வேளைகளில் பிரபாவின் வீட்டுக்குப் போவதை விட்டுவிட்டு வீடுதேடும் படலத்தில் இறங்கினாள். பத்து தினங்கள் ஓடிவிட்டன.

அன்று காலை அவள் பள்ளிக்குக் கிளம்பும் முன் கிழவர், "ஓ, மறந்தே போனேனே! யாரோ 'கஸின்' [illegible] நேற்றுக் காலையிலேயே போனில் அழைத்தார்கள். நான் சொல்ல மறந்து போனேன். உன்னை வரச் சொன்னார். பாஸ்கரன் என்று பேர் சொன்னார்" என்றார். அவர் இதழ்களில் ஒரு விஷமச் சிரிப்பு தேங்கி நின்றது.

அன்று மாலை அவள் கொஞ்சம் படபடப்புடனேயே பிரபாவின் வீட்டுக்கு நடந்தாள்.

சந்திரிகை அங்கே போன போது "அம்மா! ....அப்பா" என்று கூடத்து அறையில் பாஸ்கரன் முனகிக் கொண்டிருந்தான்.

"உங்களுக்கு உடம்பு சரி



# சந்திரிகையின் கோபம்

ராஜம் கிருஷ்ணன்



### அலங்கார அலங்கோலம்







இத்தனை அலங்கோலமும்...



...இந்த அலங்காரத்துக்குத்தான்

யில்லையா என்ன? பிரபா எங்கே?" என்று கேட்டாள் சந்திரிகை.

கம்பளியும் மப்ளருமாக இருந்த அவன் சிரமத்துடன் எழுந்திருக்க முயன்றான். யூகலிப்டஸ் வகையறாக்களின் வாசனை அவள் நாசியைத் துளைத்தது.

"நேற்று மழையில் நனைந்துவிட்டேன். ஜலதோஷம் பிடித்து ஜுரமும் வந்திருக்கிறது. பிரபா குழந்தைகளுடன் நேற்றுத் தான் ஊருக்குப் போயிருக்கிறாள். அண்ணா திடீரென்று புறப்பட்டு வந்தார். வீடு கிடைத்து விட்டதாம். உங்களுக்குக் காலையில் போன் பண்ணினேன். செய்தி கிடைக்க வில்லையா?" என்று கேட்டான் பாஸ்கரன்.

"அடாடா....உங்களுக்கு என்றால்....ஏதேனும் உதவி.."

"பாவம், உங்களைச் சிரமப்படுத்த வேண்டுமே?.. ஒரு கப் வெந்நீர்தான் வேண்டும். டாக்டர் மாத்திரை கொடுத்திருக்கிறார்...."

"இவ்வளவுதானே?"

சந்திரிகை பையைக் கீழே வைத்து விட்டுச் சேலைத்தலைப்பை இழுத்துச் செருகிக் கொண்டாள். குழாயிலிருந்து தண்ணீர் பிடித்து வந்து அடுப்பில் வைத்துக் காய்ச்சி அவன் அருகில் வைத்தாள்.

"உங்களுக்கு ஹாஸ்டலுக்கு நேரமாகி விடும்...." என்றான் அவன்.

"ஆனால் ஆகட்டும்" என்று அவள் பாலையும் காய்ச்சி வைத்தாள். அன்று அவள் விடுதிக்குள் செல்லும்போது பெரியவர் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தார். "மிஸ் சந்திரிகா?" என்று அந்தக் கிழவரின் மனைவி விளித்தபோது சந்திரிகை திரும்பவேயில்லை.

"விளக்கம் அவசியமில்லை மிஸஸ் ராம்! நான் கூடிய சீக்கிரம் விடுதியை விட்டுப் போய் விடுவேன்!" என்று ஆங்கிலத்தில் பதில் அளித்து விட்டுப் போனாள். இதற்குப் பிறகு ஒரு வாரம் சந்திரிகை தினமும் மாலையில் பாஸ்கரன் வீட்டுக்குச் சென்று வெந்நீர் போட்டுப் பாலைக் காய்ச்சி வைத்து விட்டு வந்தாள். அவனுக்கு ஜுரம், தலைவலி எல்லாம் ஒருவாறு விட்டிருந்தன.

பாஸ்கரன் அன்று சந்திரிகையிடம் சகஜமாகக் கேட்டான்: "வீடு கிடைத்ததா?" என்று. அவள் உதட்டைப் பிதுக்கினாள். "எப்படியும் இந்த மாசம் விடுபட்டு விட வேண்டும். சேச்சே, ஹாஸ்டலா அது? சிறை! பெண்கள் பொய்யைச் சொல்லி ஏமாற்றுவதை எல்லாம் நம்பி இடம் கொடுக்கிறார்கள். நமக்கு அர்த்த மில்லாத கண்டிப்பு. இந்தமாதிரி கண்டிப்பு அதிகமாகும் போது, கள்ளத்தனமும் அதிகமாகிற தில்லையா?" என்று கேட்டாள்.

அவன் புன்னகை செய்தான். "எனக்கு ஒரு எண்ணம் இருக்கிறது. உங்களுக்கு ஆட்சேபம் இல்லை என்றால் சொல்லுகிறேன்" என்றான் அவன்.

"சொல்லுங்களேன்? யோசனை சொல்லுவதற்கு என்ன ஆட்சேபம்?" அவள் குரல் இலேசாக நடுங்கியது.

"அப்படியில்லை. உங்களுக்கு விருப்பமில்லையானால் விட்டு விடலாம். அதனால் தப்பர்த்தமோ, மனஸ்தாபமோ ஏற்படக்கூடாது பாருங்கள்! இந்த ஒரு வாரத்தில் தாங்கள் காட்டிய பரிவும் உதவியும் என்னால் என்றென்றும் மறக்க முடியாதவை" என்றான் பாஸ்கரன்.

"இது என்ன பிரமாதம்? நீங்கள் சொல்ல நினைப்பதைத் தயங்காமல் சொல்லுங்கள்."

"உங்களுக்குச் சம்மதம் என்றால் இந்த வீட்டுக்கே வந்து விடலாம். என் வாழ்வில் பங்கு கொள்ளுபவருக்குப் பூரண சுதந்திரம். உறுதி...."—சந்திரிகை உதய சந்திரிகையாக முகம் சிவந்தாள். சந்திரிகையின் பிரகாசமான முகமே அவள் சம்மதத்தைத்தெரிவித்துவிட்டது.

அவர்கள் திருமணம் சுருக்கமாகத் திருநீர் மலையில் நடந்துவிட்டது. கல்யாணத்துக்குச் சந்திரிகையின் அண்ணன் மட்டுமே வந்திருந்தான். பாஸ்கரின் அண்ணன் தமக்கு லீவு இல்லாததால் குடும்பத்துடன் வர இயலவில்லை என்று காரணம் காட்டி யிருந்தார்.

சந்திரிகைக்கு மதுரையிலிருந்து ஒரு புத்தகப் பரிசு வந்திருந்தது. அதை அவள் பிரித்தாள். முகப்பில் திருமதி சந்திரப் பிரபாவுக்கு, 'நீலா' என்று எழுதப் பட்டிருந்தது.

தன்னையே பார்த்துக் கொண்டிருந்த மணாளனை அவள் நிமிர்ந்து நோக்கினாள். இதழ்களில் குறுநகையுடன் "என்னை முட்டாளாக்கி விட்டதாகத் தானே நினைத்தீர்கள்?" என்று கேட்டாள்.

"என்னது? நான்தான் பிரபா என்று தெரியுமா? நீலா துரோகம் செய்து விட்டாளா என்ன, கடைசியில்?"

"ஐயோ, இல்லா விட்டால் தெரியாதோ? பிரபா அவள் சொந்தப் பெயரில்லை என்பது இங்கு வந்த மறுநாளே தெரிந்து விட்டது. வேடிக்கை எவ்வளவு தூரம் போகிறது என்று பார்த்தேன். அக்கம்பக்கத்திலே நீலா என்று அழைத்தார்கள்; அவளுக்கு வந்த கடித உறை ஒன்றும் வெட்ட வெளிச்சமாக்கியது."

"நீங்கள்தான் பத்திரிகைக்கும் எனக்கும் பிரபா என்ற பெயரில் கடிதம் எழுதினீர்கள். அதுவும் உண்மைதானே?"

"உனக்கு இப்போது கோபம் கோபமாக வரவில்லையே சந்திரிகா?"

அவள் கொஞ்சலாக மௌனம் சாதித்தாள்.

"நான் தமாஷாக எழுதிய கடிதத்துக்கு நீ ஆத்திரத்துடன் மறுப்பு எழுதிய காட்சியை இப்போது நினைத்துக் கொண்டாலும் நடுக்கமாக இருக்கிறது. பி. ர. பாஸ்கரன், பிரபா ஆனான்...." என்று கூறிச் சிரித்தான். பிறகு தொடர்ந்து, "அந்தக் கடிதத்தைத் தீவிரமாக எடுத்துக் கொள்ள வேண்டாம் சந்திரிகா! நீ உத்தியோகம் செய்வதை நான் தடுக்க மாட்டேன்" என்றான். சந்திரிகை கலகலவென்று நகைத்தாள்.

"உங்கள் கடிதப்படி அப்புறமாக உத்தியோகத்தை விட்டு விடலாம்" என்றாள் சந்திரிகை.

"இதுதானே? நமக்குள் இனி நான் நீ என்று என்ன பேதம் சந்திரிகா! உன் சுதந்திரம், என் சுதந்திரம் என்று வெவ்வேறு உண்டா? இருவர் சந்தோஷமும் நம் சந்தோஷம்தானே?"

'இந்த உண்மை அப்போது தெரியவில்லையே, ஏன்?' என்று நினைத்தபோது சந்திரிகைக்கு உடல் சிலிர்த்தது; அந்தப் புதுமைப் பெண்ணையும் அப்போது நாணம் கப்பிக் கொண்டது!

# இப்பொழுது!

## பத்துலக்ஷம் ஹிந்த் ஸைக்கிள்கள் ரஸ்தாவில் செல்லுகின்றன

ஜெயபேரிகை முழங்கட்டும்! ஹிந்த்ஸைக்கிள் மற்றுமொரு விற்பனை வரம்பைத் தாண்டி விட்டது. ஹிந்த் ஸைக்கிள்கள் இப்பொழுது பத்து லக்ஷத்திற்கு மேல் விற்பனையாகின்றன. இதுவே மக்களின் விருப்பத்திற்கு ஒரு தக்கசான்று. ஆம், பத்து லக்ஷத்திற்கு மேல் விற்பனையாகும் ஸைக்கிளில் ஹிந்த் முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. இன்னமும் முன்னணியில் நிற்கிறது.




**மற்ற எந்த ஸைக்கிள்களைக் காட்டிலும் 4 மடங்கு அதிகப்படியான ஹிந்த் ஸைக்கிள்கள் ரஸ்தாவில் செல்லுகின்றன**

உயர்ந்த தயாரிப்பு, தொழிலில் ஆர்வம் மூலம் ஏற்பட்ட இந்த சாதனையை ஒரு சரித்திர சம்பவமென்றே சொல்ல வேண்டும். நிரூபிக்கப்பட்ட தரம் வாய்ந்தது. லக்ஷக் கணக்கான ஸைக்கிளோட்டிகள் ஹிந்த ஸைக்கிளையே தேர்ந்தெடுக்கிறார்கள். ஏனெனில் அதிக உறுதியுடனும் நீடித்த உழைப்பை அளிக்குமாறு ஹிந்த் ஸைக்கிள்கள் தயாரித்திருப்பது அவர்களுக்குத் தெரியும்.





**ஹிந்த்**

லக்ஷத்திலோர் ஸைக்கிள்

ASP/HC

ஹிந்த் ஸைக்கிள்ஸ் லிமிடெட், 250, வொர்லி, பம்பாய் 18







பாரத நாட்டுக் கிராம மக்கள் வாழ்வில் பல ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டிருக்கின்றன. என்றாலும் அவர்கள் தங்கள் பூர்வமான ஆட்டங்களையும் பாடல்களையும் கலைப்பண்பையும் விட்டு விடவில்லை. அவற்றைப் பொன்னே போல் போற்றி வந்திருக்கின்றனர். பாரத நாட்டில் பல்வேறு ராஜ்யப் பகுதிகளில் கிராம மக்கள் ஆடும் பல நடனத் தோற்றங்களை இந்தப் படங்களில் காணலாம்:

1. பீஹார் மாகாணத்து ஆதிவாசிகளின் நடனம் 2. ஒரிஸா ராஜ்ய மக்களின் நாட்டியம் 3. சென்னை ராஜ்யப் பின்னல் கோலாட்டம் 4. அஸ்ஸாம் மலை ஜாதியினரின் ஆனந்த நடனம். 5. குலுப்பள்ளத்தாக்கு வாசிகளின் நடனம், 6. மத்தியப் பிரதேச மறவர்கள் நடனம், 7. நாகர்களின் வெற்றி நடனம், 8. காஷ்மீர் நடனம் 9. பஞ்சாப் மக்கள் நடனம், 10. ராஜஸ்தான் வீர மறவர்கள் நடனம்.

Courtesy : Sangeet Natak Akadami

# 1956
# ப்ளிமத்
## கவர்ச்சி - உல்லாஸம்



**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிட்.**
மதுரை & கிளைகள்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
சென்னை - 6

டி. வி. எஸ். ஸப் - டீலர்கள் :

மெஸர்ஸ் C. C. ஆட்டோமோபைல்ஸ் லிட்.
கோழிக்கோடு

மெஸர்ஸ் P. N. கிருஷ்ண அய்யர் & ஸன்ஸ் லிட்.
திருச்சூர்

மிஸ்டர் U. சுப்ராய நாயக்
கண்டோன்மென்ட், மங்களூர்

சுந்தரம் மோட்டார்ஸ் ஸப் - டீலர்கள் :

மெஸர்ஸ் D. S. ஆட்டோமோபைல்ஸ்
நெல்லூர்

மெஸர்ஸ் டோனிஸ் காரேஜ்
29, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர்

மெஸர்ஸ் கரபதி காரேஜ்
ஜெனரல் மிஷினரி அண்டு ஆட்டோ ஸ்டோர்ஸ்
காந்திநகர், விஜயவாடா



உலகில் எழுந்தாடிய ஆதிக்க வெறி கோடிக்கணக்கான உயிர்களை உருட்டி விளையாடிக் கொண்டிருந்தது. இதுதான் யுத்தம்; உலக யுத்தமென்று உலகத்தின் தலையிலேயே சூட்டப்பட்ட கொடூரமான பழி. ஆனால் இந்த வெறிக் கூத்துக் இடையேதான் உண்மையான மனித தத்துவமும் அங்குமிங்கும் தோன்றிப் பிரகாசித்தது. குருக்ஷேத்திரத்தில்தானே கீதை பிறந்தது?

அரக்கான் காடுகளில் ஜப்பானியர் அட்டகாசம் அதிகமாக இருந்தது. அரக்கான் காடுகளில் இந்திய ராணுவத்தினரின் சாகசங்கள்தான் ஜப்பானியர்களின் திமிர்த் தாக்குதலுக்குச் சளைக்காமல் ஈடு கொடுக்கக் கூடியதாக இருந்தன. ஒவ்வொரு இந்திய வீரனும் உயிரைத் திருணமாகவே மதித்துப் போரிட்டான்.

மிஸ்டர் சிம்மண்டேல் என்ற ஆங்கிலத் தளபதியின் கீழ்தான் அந்தப் பட்டாளம் இருந்தது. அந்தப் படையில்தான் பாலக்காட்டைச் சேர்ந்த புதியங்கம் சகவரன் நாயரும் தஞ்சையைச் சேர்ந்த ஆறுமுகமும் போர் வீரர்களாக இருந்தனர். சகவரன் நாயர் என்று பட்டாளத்தில் சேர்ந்தானோ, அன்றுதான் ஆறுமுகமும் பட்டாளத்தில் சேர்ந்தான். அன்றிலிருந்து அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்கள். அவர்களிருவரும் எப்படி அவ்வளவு நெருங்கிய நண்பர்களானார்கள் என்பது அவர்களுக்கே ஓரோர் சமயம் ஆச்சரியத்தை ஏற்படுத்தக் கூடிய, அறிய முடியாத ரகசியமாக இருந்தது. பட்டாளத்தில் ஒரு வரிசையில் ஒருவனுக்குப் பக்கத்தில்தான் மற்றவன் நிற்பான். தூங்கும்போதும் சாப்பிடும்போதும் அப்படியே. ஒருவன் தமிழன். மற்றவன் மலையாளி. இருவரும் எந்த நிமிஷத்திலும் தங்கள் உயிரைக் கொடுக்கத் தயாராக இருந்தார்கள். ஆறுமுகத்துக்கும் சகவரனுக்கும் ஏற்பட்டிருந்த பிணைப்பு தெய்வீகமாகத்தான் திகழ்ந்தது.

சகவரன் சிரித்துக் கொண்டே ஆறுமுகத்திடம் சொன்னான். ''இதோ பார்! நம்மைக் கொல்ல நினைப்பவனும் ஒரு மனிதன். நாம் கொல்ல நினைப்பதும் ஒரு மனிதனே. இது ஏன்?'' என்றான்.

சகவரன் இப்படித் திடீர் திடீரென்று புதிர்போடுவதுபோல் கேள்விகள் எழுப்புவதுண்டு. ''ஏனா? அவன் ஜப்பான்காரன். நாம் இங்கிலீஷ்காரர் ஆள். அதனால்தான். தேசத்துக்குத் தேசம் மாத்திரம் இல்லை. ஒரு தேசத்துக்குள்ளேயே பாரு. தமிழன், மலையாளி, தெலுங்கன், வங்காளி-இதற்குள் சாதிப் பூசல்கள் வேறு. எவ்வளவு இனக் காய்ச்சல்?'' என்றான் ஆறுமுகம்.

''ஆமாம்! எனக்குக் கூட இப்படிப்பட்ட வித்தியாசமெல்லாம் ஒரு காலத்தில் இருந்தது. தமிழன் என்றாலே பிடிக்காது. ஆனால் இப்பொழுது அப்படி இல்லை'' என்றான் சகவரன் நாயர்.

''எல்லாம் சூழ்நிலையும் மனசும்தான் காரணம். உனக்கு மலையாள எமனும் எனக்குத் தமிழ் எமனும் வரப்போகிறதில்லை. இருவருக்கும் ஒரு எமன்தான். இதைத்தான் உலகம் உணருவதில்லை'' என்றான் ஆறுமுகம்.

சகவரன் சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான்.

''நாம் சொந்த ஊருக்குச் சென்றாலும் தமிழன், மலையாளி என்ற வித்தியாசத்தை ஏற்படுத்திக் கொள்ளாமல் வாழ்வதுதான் நமக்கும் பெருமை; தேசத்துக்கும் பெருமை. ஆறுமுகம்! என் தங்கை சாவித்திரியை நீ கல்யாணம் செய்து கொண்டுவிடு. என் உயிர் எனக்குப் பிரதானமல்ல. அவளுடைய நன்மைக்காகத்தான் நான் பட்டாளத்தில் சேர்ந்தேன். நான் இறந்துவிட்டால் கூட நீ அவளைக் கைவிடக் கூடாது. தமிழன் மலையாளி என்ற வித்தியாச மனப்பான்மை இல்லாமல் நாம் இருந்தோம் என்பதற்கு ஆதாரமாகவாவது நீ அவளை மணந்து கொள்ள வேண்டும். அவளுடைய புகைப்படத்தைப் பார்த்தவுட



# கார்த்தியாயினி

ஜீ.ரா.கோபாலன்

னேயே உனக்கு அவள்மீது பிரியம் ஏற்பட்டு விட்டது என்று எனக்குத் தெரியும். அழகு மாத்திரம் அவளிடம் இல்லை. நல்ல புத்திசாலித்தனமும் அவளிடம் இருக்கிறது. அவளை நீ கல்யாணம் செய்து கொண்டால் ரொம்பச் சீக்கிரம் தமிழ் பேசுவதற்குக் கற்றுக் கொண்டு விடுவாய்'' என்றான் ஈசுவரன்நாயர்.

''நான் உன் தங்கையைக் கல்யாணம் செய்து கொள்வதில் சந்தோஷம்தான். ஆனால் அதற்கு ஈடாக உனக்கு ஒரு தமிழ்ப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைக்க எனக்குத் தங்கை என்று சொல்லிக் கொள்ள ஒருத்தியுமில்லையே என்ற வருத்தம்தான்...'' என்றான் ஆறுமுகம்.

''அப்படி ஒரு பெண் இருந்தாலும் நான் கல்யாணம் செய்து கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்பதற்காக ஒரு பெண் எங்கள் ஊரிலேயே இருக்கிறாள். அவளுக்கு வேறு கதியில்லை, என்னை விட்டால். அவளுக்கு நான் துரோகம் செய்ய முடியாது'' என்றான் ஈசுவரன் நாயர்.

ஆறுமுகம் மௌனமாக உட்கார்ந்திருந்தான். அவனுடைய நினைவெல்லாம் சாவித்திரியின் பேரில் இருந்தது. அவன் சாவித்திரியின் புகைப்படத்தைப் பார்த்திருக்கிறான். அதிலிருந்த அழகிய முகம் அவன் மனத்தை வசீகரிக்கக் கூடியதாய்த்தா னிருந்தது.

'சிந்து நதியின்மிசை நிலவினிலே
சேரநன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்
தோணிகள் ஓட்டி விளையாடி
வருவோம்'

என்ற பாரதியின் பாட்டு அவன் நினைவுக்கு வந்து அலைக் கனவு உலகுக்கு அழைத்துச் சென்றது. உயிரைப் பணயமாக வைத்து யுத்த அரங்கத்தில் நிற்கும் ஆறுமுகத்துக்கு ஏற்பட்ட காதல் அவன் மனத்தில் உயிரின் மேல் ஒரு ஆசையை எழுப்பிப் பெரும் போராட்டத்தைக் கிளறி விட்டது. ஈசுவரன் தன் மீது வைத்துள்ள அன்பினால் சாவித்திரியைக் கல்யாணம் செய்து கொள் என்று சொல்லலாம். ஆனால் அவள் சம்மதிக்க வேண்டுமே? ஈசுவரனின் மனத்தில் ஏற்பட்ட வித்தியாசமற்ற தெளிவு அவளுக்கு ஏற்படுமா? அவள் ஒரு தமிழ் நாட்டானை மணந்து கொள்ளச் சம்மதிப்பாளா? அவனுக்கு எல்லாம் வீண் கனவாகத்தான் கணநேரம் பட்டது. ஆனால் அடுத்த கணம் ஏதோ நம்பிக்கை ஏற்பட்டு அவன் மனத்தை ஆசைச் சுழலில் சிக்கவைத்துத் தடுமாற வைத்தது. அடிக்கடி ஈசுவரன் சொல்லும் நம்பிக்கை நிறைந்த வார்த்தைகள்தான் ஆறுமுகத்தின் ஆசையையும் காதலையும் பெருக்கி மனக்கோட்டையை வானளாவ வளர்த்திக் கட்டிக் கொண்டே வந்தது.

ஈசுவரனின் தங்கை சாவித்திரி தன் வயதான தகப்பனாருடன் பாலக்காட்டுக்குச் சமீபமுள்ள புதியங்கம் என்ற ஊரில் வசித்து வந்தாள். மிகவும் ஏழைமை நிலையிலுள்ள அவளுக்கு நன்கு படிக்க வேண்டு மென்ற ஆசை ஏற்பட்டது. தன் சகோதரியிடம் மிகவும் அன்பு கொண்டிருந்த ஈசுவரன் அவள் படிக்க வேண்டுமென்ற ஆவலினாலேயே தன் உயிரையும் திருணமாக மதித்துப் பட்டாளத்தில் சேர்ந்து விட்டான்.

ஆறுமுகமும் ஈசுவரனும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஏற்பட்ட குண்டு வீச்சில் ஈசுவரன் மட்டும் படுகாயமடைந்து விழுந்து விட்டான். கண நேரத்துக்கு முன் அவர்கள் இருவரும் எவ்வளவு மன நிம்மதியோடும் சந்தோஷத்தோடும் பேசிக் கொண்டிருந்தார்கள்? அவர்களுடைய வித்தியாசமற்ற அன்பு எப்படிப் பரிணமித்தது?



ஒரு விநாடிக்குள் ஒருவன் அடிபட்டுத் தரையில் விழுந்து உயிரோடுபோராடிக்கொண்டிருக்கிறான். மற்றவன் அவன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு கண்ணீர் விட்டுக் கதறுகிறான். அந்த இடம் மிகவும் அபாயகரமான இடமாகத் தளபதி கருதியதால் ராணுவ முகாமை உடனேயே மாற்ற உத்தரவிட்டார். அந்தச் சமயத்தில் உயிர் இழந்தவர்கள், உயிரோடு போராடிக் கொண்டிருப்பவர்கள் எல்லோரையும் அந்த இடத்திலேயே அப்படியே போட்டுவிட்டுச் செல்வதுதான் தளபதிக்கு உசிதமான காரியமாகப் பட்டது. உடனே அங்கிருந்து நான்கு மைல்களுக்கு அப்பால் முகாமை மாற்றுவதற்கு உத்தரவிட்டார். ஒவ்வொருவரும் தாங்கள் உயிர்தப்பிப் பிழைக்க நினைத்தார்களே தவிர, அப்பொழுது உயிரோடு மன்றாடிக் கொண்டிருப்பவர்களைப் பற்றிக் கவலைப்படவே இல்லை.

அந்த நிலையில் ஈசுவரனை விட்டுப் பிரிந்து செல்ல ஆறுமுகத்துக்கு மனமில்லை. உயிருக்கு உயிரான நண்பனை உயிர் போகும் தறுவாயில் நடுக் காட்டிடையே அனாதையாக விட்டு விட்டுப் போவது மிகவும் நன்றி கெட்ட செயலாக அவனுக்குத் தோன்றியது. ஒரு வேளை ஈசுவரன் பிழைத்தால்...? அப்படி அவன் இறந்து விடக் கூடியவனாகவே இருந்தாலும் பக்கத்தில் இருந்து கிரமமாக அடக்கம் செய்து விட்டுப் போவதுதான் தன் கடமை என்று ஆறுமுகம் நினைத்தான். அப்பொழுது அவன் ராணுவத்தினர் கண்களில் படாமல் ஒருபெரும் புதரில் போய் ஒளிந்து கொண்டான். தளபதியின் அவசர ஆக்ஞைக்கு அடங்கிப் பரபரப்போடு அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருந்தார்களே தவிர ஆறுமுகத்தைப் பற்றியாரும் கவலைப்படவில்லை.

எல்லோரும் அந்த இடத்தை விட்டுச் சென்ற பின் ஆறுமுகம் புதரிலிருந்து வெளியே வந்து ஈசுவரனின் சடலத்தைத் தூக்கித் தன் மடியில் கிடத்திக் கொண்டான். அந்தச் சமயத்தில்தான் ஈசுவரனின் கடைசி மூச்சும் ஓய்ந்தது. ஆறுமுகம் அவன் சடலத்தை ஒரு இடத்தில் அடக்கம் செய்துவிட்டு ராணுவத்தினர் முகாம் போட்டிருக்கும் இடத்துக்குச் சென்றான். உயிர் போலிருந்த நண்பனை இழந்த பிறகு அவனுக்கு உலகமே இருண்டு விட்டது. ஈசுவரனின் தங்கை சாவித்திரியின் நினைவு அவன் மனத்தை விட்டு அகலா திருந்தது. எல்லையற்ற மன வருத்தத்திடையேயும் அந்த ஆசை அவன் மனத்தை விட்டு அகலவில்லை. என்றோ ஒரு நாள் அவளைப்போய்ப் பார்க்கப் போகிறோம் என்ற கனவிலே அவன் மிதந்து கொண்டிருந்தான்.

* * *

யுத்தம் முடிந்தது. உலகத்தில் சிறிது அமைதி ஏற்பட்டது. ராணுவத்திலிருந்து விடுதலையடைந்த ஆறுமுகம் ஜப்பானியரின் தாக்குதல் காரணமாக வலக்கரத்தை இழந்த அடையாளத்தோடு தன் சொந்த ஊர் திரும்பினான். அங்கஹீனனுடன் அவன் மனத்தில் நிறைந்த ஆசையும் அழிந்து விட்டது. போர் முனையிலிருந்து திரும்பியதும் பாலக்காட்டுக்குச் சென்று சாவித்திரியைப் பார்க்க வேண்டுமென்று இருந்த துடிப்பு அடங்கிவிட்டது. ஆறு



முகம் நல்ல நிலையிலிருந்தால் சாவித்திரி தன் சகோதரனைப்போல் வித்தியாசமில்லாத மனப்பான்மையோடு இருந்தால், இறந்துபோன தன் சகோதரனின் விருப்பமறிந்து நடந்து கொண்டால், ஒரு வேளை அவன் கனவு பலிக்கலாம். அங்கஹீனமடைந்த நிலையில் அவனை அவள் கண்ணால் பார்க்கக் கூட விரும்ப மாட்டாளே? ராணுவத்தில் ஊழியம் செய்ததற்காக அரசாங்கத்தாரால் அம்மாப் பேட்டை கிராமத்தில் கொடுக்கப்பட்ட சிறிது நிலத்தையும் உபகாரப் பணத்தையும் வைத்துக் கொண்டு தன் வாழ்நாளைக் கடத்தி விடுவதென்று அவன் தீர்மானித்தான்.

வயதான தன் அத்தையைப் பார்ப்பதற்காகக் கோவை சென்றிருந்த ஆறுமுகம் அந்த வண்டியில் ஊர் திரும்பிக் கொண்டிருந்தான்.

யாரோ ஒரு பெண் டிக்கட் வாங்காமல் அந்த வண்டியில் ஏறிவிட்டாள். டிக்கட் பரிசோதகர் அவளை மிரட்டிக் கொண்டிருந்தார். அந்தப் பெண் அவருக்கு ஏதோ பயந்து பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆறுமுகம் ஏதோ வியப்படைந்தவனாக அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்தான்! அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்தவுடனேயே அவன் மனத்தில் பரபரப்புணர்ச்சி ஏற்பட்டது. அதே முகம்! அவனுடைய நண்பன் சுகவரன் நாயர் அவனிடம் காட்டிய புகைப்படத்திலிருந்த அதே அழகான முகம்! அவள் சுகவரனின் சகோதரி சாவித்திரிதான்.

"உன் பெயரென்ன?" என்றார் டிக்கட் பரிசோதகர் மிரட்டும் குரலில்.

"சாவித்திரி" என்றாள் அந்தப் பெண் நடுங்கும் குரலில். ஆறுமுகம் சட்டென்று எழுந்து போய் டிக்கட் பரிசோதகரிடம், "அந்தப் பெண் கொடுக்க வேண்டிய பணத்தை நான் கொடுக்கிறேன். எவ்வளவு..?" என்றான்.

டிக்கட் பரிசோதகர் சந்தேகாஸ்பதமான கண்களோடு ஆறுமுகத்தைப் பார்த்துக் கொண்டே, "நீ யாரப்பா?" என்று கடுமையாகக் கேட்டார்.

"நான் யாராயிருந்தால் என்ன? அவளுக்காகப் பணம் கொடுக்கிறேன். அவ்வளவுதான்" என்றான்.

"சரி! போத்தனூரிலிருந்து ஈரோடு வரைக்கும் நாலேகால் ரூபாய். ஈரோடு ஸ்டேஷனில் இறங்கி விட்டும்" என்றார் டிக்கட் பரிசோதகர்.





ஈரோடு ஸ்டேஷன் வந்ததும் டிக்கட் பரிசோதகர் சாவித்திரியை வண்டியை விட்டு இறங்கும்படி சொன்னார். அவள் வண்டியிலிருந்து இறங்கினாள். ஆறுமுகமும் அவளைத் தொடர்ந்து வண்டியிலிருந்து கீழே இறங்கினான். 'தஞ்சாவூர் வரையில் டிக்கட் வாங்கி இருக்கும் அவள் ஈரோடு ஸ்டேஷனிலேயே இறங்கியது டிக்கட் பரிசோதகருக்குச் சிறிது விநோதமாக இருந்தது. தன்னிடம் பரிவு காட்டிய மனிதனைப் பற்றி அந்தப் பெண்ணுக்கே சிறிது சந்தேகம் ஏற்பட்டது.

அந்தப் பெண் அவன் முகத்தை வியப்போடு பார்த்தாள்.

"நீ புதியங்கம்தானே? உன் அண்ணன் யுத்தத்தில் இறந்து போய்விட்டது உனக்குத் தெரியுமா?" என்றான் அவன்.



இதைக் கேட்டதும் அப் பெண்ணின் கண்கள் கலங்கின. நெஞ்சில் எழும் துயரத்தோடு, "தெரியும்" என்றாள்.

"பாவம்! அவனுக்கு உன்மீது உயிர். உன்னைப் பற்றி அடிக்கடி என்னிடம் சொல்லுவான். உன் தகப்பனார் இருக்கிறாரல்லவா?" என்று கேட்டான்.

"அவரும் இறந்து விட்டார்" என்றாள் அவள் துயரத்தோடு.

"பாவம்! உனக்கு வேறு யார் துணை?"

அவள் தயங்கியபடியே பதில் சொன்னாள்: "யாருமில்லை."

"பாவம்! நீ இப்பொழுது எங்கே போகிறாய், ரயிலில் டிக்கட் இல்லாமல்?"

"ஊரில் இருக்கப் பிடிக்கவில்லை. வெளியூரில் சென்று ஜீவிக்கலாமென்று..."

ஆறுமுகம், "ஏன், நீ என்னோடு இருக்கலாம். என் பெயர் ஆறுமுகம். என்னைப் பற்றி உன் அண்ணன் உனக்கு நிறைய எழுதி இருக்கிறான். தமிழன், மலையாளி என்ற பேத புத்தி என்னிடம் கொஞ்சமும் இல்லை. உன் சகோதரனும் பேதபுத்தி இல்லாதவன், உயர்ந்த குணமுள்ளவன். உனக்கும் அத்தகைய குணம் இல்லாமல் போகாது. நான் உன் அண்ணன் சுகவரனை இழந்த போதே என் வலக்கரத்தை இழந்தவன். உன்னையும், என்னையும் ஒரு லட்சிய தம்பதிகளாகப் பார்க்க வேண்டுமென்பதுதான் அவன் ஆசை. உன் அபிப்பிராயத்தைச் சொல்லு...." என்றான்.

வெட்கத்தோடு அவள் மெதுவான குரலில் "சரி" என்றாள்.

"வண்டி இன்னும் புறப்படவில்லை. உனக்கும் தஞ்சாவூருக்கு ஒரு டிக்கெட் வாங்கிவிடட்டுமா?" என்று கேட்டான். அவளும் தலையை அசைத்தாள்.

சாவித்திரியோடு தஞ்சைக்கு வந்த ஆறுமுகம் அங்கிருந்து மாரியம்மன்கோவிலுக்குப் போய் அவள் கழுத்தில் தாலியைக் கட்டித் தன் ஊராகிய அம்மாப் பேட்டைக்கு அழைத்து வந்தான்.

அம்மாப் பேட்டையில் டீக் கடை வைத்திருக்கும் கேசவன் நாயர் கடைக்கு ஆறுமுகம் டீ அருந்துவதற்காக வந்த பொழுது நாயர் அவனை மகிழ்ச்சியோடு வரவேற்று, "என்ன ஆறுமுகம், எங்கள் ஊர்ப் பெண்ணையா கல்யாணம் செய்து கொண்டு வந்திருக்கிறாய்? மிகவும் ஏழைக் குடித்தனம். ஆனால் அவள் ரொம்ப நல்ல பெண். எனக்குத் தெரிந்த இடத்துப் பெண்தான் அவள்" என்றான்.

"உங்கள் ஊரும் புதியங்கம்தானா? அவள் என் சிநேகிதன் சுகவரநாயரின் தங்கை சாவித்திரி" என்றான் ஆறுமுகம்.

"சாவித்திரியா....? இல்லை. இவள் கார்த்தியாயினி. சுகவரனுக்கு மாமன் மகள். தாமோதர நாயர் மகள். பட்டாளத்திலிருந்து திரும்பியதும் சுகவரனுக்கு இவளைக் கல்யாணம் செய்து கொடுப்பதாக இருந்தாங்க. போகட்டும், நீயும் பட்டாளத்திலிருந்து திரும்பியவன் தானே? அதுவும் சுகவரனுக்கு அந்தரங்கமான சிநேகிதன். போகட்டும், இவளை நீ சாவித்திரி என்று சொல்கிறாயே அதுதான் விநோதமாய் இருக்குது...." என்றான் கேசவன்.

ஆறுமுகத்துக்கு எல்லாம் திகைப்பாகவும் குழப்பமாகவும் இருந்தது. "நீ சொல்வதை என்னால் நம்ப முடியாது. அவளே தன் பெயர் சாவித்திரி என்றும் சுகவரனின்தங்கை என்றும்சொன்னாள்."

"இதெல்லாம் கதை. நிச்சயம் அவள் கார்த்தியாயினியேதான். சாவித்திரி நன்றாகப் படித்து ஒரு டாக்டரைக் கல்யாணம் செய்து கொண்டு கொச்சியில் இருக்கிறாள். நீ வேண்டுமானால் உன் மனைவியையே போய் அவள் யார், அவள் பெயர் என்னவென்று கேள்!" என்றான் கேசவன் நாயர் திடமாக.

ஆறுமுகம் கேசவனோடு தர்க்கம் செய்யவில்லை. அவன் மனத்தில் சிறிது குழப்பம் ஏற்பட்டதே தவிர, தான் கல்யாணம் செய்து கொண்டு வந்த பெண்ணிடம் அவனுக்குக் கோபமோ ஆத்திரமோ ஏற்படவில்லை. அவன் ஒரு தீர்மானத்தோடு தன் வீட்டுக்கு வந்தான்.

அவன் தன் வீட்டுக்குள் வந்ததும் தன் மனைவியை மிகவும் அன்பான குரலில் 'கார்த்தியாயினி' என்று அழைத்தான். தன்னைச் சாவித்திரி என்று அழைக்கும் கணவன் கார்த்தியாயினி என்று அழைப்பதைக் கேட்டதும் குழப்பமும் பயமும் அடைந்தவளாக மிரளமிரள விழித்தாள்.

"ஏன் இப்படி விழிக்கிறாய்? நீ சாவித்திரி அல்ல. கார்த்தியாயினிதான் இல்லையா!" என்றான்.

"கார்த்தியாயினி இல்லை. காத்தியாயனி!" என்றாள் அவள்.

"கேசவன் நாயர் அப்படிச் சொன்னானே!"

"சரியாகப் பெயரைச் சொல்லத் தெரியாதவர்கள் வேறு எப்படிச் சொல்லுவார்களாம்?"

"இருக்கட்டும். நீ ஏன் டிக்கட் பரிசோதகரிடம் 'சாவித்திரி' என்று பொய்ப் பெயர் சொன்னாய்..?"

அவள் நடுக்கத்தோடும் பயத்தோடும் அழுது கொண்டே, "என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு என் பெயரைச் சொல்லிக் கொள்ள விருப்பமில்லை. நான் சாவித்திரியோடு அதிகமாகப் பழகியதால் அவள் பெயர்தான் ஞாபகத்துக்கு வந்தது. உங்கள் சிநேகிதர் பட்டாளத்திலிருந்து திரும்பியதும் அவரைத்தான் நான் கல்யாணம் செய்து கொள்வதாய் இருந்தேன். அவரும் என்னைத்தான் கல்யாணம் செய்துகொள்வதாய் இருந்தார். எனக்குப் பெற்றோர்கள் இல்லாததினால் நான் அவர்களோடுதான் வசித்தேன். சாவித்திரி படித்தவள். மிகவும் கர்வமுள்ளவள். அவள்மீது சுகவரன் மிகவும் வாஞ்சை வைத்திருந்தார். தன்னுடைய தகப்பனாரும் சகோதரனும் இறந்த பிறகு சாவித்திரி என்னை அலட்சியம் செய்து விட்டாள். ஒரு டாக்டரைக் கல்யாணம் செய்து கொண்டு சுகமாகக் கொச்சியில் வாழ்கிறாள். என்னை அனாதையாக விட்டு விட்டாள். உங்களைப் பற்றி எனக்குத் தெரியும். அவர் அவளுக்கு எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் உங்களைப் பற்றி எழுதி யிருக்கிறார். அங்கு பட்டாளத்தில் யாரோ ஒருவரோடு பழகியதால் வானளாவப் புகழ்கிறார் என்று சொல்லிக் கொண்டிருந்தாளே தவிர, உங்களிடம் அவளுக்கு மதிப்பில்லை. ஆனால் நீங்கள் அவள்மீது அன்பு வைத்திருக்கிறீர்கள் என்று தெரிந்து கொண்டேன். அவர் இறந்து விட்டார் என்று தெரிந்த பின் எனக்கு உலகமே இருண்டு விட்டது போலாகி விட்டது. எங்கேயாவது போவோம் என்று ஊரை விட்டுக் கிளம்பினேன்..உங்களைச் சந்தித்தேன். யாரென்று தெரிந்து கொண்டேன். அவருக்கு உயிருக்கு உயிரான நண்பராக விளங்கிய உங்களுக்கு ஒரு மலையாளத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமென்று அபிப்பிராயம். அவருக்காகக் காத்திருந்த நான் அவர் விருப்பத்தை நிறைவேற்றவும் கடமைப் பட்டவள்தானே? நான் சாவித்திரியல்ல; காத்தியாயனிதான். என்னை மன்னித்து விடுங்கள்" என்றாள்.

ஆறுமுகம் ஆர்வத்தோடு, "சாவித்திரியாய் இருந்தாலும், காத்தியாயனியாய் இருந்தாலும் என் மனைவி ஒரு மலையாளத்துப் பெண் என்பதில் தான் எனக்குப் பெருமை. சாவித்திரி என்பதைவிடக் கார்த்தியாயினி என்ற பெயர் இன்னும் அழகாக இருக்கிறது. என் நண்பன் சுகவரன் 'எனக்காக விலை மதிக்க முடியாத பொருளைத் தியாகம் செய்து விட்டுப் போயிருக்கிறான்" என்றான்.





பி.ஓ.ஏ.ஸி. யாரிடமிருந்து
தீபாவளி வாழ்த்துக்கள்

B·O·A·C

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்

COUNTS:

20's TO 80's CARDED

20's TO 60's STAPLE FIBRE



COMMUNICATIONS TO:
P.S.G. RANGASWAMYNAIDU SONS
PEELAMEDU,
COIMBATORE.

*We Spin to your satisfaction*

**THE BALARAMAVARMA TEXTILES LTD**
**SHENCOTTAH**
*MANAGING AGENTS:*
**KARAYALAR & RANGASWAMYNAIDU SONS CO.**

# விலங்குகளின் விந்தை உலகம்

ஹாலிவுட்டில் அனுபவம் பெற்றவரும் பிரபல சினிமா டைரக்டரும் புகைப்பட மேதையுமான ஸ்ரீ எல்லிஸ் ஆர். டங்கன் இந்தியாவில் உள்ள பல அடர்ந்த காடுகளுக்கு நேரில் சென்று விலங்குகளின் விந்தை உலகத்தை ஆராய்ந்து படங்கள் பிடித்து வந்துள்ளார். அந்த அற்புதப் படக் காட்சிகளைக் '' கல்கி '' வாசக நேயர்கள் கண்டு களிப்பதற்காக இந்தத் தீபாவளி மலரில் வழங்கியுள்ளோம் :

1. ஸ்ரீ டங்கன் யந்திரக் காமிராவினால் படம் பிடிக்கும் விந்தையை அஸ்ஸாம் ராஜ்யத்தைச் சேர்ந்த கிராமக் குழந்தைகள் கண்கொட்டாமல் பார்க்கின்றனர். 2. தன் தந்தையான ஸ்ரீ கஜேந்திர னின் தோளில் குழந்தை யானை ஏறி விளையாடுகிறது. 3. உலகிலேயே அபூர்வமான அஸ்ஸாம் ராஜ்







15. எட்டு அடி நீளமுள்ள பட்டுமேனிச் சிறுத்தை. 16. காமிராவைப் பார்த்துக் கரடி சிரிக்கிறது. 17. பிரும்மாண்ட ஒற்றைக் கொம்பர். 18. தண்ணீரில் தவம் புரியும் வெண்ணிற நாரைகள்! 19. ஆப்பிரிக்க தேசத்து அழகிய மான். 20. நீலவண்ண மயில் நின்று நடம் புரிகிறது. 21. நகரும் பாறையின் மீது பறக்கும் நாரை! 22. தாயும் சேயும்.







யத்துக் காண்டாமிருகம் குட்டிகாண்டாமிருகத்துடன் உலாவச் செல்லும் காட்சி. 4. காட்டு மரத்தின் கீழ் சித்தனேயில் ஆழ்ந்திருக்கும் கொடிய வேங்கை. 5. துள்ளித் திரியும் மான்கள் மருளும் காட்சி. 6. காமிரா நிபுணரைக் காட்டு எருமைகள் முறைக்கின்றன. 7. சாம்பல் நிறக் குரங்குகள் சடுதியில் ஏறும் மரங்கள்! 8. ''நாராய்! நாராய்! என்னைப் பாராய்!'' 9. கரடி-சிறுத்தையின் கடும்போர். 10. சுருண்ட கொம்புகளும் மருண்ட விழிகளும். 11. ஸ்நானம் செய்யும் சிருவாளர் வேங்கையார். 12. கூச் பீஹாரில் குளிக்கச் செல்லும் யானைக் கூட்டம். 13. கன்னுடிக் கருங்குரங்கு. 14. யானை, தன்னைத் தாக்க வந்த புலியைக் கோபாவேசத்துடன் ஆகாயத்தில் தூக்கியெறிகிறது.



## அசோகன்

கலிங்கத்துப்போரில் எதிரிகளை முறியடித்து விட்டு அசோகன் தனது கூடாரத்தில் அமர்ந்திருக்கிறான். ஒரு பெண்ணின் அழுகுரல் அவன் அமைதியைக் குலைக்கிறது. கணவனை இழந்த காரிகை ஒருத்தி தலைவிரிகோலமாகக்கதறிக் கொண்டு வருகிறாள்.

"சக்கரவர்த்தியே! நான் தங்கள் எதிரிச் சிப்பாய் ஒருவரின் மனைவி. என் கணவர் தங்கள் வீரர்களால் கொல்லப்பட்டார். கணவனை இழந்து விட்ட எனக்கு அவர் உடலைக் கூடப் பார்க்க முடியவில்லை" என்று அழுது துடித்தாள்.

அசோகன் தம் படைத் தலைவனை அழைத்தான். அந்த வீரனின் உடலைக் கொண்டு வரும்படி உத்தர விட்டான்.

அசோகனின் உத்தரவை நிறைவேற்ற முடியாமல் படைத் தலைவன் சோர்வுடன் திரும்பி வந்தான்.

அசோகனுக்குஅடங்காத கோபம் வந்து விட்டது. "இவள் கணவனின் உடலை நானே கொண்டு வருகிறேன்" என்று சொல்லிப்போர்க்களத் துக்குச் சென்றான்.

பல்லாயிரக் கணக்கான வீரர்களின் உயிரற்ற உடலை ஒவ்வொன்றாகப் புரட்டிப் பார்த்தான். அவன் உடலைக் கண்டுபிடிக்க முடியவில்லை.உயிரற்ற ஒவ்வொரு சிப்பாயின் உடலைப் பார்க்கும் போதெல்லாம்அசோகனின் மனத்தில் கணவனை இழந்து கண்ணீருடன் நின்று கதறும் பெண்களின் சோக வடிவங்கள் கண்முன் நின்றன. தன் அருகில் கண்ணீருடன் கணவனின் உடலைக் கூடக் காண முடியாமல் நிற்கும் பெண்மணியைப் பார்த்தான். அவன் மனத்தில் இருந்த போர் வெறி அடங்கி விட்டது. அன்பு நெறி துளிர்த்தது! அப்படியே அந்தப் பெண்மணியைக் கை கூப்பி வணங்கினான். "என் கண்களைத் திறந்து விட்ட தெய்வம் நீ" என்றான். அசோகன் புத்த மதத்தைத் தழுவிவிட்டான்.



## ராஜ ராஜ சோழன்

ஆயிரம் வருஷங்களுக்கு முன் பெரும் புகழுடன் வெற்றி வீரனாக ஆண்ட தமிழ் மன்னன் ராஜ ராஜ சோழன். அவன் புரிந்துள்ள அற்புத சாகசச் செயல்களைக் கேட்டு யாருமே பெருமைப்படுவார்கள்.

தஞ்சையிலே 'பெரிய கோவில்' எழுப்பி உலகத்தை அதன் சிற்ப அழகிலும் சித்திர அழகிலும் மதி மயங்கச் செய்த பரம பக்தன் ராஜ ராஜ சோழன்!

தனக்கு நிகரான பெரும் புகழ் படைத்த திருமகனை—இராஜேந்திரனைப் பெற்று உலகுக்களித்த பேரரசன் ராஜராஜன். அவன் வாழ்வில் ஒரு அற்புதமான நிகழ்ச்சி.

பல நாடுகளைவெற்றி கண்ட ராஜ ராஜ சோழன் கி. பி. 1016ம் ஆண்டு குடகு நாட்டின் மீது போர் தொடுத்தான். அப்போது குடகுநாட்டை ஆண்டு வந்த பஞ்சவ மாராயன் என்னும் அரசன் ராஜ ராஜ சோழனை எதிர்த்துப் போரிட்டான். அவன் மிகுந்த வீரத்தோடு போரிட்டான். அவன் ஆண்மையைக் கண்டு ராஜ ராஜ சோழன் வியந்தான். வியந்ததோடு நின்றுவிடவில்லை. அவனுக்கு ராஜ ராஜன் குடகு நாட்டை மட்டுமன்றி வேங்கை மண்டலத்தையும் கங்கை மண்டலத்தையும் பரிசாக வழங்கினான்.

தமிழ்ப் பேரரசன் ராஜ ராஜ சோழன் வீரத்தைப் பாராட்டி அந்த வீரப் போர்க்களத்திலேயே குடகு மன்னன் பஞ்சவமாராயனுக்கு முடி சூட்டி மகிழ்ந்தான்.



## கிருஷ்ணதேவராயர்

தென்னாட்டிலே பெரும் புகழுடன் ஆண்டபேரரசர்களில் கிருஷ்ணதேவராயரையும் குறிப்பிடவேண்டும். பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே குமரி வரை மிகவிசாலமானவிஜயநகர சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்து ஒரு குடையின்கீழ் மிகச் சிறப்பாக ஆண்ட பெருமன்னர் கிருஷ்ணதேவராயர். இம் மன்னர் இன்றும் மக்களால் உள்ளத்திலே பெருமதிப்புடன் கொண்டாடப்படுவதற்குக் காரணம், அவர் இலக்கியம், கலை, சமயம் ஆகிய துறைகளில் புரிந்த பெரும் பணிகள்தாம்.

ஹம்பியில் சிதைந்து கிடக்கும் சிற்பச் செல்வங்கள் கிருஷ்ணதேவராயரின் கலையார்வத்தை இன்றைக்கும் உலகத்துக்கு எடுத்துக் கூறிக் கொண்டிருக்கின்றன.

வடமொழியிலும் தெலுங்கிலும்பலகாவியங்கள் செய்திருக்கிறார். 'ஆமுக்த மால்யதா' என்றோர் காவியம் தெலுங்கில் செய்திருக்கிறார். அந்தக் காவியம் தமிழகத்தில் தோன்றித் திருமாலின் மேன்மையைக்கொண்டு தீந்தமிழ்ப் பாடல்கள் பல பாடிய ஆண்டாளின் சரிதையாகும்.

இந்தக் காவியம் தெலுங்கு இலக்கியத்திலுள்ள ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றாகத் திகழ்ந்து வருகிறது. இந்தக் காவியத்தில் பல இனிய தமிழ்ச்சொற்கள் அப்படி அப்படியே வருகின்றன!



## ராணி மங்கம்மாள்

தமிழ்நாட்டைப் பல பேரரசர்கள் பெரும் புகழுடன் ஆண்டார்கள். அவ்விதமே பல பெண்பாலரும் ஆண்டதுண்டு. அப் பெண்பாலருள் ராணி மங்கம்மாளின் பெயர் இன்றும் தமிழ் நாட்டில் ஒவ்வொருவர் நாவிலும் ஒலிக்கிறது. அவர் செய்த அறங்கள் அவர் புகழைப் பாடிக் கொண்டு நிற்கின்றன. வீரமும் அறமும் வழுவாத மறக் குலமாதாக விளங்கினார் ராணி மங்கம்மாள்.

சிறந்த சிவபக்தையாயினும் பிற சமயத்தினரிடம் வெறுப்புக் கொள்ளாத பெரு நோக்குடன் வாழ்ந்தார் ராணியார்.

அவர் காலத்தில் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவர்களும் பாதிரிமார்களும் பெரு இன்னல்களுக்கு ஆளாயினர். பூச்சே என்ற கிறிஸ்தவப் பாதிரி தம் மக்கள் படும் இன்னல்கள் ஆற்ற மாட்டாது ராணி மங்கம்மாளிடம் முறையிட்டார். ராணி மங்கம்மாள் அவர் குறைகளைத் தீர்ப்பதாகச் சொல்லி, பாதிரி பூச்சேயைப் பல்லக்கில் ஏற்றி ஊர்வலம் வரச் செய்து அனுப்பி வைத்தார். ராணி மங்கம்மாளின் மதிப்புப் பெற்ற பாதிரியாரையும் கிறிஸ்தவர்களையும் கொடுமைப்படுத்த அப்புறம் யாருக்கு மனம் வரும்?

இப்படி அருமையான ராஜ தந்திரத்தைக் கையாண்டு பூச்சேயையும் கிறிஸ்தவர்களையும் அந்நாட்களில் காப்பாற்றினார் ராணி மங்கம்மாள்.





அறிவும் அன்பும் பண்புடன் பரிமளிக்கிறது!



இந்தத் தீபாவளி மலர் வெளியாகும் இச் சமயத்திலே பூதான அடிகள் வினோபா தமிழகத்தில் பாதயாத்திரை செய்து வருவது நமது பாக்கியமாகும். அவர் இப்புனித நிலத்தில் 'உண்மையே பேசு. அன்பையே பேசு' என்று தமிழ் மக்களுக்குக் 'கல்கி'யின் மூலமாக நல்லாசி கூறுகிறார். அவர் சென்ற ஐந்தாண்டுகளாகத் தேசத்தின் பல பகுதிகளில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது எடுத்த சில காட்சிகளைப் பின்வரும் பக்கங்களில் காணலாம்.

1940ம் ஆண்டிலே மகாத்மா காந்தியடிகள் தனிநபர் சத்தியாக்கிரகம் தொடங்கியபோது முதல் சத்தியாக்கிரகியாக வினோபா அடிகளைத் தேர்ந்தெடுத்தார். அப்போது தேசம் 'யார் இந்த வினோபா?' என்று கேட்டது. அந்தக் கேள்விக்குக் காந்தி மகாத்மா அளித்த பதிலே இந்தக் கட்டுரை:

# யார் இந்த வினோபா?

மகாத்மா காந்தி

நான் 1916-ல் தென்னாப்பிரிக்காவிலிருந்து பாரத நாட்டுக்குத் திரும்பி வந்தேன். நான் வந்த புதிதில் வினோபா கல்லூரிப் படிப்பை துறந்து விட்ட மாணவராக இருந்தார்.

அவர் ஒரு பெரிய சமஸ்கிருத புலவர். நான் ஆசிரமம் ஆரம்பித்த சிறிது நாட்களிலேயே ஆசிரமத்தில் சேர்ந்து விட்டார். ஆசிரம வாழ்வுக்குத் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ள; இன்னும் நன்றாக சமஸ்கிருதம் படிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அதனால் ஒருவருஷ விடுமுறை எடுத்துக் கொண்டு ஆசிரமத்தை விட்டுப் போனார். ஒரு வருஷம் கழித்துத் திரும்பி வந்தார். எந்த நேரத்தில் ஆசிரமத்தை விட்டுப் போனாரோ அதே நேரம் அதே நிமிஷத்தில் ஒரு வருஷம் கழித்து ஆசிரமத்துக்குத் திரும்பி வந்தார்! ஆசிரம வேலைகளில் கக்கூஸ் சுத்தம் செய்வதிலிருந்து சமையல் செய்வது வரையுள்ள அத்தனையும் அவர் செய்திருக்கிறார். அவரது ஞாபக சக்தி அபாரம். அவர் இன்றும் படிப்பில் ஆர்வம் கொண்ட மாணவரே! என்றாலும் அவர் நூல் நூற்பதில் தமது நேரத்தில் பெரும் பகுதியைச் செலவழித்திருக்கிறார். உண்மையில் அவரைப் போல் நேர்த்தியாக நூல் நூற்பவர் யாரும் இடையாது.

அவர் தேசம் முழுதும் நூல் நூற்க வேண்டும்; அப்போதுதான் நமது நாட்டின் ஏழைமை தொலைந்து, கிராம மக்களின் சோர்ந்த வாழ்வில் புது உற்சாகம் பிறக்கும் என்று கூறுகிறார்.

அவர் பிறவியிலேயே உபாத்தியாயர். இராட்டையை மையமாகக் கொண்டு மக்களுக்குக் கல்வி புகட்டுவதைப் பற்றி ஓர் பாட புத்தகமே தயாரித்திருக்கிறார். அப்புத்தகம் புத்தம் புது மாதிரியாக இருக்கிறது. நூல் நூற்பதை எள்ளி நகையாடியவர்களை யெல்லாம் ஆதாரக் கல்வி போதிப்பதற்கு இதை விடச் சிறந்த மார்க்கம் கிடையாது என்று உணரச் செய்திருக்கிறது. தக்ளியில் புதிய சீர்திருத்தங்கள் செய்திருக்கிறார். இதுவரை யாருக்கும் தெரியாதிருந்த அதன் சக்திகளையெல்லாம் தெரிய வைத்திருக்கிறார். நூல் நூற்பதில் அவருக்கு இணையானவர் இந்த நாட்டில் ஒருவருமே இல்லை என்று சொல்லலாம்.

தீண்டாமை என்னும் மாசு அவர் உள்ளத்தில் அறவே நீங்கி விட்டது. ஜாதி மத பாகுபாடில்லாத ஒற்றுமை நிலவ வேண்டும் என்பதில் எனக்குள்ள ஆர்வம் அவருக்கும் இருக்கிறது. இஸ்லாமிய மதத்தின் சிறந்த கோட்பாட்டை அறிய, குர்ஆனை மூல மொழியிலேயே அதன் ஜீவன் குன்றாமல் படிப்பதற்காக ஒரு வருஷம் அரபி மொழியைப் பயின்றார்.

அவருக்குப் பெரும் சிஷ்யப்படை இருக்கிறது. அவருடன் வேலை செய்யத் தயாராயிருக்கும் தொண்டர்கள் இருக்கிறார்கள். வினோபா கட்டளையிட்ட மாத்திரத்தில் உயிரையும் தியாகம் செய்ய அவர்கள் தயாராயிருக்கிறார்கள்! வார்தாவிலுள்ள பெண்கள் ஆசிரமத்துக்குப் பல ஆண்டுகள் டைரக்டரா யிருந்து பணியாற்றியிருக்கிறார். தரித்திர நாராயணனுக்குப் பணியாற்ற வேண்டும் என்ற கடமையுணர்ச்சி வார்தாவுக்கு அருகிலுள்ள கிராமத்துக்கு அவரை அழைத்துச் சென்றது. இப்போது அதையும் விட்டு ஐந்து மைல் தூரத்திலுள்ள பௌனார் என்ற கிராமத்திலிருந்து கொண்டு, தாம் தயாரித்த தொண்டர்கள் மூலம் கிராம மக்களிடம் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகிறார்.

வினோபா நமது தேசம் அரசியல் சுதந்திரம் அடைய வேண்டியதின் அவசியத்தை நன்கு உணர்கிறார். அவர் சரித்திரத்தை நுட்பமாகப் படித்து அறிந்தவர். காதியை மையமாகக் கொண்டு நடத்தப்பட்டு வரும் நிர்மாணத் திட்டமின்றி, கிராம மக்கள் உண்மையான சுதந்திரமடைய முடியாது என்று நிச்சயமாக நம்புகிறார். சர்க்கா அவருடைய வாழ்வின் ஓர் அம்சமாகி விட்டது. அஹிம்சையின் புறச் சின்னமாக அமைவதற்கு ராட்டை தான் சிறந்த சாதனம் என்று நம்புகிறார். முந்தைய சத்தியாக்கிரக இயக்கங்களில் அவர் ஈடுபட்டிருக்கிறார். அரசியல் மேடைகளில் அவர் ஏறியதே கிடையாது. நிர்மாணத் திட்டத்தை அனுஷ்டிப்பதில் நம்பிக்கை யில்லாமல் அஹிம்சைப் போர் வெற்றிகரமாக நடத்த முடியாது என்று அவர் பரிபூரணமாக நம்புகிறார்.

வினோபா பரிபூரண யுத்த எதிரி.




* 1. விநோபா அடிகள் 'கல்கி' பத்திரிகை வாசிக்கிறார். 2. நூற்பு யக்ஞம் நடக்கிறது. 3. சோஷலிஸ்ட் தலைவர் ஸ்ரீ அசோக் மேத்தாவுடன். 4. வெள்ளத்திலும் நடந்தே செல்கிறார். 5. டில்லியில் திட்டக் கமிஷனுடன். 6. ஹைதராபாதில் சரித்திரச் சின்னங்களைப் பார்வையிடுகிறார். 7. ஒரிஸ்ஸாவில் கோபபந்து தாஸுடன். 8. வங்காளியில் ஸ்ரீமதி ஆஷா தேவி மொழிபெயர்க்கிறார். 9. தமிழ் நாட்டின் வட எல்லையில். 10. பர்ஹாம்பூர் அகில இந்திய காங்கிரஸில். 11. அடிகளுக்குப் பாதத்தில் அடிபட்ட போது தெஹ்ரா தூன் வனப்பிரதேசத்தை மகாவீர் தியாகி உள்பட நான்கு பேர்கள் தூக்கிச் செல்லப் பூதான யாத்திரையை நடத்துகிறார். 12. பூதான விதையை விதைத்த திரு ராமச்சந்திர ரெட்டியும், அவர் குடும்பத்தினரும். 13. எங்கிருப்பினும் காலம் தவறாது காரியங்கள் நடக்கவேண்டும் என்பதே ஸ்ரீ விநோபா அடிகளின் கொள்கை! *











...ழும் மனித இனத்துக்குத் தேவைகள் பல. இன்ப வேட்கை எழுந்து வளர்கின்ற அளவுக்குத் தேவைகளும் பெருகுவனவாம். எனினும் அடிப்படைத் தேவை எங்கும், எல்லோருக்கும், எப்பொழுதும் ஒரு மாதிரியே அமைவதாகும். அத்தகு அடிப்படைத் தேவைகளில் ஒன்று வீடு. ஏழைப் பாட்டாளி மகன் கூட ''குந்தக் குடிசை'' வேண்டும் என்பான். ஆதலால் ஏழையாயினும் சரி, பணக்காரர் ஆயினும் சரி, அத்தனை பேருக்கும் வீடு தேவையான தொன்றாகும். சமுதாயப் புனர் நிர்மாணத் திருப்பணிகளில், குடி யிருப்புக்கு வீடு அமைக்கும் திருப்பணி முதன்மையானதாகும். எல்லோருக்கும் சொந்த வீடு கிடைக்க வில்லையாயினும் பலர் வாடகை வீட்டிலாவது குடி யிருந்து காலங் கழிக்கின்றனர். சென்னை நகரில் வாழ்வோருக்குத் தெரியும், அங்குள்ள வீட்டு நெருக்கடி பற்றி. அது மட்டுமா! அங்கு வாடகை வீட்டில் குடி யிருக்குங் காலை, அதனால் உண்டாகும் தொல்லையும் துயரமும் சூழ்ந்த அனுபவங்கள் எப்படி என்பதை அவர்கள் வாயிலாகக் கேட்டுப் பார்த்தால், வாடகை வீட்டினால் எவ்வளவு சங்கடங்கள் உண்டு என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடியும். எனவே சமுதாயத்தினுடைய தேவைப் பட்டியலில் வீட்டுச் சிக்கல் முக்கியமான தொன்றாகும். இங்ஙனம் வீடு எழுப்பி வீட்டுக்குள் வாழும் முறைமை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக வளர்ந்து வந்துள்ள ஒரு முறையாகும்.

முதன் முதலில் வீடு கட்டும் உணர்ச்சியைக் கொண்டு மனிதன் வீடு எழுப்பிய ஆண்டு நமக்கு நினைவில்லை. இது பற்றிய குறிப்பையும் வரலாற்றாசிரியர்கள் இட்டவட்டமாகச் சொல்ல வில்லை. எனினும் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்த யாரோ ஒருவன் வீடு கட்டிக் குடியிருந்து வாழும் நாகரிகத்துக்குக் கால்கோல் செய்திருக்க வேண்டும். அந்த ஆதி மனிதன் வீடு கட்ட நினைத்த காலத்தில் மனித இனம் உணவாலும், உடையாலும் மற்றைப் பிறவற்றாலும் இன்றைய வாழ்க்கை நிலையினை அடையாதிருந் திருப்பார்களேயானாலும், மனிதப் பண்பாட்டுத் தன்மையில் இன்றைய மனித சமுதாயத்தை விட அன்றைய மக்கள் சற்றும் குறைந்தவர்கள் அல்லர். அது மட்டுமல்ல;இன்றைய நிலையை விட அன்றைய மனிதத் தன்மை நாகரிகம் மிக்குயர்ந்து இருந்தது. அன்றைய மனிதத் தன்மை நாகரிகத்துக்கும் இன்றைய மனிதத் தன்மை நாகரிகத்துக்கும் நிறைய வேறுபாடு உண்டு. குறிப்பாக அன்றைய மனித சமுதாயத்தை விட இன்றைய மனித சமுதாயம் இத்துறையில் மிகப் பிற்பட்டிருக்கின்றது. முதன் முதலில் வீடு எழுப்ப நினைத்த ஆதி மனிதன் ''காவல்'' என்ற தத்துவ நினைப்போடு வீடு கட்டினான் இல்லை. தன்னைச் சுற்றிச் சூழ்ந்திருந்த தட்ப வெட்ப நிலைகள் அதாவது, கொடுங் கோடை சுடாத வண்ணமும், வறண்ட வாடை வாட்டாமலிருக்கவும், சுழன்றடிக்கும் சூறாவளியும், புயலும் தாக்காமலிருக்கவும் ஒரு சுற்றுச்சுவரும் கூரையும் அமைத்துக் கொண்டான். அதற்கு வீடு என்ற பெயரையும் சூட்டினான். அவ்வளவிலேயே அமைந்தது ஆதி மனிதனின் வீடு. பின்னர் நூற்றாண்டுக்கு நூற்றாண்டு மனிதத் தன்மையோடு விலங்குத் தன்மையும் கலந்து உறவாடியது. அதன் விளைவாகக் கதவு போடப்பட்டது வீட்டுக்கு. கதவு போட்ட மனித இனம் காலப் போக்கில் அந்தக் கதவுக்குத் தாள்ப்பாளும் போடத் தலைப்பட்டது. கதவும் தாள்ப்பாளும் போட்ட பின்னும் தம்மைச் சுற்றி வாழுகின்ற மனித இனத்தின் மீது அவநம்பிக்கை வளரத் தலைப்பட்ட காரணத்தால் தான் அத்துடன் பூட்டையும் சேர்த்துப் பூட்டிக் காத்துக் கொள்ள முனைந்தது. வெட்ப தட்பத்தி லிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்காக எழுப்பப் பட்ட வீடு கட்டும் முறையின் வளர்ச்சி வீட்டுக்குக் கதவு, தாள்ப்பாள், பூட்டு என்று வளர்ந்து இறுதியாக வேட்டை நாய், கையிலே தடிக்கம்பேந்தி நின்று காவல் செய்யும் காவல்காரன் வரையிலும் வளர்ந்து நிற்கின்றது. இங்ஙனம் பல நூற்றாண்டுகளில் இத்தகு முறையிலே வளர்ந்த வீட்டு நாகரிகம் சமுதாயத்தின் ஒரு பகுதியினரைக் கள்வராக்கியும் ஒரு பகுதியினரைக் காவல்காரராக்கியும் மனிதத் தன்மையில் விலங்குத் தன்மையை வளர்த்தது. அதனாலன்றோ சுதந்திரக் கவிஞன் பாரதி ''காவல்'' என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே ''கனலுகின்றான்''. கன்னித் தமிழ்க் கவிஞன் கம்பன் ''கள்வாருமிலை காவல் செய்வாருமிலை'' என்று ஒப்பற்ற சமுதாயத்



திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகள்

துக்கு இலக்கணம் இயம்புகின்றான். எப்படியோ மனித இனத்தில் வளர்ந்து வேரூன்றி இருக்கின்ற இந்த வீட்டுச் சிக்கல் கவனிக்கத் தக்கது.

சொந்த வீடு இல்லாமல் வாடகை வீட்டில் குடியிருப்பவர்கள் படுகின்ற அல்லல், ஐயகோ, சொல்லும் தரமன்று. வீடு ஒழுகுகின்றது என்று குடியிருப்போர் வீட்டின் சொந்தக்காரரிடம் எத்தனை தரம் முறையிட்டாலும் வீட்டின் சொந்தக்காரர் அது பற்றி ஏதும் பேச மாட்டார்கள். வாடகை வீட்டின் குடியிருப்பால் படுகின்ற அல்லல்களைப் பார்த்தால் யாருக்கும் தோன்றும், சொந்தத்தில் ஒரு குடிசையாவது கட்டிக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும் என்று. அதனால்தான் தமிழகத்தில் சொந்த வீடு இருக்கிறது என்று சொன்னால் அது ஒரு தனிப்பட்ட சிறப்பாகக் கருதப்பட்டு வருகின்றது. இது நிற்க. இந்த வீட்டுச் சிக்கலை நினைவிலே வைத்துக் கொண்டே திருவள்ளுவர் அழகாக இன்னொரு வீட்டைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். உயிர் உடம்பொடு கூடி உலவி வாழ்கின்ற காலத்தில் தங்குகின்ற வீடு மேலே விவரிக்கப்பட்ட வீடு. உடலினின்றும் உயிர் பிரிந்த பிறகு, பிரிந்த உயிர் தங்குவதற்கும் ஓர் வீடு வேண்டும். உயிர்கள் எல்லாம் ஒரு தன்மை உடையனவாம். அதாவது செடி கொடிகளிலிருந்து விலங்கு, பறவை, மனித இனம் வரையில் பிறந்து வாழ்ந்து இறப்பதில் உயிர்கள் எல்லாம் ஒரு தன்மை உடையனவேயாம். இதனைத் திருவள்ளுவர் ''பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்'' என்று குறிப்பிடுகின்றார். இந்த உயிர்கள் அவ்வப் பொழுது எடுக்கப் பெறும் உடம்புகளுக்கேற்ப சிந்தனையாலும், செய் தொழிலாலும் மாறுபடுகின்றன. இம் மாறுபட்டால் சிறப்புத் தன்மைகளிலும் மாறுபட்டு விளங்குகின்றன. இதனையே செந்நாப் புலவர், ''சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்'' என்று குறிப்பிடுகின்றார். உயிர்கள் பல்வேறு பிறப்புகளின் வயப்பட்டுச் சுழன்று வருவன என்பது அறிஞருலக முடிவு. உயிர்கள் அவ்வப் பொழுது பிறந்து இறக்கின்ற வரையில் தங்கியிருக்கின்ற உடம்புகள் வாடகை வீடுகள் போன்றனவாம். மணிவாசகர் வாக்குப்படி புல்லாகிப் பூடாகி, புழுவாய் மரமாகி, பல் விருகமாகி, பறவையாய், பாம்பாகி, கல்லாய், மனிதராய் என்பன எல்லாம் உயிர்கள் தங்கியிருந்த வாடகை வீடுகளைக் குறிப்பனவாம். கையிலிருக்கும் காசுக்கேற்ப எய்துகின்ற உலகியல் இன்ப துன்ப அனுபவங்கள் போல உயிர்கள் தங்கும் இந்த வீடுகளில் உயிர்களைச் சார்ந்து நிற்கும் நல்வினை தீவினைக்கேற்ப இன்ப துன்ப அனுபவங்கள் அமைகின்றன. பெரும்பாலும் துன்பந்தான். இங்ஙனம் வாடகை வீடுகளில் குடியிருந்து காலி செய்து வரும் உயிர்களைப் பார்த்துத் திருவள்ளுவர் கேட்கிறார், உங்களுக்கு நிரந்தரமான வீடு கிடைக்கவில்லை போலும் என்று. இது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய அறவுரை. செத்துப் பிறக்கும் தொடர்புடைய உயிர்களுக்கு எப்பொழுதும் இருக்கும் வீடு ஒன்று வேண்டும். சுழற்சி மயக்கம் தருவது. எனவே மயக்கச் சார்பிலாத தனி நிலை வேண்டும். அந்தத் தனி நிலையைத் தமிழறிஞர் ''வீடு'' என்பர். வட மொழி வல்லுனர் ''மோட்சம்'' என்பர்.

மனித வாழ்க்கையின் சாதனைகளை முறைப்படுத்திக் கூறிய தமிழ் இலக்கணம் ''அறம், பொருள், இன்பம், வீடு'' என்றே வரையறுத்துக் கூறுகின்றது. அந்த வீட்டை எல்லோரும் பெற வேண்டும். அந்த வீடு ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமாகும். அந்த வீட்டைப் பொன்னும் பொருளும் கொடுத்து விலைக்கு வாங்க முடியாது. பக்தி, அறம் என்ற இரண்டாலேயே பெற முடியும். இவ்விரண்டினும் ஒன்றிருந்து ஒன்று இல்லையானாலும் கூட வீட்டைப் பெறுவது கடினம். பக்தி இருந்தும் சமுதாயத்தின் ஆக்கத்துக்குரிய அறப்பணிகளில் ஈடுபடாதவர்கள் அந்தப் பேரின்பப் பெரு வீட்டைப் பெறுவது கடினம். அது போலவே கோடிக்கணக்கான ரூபாய்களில் பேர் அறம் செய்தாலும் பக்தி இல்லாவிடினும் அந்த வீட்டைப் பெறுவது என்பது முடியாத காரியம். காரணம் சமயக் கணக்கர் வழி நின்று சிந்திக்கும் பொழுது, அவர்கள் கணக்கு நேராக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்கள். அதாவது கணக்கு நேர் என்றால் வரவும் பற்றும் சரியாக இருத்தல் வேண்டும் என்பது பொருள். ''கணக்கு நேர்'' என்ற சொற்றொடர் வணிக மரபு வழி வந்த வழக்குச் சொல்.




உலகியல் நிலை நியதியை விட அருளியல் நியதிகள் சாலச் சிறந்தனவாம். அருளியல் நியதியின் அடிப்படையில் ஏமாற்றுக்கு இடமில்லை. வஞ்சிப்பதற்கு வழியில்லை. காரணம் அருளியல் நீதிமன்றம் வழக்குரைஞர் வைத்து வாதாட முடியாத நீதிமன்றமாம். சாட்சிகளை உருவாக்கி நிறுத்த முடியாத இடம். ஆண்டவன் நடுவு நிலையாளனாகக் காட்சியளிக்கின்றான். உயிர் கூண்டிலே நிறுத்தப் பெறுகிறது. ஆண்டவனுடைய கையேடாகிய விதியேடுகளில் செய்தன மாத்திரம் எழுதப் பெற்றிருக்கவில்லை. நினைப்பில் எழுந்தனவும் தாக்கல் செய்யப் பெற்றிருந்தன. காரணம் நடுநிலையாளர் நாட்டின் எங்கோ ஓர் மூலையில் இருப்பவர் இல்லையல்லவா? 'உயிர்ப்பாய் புறம் போந்து இயங்கும் உரவோன்' ஆணைமையினால் எல்லாம் அவனுக்குத் தெரிந்தன. ஆதலால் உயிர் வாடகை வீட்டைக் (உடம்பை) காலி செய்யும் பொழுது கணக்கை நேராக வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது நல்வினை தீவினை ஆகிய இரண்டினுடைய சாயையுமே இருத்தல் கூடாது. புண்ணியமும் கூடாது; பாவமும் கூடாது. இவ்விரண்டின் தொடர்புள்ள நிலை இருள்மல நிலை. தொடர்பு நீங்கிய நிலை, அமல நிலை, இன்பநிலை. இதனையே நாட்டு வழக்கிலே சொல்ல வேண்டுமாகில் 'கொடுத்திருந்தால் வாங்கப் பிறக்க வேண்டும், வாங்கியிருந்தால் கொடுக்கப் பிறந்திருக்க வேண்டும்' என்றே அமையும். மேற்கூறிய இரண்டில் எத்தொடர்பு இருப்பினும் பிறப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் மனித இனத்

துக்குத் தேவையோ "பிறவாமை." ஆதலால் வாங்காமல் இருக்க வேண்டும். வாங்கினாலும் கொடுத்து விட வேண்டும். வாங்கிக் கொடுக்கின்ற மரபில் கூட ஒன்று வாங்கினால் அதற்குப் பலவாகக் கொடுப்பது நன்மரபு. இப்படிச் செய்ய முடியும்.

இரண்டாவதாகக் கொடுத்தலைப் பற்றிய சிக்கல். கொடுத்தாலும் வாங்கப் பிறக்க வேண்டுமானால் "கொடு, கொடு" என்று சொன்ன நீதி நூல்கள் என்ன ஆவது? ஆகவே கொடுத்தல் கூடாது என்று பொருள் இல்லை. கொடுக்கத்தான் வேண்டும். கொடுப்பதுதான் அறமும்கூட. ஆனால் அந்த அறம் வாணிகத் துறையாக மாறிவிடக் கூடாது. அதாவது இன்ன அறத்துக்கு இன்ன பயன் என்று நினைத்து அறம் செய்தல் முறை அல்ல. பின்னைக் காலத்தில் எல்லாவித மான பேறுகளுக்கும் அறங்கள் வகுக்கப் பெற்றன. அத்தகைய அறங்கள் சிந்தையைச் சிறிதும் தொடாமல் ஏதோ உலக வழக்கு என்ற அளவிலே செயல்பட்டன. ஆதலால்தான் பழந்தமிழ் நூல் ஆய் என்ற வள்ளலை வாழ்த்துகின்ற பொழுது "அறவிலை வாணிகன் ஆய் அலன்" என்று வாழ்த்துகிறது. ஆதலால் கொடுக்கும் பொழுது எல்லாமாய் அல்லதுமாய் எங்ஙனும் நீக்கமற நிறைந்து நிற்கின்ற இறைவன் பெயரால் கொடுக்கல் வேண்டும். ஏன், வழிபாட்டில் கூட, வழிபாட்டின் இறுதியில் வழிபாட்டின் பயனையும் கூட ஆண்டவனுக்கே உரியதாக்கும் மரபு தமிழகத்தின் தனி மரபு. அதனாலன்றோ அப்பர் அடிகள் "பாடுவித்தால் யாரொருவர் பாடாதாரே" என்று பாடிய பாட்டின் பொறுப்பைப் பரம்பொருளிடமே சேர்த்தார். தற்கால வங்கி முறையிலும் கூட ஒருவர் பெயரால் மற்றொருவர் பணத்தை வங்கியில் செலுத்த முடியும். ஆனால் வங்கியில் யார் பெயரால் பணம் செலுத்தப் பட்டதோ, அவர் பெயரால்தான் பற்று இருக்கும். பின்னர் வாங்கும் பொழுது, யார் பெயரால் செலுத்தப்பட்டதோ அவர்தான் வாங்க முடியுமே தவிர, பணம் செலுத்தியவர் வாங்க முடியாது. அது போலவே ஆண்டவனின் பெயரால் எல்லா அறங்களையும் செய்யலாம்; எல்லோரும் செய்யலாம். அப்படிச் செய்வதினால் நம்முடைய பெயரில் எந்த விதப்பற்றும் இருக்கப் போவது இல்லை. எடுத்துக் காட்டாக, வடபழனியாண்டவர் கோயிலுக்கு நான் ஒரு மின்சாரக் குழல் விளக்கு போடுவதாக வைத்துக் கொள்வோம். அதை நான் போடும் பொழுது, என்னுடைய பெயரால் உபயம் என்று எழுதிப் போட்டால், வடபழனி ஆண்டவனுடைய கையேட்டில் என் பெயரால் அத்தொகை வரவு வைக்கப்படுகிறது. பின்னர் அத்தொகையை நான் வாங்குவதற்காகப் பிறக்க வேண்டும். அப்படி அல்லாமல் ஆண்டவன் பெயராலேயே அவ்விளக்கை நான் அமைத்து விடுவேனானால் என் பெயரில் பற்றில்லை. ஆதலால் இயன்ற வரையில் வாங்காதீர்கள். வாங்கினாலும் கொடுத்து விடுங்கள்.

ஆதலால் வாங்குவதைத் திருப்பிப் பன்மடங்காய்க் கொடுத்தும், கொடுப்பதை ஆண்டவன் பெயரால் கொடுத்தும் வருவோமாயின் என்றும் நமது கணக்கு நேராக இருக்கும். இவ்விட்டைக் காலி செய்யும் காலத்தே "அவ்வீடு" முன்னே வந்து நிற்கும். அந்த வீடே எல்லோருக்கும் உரிய வீடு.





உண்ணும் உணவிற்கும்



தின்னும் பலகாரங்களுக்கும்
இன்றியமையாதது

மணமிக்க **நெய்**
திடமான
**வெண்ணெய்**

# திரௌபதி ஸ்டோர்ஸ்

105, ராயப்பேட்டை ஹைரோடு
மயிலாப்பூர் — மதராஸ்
போன்: 71114

பிராஞ்சுகள்

121, பெரிய தெரு, திருவல்லிக்கேணி
7/23, பாண்டி பஜார், தியாகராயநகர்

கடை விலைக்கே வீட்டுக் கொண்டு வந்து
சப்ளை செய்கிறோம்.

A. K. GOPAL



அரசியின்
முடிசூட்டல்
ஒரே தடவைதான்!



ஆனல்...

ஓ, அழகியே, நீ ஒவ்வொரு நாளும் உனது நீண்ட, பளபளப்பான கூந்தலைக் கொண்டு விதவிதமாக முடியலங்கரித்துக்கொள்ளும் ரகசியமென்ன! அபூர்வ மூலிகைகளையும் சிறந்த மூலப் பொருள்களையும் கொண்டு இனிய நறுமணமும் சேர்த்துத் தயாரிக்கப்படும் ஆயுர்வேத கூந்தல் டானிக்காகிய ஸ்ரீவிஸ் அம்லா கூந்தல் தைலம் அழகிய மாதரால் பெரிதும் விரும்பப் படுவதாகும்.

# ஸ்ரீவிஸ் - அம்லா

கூந்தல் தைலம்



- கேசவளர்ச்சிக்கு உதவும்
- கேசம் உதிர்வதை தடுக்கும்
- பொடுகை அகற்றும்
- கேசத்தை மிருதுவாக்கி பளபளப்பூட்டும்
- குளுமையும் புத்துணர்ச்சியும் தரும்
- இனிய நறுமணமுள்ளது

தயாரிப்பாளர்:

ஸ்ரீவிஸ் பர்ப்யூமரி ஒர்க்ஸ், சென்னை - 1.

SJST'A AML-18A-TAM.

## இந்த வித்தியாசத்தைக் கவனியுங்கள் :

# வெண்மையான ஆடைகளை அதிவெண்மையாக்குகிறது



சாதாரண சோப்பினால் சுத்தம் செய்த பின் உங்களுடைய வெண்மையான ஆடைகளுக்கு டினோபால் உபயோகிப்பதால், நீங்கள் எவ்வித தோற்றமளிக்கின்றீர்கள் எனப் பாருங்கள். வெண்மையான ஆடைகளைப் பிரகாசமாகவும், பளபளப்பான வெண்மையுடனும் வைக்கச் செய்யும் பிரத்தியேகமான தொருகுணம் டினோபாலிலடங்கியுள்ளது.





## டினோபால்

"டினோபால்" என்பது ஜே. ஆர். கேய்கி, எஸ். ஏ. பாஸல், ஸ்விட்ஸர்லாந்த், அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட்மார்க்.

அமால்கமேட்ட் கெமிக்கல்ஸ் அண்ட் டைஸ்டப்ஸ் கோ, பிரைவேட் லிட்.,
பி. ஓ. பாக்ஸ் 965, பம்பாய்.

# PILOT

## FOUNTAIN PENS

சர்வதேசப் புகழ் பெற்ற
ஒரு தேசியத் தயாரிப்பு

ஒரிஜினல் பைலட்பேனவின் இறக்குமதி இந்தியாவில் அனுமதிக்கப்படாததால், ஒவ்வொரு வகையிலும் மிக உயர் தரமாக இருப்பதற்காக, இந்த உலகப் பிரசித்திபெற்ற பேனக்கள் தலைமைக் கம்பெனியின் கோட்பாடுகளுக்கு முற்றிலும் உட்பட்டு மிக்க அனுபவம் வாய்ந்த ஜப்பானியத் தொழில் நிபுணர்களின் மேற்பார்வையில் இப்பொழுது நம் நாட்டில் சென்னையில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

யாவருக்கும்தகுதியாக பல்வேறு விலையில் பல அற்புதமான நிறுவகைகளில் இப் பேனகிடைக்கும்.

இந்தியாவில் நல்ல ஸ்டேஷனரி வியாபாரிகளிடம் கிடைக்கும்.






நவீனமாக எழுதுவதற்குற்ற நண்பன்

பைலட்
உயர்ந்த ரக
இங்க்




கடுமையான சோதனைக்குப் பிறகே ஒவ்வொரு பேனவும் விற்பனைக்கு வருகின்றன

PILOT PEN CO., (INDIA) PRIVATE LTD.
CATHOLIC CENTRE : ARMENIAN STREET,
MADRAS - 1
Phone : 2325



நாட்டின்
சுதந்திர சின்னம்
அசோகா ஸ்தூபி

நாவிற்கினிய பானம்

# ஆனந்தாஸ்

# காப்பி

(REGISTERED)




ஆனந்தா மானுபாக்சரிங் கம்பெனி
ஸ்தாபிதம் : 1940
தலைமை ஆபிஸ் : காரைக்குடி • போன்: 60

A. A. GOPAL



## சமநிலைப் படுத்தும் பிரச்னை..

ஒரு பைசைகிள் மீது சமநிலையாக வீற்றுச் சவாரி செய்வது சுலபமே. ஆனால் உங்கள் பைசைகிளின் விலையையும் அது கொடுக்கும் சேவையின் மதிப்பையும் சரிக்கட்டுவது அவ்வளவு சுலபமல்ல. மூலப் பொருள்களை மிகுந்த கவனத்துடன் தெரிந்தெடுத்து உபயோகித்து, தயாரிப்பு நிலையில் ஒவ்வொரு உறுப்பையும் கடுமையான பரிசோதனைக்கு உட்படுத்துவதால் ஸென் - ராலே பைசைகிள்கள் மிக நன்றாக உழைப்பது மட்டுமின்றி, செப்பனிடும் செலவும், புதுப்பிக்கும் செலவும் மிகக் குறைந்து, இதன் பயனாக அவற்றின் விலைக்குச் சரிசமானமான மதிப்புடையதாக விளங்குகின்றன.

ராலே
ராபின் ஹூட்







ரமணீஸ்
# பேபி கிரைப்

குழந்தைகளின்
ஆரோக்கியத்திற்கு
சிறந்தது




# சைபால்

வெட்டுக்காயம்
சொறிசிரங்கு, வேனல்கட்டி
முகப்பரு, சேத்துப்புண்
முதலிய வியாதிகளுக்கு
சிறந்தது

தயாரிப்பவர்கள்:-
தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி, மதுரை.

# சில அபூர்வ வெடிகள்

சாவி

[இந்தக் கட்டுரையில் காணப்படும் வாணங்களின் பெயர்கள் எந்த அரசியல் தலைவரையும் குறிப்பிடாது.]

### ஆகாச வாணம்

அகில உலகப் புகழ் பெற்றது. பூமியிலும் இருக்கும்; வானத்திலும் பறக்கும். அஹிம்சா வெடி; இந்தியாவுக்கெல்லாம் ஒரே வெடி. மக்கள் விரும்பும் மகத்தான வெடி. பார்ப்பதற்கு ஒல்லியாகக் குச்சி போல் இருக்கும். தலையிலே காந்திக்குல்லாய் தரித்திருக்கும். பார்த்தால் சாதுவாக இருக்கும். ஆனால் யாரும் அருகில் நெருங்கிவிட முடியாது. ராஜகளை பொருந்திய கம்பீர வெடி; நேர்மையான வெடி. இந்தியாவின் ஈடு இணையற்ற வெடி. வெடிகளுக்கெல்லாம் சிறந்த பிரதம வெடி.

### கம்பி மத்தாப்பு

இதன் ஜோதி அறிவு போல் சுடர் விட்டுப் பிரகாசிக்கும். நட்சத்திரங்கள் எண்ணங்கள் போல் உதிரும். வெகு நேரம் ஜொலிக்கும். கண்ணுக்குக் குளுமை! காதுக்கு இனிமை. உள்ளத்துக்கு ஒளி. உச்சி முதல் உள்ளங்கால் வரை செப்புக் கம்பி. ஆனால் எல்லாம் தங்கக் கம்பி! சிறுவர்களுக்கு ஒளியை ஊட்டி, அறிவைக் கொட்டி, உல்லாசக் கதைகள் சொல்லி ஆனந்தப் படுத்தும். ஆகாச வாணத்துக்கு இதனிடம் அன்பும் மதிப்பும் அபரிமிதமாக உண்டு. பார்ப்பதற்குச் சாதுவாக இருந்தாலும் இதர வெடிகளுக்கெல்லாம் இதனிடம் ரொம்ப பயம். கம்பி மத்தாப்புக்கு உலகத்தில் ஒரே ஒரு விரோதி தான் உண்டு. அது அணுகுண்டு!

### அகல் விளக்கு

மகாத்மாஜி ஏற்றி வைத்த முதல் விளக்கு! வெடிகளுக்கெல்லாம் ஒளி உதவும் விளக்கு. இந்திய மண்ணில் தயாரானது. இதன் திரி தாடியால் இருக்கும். திரிக்கு வேண்டிய நூலைத் தானே நூற்றுக் கொள்ளும். விளக்கில் எப்போதும் மண்வாசனை வீசும். ஏழை எளியவர்களின் விளக்கு. விவசாயிகளுக்கும் நெசவாளருக்கும் ஏற்ற விளக்கு. இந்தியாவின் குடிசைகள் தோறும் எரியும் எண்ணெய் விளக்கு. மண்தானம் வாங்கி மக்களுக்கு உதவும். எல்லா கிராமங்களுக்கும் இது தானாகவே செல்லும். எந்த வெடியானாலும், ஏன், பிரதம வெடிகூட இந்த வெடியை நாடித் தேடி வந்து பலன் பெறும்.

### பாம்பு வாணம்

சீறும்; கடிக்கும்; எரிக்கும்; உடைக்கும். இதற்கு நாக்கு இரண்டு. இன்றைக்கு ஒன்று சொல்லும்; நாளைக்கு ஒன்று கூறும். இதன் உள்ளமும் கறுப்பு. உடலும் கறுப்பு. கருநாகவாணம் என்றும் அழைக்கலாம். சமூகத்தை விஷமாக்கும் நச்சுப் பாம்பு. எல்லா வெடியும் ஒருமாதிரி வெடித்தால் இது ஒருமாதிரி வெடிக்கும். மருந்தில்லாமலே 'படார்' 'படார்' என்று காது செவிடுபடும்படி நேரம் காலம் தெரியாமல் வெடிக்கும். மற்றச் சாதி வெடிகளைக் கண்டால் இதற்கு ஆகாது. சமூகத்தில் இதைக் கண்டு எல்லாரும் பயப்படுவார்கள். இதன் சொந்த ஊரின் பெயர் ரோடு என்று முடியும். ஆனால் இது எல்லா ரோட்டிலும் வளைய வரும். தீபாவளிப் பண்டிகைக்கு விரோதி. வடநாட்டு வாணத்தைக் கண்டால் வழிமறிக்கும். எல்லாவற்றையும் எரிக்க வேண்டும்; கொளுத்த வேண்டும்; உடைக்க வேண்டும் என்று பிரசாரம் செய்யும். மஞ்சள் பட்டாசுக்கும் இதற்கும் சிநேகம் உண்டு. ஆனால் இரண்டும் வெடிக்குள்ளே வெடி!

### மஞ்சள் பட்டாசு

சென்னை ராஜ்யத்தின் முதல் பட்டாசு. பட்டாசுகளுக்குள்ளே தனி நிறம் கொண்டது. காங்கிரஸின் மஞ்சள் பெட்டி நிறம் வாய்ந்தது. எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும் இந்த மஞ்சள் ராஜா பட்டாசுக் கட்டுக்குள்ளே நிச்சயம் இடம் பெற்று விடுவார். பார்ப்பதற்கு பயமாக இருக்கும். ஆனால் வெடிக்காது. நாக்கு உண்டு; ஆனால் பேசாது! எல்லோருக்கும் இது பெரிய ஏமாற்றம் தரும் பட்டாசு. 'படபடபட்' டென்று மற்றப் பட்டாசுகளெல்லாம் வெடிக்கும் போது இது மட்டும் மௌனமாயிருக்கும். பாம்பு வாணத்துடன் உறவு கொண்டாடும்.





# 'ஹல்லோ' ராஜா!

பரதன்

"ஹல்லோ பரத்ஜீ! என்ன செய்திண்டிருக்கீர்? வர்றீரா! இப்படி ஒரு டிரைவ் பீச்சிலே காத்தாடப் போயிட்டு வரலாம்!"

— குரல் தெரிந்த குரல்; அந்தக் குரலைத் தெரியாமல் இருக்க முடியாது! அந்தக் குரல் எனக்கு மட்டுமில்லை, அதே தெருவில் உள்ள சகலருக்கும், குழுவான் குஞ்சு முதல் கொள்ளுத் தாத்தா வரையில் எல்லோருக்கும் தெரியும். கம்பீர நாட்டை என்று கர்நாடக சங்கீதத்தில் சொல்வார்களே, அந்த ராகம் ஒரு குரலாக மாறினால் இப்படித் தானிருக்கும்.

அன்று விடுமுறை நாள். ஒவ்வொரு விடுமுறை நாள் வருவதற்கு ஒரு வாரம் முன்னரே, வரும் விடுமுறையை எப்படி விச்ராந்தியாகக் கழிப்பதென்று வழக்கம் போல் 'ஏழு நாள் திட்டம்' போட்டு வைத்திருந்தேன்.



வீட்டில் கிருக தேவதை இல்லாததால், சினிமா பகல் காட்சிக்கு அழைத்துப் போகும் பொறுப்பு இல்லை. தாம்பரத்தில் உள்ள அன்னாளின் தம்பியைத் தரிசிக்க யாத்திரையும் இல்லை. கோடம்பாக்கத்தில் உள்ள தங்கை குடும்பப் பரிவாரங்களின் படையெடுப்பும் இல்லை. ஆகா! மனிதனுக்கு வாழ்க்கையில் இதைவிட என்ன சுகம் வேண்டும்! இந்த விசாரங்கள், கவலைகள் இல்லாமல் ஒரு நாள் — அந்த ஒரே நாள் — அக்கடா வென்று படுத்து இஷ்டப்படி உறங்கலாம்! ஆனால் அதற்கும் கொடுத்து வைக்க வேண்டுமே! நித்திரா தேவியையும் என்னையும் பிரித்து வைக்க வேண்டுமென்றே அந்த "ஹல்லோ" குரல் அவதரிக்கும்போது என்ன செய்வது?

அந்த "ஹல்லோ" குரல் அப்படிப் பட்ட கெடுகக் குரல். அது தெருவெங்கும் வியாபித்த குரல். அந்தக் குரலுக்கு ஈடு அந்தக் குரல்தான். அதை அமுக்கவோ, மறைக்கவோ, மறுக்கவோ முடியவே முடியாது; அதைப் படைத்த பிரும்மாவாலும் முடியாது. அதற்குக் கோரோசனையும் பாலும் ஊட்டி வளர்த்த சொந்த அன்னைக்கே முடியவில்லை.

"ஹாரன்" சப்தத்துக்கு மேல் 'ஹல்லோ' குரல் வந்ததும் விரித்த பாயை வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருக்காமல் என்ன செய்வது? என் நண்பன் "ஹல்லோ" ராஜு அந்தப் பட்டப் பகல் ஒரு மணி வேளையில் 'பீச்' காற்று வாங்க, அவனுடைய 1908ம் மாடலில் சவாரி செய்யக் கூப்பிடும்போது, முடியாது என்று சொல்ல எனக்கு எப்படி முடியும்?

* * *

'ஹல்லோ' ராஜுவை நான் முதன் முதலில் "வெச்சுக் கண்டது" கடற்கரையில்தான்.

அது நிகழ்ந்து பத்து வருஷங்களுக்கு மேல் இருக்கும். அன்றொரு நாள் என் துணைவியின் துணையில்லாமலே 'பீச்' காற்று வாங்க (இலவசமாக) மாலையில் கடற்கரை வந்து சேர்ந்தேன். ஏகாந்தமான ஒரு இடம் தேடிப் பிடித்து அமர்ந்தேன். அங்கே வழக்கமான பெரிய மனிதக் கூட்டம் இல்லை. கார்களும் இல்லை—ஒன்றைத் தவிர. அதையும் 'கார்' என்று சொல்வதை விட நாலு சக்கர வாகனம் என்றுதான் சொல்ல வேண்டும். அந்த வாகனத்தில் மோட்டாருக்குரிய சின்னங்களைத் தேடிப் பிடிக்க வேண்டும். இந்திரலோகத்திலிருந்தோ, சந்திரமண்டலத்திலிருந்தோ வந்த தனி 'மாடலா'கத்தான் இருக்கவேண்டும்.

என்னுடைய பிரமை படீரென்று கலைந்ததற்குக் காரணம், "ஹல்லோ" என்று காதைப் பிளந்து கொண்டு வந்த குரல் தான்! குரல் வந்த திசையை நோக்கினேன். கட்டுக் குட்டாக, தட்டு வேஷ்டியும், அரைக்கை சொக்காயும், அதன் மேல் அலட்சியமாக வீசப்பட்டிருந்த ஒரு துருக்கி ஸ்நான துவாலையும், தலை கிராப்பு சற்றுக் கலைந்து முன்உச்சி கேசம் கண்ணை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்த ஒரு உருவம் எதிரே பிரசன்னமாயிற்று. இந்த உருவம் அந்தப் பிரத்தியேக மாடல் காரை அலங்கரித்து நான் பார்த்திருக்கிறேன். இந்திரன் புஷ்பக விமானத்தில் (வெள்ளித் திரையிலும் நாடக மேடையிலும் தான்!) பறக்கும் நினைவைக் கொண்டு வரும் அந்தக் காட்சி.

கடற்கரை ரஸ்தாவில் அந்த உருவம் அலட்சியமாக அந்தக் காரை ஓட்டுவதும், மற்றக் கார்கள் அதைப் பார்த்து மிரளுவதும், மறக்கமுடியாத கடற்கரை அதிசயக் காட்சிகளில் ஒன்று. சிலசமயம் அந்தக் காரில் ஏழெட்டுத் தலைகள் தெரியும். அப்பொழுதும் கார் அலட்சியமாகப் பறக்கும். சில சமயம்





வேஷ்டி, சொக்காய், அங்கவஸ்திரம், குல்லாய்கள் "அந்தக் காரில் சவாரி செய்யும். வேறு சமயங்களில் பல வர்ணச் சேலைகளும், ஜாக்கெட்டுகளும் லோலாக்குகளும் ஜொலிக்க, முகப் பவுடர் தூவி, கார் விடும் புகைப் படலத்தை மூடி மறைக்க, கார் கன வேகமாகப் பறக்கும். அந்தக் காருக்குள் ஆண் பெண் சிங்கங்கள்தான் சவாரி செய்யலாம் என்று எண்ண வேண்டாம். நாய் ரகங்களில் என்னென்ன உண்டோ, 'புல்டாக்' 'அல்சேஷியன்' முதல், 'போமரேனியன்' 'ஏர்டேல்' வரையில் எல்லாவிதமான பிராணிகளும் ஒவ்வொரு சமயம் இடம் பெற்றிருக்கின்றன. ஒரு சமயம் ஒரு நிஜ சிங்கமே அந்தக் காரில் பவனி வந்ததை அதே கடற்கரையில் பார்த்திருக்கிறேன்! அந்த மனுஷன் ஏதாவது மிருகசாலை அல்லது சர்க்கஸ் வைத்திருக்கிறானோ என்று நான் வியந்ததுண்டு. அவன் சிநேகம் ஆன மறு நாளே இந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொண்டேன். நாய்கள் பல் வேறு நண்பர்கள் அல்லது அவர்கள் துணைவிகளுடையவை.

"சும்மா, இப்படிப் பீச்சுக்குக் காற்று வாங்க அதுகளை நான் ஏற்றிப்போவேன்! பாவம்! வாயில்லாப் பிராணிகள். உள்ளே அடைபட்டுக் கிடக்கிறதுகள். பீச்சுக் காற்று படட்டுமே அதுகளுக்கும்" என்ற ஜீவகாருண்ய நோக்கத்தில் அவன் அந்தப் பிராணிகளுக்குக் கொடுத்து விட்டான் கார் ஓட்டம்.

"அந்தச் சிங்கமா? அது 'அந்தமான் அதிசய சர்க்கஸ் கும்பெனி' முதலாளி முபத்காணுடையது. அவர் என் நண்பர். அவரது சர்க்கஸ் சிங்கம், பாவம் பல் வலியால் அவஸ்தைப் பட்டது. அதை எனக்குத் தெரிந்த பல் டாக்டரிடம் அழைத்துப் போய், பற்களைப் பிடுங்கி வைத்தேன். அந்தச் சிங்கத்தின் கடைசிப் பல்! அதுதான். இதோ கையில் மோதிரம் போட்டிருக்கிறேனே, அந்தப் பல்லை வைத்துக் கட்டினதுதான். சிங்கப் பல் மோதிரம் உடம்புக்கு ரொம்ப நல்லது. உமக்கு வேணுமா? இந்தாரும், மோதிரத்தை எடுத்துக் கொள்ளும்...."

"ஹல்லோ" ராஜு பரிச்சயமான மூன்றுவது நாளே இந்த மாதிரி அவன் தாராள சிந்தை படைத்த அபூர்வப் பிறவி என்று தெரிந்து கொண்டேன்.

*
* *

மறுபடியும் பீச்சில் முதல் சந்திப்புக்குத் திரும்புவோம்.

அந்தக் குரல் போட்ட 'ஹல்லோ' எனக்கு ஒரு சிறிய அதிர்ச்சியைக் கொடுத்து, காரின்மேல் எனக்கு இருந்த நிஷ்டையைக் கலைத்தது.

அந்தக் குரல் கொடுத்த இடாகந்திரமான 'ஹல்லோ'வுக்கு நானும் பதிலுக்கு ஒரு சௌஜன்யமான 'ஹல்லோ' போட்டு வைத்தேன்.

"என்ன! இன்றைக்கு 'லோலோ' போலிருக்கு! வீட்டிலே அழைச்சுண்டு வரலையோ.......உடம்பு கிடம்பு சரியில்லையோ...?" என்று கவலையுடன் கேட்டது அந்தக் குரல்.

முன்பின்தெரியாத ஆசாமி இப்படி என் குடும்பத்தைப் பற்றிய குரலப் பிரச்னையில் ஈடுபடுவது எனக்கு முதலில் சந்தேகத்தைக் கொடுத்தது. ஊரில் இப்போது மலிந்து கிடக்கும் 'கேப் மாறி'யோ இவன்? இப்படிப் பேச்சுக்கு இழுத்து, 'பீச்சுவா'வை உருவி, "எடுத்துடெல்லாம்" என்று கேட்கப் போகிறானோ என்று கூட அந்த க்ஷணத்தில் சற்றுப் பயந்தேன். ஐந்து நிமிஷத்தில் இந்தச் சந்தேகம் தீர்ந்து விட்டது.

அந்தக் குரல், "ஊம், ஏறும் ஐயா! வீட்டிலே கொண்டு விட்டுவிட்டுப் போகிறேன்" என்று கார்க்கதவைத் திறந்தது. (திறந்தது என்னவோ கைதான், குரல் இல்லை; ஆனால் அந்தக் குரலைக் கேட்டுத் திறவாத கதவு ஏது? அந்தக் கார் கதவே திறக்கிறது என்றால்!)

அதிகம் வளர்ப்பானேன்! நான் யோசனை செய்யுமுன் அந்தக் குரல் என்னை வசப்படுத்தி விட்டது. அன்று முதல் நான் அதன் அடிமையானேன். அன்று முதல் அடிக்கடி அந்த வாகனப் பிராப்தி எனக்கு மட்டுமில்லை, தம்பதிகள் இருவருக்குமே கிடைத்தது. என் கலியாண வைபவத்தில் பெண் வீட்டுக்காரர் விடாத ஊர்வலப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது போல், இந்த மகானுபாவன் அந்தக் காரில் எங்களை ஏற்றிச் செல்வான். நானும் 'ஹல்லோ' ராஜுவும் இணைபிரியாத நண்பர்களாகி விட்டோம்.

நாளடைவில் அவனின்றி எனக்கு ஓர் அணுவும் அசைவதில்லை. தும்மல் முதல் குடும்ப நிர்வாகம் வரையில் எதுவானாலும் அவனைக் கேட்காமல் நான் செய்வதில்லை. இதனால் குடும்பச் சச்சரவுகளும் பல சமயங்களில் ஏற்பட்டதுண்டு.

"என்னதான் அப்படி உங்கள் சிநேகிதரிடம் வச்சிருக்கு! பேசாமல் அவருக்குப்புடவை கட்டிவிட்டுத் தாலியும் கட்டி விடுங்கள்!" என்று என் இல்லாள் இடித்துக் காட்டுவதும் உண்டு. ஆனால் அந்தக் குரல் என்னுடைய வாழ்க்கையில் நன்றாகப் பதிந்து விட்டது.

*
* *

'ஹல்லோ' ராஜுவுக்கு நாற்பது வயதுக்கு மேல் ஆகியிருந்தாலும் அவனுக்குக் கலியாணமாகாதது எனக்கு வியப்பையும் விசனத்தையும் கொடுத்தது. இதைப் பற்றிப் பேச்செடுக்கும் போதெல்லாம் அவன், "ஹஹ்ஹஹா! கல்யாணம்தானே! செஞ்சுட்டா போகிறது. யார் பெண்! இருக்கானா எவனாவது முட்டாள், இந்தக் கிழக் கட்டைக்கு வாழ்க்கைப்பட!" என்று பரிகசித்து வந்தான்.

ஒவ்வொரு சமயம், அவன் விளையாடாமல், "ஸீரியஸ்ஸா சொல்லும் பார்த்தீ! நமக்கு ஒரு கால்கட்டு இருந்தால் இப்படிக் கவலை இல்லாமல் இருக்க முடியுமா? இப்பொழுதாவது நாலு பேருக்கு நம்மாலானதைச் செய்ய முடிகிறது. நமக்கு ஒரு குடும்ப பந்தம் ஏற்பட்டால் அவளுக்குச் செய்யறதுக்கே அவகாசம் போறுது. என்ன சொல்றீர்?" என்று என்னைக் குறும்பாகக் கேட்பான்.

"உண்மைதான்!" என்று நான் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. எனக்குத் தெரியாதா, குடும்ப வாழ்க்கையின் உள்ளந்தரங்கங்களெல்லாம்?

*
* *

அந்த விடுமுறையன்று என்னை 'ஹல்லோ' ராஜு அவனுடைய லங்கடா மாடலில் தூக்கிப் போட்டுக் கொண்டு, அந்தக் கொளுத்தும் வெய்யிலில் 'பீச்' ரஸ்தாவில் வேகமாகப் பறந்தான்.

# Concessional Return Tickets

## DURING DIVALI HOLIDAYS



- 1956ம் வருஷம் அக்டோபர் மாதம் 30ந் தேதியிலிருந்து 1956 நவம்பர் 4ந் தேதி முடிய தீபாவளி ரஜா நாட்களில் குறைந்த கட்டணத்துக்கு ரிடர்ன் டிக்கெட்டுகள் கொடுக்கப்படும். 150 மைல்கள் அல்லது அதற்கு அப்பால் இருக்கும் ஸ்டேஷன்களுக்கு மாத்திரமே மேற்படி டிக்கெட்டுகள் கொடுக்கப்படும்.

- டிக்கெட் வாங்கிய தேதியிலிருந்தோ அல்லது முன்கூட்டியே ரிடர்ன் டிக்கெட்டுகள் வாங்கியிருந்தால், பிரயாணம் ஆரம்பமாகும் தேதியிலிருந்தோ பதினைந்து நாட்களுக்குள் பிரயாணத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்துவிட வேண்டும்.

- திரும்பி வரும்போது எந்த இடத்திலும் இறங்கித் தாமதித்தும் பிறகு பிரயாணத்தைத் தொடங்க அனுமதி கிடையாது.

- திரும்பும் பிரயாணத்தைத் தொடங்கு முன் பிரயாணிகள் தங்களிடமுள்ள பாதி டிக்கட்டுகளில் திரும்பும் பிரயாணம் ஆரம்பமாகும் தேதியைக் குறிப்பிடுவதற்காக அந்த டிக்கெட்டை புக்கிங் ஆபீஸில் சமர்ப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அவ்விதம் டிக்கெட்டில் தேதி குறிப்பிட்டுக் கொள்ளாமல் திரும்பும் பிரயாணத்தைத் தொடங்கினாலோ, அல்லது நடுவில் இறங்கித் தங்கிப் பிறகு பிரயாணம் செய்தாலோ, அவர்கள் டிக்கெட் வாங்காமல் பிரயாணம் செய்பவர்களாகவே கருதப்படுவார்கள்.

- சம்பந்தப்பட்ட ஸ்டேஷன் மாஸ்டர்களிடமிருந்து இதன் முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளலாம்.



**CENTRAL & WESTERN RAILWAYS**

# எமது சிறந்த வெளியீடுகள்




| கல்கி | | | | | டாகூர் (த. நா. குமாரஸ்வாமி மொழிபெயர்ப்பு) | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| பொன்னியின் செல்வன் | | | | | | | | |
| ... | I | 7 | 0 | 0 | கோரா ... | 10 | 0 | 0 |
| ... | II | 7 | 0 | 0 | புயல் ... | 7 | 0 | 0 |
| சிவகாமியின் சபதம் | | 15 | 0 | 0 | பூந்தோட்டம் ... | 2 | 0 | 0 |
| மாந்தருக்குள் ஒரு | | | | | சதுரங்கம் ... | 2 | 0 | 0 |
| தெய்வம் ... | I | 6 | 0 | 0 | ஜப்பான் பயணம் | 0 | 15 | 0 |
| ... | II | 5 | 8 | 0 | சிதைந்த கூடு ... | 1 | 8 | 0 |
| மயில்விழி மான் ... | | 2 | 0 | 0 | மஹா மாயா ... | 1 | 8 | 0 |

த. நா. குமாரஸ்வாமி
ஒட்டுச் செடி ... 1 8 0

★ ★

இதர வெளியீடுகளின் விவரங்களுக்கு எழுதுங்கள்



எஸ். ஏ. பி.
'காதலெனும் தீவினிலே'
'தீ'

●




அரு. ராமநாதன்
வீரபாண்டியன் மனைவி

●



சிறந்த நூல்கள் வெளியீட்டாளர்கள்

நுங்கம்பாக்கம், சென்னை-6

---

# பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.



3. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 ... மதராஸ்-5

டெல்லி கிளை ஆபீஸ் விலாசம் } B. 6, பிளாக் XXX
டெல்லி-அஜ்மீரி கேட் ஸ்கீம், புது டெல்லி-1

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

எங்கள் சிட் பண்டு அநேக ஆண்டுகளாகப் பொதுமக்களின் ஆதரவுடன் நன்கு நடத்தப்படுகிறது. யாவரும் சுலபமாகச் சேமித்துப் பயனடைய வசதி அளித்து வருகிறது.

நேயர்களின் சௌகரியத்திற்காகப் புது டில்லியிலும் எங்கள் கிளை ஆபீஸ் ஒன்று ஆரம்பிக்கப்பட்டு நடந்து வருகிறது

ரூ. 250/- முதல் ரூ. 5,000/- வரை சேமிக்கச் சீட்டு வகைகள் உள்ளன
உங்களுக்குச் சௌகரியமானதைத் தேர்ந்தெடுத்துப் பயனடையுங்கள்

எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

(போர்டார் உத்தரவுப்படி)

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

அன்றைக்கு அவன் வழக்கம்போல் தன் குரலைக் கிளப்பிப் பாதசாரிகளை எச்சரிக்காதது எனக்குச் சற்று ஆச்சரியமாகவே இருந்தது. ஆனால் அவனுக்கு வழக்கமாக உள்ள குதூகலத்தை விடப் பன்மடங்கு முகத்தில் ஒரு தனிக் களை ஜொலித்தது.

"என்ன ராஜு! இன்றைக்கு ஒரு தினுசா இருக்கே!" என்று கேட்டேன்.

"சும்மா வாருமே! எல்லாம் அப்புறம் சொல்றேன்" என்று மீண்டும் மௌன யோசனையில் ஆழ்ந்தான். மௌனத்துக்கும் 'ஹல்லோ' ராஜுவுக்கும் 'ஷ்டாஷ்டகம்' எப்போதும். இன்றோ, அவன் மௌனம் என்னை அதிசயத்தில் ஆழ்த்தி விட்டது.

கார் பறந்தது. ஒரு பிரபல ஜவுளிக் கடை முன் கொண்டு வந்து நிறுத்தினான். என்னையும் அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். இதுவரையில் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தை விட ஆயிரம் மடங்கு அதிக ஆச்சரியம் காத்திருந்தது. 'ஹல்லோ' ராஜு கடையில் உள்ள புடவைகள் ஒன்றுவிடாமல் எடுக்கச் சொல்லிப் பிரித்துப் பார்த்தான். எது நன்றாயிருக்கிறதென்று என்னை அவன் அபிப்பிராயம் கேட்டான்.

"யாருக்கு அப்பா!" .. என்று நான் அளவற்ற சந்தேகத்துடன் கேட்டதை அவனா மதிப்பவன்?

"சும்மா இரும்! எடும் நல்ல கலரில் நாலு புடவைகள்" என்று கடுமையான உத்தரவு போட்டான்.

கடையில் ஜரிகை அதிகமாகப் போட்டிருந்த நாலு புடவைகளை ஐந்நூறு ரூபாய் சொச்சத்துக்கு வாங்கினான்.

"வாரும், போகலாம்!" என்று அவன் உத்தர விட்டான்.

பிறகு அவன் நேரே ஒரு பிரபல ஐரோப்பிய ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றான். அங்கு ஓர் அறைக்கு முன் சென்று மின்சார மணி பித்தானை அமுக்கினான்.

"கம் இன்" என்ற பெண் குரல் கேட்டது. கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தோம். ஒரு மேநாட்டு மாது கண்ணாடி முன் உட்கார்ந்து கொண்டு முகத்தில் பவுடர் போட்டுக் கொண்டிருந்தாள். எங்களைக் கண்டதும் எழுந்து வந்து, "ஹல்லோ, ராஜு! ஹவ்ட்யு டூ!" என்று வினவினாள்.

"ஐ டூ ஆல்ரைட்! திஸ் ஈஸ் மை பெஸ்ட் பிரண்ட், பரத்தி!" என்று ராஜு என்னைத் தன் அத்யந்த நண்பன் என்று அவளுக்கு அறிமுகப்படுத்தினான். பிறகு புடவை பார்சலை அந்தம்மாளிடம் பயபக்தியுடன் கொடுத்தான். அவளும் அதைப் பிரியத்துடன் வாங்கி ஒவ்வொன்றாகப் பிரித்துப் பார்த்தாள்.

"ஹவ் லவ்லி! ஓ! திஸ் ஈஸ் பியூடிபுல்....ஹா! ஐ லவ் திஸ் கலர்" என்று ஒவ்வொன்றையும் எடுத்து வாரி முகர்ந்து, புடவைகளின் வர்ண அழகில் மதிமயங்கிப் போய் அந்த ஆங்கில மாது பரவசமானாள்.

* * *

அந்த அம்மாளின் பெயர் மதாம் ஹாலியென் ஹூபெக் என்று அறிந்தேன். அவள் பிரஞ்சு தேசத்தில் பிறந்து, இத்தாலியில் வளர்ந்து, அமெரிக்காவில் முதலில் ஹூபக் என்ற பெட்ரோல் எண்ணெய் கோமானை மணந்தாள். கணவன் ஹூபக் திடீரென்று காலமாகவே அவருடைய எண்ணெய்க் கிணறு சொத்து எல்லாம்—கோடிக்கணக்கில்—இந்த அம்மாளையே வந்து அடைந்தது. அதை வைத்துக் கொண்டு அமெரிக்காவில் என்ன செய்வதென்று தெரியாமல், கீழ் நாடுகளின் வேதாந்தத் தத்துவங்களை அறிவதற்கும் அங்குள்ள ஏழைமையைத் தன் சொத்தில் ஒரு பாகத்தைச் செலவழித்துப் போக்கி, கணவனை இழந்த துக்கத்தை இந்தியக் கரையில் வந்து போக்குவதற்கும், இங்கு அவள் விஜயம் செய்திருந்தாள்.

'ஹல்லோ' ராஜு அவளை ஒரு நாள் கடைத்தெருவில் ஒரு கடையில் ஏதோ பாஷை தெரியாமல் வியாபாரம் செய்வத் தவித்துக் கொண்டிருக்கும் போது சந்தித்தான். எப்போதும் பரோபகார சிந்தையுள்ள ராஜு அப்போது அவள் பேசுவதைக் கடைக்காரனுக்கும், கடைக்காரன் பேசுவதை அவளுக்குமாக 'தர்ஜுமா' செய்து உதவினான். உடனே அவள் ராஜுவையே போகும் இடங்களுக்கெல்லாம், பார்க்க வேண்டிய காட்சிகளுக்கெல்லாம் துணையாக அழைத்துச் சென்றாள். ஊரெல்லாம் அவனுடன் சளைக்காமல் சுற்றிக் கொண்டிருந்தாள். அவர்கள் தினந்தோறும் அவள் தங்கிய ஹோட்டலிலும் சிலசமயம் வெளியிலும் சேர்ந்து சாப்பிட்டு வந்தார்கள். மதாம் ஹாலியென் இந்து மதம், இந்தியர் பழக்க வழக்கங்களைப் பற்றி எல்லாம் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டாள். ராஜு சளையாமல் தனக்குத் தெரிந்ததெல்லாம் சொல்லவே அவளும் அதில் மிகுந்த ஆர்வம் கொண்டாள்.



ஆத்ம வேதாந்தத்துடன் வாழ்க்கை வேதாந்தமும் அவர்களிடையே விவாதிக்கப்பட்டது. இருவரும் ஒருவர் மனத்தை ஒருவர் அறியச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. இது முன்னால் நடந்த பின்னணி பூர்வக் கதை... (இவை நான் பின்னர் ராஜுவிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட விவரங்கள்.) இனி முக்கிய கதை வரலாற்றில் முன் செல்வோம்...

* * *

புடவைகளை மதாம் ஹாலியென் கண்டு மகிழ்ந்ததும், ராஜு அவளிடம் என் முன் சொன்ன வார்த்தைகள் என்னைத் தாக்கி வாரிப் போட்டன.

"கம் ஆன்! டார்லிங்! ஹரி அப்" என்ற வார்த்தைகள்தான் எனக்கு முதல் அதிர்ச்சி தந்தன. ராஜுவை ஏறிட்டுப் பார்த்தேன். அவன் கண்களில் குறும்புச் சிரிப்பும் ஆனந்தமும் ததும்பின.

"சும்மா இரு" என்று ஜாடையில் எனக்குக் கண்ணைச் சிமிட்டினான்.

மதாம் ஹாலியென் புடவைகளைச் சுருட்டிக் கொண்டு பக்கத்து அறைக்குச் சென்றாள். பத்து நிமிஷத்தில் வேறு வேஷத்துடன் திரும்பினாள். நம் மாதர்கள் போல் புடவையைக் கட்டிக் கொண்டு வந்து காட்சியளித்தாள். ராஜு அவள் கையை ஒரு புறமும் என் கையை ஒரு புறமும் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போனான். காரில் எங்களை ஏறச் சொன்னான். விர்ரென்று ஓட்டிக் கொண்டு பறந்தான். எனக்கு அவன் நடத்தை ஒன்றும் புரியவில்லை. பக்பக் என்று அடித்துக் கொண்டது நெஞ்சு. 'அடுத்தபடி என்ன?' என்ற கேள்விக்குறி தோன்றிக் கொண்டே இருந்தது.

இது மர்மக் கதை இல்லையாதலாலும், சீக்கிரமே சுபமாக முடிய வேண்டியிருப்பதாலும், வாசகர்களை அனாவசிய சந்தேகத்துக்கு ஆளாக்காமல் "கெட்டிமேள"க் கட்டத்திற்கு வந்துவிடுவோம்.

'ஹல்லோ' ராஜு — லீலா (ஹாலியெனின் இந்திய மணம் வீசும் பெயர்) திருமணம் என் முன்னிலையில் அக்னி சாட்சியாக விவாக சமாஜ ஆலயத்தில் நிறைவேறிற்று.

இந்தக் கல்யாணக் கலாட்டாவில் மணப் பெண்ணின் வயது மறந்து விட்டது. பவுடருடன் நாற்பத்தைந்துக்குமேல் ஒருநாள் கூட அதிகம் சொல்லமுடியாது.

* * *

'ஹல்லோ' ராஜுவின் தலைதீபாவளி இப்பொழுது நியூயார்க்கில் 'ஆஸ்டோரியா' ஹோட்டலில் விமரிசையாக நடைபெறுகிறது. நானும் "ஹல்லோ" என்று பல்லாண்டு கூறி வாழ்த்துச் செய்தி 'தந்தியில்லாக் கம்பி' மூலம் அனுப்பி விட்டேன். அமெரிக்காவில் ராஜுவின் தந்தி விலாசம், "ஹல்லோ — லீலா — ஹாலி பார்லவிட்டு" என்பதுதான். நீங்கள் யாராவது அமெரிக்கா போனால் 'ஹல்லோ தம்பதி'களை என் சார்பாக விசாரித்து விட்டு வாருங்கள்.

## தலை தீபாவளி!



பையன் :— அக்கா! அக்கா! உன் தலை தீபாவளிக்கு அணுகுண்டும் ஊசி வெடியும்....
அக்கா :— உஸ்! அதோ யாரு வருகிறான்னு முதல்லே பாருடா!

# துரோகி



ஆழ்ந்த சிந்தனையில் உலகையே மறந்து அமர்ந்திருந்த கௌட தேசத்து அரசரான தர்மபாலர் காலடி யோசை கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினார். எதிரே வந்து நின்ற ஒற்றர் படைத் தலைவர் பாஸ்கர வர்மர் கலவரமடைந்து காணப்பட்டார்.

"அரசே! கன்யாகுப்ஜத்திலிருந்து வரும் வத்ஸராஜப் பிரதிஹாரருடைய சேனை, நமது சேனையைப் போல் ஐந்து மடங்கு பெரிதாக உள்ளது. அந்தச் சேனையில் லட்சம் பேர் இருக்கிறார்கள். இப்போது நானே சென்று பார்த்து விட்டு வந்தேன். நமது சைன்யத்தால் நிச்சயம் அதை எதிர்க்க முடியாது. சேனாபதி தேவபாலரும் வயதில் சிறியவர். அவரை நம்பி இவ்வளவு பெரிய சேனையை எதிர்க்க நமது படையை அனுப்பி விட்டோமே என்று எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது" என்றார்.

அரசரின் முகத்தில் கவலைக் குறிகள் படர்ந்தன. "தேவபாலன் மிகச் சிறந்த வீரன். அதைப்பற்றி எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் அவ்வளவு பெரிய சைன்யத்துடன் நமது வீரர்கள் எப்படிப் போரிட முடியும்?" என்று சோகத்துடன் கேட்டார். உடனே மந்திரிகள் அனைவரையும் கூட்டி மந்திராலோசனை நடத்தினார் மன்னர்.

அரசர் வந்து அமர்ந்ததும், "பாஸ்கர வர்மரே! எல்லோருக்கும் விஷயம் தெரியுமல்லவா?" என்று கேட்டார்.

"தெரியும், அரசே!" என்றார் வர்மர்.

"பிரதிஹார அரசருடைய படைபலம் இவ்வளவு அதிகமாக இருக்குமென்று நான் கருதவில்லை. லட்சம் வீரர்களைக் கொண்ட படையை, இருபதினாயிரம் வீரர்கள் எதிர்ப்பது தற்கொலைக்கு ஒப்பாகும் என்று தோன்றுகிறது. வந்தது வரட்டும் என்று எதிர்க்கச் சொல்வதா? அல்லது நமது படைகளைப் பின் வாங்கி வரச் செய்து நமது கோட்டையைப் பலப்படுத்தச் செய்யலாமா?" என்று கேட்டார் அரசர் தர்மபாலர்.

"நமது படையைப் பின் வாங்கிப் பாடலிபுத்திரத்துக்கு வந்துவிடச் செய்வதுதான் சரியான யோசனை. நமது படை அங்கே தோற்கடிக்கப்பட்டால் பாடலிபுத்திரத்தைக் காப்பாற்ற இறைவனால் கூட முடியாது" என்றார் முதன் மந்திரி பிரபாகர வர்த்தனர்.

"யுத்தத்துக்கு அனுப்பிய படையைப் பின் வாங்கச் சொல்வது வீரத்துக்கு இழுக்கு அல்லவா? தேவபாலனுக்கு என்ன காரணத்தைச் சொல்லிப் பின் வாங்கச் சொல்வது?" என்று கவலையுடன் கேட்டார் அரசர்.

"அரசே! யுத்தம் ஆரம்பித்த பிறகு பின் வாங்குவதுதான் அவமானம். படைபலம் அதிகமாக உள்ள எதிரியுடன், தோல்வி நிச்சயம் என்று தெரிந்த பிறகு போரிடுவது வீரமாகுமா? பின்வாங்கி வந்து கோட்டையைப் பலப்படுத்துவது இராஜ தந்திரமாகுமேயன்றிக் கோழைத்தனமாகாது!" என்று உறுதியாகக் கூறினார் இன்னொரு மந்திரி.

கடைசியாக அரசர் தளபதி தேவபாலனுக்குச் சிறிது தயக்கத்துடனேயே ஓலை அனுப்பினார். தேவபாலன் அதைத் தனது வீரத்துக்குக் கற்பிக்கும் மாசாக நினைத்துத் துன்புறுவான் என்பது மகாராஜா தர்மபாலருக்குத் தெரியும். அவரும் ஒரு மகா வீரர் அல்லவா?

* * *

வங்காளத்தை மகோன்னதமான நிலைக்குக் கொண்டுவந்த பால அரச வம்சத்தில் பிறந்தவர் தர்மபாலர்.

மௌரியப் பேரரசர்களும், குப்தப் பேரரசர்களும் ஆண்ட பாடலிபுத்திர நகரத்தை இன்னும் சிறப்படையச் செய்ய வேண்டுமென்று தர்மபாலர் கனவு கண்டார். அவருடைய கனவைச் சிதைக்க, கன்யாகுப்ஜம் என்றும், கன்னோசி என்றும், குசுமாபுரம் என்றும் பலவிதமாக அழைக்கப்பட்ட மகோந்நத நகரத்திலிருந்து வத்ஸராஜப் பிரதிஹாரருடைய சைன்யம் புறப்பட்டது. கங்கை நதியின் பிரவாகத்தில் எண்ணற்ற ஆயுதந்தாங்கிய படகுகள் மிதந்துவரலாயின.

வத்ஸ ராஜரை எதிர்த்து நிறுத்தச் சென்ற சேனை கங்கைக்கரையில் முகாம் போட்டிருந்தது. தேவபாலன் குறுக்கும் நெடுக்குமாகப் பாசறைக்கு முன்னால் நடந்து கொண்டிருந்தான். சற்று முன் வந்த ஒரு ஒற்றன், விடியற்காலம் எதிரி சேனை அந்த இடத்துக்கு வந்து விடும் என்றும், எதிர்பார்த்ததை விடச் சேனை பெரிதாக இருக்குமென்று தோன்றுவதாகவும் கூறி விட்டுப் போயிருந்தான். தேவபாலனுக்கு இது சற்றுக் கவலையை அளித்தது. எல்லா வீரர்களையும் உற்சாகப் படுத்த எண்ணி அங்கங்கே கூடியிருந்த வீரர்களை நோக்கி நடந்தான்.

வீரர்கள் நெடுந் தூரம் பரவி உட்கார்ந்திருந்தனர். ஒவ்வொரு கூட்டத்துக்கு மத்தியிலும் நெருப்பு எரிந்தது. ஒவ்வொரு இடமாகத் தேவபாலன் சென்று வீரர்களிடம் அன்பொழுகப் பேசினான். "வீரர்களே! நமது மானத்தைக் காத்துக் கொள்ள வேண்டிய சமயம் வந்து விட்டது. நம்மைத் தந்தையைப் போல அன்போடு பராமரித்து வரும் தர்மபால மகாராஜாவுக்கு நமது நன்றிக் கடனைச் செலுத்த வேண்டிய சமயம் வந்து விட்டது. நாம் ஒவ்வொருவரும் பத்து பிரதிஹார வீரர்களுக்கு ஒப்பாவோம்" என்று கர்ஜனை செய்தான். அவனுடைய பேச்சு அங்கே கூடியிருந்த வீரர்களுக்கு வீர உணர்ச்சியை உண்டாக்கியது. அவர்களுடைய உள்ளம் வீர உணர்ச்சியால் விம்மிப் பொங்கியது.

அதே சமயத்தில் மிக விரைவாக வரும் குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. குதிரையிலிருந்து குதித்த வீரன் நேராகத் தளபதியின் அருகில் வந்து வணக்கமிட்டுத் தன் அரைக் கச்சில் செருகியிருந்த ஒரு மூங்கில் குழாயை எடுத்துப் பணிவாக அவனிடம் கொடுத்தான். அதை ஆவலுடன் வாங்கிக் கொண்ட தேவபாலன் அருகில் எரிந்த நெருப்பின் ஒளியில் ஓலையைப் படித்தான். படிக்கும் போதே அவனுடைய இளம் மீசை துடித்தது. கண்கள் சிவந்தன. முகம் கறுத்தது.

"என்ன ஓலை அனுப்பியிருக்கிறார் மகாராஜா?" என்று துணிந்து கேட்டான் விஜயசேனன்.

"என்ன செய்தியா? என்னை அரசர் நம்பவில்லை. என் வீரத்தில் அவர் சந்தேகம் கொண்டு விட்டார்."

ஓலையை வாங்கிப் படித்துப் பார்த்த விஜயசேனன், "இப்போது என்ன செய்யப் போகிறீர்கள், தளபதி?" என்று திகைப்புடன் கேட்டான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"நான் என் வீரர்களிடமே கேட்கிறேன். இந்த அவமானத்தை, வீரத்துக்குக் கற்பிக்கப்படும் களங்கத்தை அவர்கள் ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருக்கிறார்களா என்று பார்ப்போம்" என்று ஆவேசத்துடன் கூறிவிட்டு எழுந்து நின்றான் தேவபாலன்.

அவனுடைய வீராவேசமான பேச்சைக் கேட்ட போர்வீரர்கள் அனைவரும், யுத்தம் செய்யத் துடித்தார்கள். அதன் விளைவு? அரசரின் கட்டளையையும் மீறி யுத்தத்தை நடத்துவது என்று அனைவரும் ஏகமனதாகத் தீர்மானித்து விட்டார்கள். ஆனால் விஜய சேனனுக்கு மாத்திரம் மனம் கலங்கியது. ஆயினும் தான் கூறுவது எடுபடாது என்று அவன் பேசாமலிருந்து விட்டான்.

நள்ளிரவு நேரத்தில் ஒரு அந்தரங்கத் தூதன் வந்து தேவபாலனிடம் இன்னொரு ஓலையைக் கொடுத்தான்.

தேவபாலனின் மனைவியான சங்கரதேவியை வளர்த்த பாலாதித்யர் அதை அனுப்பியிருந்தார். "எக் காரணத்தை முன்னிட்டும் போரை நடத்த வேண்டாம். உடனே திரும்பு. ரொம்ப முக்கியமான விஷயம் ஒன்றை உன்னிடம் கூற வேண்டும்" என்று அவர் எழுதியிருந்தார். அதைப் பார்த்து அவன் மனம் துணுக்



# பெற்ற தண்டனை

குற்றபோதிலும், முன் வைத்த காலைப் பின் வைப்பதில்லை என்று உறுதி செய்து கொண்டான்.

மறு நாள் காலை பெரும் போர் மூண்டது. பிற்பகலிலேயே தோல்வி யாருக்கென்று தெரிந்து போய் விட்டது. ஆயினும் கொடை வீரர்கள் ஒவ்வொருவரும் தன் உயிரைத் திருணமாக நினைத்து ஆவேசத்தோடு போரிட்டனர்.

தேவபாலன் போர்க்களத்தில் இல்லாத இடமே இல்லை. சுற்றிச் சுற்றிப் போரிட்டான். மின்னலின் வேகத்தை அன்று அவன் வாளில் காண முடிந்தது.

பொழுது சாய்ந்து விட்டது. புனிதமான கங்காதேவியின் பிரவாகம் சிவந்து விட்டது. இருள் சூழும் அவ்வேளையில் ஐம்பது பேர்கள்தான் தேவபாலனுடன் மிஞ்சினார்கள். மற்ற அத்தனை பேரும் மாண்டு போனார்கள். அப்போதும் தேவபாலன் போரை நிறுத்தவில்லை. தான் இறப்பதற்கு முன்னும் எதிரியின் சேனையில் எத்தனை பேரைக் கொல்ல முடி



ஏமோ, அத்தனை பேரைக் கொன்றுவிட்டு மடிவது என்று தீர்மானித்தான்.

பட்டத்து யானைமீது அமர்ந்து வத்ஸ ராஜப் பிரதிஹாரர், இந்த அதிசய வீர னின் துணிவைக் கண்டு வியந்தார். தேவ பாலனின் கைகள் கெஞ்சின. கால்கள் தள்ளாடின. எதிரியின் கத்தி தன் மீது பாயாதா என்று ஏங்கினான். அவனைக் கொல்லக் கூடாது என்று வத்ஸராஜப் பிரதிஹாரர் உத்தரவிட்டிருப்பது அவ னுக்கு எப்படித் தெரியும்?

தேவபாலனுக்குத் தன் அருமை மனைவி சங்கர தேவியின் முகம் கண்முன்னால் வந் தது. தான் கோழை போலப் பின் வாங்காமல், எதிர்த்து நின்று வீர மரண மடைந்ததைக் கேட்டு அவள் பெருமைப் படுவாளென்று எண்ணினான். தன்னைச் சுற்றி இன்னும் பத்து வீரர்கள்தான் இருக்கிறார்கள் என்பதைக் கண்டதும் தன்னை யறியாமல் அவனுக்குத் துயரம் நெஞ்சை யடைத்தது. விஜயசேனன் அந்தச் சமயத்தில் அடிபட்டு விழவே, இன்னும் துயரம் உண்டாயிற்று. 'என் மீது மாத்திரம் ஏன் வாள் வீசப் பட மாட்டேனென்கிறது!" என்று தேவ பாலன் துடியாய்த் துடித்தான்.

அதே சமயத்தில் யானை மீதிருந்து, "போரை நிறுத்துங்கள்" என்ற இடி முழக்கக் குரலில் உத்தரவு வந்தது.

"அரசே! நீர் ஒரு சுத்த வீரர் அல் லவா? ஒரு வீரனை மதித்து, அவனுக்கு வீர சுவர்க்கம் கிடைக்கும்படியான பேற்றை அளிக்கக் கூடாதா?" என்று கொதிப்புடன் கேட்டான் தேவபாலன்.

"தளபதி! உன்னுடைய வீரத்தைக் கண்டு உண்மையிலேயே என் மனம் மகிழ்ச்சியடைகிறது. என் வாழ்நாளில் இத்தகைய ஒரு போரை நான் கண்டதே இல்லை. உன்னைப் போன்ற ஒரு தள பதியை அடைந்த தர்மபாலரும் மகா வீரராக இருக்க வேண்டும்!" என்று கூறி அவனை ஆலிங்கனம் செய்து கொண்டார் வத்ஸராஜப் பிரதிஹாரர்.

அப்படியே மூர்ச்சையானான் தேவ பாலன். சங்கரதேவியின் மாங்கல்ய பல மும், அவள் பிரேமை யும் அன்று தேவபால னைக் காத்து விட்டன.

மறு நாள் காலை தேவபாலன், வத்ஸ ராஜர் பரிசாக அளித்த பட்டத்து யானை மீது ஏறிக் கொண்டு பாடலிபுத் திரத்தை நோக்கிக் கிளம்பிய போது அப் படித்தான் எண்ணி னான். மகாவீரரென்று எதிரி அரசரால், அதி ஜும் ரகுவம்சத்தில் பிறந்தவரும், சேத் தில் சிறந்தவரென்று பெயர் பெற்றவரு மான வத்ஸராஜரால் பாராட்டப்பட் டுச் செல்லும் தன்னைச் சங்கர தேவி எப்படி வரவேற்பாள் என்று அகக் கண் ணில் கண்டு மகிழ்ந்தான்.

பாடலிபுத்திரத்தை அடைய இன்னும் ஒரு நாழிகை நேரம் இருந்தது. சாலையின் எதிரே ஒரு சிவிகை வந்தது.

ஒப்பற்ற சௌந்தர்யவதியான சங்கர தேவி சிவிகையிலிருந்து இறங்கினாள். தேவபாலனுடைய பாதங்களைத் தொட் டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். குவளை மலரின் இதழை ஒத்த அவளு டைய நயனங்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது.

"தேவி! என்ன இது? நீ என்னை எப் படியெல்லாமோ வரவேற்பாய் என்று நான் கனவுகள் கண்டு கொண்டே வந்தேனே? இப்படி நீ கண்ணீர் விடக் காரணம் என்ன?" என்று பதறிப் போய்க் கேட்டான் தேவபாலன்.

சங்கரதேவி விம்மிக் கொண்டே, "ஸ்வாமி! நீங்கள் ஏன் அரசரின் கட்ட ளையை மீறினீர்கள்?" என்று கேட்டாள்.

"தேவி! நீ கூடவா இப்படிக் கேட் கிறாய்? நான் என்ன கோழையா? யுத்தத் துக்குச் சென்றவன் பதுங்கி ஓடிவருவது என்பது வீரத்துக்குக் களங்கமல்லவா? இதில் என்ன தவறு? நான்தான் போரி லிருந்து திரும்பி விட்டேனே! ஏன் கண் ணீர் விடுகிறாய்?" என்று கவலையுடன் கேட்டான் தேவபாலன்.

"ஸ்வாமி! உங்களுடைய வீரம் எனக் குத் தெரியாதது அன்று. தாங்கள் அபிமன்யுவுக்கு நிகரானவர். ஆனால்



நமது அரசர் தங்களைச் சிறைப்படுத்தி விட்டால் நான் என்ன செய்வேன்?"

"என்ன? என்னைச் சிறைப்படுத்து வதா? எதற்காக?"

"ஆம். ஸ்வாமி! தாங்கள் அரச ருடைய கட்டளையை மீறி யுத்தம் செய் தீர்களாம். மடிந்து போன அத்தனை வீரர்களுடைய மரணத்துக்கும் நீங்கள் தான் பொறுப்பாளியாம். அதற்காகத் தங்களை விசாரணை செய்யப் போகி றார்களாம்" என்று கூறினாள் சங்கர தேவி ஆறாத் துயருடன்.

"விசாரணை செய்யட்டுமே! பின் வாங்குவது வீரத்துக்கு அழகா என்று அவர்களையே கேட்கிறேன்."

"ஐயோ! நீங்கள் நிலைமையை உண ராமல் பேசுகிறீர்களே! விசாரணையின் முடிவு எப்படியிருக்கும் என்று யோசிக்க மாட்டேனென்கிறீர்களே!"

"தேவி! நீ கூட என்ன இப்படி அழு கிறாய்? நீ க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவள். மரணத்துக்குப் பயப்படலாமா?"

சங்கரதேவியின் முகம் சிவந்தது. துடிப் புடன் பேசினாள்: "நான் மரணத்துக்கு அஞ்சவில்லை, ஸ்வாமி! தாய் நாட்டுக் காகப் போர் செய்து, வீர மரணம் அடைந்தால் அதைப் பெருமையாக நான் கருதுவேன். ஆனால் என் கணவர் குற்ற வாளியாகத் தண்டிக்கப்படுவதை நான் எப்படிச் சகிப்பேன்? நமக்குப் பிறக்கப் போகும் செல்வனிடம், 'உன் தந்தை குற்றவாளி என்று, புகழ்பெற்ற தர்ம பால மகாராஜாவால் தண்டிக்கப்பட் டார்' என்று கூறமுடியுமா?" இவ்வாறு கூறிவிட்டுத் தன்னை மீறி வந்த விம்மலைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

தேவபாலனின் முகம் மலர்ந்தது. "உண்மையாகவா, தேவி? நமது குலத் தைத் தழைக்க வைக்கச் செல்வன் பிறக் கப் போகிறானா?" என்று கேட்டான்.

"ஆம்! அதனால் நான் சொல்வதைக் கேளுங்கள். நாம் இப்படியே திரும்பி வேறெங்கேயாவது போய் விடலாம். பாடலிபுத்திரத்துக்கே இனிமேல் நாம் வர வேண்டாம்."

"தேவி! தாய்நாட்டை விட்டு நாம் உயிருக்குப் பயந்து கோழையாக ஓடு வதா? என்ன அவமானம்!"

"ஸ்வாமி! பாடலிபுத்திரத்தின் வாச லில் நீங்கள் கைது செய்யப்படுவீர்கள். எனக்காக வேண்டாம், நம் சிசுவுக்காகச் சிறிது யோசியுங்கள்."

"ஒருநாளும் முடியாது, சங்கரதேவி! சாவதாக இருந்தாலும் நான் பாடலி புத்திரத்துக்குத்தான் போவேன். உயி ருக்கு அஞ்சி ஓடினவன் என்ற பெயரைத் தேவ பாலன் சுமக்க மாட்டான். நான் செய்தது தவறானால் அதற்குத் தண்டனை விதிக்க மகாராஜா வுக்கு உரிமை உண்டு. அதை ஏற்கவும் நான் கடமைப் பட்டவன். நீ சிவிகையில் ஏறிக் கொள்" என்றான் தேவபாலன் உறுதி யான குரலில்.

சங்கரதேவி மௌன மாகச் சென்று சிவிகை யில் ஏறிக் கொண்டாள். தன்குதிரைமீது தேவபாலன் ஏறிக் கொண்டதும் அந்தக் கூட்டம் பாடலிபுத்திரத்தை நோக்கிப் புறப்பட்டது. அவ்வப்போது சங்கரதேவி யின் விம்மல் சிவிகையிலிருந்து கேட்டது.

* * *

விசாரணைக்கு முதல் நாள் இரவு. தேவபாலனின் சிறைக்கதவு திறந்தது.


விரைவில் வருகிறது
RAMAN PRODUCTIONS
ராமன் ப்ரொடக்ஷன்ஸ்
அதிசயப்பெண்
வைஜயந்திமாலா ★ நாகேஸ்வரராவ்
S.மனோஹர். சாரங்கபாணி. ஜாவர் சீதாராமன். மாதுரிதேவி. குமுதினி. காமினி...
கதை - வசனம் ஜாவர் சீதாராமன்......
பாடல்கள் சீதாராமன்......
சங்கீதம் S.M. சுப்பையா
தயாரிப்பு டைரக்ஷன்... M.V. ராமன்
WORLD RIGHTS WITH...
T. TARACHAND.
'BRIGHTLANDS', LANSDOWNE ROAD, BOMBAY. 1

சுலபமான, சுகாதாரமான

*தண்ணீர் சப்ளைக்கு..*

# டெமிங் மார்வல்

## தானாக இயங்கும் தண்ணீர் குழாய்




மாடிகளில், குளிக்கும் அறையில், சமையல் கட்டில் எல்லா இடங்களிலும் குழாய்கள் அமைக்கலாம். எந்த நேரத்திலும் குழாயைத் திறந்தால் மிக வேக மாகத் தண்ணீர் சப்ளை செய்யும். மின்சாரத்தால் தானாக இயங்குவது. மேல் மட்டத் தொட்டி அவசிய மில்லை. ஆழமான கிணறுகளிலும் தண்ணீர் எடுக்க வசதியானது. பில்டர் பாயிண்டுகள், கார்ப்பரேஷன் முனிசிபல் 'ஸம்ப்'களிலும் அமைக்கலாம். வசதியை விரும்பும் ஒவ்வொரு வீட்டிற்கும் இன்றியமையாதது.



*தண்ணீரை சுத்தப்படுத்த..*

# SURECLOR

## ஆட்டோமாடிக் வாட்டர் - குளோரினேடிங் யூனிட்

நிறுவுவதும், இயக்குவதும் சுலபம். நம்பகமான "ஷ்யூர்குளோர்" கிராம தண்ணீர் சப்ளை, முனிசிபல் வாட்டர் ஒர்க்ஸ், தோட்ட எஸ்டேட்கள், தொழிற்சாலை தண்ணீர் வசதி திட்டங்களுக்கு மிகவும் சிறந்த வகையில் உதவுவது

விவரங்களுக்கு

# ஈசன் இன்ஜினீயரிங் கம்பெனி லிட்.,

5-7, ஸெகண்ட் லைன் பீச், மதராஸ்-1

மற்றும்

## தி பயனீர் சைக்கிள் ஹவுஸ்

மேலக் கோபுர வீதி, மதுரை

EP

அமர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவனைத் தட்டி எழுப்பினார் ஒருவர். திடுக்கிட்டு எழுந்த தேவபாலன், அவர் புரபாலரும், தண்டநாயகருமான, சங்கரதேவியின் மாமன் பாலாதித்யர் என்று கண்டதும் வியப்படைந்தான்.

"மாமா! தாங்கள் எதற்காக இங்கு வந்தீர்கள்?" என்று கேட்டான்.

"தேவபாலா! நான் அருமையாக வளர்த்த என் அருமை மருமகள் சங்கரதேவியின் துயரை என்னால் சகிக்க முடியவில்லை. நீ தப்பித்துக் கொண்டு செல்வதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறேன். உடனே ஓடிப்போய்விடு. நாளை விசாரணையில் எல்லா மந்திரிகளும் உனக்கு நிச்சயம் மரண தண்டனைதான் விதிப்பார்கள். அதன் பிறகு குழந்தை சங்கரதேவியின் முகத்தில் நான் விழிக்கவே முடியாது. நீ இப்பொழுது தப்பிச் சென்று விட்டால் ஒரு பெரிய ரகசியத்தை அறிந்து கொள்வாய்."

"வயதில் முதிர்ந்த நீங்களே இப்படிச் சுயநலத்துக்காக ராஜத்துரோகம் செய்யலாமா? அப்படி என்ன இந்த உடல் சாசுவதமானதா? இறந்தாலும் எனது ஜன்ம பூமியிலேயே இறக்க நான் விரும்புகிறேன்" என்றான் தேவபாலன். அவர் பலவிதமாக வற்புறுத்தியும், அவன் உறுதி மாறவில்லை. அவனைத் தழுவிக் கொண்டு பாலாதித்யர், "சங்கரதேவியின் மாங்கல்ய பலம் உன்னைக் காக்கும்" என்று கூறிவிட்டுச் சென்றார். சிறைக் கதவுகள் மறுபடியும் முன் போலவே மூடிக்கொண்டன.

'ஏதோ ரகசியத்தை அறிந்து கொள்வேன் என்றாரே மாமா. அது என்னவாக இருக்கும்? யுத்தத்துக்கு முன்னால் அனுப்பிய ஓலைக்கும் இதற்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்குமோ?' என்று தன் மூளையைக் குழப்பிக் கொண்டான் தேவபாலன்.

மறுநாள் விசாரணை தொடங்கியது. பாடலிபுத்திர நகரமே திரண்டு விசாரணைக்கு வந்திருந்தது என்று சொல்ல வேண்டும். மக்களெல்லாம் தேவபாலனின் கட்சியில்தான் இருந்தார்கள்.

வயது முதிர்ந்தவர்கள் மட்டும்தான், "அரசருடைய ஆணையைத் தளபதி மீறியது தவறு" என்று அபிப்பிராயப் பட்டார்கள். வீரலக்ஷ்மி குடிகொண்டு விளங்கும் தேவபாலனின் முகத்தைக் கண்டதும் யாருக்குமே அவன் குற்றவாளி என்று தோன்றவில்லை.

"யுத்தத்தில் தோல்வியடைந்ததுமல்லாமல் எதிரி அரசனின் கால்களில் விழுந்து பரிசு பெற்று வந்திருக்கிறாய். இந்தத் துரோகத்தினால் புகழ் பெற்ற நமது கௌட தேசத்துக்கு அழியாத அவமானத்தைத் தேடிவிட்டாய். சரித்திரத்திலேயே இன்று வரையில் இவ்வாறு ஒரு சம்பவம் நடந்ததில்லை என்பது உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார் பேரரசர் தர்மபாலர்.

தேவபாலனின் உடல் பதறியது. "எது தோல்வி அரசே? அத்தனை வீரர்கள் தங்கள் உயிரை அர்ப்பணித்து எதிரிப் படையைத் தடுத்து நிறுத்தவில்லையா? தொன்மையான இந்தப் பாடலி புத்திர நகரம் காப்பாற்றப்பட்டு விடவில்லையா? இது தோல்வி அல்ல, அரசே; வீரத்தின் வெற்றி! வீர சுவர்க்கம் புகுந்திருக்கும் அத்தனை வீரர்களின் ஆத்மாவும் தோல்வி என்ற சொல்லைக் கேட்டுத் துடிக்கும். அவ்வாறு கூறாதீர்கள்!" என்று ஆவேசத்துடன் மொழிந்தான் தளபதி தேவபாலன்.

தர்மபாலரின் முகத்தில் எந்தவிதமான மாறுதலும் தெரியவில்லை. மறுநாள் தீர்ப்புக் கூறப்படும் என்று அறிவித்து விட்டு எழுந்து சென்றார்.

அன்று மாலை வத்ஸராஜப் பிரதிஹாரரிடமிருந்து தூதுவர்கள் வந்தார்கள். "ஸ்ரீராமரின் தம்பியான ஸௌமித்திரியின் வம்சத்தில் உதித்தவரும், புஷ்ய பூதிகள் ஆண்ட கன்யாகுப்ஜ நகரத்தின் ஸிம்மாசனத்தை அலங்கரிப்பவருமான வத்ஸராஜப் பிரதிஹாரர், வங்கபதியும், கௌடேச்வரரும், பாடலி புத்திரத்திலிருந்து தாம்ரலிப்தி நகரம் வரை பரந்திருக்கும் கௌட ராஜ்யத்தின் அரசருமான தர்மபாலருடன் சிநேகம் செய்து கொள்ள விரும்புகிறார்" என்று ஒரு தூதுவன் கூறினான்.



தர்மபாலர் அந்த நட்பினால் விளையக் கூடிய நன்மையை அறிந்தவராதலால் பாடலிபுத்திரத்துக்கு வந்து தம்முடைய விருந்தாளியாகத் தங்கிக் கௌரவிக்க வேண்டும் என்று அழைப்பு அனுப்பினார்.

இரண்டு பேரரசர்களின் சந்திப்பு, தண்ணீர் பெருகும் இரண்டு ஜீவநதிகளின் சங்கமத்தை ஒத்திருந்தது.

சகலவித ராஜோபசாரங்களும் முடிந்த பிறகு இரண்டு அரசர்களும் தனியே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

"தர்மபாலரே! இன்று உமது சபையில் அத்தனை பேரையும் அறிமுகம் செய்து வைத்தீர்கள். ஆனால் தங்களுடைய வீரத் தளபதி தேவபாலனைக் காணோமே! அவன் எங்கே?" என்று வியப்புடன் கேட்டார் வத்ஸராஜர்.

தர்மபாலர் எல்லா விஷயங்களையும் ஆதியோடு அந்தமாகக் கூறி முடித்தார்.

"தர்மபாலரே! அவன் உங்களுடைய ஆணையை மீறியது உண்மைதான். ஆனால் அதன் பலனாகத்தான் இன்று வைரிகளாக இருந்த நாம் நண்பர்களாக இருக்கிறோம் என்பதை மறந்து விடாதீர்கள். உடனே அவனை விடுதலை செய்து எனக்குப் பரிசாக அளித்து விடுங்கள்."

"எனக்கு ஒரு ஆட்சேபணையும் இல்லை, வத்ஸராஜரே. தேவபாலன் வந்தால் தாங்கள் அழைத்துப் போகலாம். அதற்குப் பதிலாகத் தாங்கள் ஒரு விஷயம் கூற வேண்டும். நீங்கள் ஏன் சமாதானம் செய்து கொள்ள விரும்பினீர்கள்?"

"நான் என்ன செய்தாலும் பாடலிபுத்திரத்தை ஜெயிக்க முடியாது என்று எனக்குத் தெரிந்து விட்டது. வீணாக உயிர்ச் சேதம் செய்வானேன் என்று கருதித்தான் சிநேகம் செய்து கொள்ள விரும்பினேன்" என்றார்.

"தாங்கள் மனம் விட்டு இதைக் கூறியதற்கு மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். நமது நட்பு என்றென்றும் நீடித்து விளங்க வேண்டும் என்பது என் ஆசை!" என்றார் தர்மபாலர்.

* * *

அன்றிரவு விருந்துக்குப் பிறகு இரண்டு அரசர்களும் வீற்றிருந்த மண்டபத்துக்கு அழைத்து வரப்பட்டான் தேவபாலன். அவனுடைய இளமையும், வீரமும் ததும்பும் கம்பீரமான முகத்தைக் கண்ட வத்ஸராஜர் 'இவன் அரச குலத்தில் உதித்திருக்கவேண்டும். உண்மையிலேயே இவன் நம்மோடு வரச் சம்மதித்தால் வடக்கு நோக்கிப் படையெடுத்து வருவதாயுள்ள ராஷ்டிரகூடர்களின் படையெடுப்பைச் சமாளித்து விடலாம்' என்று நினைத்தார்.

தர்மபாலர் தளபதியை நோக்கி, "தேவபாலா! பிரதிஹார வம்ச திலகரான வத்ஸராஜ மகாராஜா உன்னைத் தம்முடன் அனுப்பி வைக்கும்படி கேட்கிறார். நீ போவதற்கு விரும்பினால் உன்னை மன்னித்து அவருடன் அனுப்புகிறேன். உன் மனைவி சங்கரதேவியையும் உன்னோடு அழைத்துச் செல்ல உனக்கு அனுமதி தருகிறேன்" என்றார்.

"மகாராஜா! இந்த ஏழையை நாட்டை விட்டே துரத்தப் பார்க்கிறீர்களா? நீங்கள் எனக்கு மரண தண்டனையே விதித்தாலும், ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். நான் என் ஜன்மபூமியாகிய கௌட தேசத்தை விட்டு எங்கும் போக விரும்பவில்லை."

இரண்டு அரசர்களுடைய முகங்களிலும் புன்னகை அரும்பியது.

வத்ஸராஜர் தேவபாலனைப் பார்த்து, "தளபதி! நீ என்னுடன் வந்தால் உனக்குச் சகல சுதந்திரங்களும் வழங்கப்படும். என்னுடைய சேனைக்கு உன்னைத் தளபதியாக்க விரும்புகிறேன்" என்றார்.

"என்னுடைய சேவை என் நாட்டுக்கு மட்டும்தான் உரியது. என்னை மன்னித்து விடுங்கள்" என்றான் தேவபாலன்.

"நீ சொல்வது சரியாக இல்லை, தேவபாலா! உன்னுடைய சேவையை உன் நாடு விரும்பவில்லையே!" என்றார் அரசர் வத்ஸராஜர்.

"அரசே! என்னுடைய தாய்நாடு என்னைக் கௌரவித்தாலும் சரி, அவமானப்படுத்தினாலும் சரி, அது எனக்கு ஒன்றுதான். நீங்கள் என்னை எவ்வளவு கௌரவித்தாலும் நான் என் நாட்டை விட்டு வரத் தயாராக இல்லை" என்று ஆவேசத்துடன் கூறினான் தேவபாலன்.

அப்போது தண்டநாயகரும், புரபாலருமான பாலாதித்யர் எழுந்து நின்று, "மகாராஜா! இந்தச் சமயத்தில் நான் செய்த மாபெரும் குற்றமொன்றை ஒப்புக் கொள்ள விரும்புகிறேன். தேவபாலன் தப்பிச் செல்வதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டு அவனை ஓடிப் போகச் சொன்னேன். அவன் மறுத்து

விட்டான். இதற்கு உரிய தண்டனையை எனக்கு அளிக்குமாறு தங்களை வேண்டிக் கொள்கிறேன்" என்றார்.

"ஆம்! உமக்குத் தண்டனை அளிக்கத்தான் போகிறேன். தேவபாலனுடைய பிறப்பின் ரகசியம் என்ன வென்பதைத் தாங்கள் இப்போது வெளியிடவேண்டும்" என்றார் தர்மபாலர்.

முதலில் திகைத்துப் போன பாலாதித்யர், ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "தர்மபால மகாராஜாவின் தந்தை கோபால மகாராஜருக்கு இரண்டு பிள்ளைகள் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். தர்மபால மகாராஜா பட்டத்துக்கு வந்ததும், அவருடைய தம்பி வாக்பாலர் தமக்கு ராஜ்யம் கிடைக்கவில்லையே என்று ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தார். தர்மபால மகாராஜாவைக் கொல்ல அவர் யத்தனம் செய்தார். ஆனால் அது பலிக்கவில்லை. ஆகவே அரசருக்குப் பிறக்கும் குழந்தைகளைக் கொன்றுவிடச் சூழ்ச்சி நடந்தது. நகர்க் காவல் தலைவனாக நான் இருந்தபடியால் ஒற்றர்கள் மூலம் அவ்வப்போது இவை எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு தர்மபால மகாராஜாவுக்கு அறிவித்து வந்தேன். முதல் இளவரசர் திரிபுவனபாலர் பிறந்து இரண்டு வருஷங்களுக்கெல்லாம் நமது மகாராணி இன்னொரு குழந்தைக்குத் தாயாராகி இறந்து போனார். அப்போது அந்தக் குழந்தை இறந்து போய் விட்டது என்று நாங்கள் அறிவித்தோம். முதல் இளவரசர் திரிபுவனபாலருக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்து விட்டால் இன்னொரு குழந்தைக்காவது ஆபத்து வராமலிருக்க வேண்டும் என்பதற்காக அந்தக் குழந்தையை அப்புறப்படுத்தித் தளபதி பராக்கிரம சிம்மனிடம் ஒப்படைத்தோம். அவர் அந்தக் குழந்தையைக் கண்ணுக்குக் கண்ணாகப் போற்றி வளர்த்தார். அவரும், அவரது பத்தினியும் இந்த ரகசியத்தை மிக ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தனர். நான்கு வருஷங்களுக்கு முன்பு இளவரசர் திரிபுவனபாலர் நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். அப்பொழுது, இந்த ரகசியத்தை வெளியிட்டுவிட வேண்டும் என்று நான் தர்மபால மன்னரிடம் கூறினேன். ஆனால் அவர் அது சரியான சமயம் அல்ல என்று கூறிவிட்டார். இளவரசரின் வீரத்தை வளர்ப்பதற்காக, பராக்கிரம சிம்மர் இறந்து போனவுடனே, அவரையே தளபதியாகவும் ஆக்கினார். பிறகு என்னுடைய தங்கையின் புதல்வியான சங்கர தேவியைத் தம் மகனுக்கு மணம் செய்து வைக்கச் சொன்னார். அவ்வாறே செய்து வைத்தேன். அவர்கள் இருவருக்கும் கூட இந்த ரகசியம் இதுவரையில் தெரியாது. மகாவீரர்என்று பாராட்டப் பெற்றிருக்கும் இளவரசர் தேவபாலர் வாழ்க!" என்று கூறி முடித்தார்.

இளவரசுப் பட்டம் சூட்டப்பட்ட தேவபாலனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தான் இதய பூர்வமாகப் போற்றி வரும் அரசர் தன் தந்தை என்பதை அவனால் நம்பவே முடியவில்லை. தர்மபால மகாராஜா எழுந்து வந்து தன்னை மார்புறத் தழுவிக் கொண்ட போது தழுதழுத்த குரலில், "அப்பா!" என்று அழைத்தான். தர்மபாலரின் கண்களிலிருந்து பெருகிய கண்ணீர் அவன் தோள்மீது உதிர்ந்தது. வஜ்ரராஜும் பிரதிஹாரரும் எழுந்து இளவரசனை மார்புறத் தழுவிக் கொண்டார். "உன்னைப் போன்ற ஒரு மகனைப் பெற்ற உன் தந்தை பாக்கியசாலி! மேலும் நீ செய்த குற்றத்துக்குத் தகுந்த தண்டனையையும் அவர் விதித்து விட்டார். இந்த ராஜ்ய பாரத்தைச் சுமக்கும் தண்டனையை உனக்குக் கொடுத்து விடப்போகிறார் அல்லவா? அன்பு என்னும் விலங்கைப் பூட்டி, பொறுப்பு என்னும் சிறைக்குள் அடைத்துவிட்டார்!" என்றார்.

"இளவரசர் தேவபாலர் வாழ்க!" என்ற கோஷம் மண்டபத்தை அதிரச் செய்தது.

* * *

சங்கர தேவியுடன் அரண்மனை நந்தவனத்தில் பளிங்குக்கல் மேடையில் உட்கார்ந்திருந்த இளவரசர் தேவபாலர், "தேவி! என் மகனை மகா வீரனாக வளர்க்கப் போகிறேன்!" என்றார்.

"ரொம்ப மகிழ்ச்சி! ஆனால், அரசரின் கட்டளையை மீற மாத்திரம் சொல்லித் தர வேண்டாம். உங்கள் மகனுக்கே தண்டனை விதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடும்."

"எப்படி இருந்தாலும் என் தந்தை எனக்கு விதித்திருக்கும் தண்டனையை நானும் அவனுக்கு விதித்துத்தானே ஆக வேண்டும், தேவி?" என்று கூறினார் தேவபாலர். அதைக் கேட்டுச் சங்கரதேவி கலகலவென்று நகைத்தாள். அவளுடைய சிரிப்பின் ஒலி அந்த நந்தவனம் முழுதும் நிறைந்தது.

# மலச் சிக்கல்

## உங்களைச் சோர்வடையச் செய்கிறதா?



ஆம், மலச்சிக்கல் ஒரு துன்பகரமான நோய். அது உங்களுக்குச் சோர்வும், தளர்ச்சியும் மேனிக் குறைவும் உண்டாக்குகிறது. ஆயினும் உலகில் லக்ஷக்கணக்கான பேர்கள் ஒரு நாள்கூட இம்மாதிரித் துன்பம் அடைவதில்லை. காரணம் அவர்கள் உபயோகித்து வரும் ப்ரூக்லாக்ஸ் என்ற சக்தி வாய்ந்த எளிய நிவாரணிதான். இந்த ருசி மிகுந்த சாக்லேட் பேதி மருந்து குடல் வேலையை சகஜமான முறையில் ஊக்கி, உட்புற அசுத்தங்களை வெளியேற்றுகிறது. படுக்கும்போது ஒரு சிறிய துண்டு உட்கொள்ளுங்கள். மறுநாள் அதன் பயனை அனுபவியுங்கள். உத்ஸாகமும், புத்துணர்ச்சியும் ஜீவசக்தியும் பெறுவீர்கள். மேலும் சுறுசுறுப்புடன் காண்பீர்கள்.




## ப்ரூக்லாக்ஸ்

ஒரே இரவில்
உங்களைக் குணமாக்கும்

(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்

ஓரியண்டல் மார்க்கன்டைல் ஏஜன்ஸி
99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

---

## சிறந்த உழைப்பிற்கும், சிக்கனத்திற்கும்



# VACULUG

REGD. TRADE MARK

டிராக்டர் & எர்த்மூவர் டயர்களுக்கு,

**"வாக்குலக்"** ரீ-கண்டிஷன்

செய்வதால், பழைய டயர்களிலிருந்து புதிய உழைப்பைப் பெற முடிகிறது. செலவும் புது டயர்கள் வாங்குவதற்கு ஆகும் செலவில் பாதிதான் ஆகிறது.

ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட்,
தபால் பெட்டி நெ. 12, கோயமுத்தூர்.

EP


இக்கிராமப் பகுதிகளில் இப்பொழுது
புத்துணர்ச்சி பொங்குகிறது
சமுதாய அபிவிருத்தி மற்றும்
தேசிய விஸ்தரிப்பு வேலைத் திட்டங்கள்
இரண்டாவது
ஐந்தாண்டுத் திட்டத்தில்



# பித்தா! பிறை சூடி!

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி! —திருவாசகம்.

"ஆண்டவன் ஒருவன் இருக்கிறான், அவன் சக்தி மிக அபாரமானது" என்று பல முறை படித்தும் கேட்டும் இருக்கிறோம். எனினும் மனத்தில் உறுதியாகப் பதிவதில்லை.

ரஸிக மணி டி. கே. சி. அவர்கள் மிகச் சின்னஞ்சிறு உதாரணங்கள் மூலம் ஆண்டவனின் அபார சக்தியை உள்ளத்தில் நிரப்பி விடுவார்.

"ஒரு குடத்தில் ஜலத்தை எடுத்துக் கொண்டு இரண்டு தடவை மாடிப் படி ஏறினால் கைகள் குடைந்து சோர்ந்து போகிறோம். ஆனால் மேகம் என்ன செய்கிறது? ஏழு கடல்கள் நிரப்பக் கூடிய தண்ணீரை ஏந்திக் கொண்டு மேலே செல்கிறது; அந்தரத்தில் நிற்கிறது; ஓடுகிறது; இதைப் பார்க்கிறோம். 'இவ்வளவு நீரை ஏந்தி நிற்கும் சக்தி அந்த மேகத்துக்கு எப்படி வந்தது?' என்று சற்று யோசித்தால் மனித அறிவுக்கு எட்டாத மாபெரும் சக்தி உலகத்தை இயக்கிக் கொண்டிருப்பது தெரிய வரும்" என்று ஒருமுறை கூறினார்.

இன்னும் சற்று யோசித்தால் அந்தச் சக்தி பேரண்டம் முழுவதும் வியாபித்திருப்பது புலனாகும்.

உலகம் சூரியனைச் சுற்றி வருவதையும், நட்சத்திரங்களும் கிரகங்களும் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்ளாமல் வான வீதியில் ஒழுங்காகத் தொழிற்படுவதையும் சிந்தித்துப் பார்த்தோமானால் பெரு வியப்பு ஏற்படும். இந்த வியப்பிலே தோய்ந்து நிற்கும் பக்தர்கள் மெய்யுருகி அற்புதமான பாடல்கள் செய்திருக்கிறார்கள்.

"எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத் தோங்கும் சோதி!...."

என்று பட்டினத்தடிகள் எத்தனை அற்புதமான முறையில் குறிப்பிட்டிருக்கிறார்.

இப்படி அண்ட பகிரண்டமெல்லாம் வியாபித்திருக்கும் ஆண்டவனிடம் உண்மையில் பக்தி செலுத்த வேண்டுமானால் உள்ளத்துக்கு நெருக்கமாக இருக்க வேண்டுமல்லவா? அதனாலேதான் தெய்வமாக் கதைகளும் கோவில் வழிபாடுகளும் ஏற்பட்டுள்ளன!

மேற்கண்டவாறு பாடிய பட்டினத்தார் திருவொற்றியூருக்குச் சென்றார். திருவொற்றியூர் கோவிலில் எழுந்தருளியிருக்கும் லிங்கத்தைப் பார்த்தார். லிங்கமாகவா அவருக்குத் தோன்றியது! பிறைசூடிய பெருமானின் திரு உருவமே அவர் கண்முன் நின்றது. இதோ அவர் சொல்வதைக் கேளுங்கள்:

கண்டம் கரியதாம்
கண்மூன்று உடையதாம்
அண்டத்தைப் போல
அழகியதாம் — தொண்டர்
உடலுருகத் தித்திக்கும்
ஓங்குபுகழ் ஒற்றிக்
கடலருகே நிற்கும்
கரும்பு

கருங்கல்லினால் செய்யப்பட்ட லிங்கம் கரும்பாகத் தித்திக்கிறது, மாபெரும் பக்தரான பட்டினத்தடிகளுக்கு. அந்த உள்ளத்தின் பண்பை என்னவென்பது? லிங்கத்தைக் கல்லாகப் பார்ப்பதில் அதிசயமில்லை. லிங்கத்தைக் கரும்பாகக் கண்டதல்லவா அதிசயம்! இந்த மன நிலையை உணர்ந்தால் ஓவியர் கனுதேசாய் அவர்களின் முகப்புச் சித்திரத்தின் கருத்தும் புரியும்.

ஒரு சிவஸ்தலத்தைக் கீழே காட்டிவிட்டு அதன் மேல் வான் முகட்டையும் கடந்து நிற்கும் பிறைசூடிய பெருமானைக் காண்பித்திருக்கிறார். பட்டினத்தார் சொற்களால் அமைத்த உருவைக் கனுதேசாய் வண்ண ஓவியமாகத் தந்துவிட்டார்.

நாமும் இந்த ஆண்டு தீபாவளித் திருநாளில் கண்ணைப் பணிந்த கரங்களோடு முக்கண்ணனுக்கு அஞ்சலி செலுத்திக் கொள்ளுகிறோம். "அரியும் சிவனும் ஒன்று!" என்று தமிழ் நாட்டுச் சின்னஞ் சிறு குழந்தைக்கும் தெரியுமே!



# நப்பின்னை

எத்தனை யேலும் பிரிவு ஆற்றகில்லாயால்
தத்துவம். அன்று தகவு—ஏலோர்எம்பாவாய்.

—திருப்பாவை

கண்ணன் கோகுலத்தில் புரிந்த லீலைகளை நினைக்க நினைக்க உள்ளம் தித்திக்கும்.

தன் மீது காதல் கொண்ட கோபியரை அவன் படுத்தி வைத்த பாடு பாரத தேச மக்களுக்கு ஆனந்தத்தை என்றென்றும் நல்குவனவாகும்.

கண்ணன் லீலைகளை ஆழ்வார்கள் மனமுருகிப் பாடியிருக்கிறார்கள். சூரதாஸர், சைதன்யர், மீரா போன்ற வட நாட்டு பக்தமணிகள் பாடி யிருக்கிறார்கள்.

இன்று நம் யுகத்தில் அமரகவி பாரதியார் கண்ணன் மீது பாடியுள்ள பாடல்கள் தமிழ் உள்ளளவும் நிலைத்து நின்று பரவசப்படுத்துவன வாகும்.

இவ்வாறு பக்தர்களுக்கும் கவிஞர்களுக்கும் உவகையும் உற்சாகமும் ஊட்டும் விஷயம் சைத்ரிகர்களுக்குப் பெரும் ஊக்கம் ஊட்டக் கூடியதாக இருப்பதில் வியப்பு என்ன இருக்கிறது?

தமிழ் நாட்டு ஓவியர் ஸ்ரீ ஸ்ரீ. ராஜம் அவர்கள் கண்ணனும் நப்பின்னையும் ஒரு மரத்தடியில் அமர்ந்து இன்பக் காதல் பேச்சிலே மூழ்கியிருக்கும் காட்சியை அற்புதமாகத் தீட்டியிருக்கிறார்.

ஆனால் உண்மையில் கண்ணனும் நப்பின்னையும் பேசிக்கொண்டா யிருக்கிறார்கள்! இல்லை.

நப்பின்னையால் கண்ணனைப் பார்த்து விட்டால் பேசத்தான் முடியுமா? அவன் அழகு பொங்கும் முகத்தை இமைப் பொழுதும் வீணாக்காமல் பார்த்துக் கொண்டே யிருந்தால் போதும் என்றல்லவா கருதுகிறாள்! அவன் அழகைக் கண்களால் பருகவே நேரம் போதவில்லையே!

ஆண்டவன் தரிசனம் கிட்டி விட்டால் பேச்சுக்கு இட மேது! அந்தப் பெரு ஒளியில் மூழ்கித் திளைக்க வேண்டியது தானே?

ஆனால் கண்ணன் நப்பின்னைக்கு மட்டுமா உரியவன்? கோகுலத்திலுள்ள ஒவ்வொரு பெண்ணுக்கும் உரியவன் அல்லவா அவன்!

அதனால்தான் நப்பின்னை, கண்ணனைப் போகவிடாமல் தடுத்து நிறுத்தும்போது ஆண்டாள் மேற்கூறியவாறு பாடுகிறாள்!

"ஒரு நிமிஷமும் கண்ணனைப் பிரிந்து போக விட மாட்டேன் என்கிறாயே, இது நியாயமல்ல" என்கிறாள்!

ஆண்டாள் கூறுவது நியாயந்தானே?






"என்னங்க, ஒத்து ஊதறவர் இல்லேங்களா?"
"இல்லேங்க; அது நாக்கு ஒத்து வரதில்லேங்க!"

# "புத்தர்பிரான் அருள் பொங்கிய நாடு"

**ப**கவான் புத்தர் தோன்றிய நாட்டிலே நாமும் பிறந்திருக்கிறோம் என்று நினைக்கும்போதே உள்ளம் பெருமிதம் அடைகின்றது; நம் தோள்கள் விம்முகின்றன.

பகவான் புத்தர் நிர்வாணம் எய்திய இரண்டாயிரத்தைந்நூறாவது திருநாளைச் சமீபத்தில் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்ந்தோம்.

அந்தச் சமயத்தில் புத்தர் பிரான் புரிந்த அற்புதங்களை நினைவு கூர்ந்து வியந்தோம்.

ஓவியக் கலையில் பாண்டித்தியம் பெற்ற பண்டைக்கால புத்த பிக்ஷுக்கள் பகவான் புத்தர் நிகழ்த்திய அற்புதங்களை அஜந்தா குகைக் கோயில்களிலும், தமிழ் நாட்டில் சித்தன்ன வாசலிலும், இலங்கையில் பொலன்னருவாவிலும், அநுராதபுரத்திலும் என்றும் அழியா வண்ண ஓவியங்களாகச் சித்திரித்திருக்கிறார்கள். அந்தச் சித்திரங்களின் அற்புதத்தைக் கண்டு உலகம் இன்றும் வியந்த வண்ணமாகவே இருக்கிறது.

அத்தகைய அஜந்தா ஓவியங்களிலிருந்து ஒரு காட்சியை இவ்வருஷம் நமது ஓவியர் மணியம் பெயர்த்தெழுதி வழங்குகிறார்.

பகவான் புத்தர் அமர்ந்துள்ள சிம்மாசனமும், அவர் பாதங்களைக் கமல மலரில் வைத்திருக்கும் பாவமும், வானுலகத்தில் தேவர்களும் தேவதைகளும் தோன்றி பகவான் புத்தருக்குச் செய்யும் உபசாரங்களைப் பார்க்கும்போதும் பகவான் புத்தர் ஒரு மகத்தான உபதேசம் செய்கிறார் என்பதை யாரும் ஊகிக்கலாம். ஆம். உண்மையிலேயே ஒரு மகத்தான உபதேசம்தான் புரிகிறார்.

**ஒ**ரு சமயம் நகுலபுத்திரா என்ற வயது முதிர்ந்த கிழவர் ஒருவர் புத்தரைப் பார்க்க வந்தார். அவர் புத்தரிடம், "ஐயா, ததாகதரே! (புத்தர்) நான் படு கிழமாகி விட்டேன். என் மனைவி உற்றார் உறவினர் யாவரும் இறந்து விட்டனர். இனி நான் எப்படி இளமையும் பலமும் எய்திச் சந்தோஷமாக வாழ முடியும்? அதற்கு ஒரு வழி சொல்லுங்கள்!" என்று கேட்டார்.

"ஓ! நகுலபுத்திரரே! தாங்கள் உண்மையிலேயே மிகவும் முதுமை அடைந்து விட்டீர்கள். என்றாலும் தங்கள் இறந்து போன உறவினர்களை உயிர்ப்பிக்க முடியுமா? முடியாது அல்லவா? அதேபோல் தங்கள் உடம்புக்கு வலிவையும் வனப்பையும் மீண்டும் அளிப்பது என்பதும் முடியாத காரியம். சந்தோஷம் என்பது யௌவனத்தையோ, உறவினர்களையோ பொறுத்ததில்லை. அது உள்ளத்தைப் பொறுத்த விஷயம், நகுலபுத்திரரே! நீங்கள் மனத்தில் இளமையும் திருப்தியும் அடைந்து வாழலாம். உடல் நோயுற்றிருந்தாலும் உள்ளம் நோயுற வேண்டும் என்பதில்லை!" என்று கூறினார்.

இதைக் கேட்டு நகுலபுத்திரர் திருப்தியடைந்தார். மீண்டும் தாம் யௌவனம் அடைய வேண்டும் என்று விரும்பவில்லை.

* * *

**ந**மது ஓவியர் மணியம் வரைந்துள்ள பகவான் புத்தரின் இந்த அஜந்தா சித்திரத்தைப் பார்க்கும் இளைஞர்களுக்கும் பெரியவர்களுக்கும் உள்ளத்தில் ஆனந்த ஊற்று பெருக்கெடுக்கும். இது கலை புரியும் அற்புதம் அல்லவா!



"நீண்ட மதர்விழி என் நெஞ்சங் கிழித்துலவும்!" — தனிப் பாடல்




"என்ன ஆசாரி! இவர் சட்டசபை தேர்தலுக்கு நிற்கப் போறார்! இவருக்கு வோட்டுப் போட்டால் நல்ல சட்டங்களெல்லாம் கொண்டு வருவார்!"

ஆசாரி:— அப்படீங்களா! எனக்கு நல்ல தேக்குச் சட்டங்கள் தேவைப்படுதுங்க!

# பஞ்சரதங்கள்

உலகில் எத்தனை எத்தனையோ அதிசயங்கள் இருக்கின்றன. ஆனால் பாறைகள் பேசுகின்ற அதிசயம் எங்குமே இருக்க முடியாது. அப்பேர்ப்பட்ட அதிசயம் தமிழ் நாட்டில் இருக்கிறது. சென்னையிலிருந்து சுமார் ஐம்பது மைல்களுக்கு அப்பால் உள்ள மாமல்லபுரத்தில் இருக்கிறது.

அங்கு இருக்கும் கல்லுக்கு உயிர் உண்டு என்பது மட்டுமல்ல; அது பேசும், உறவாடும், கதை சொல்லும், நம்மை ஆயிரம் வருஷங்களுக்குப் பின்னாலும் அழைத்துச் சென்றுவிடும்.

கண் படைத்த பயனை அடைய விரும்புகிறவர்கள் வாழ்நாளில் ஒருதரமாவது மாமல்லபுரம் போய் அங்கு இருக்கும் அதிசயக் காட்சிகளை யெல்லாம் நேரில் பார்க்க வேண்டும்.

படத்தில் இருப்பது பஞ்சரதம். ரதங்கள் அல்லது விமானங்களைப் போல் அமைந்துள்ள ஐந்து அழகிய கோயில்கள். இந்தக் கோயில்கள் கல், சுண்ணாம்பினால் கட்டப்பட்டவை அல்ல. குன்றைக் குடைந்து கோயிலாக்கப்பட்டவை. அவை யெல்லாம் பிரும்மாண்டமான ஒரே பாறையிலிருந்து செதுக்கப்பட்டவையா? அல்லது ஒவ்வொன்றும் ஒரு குன்றிலிருந்து செதுக்கி அமைக்கப்பட்டதா என்பதை யாரும் நிச்சயமாகச் சொல்ல முடியாது!

இருந்தாலும் உயிரற்ற ரஸமற்ற கற்பாறைகளை இத்தகைய உயிர்ச் சித்திரங்களாகச் செய்திருக்கும் அற்புதத்தை நினைத்தாலே மயிர்க் கூச்சம் உண்டாகாமல் இராது. கோயில்களைத் தவிர யானை, சிங்கம், ரிஷபம் எல்லாம் இருக்கின்றன. யானையும் ரிஷபமும் உயிரோடு இருப்பதுபோல் எவ்வாறு இவ்வளவு அருமையாக அமைத்தார்களோ!

கோயில் மிகப் பெரியது; ஒரு மாடியுடன் அமைந்திருக்கிறது. மேன்மாடியில் சோமாஸ்கந்த மூர்த்தி இருக்கிறார். கோயிலின் கீழ் அறையிலும் சரி, மற்றக் கோயில்களிலும் சரி விக்கிரகங்கள் இல்லை.

ஆனாலும் இந்த ஐந்து ரதங்களும் நம்மை இந்த உலகில் இருந்து எங்கோ அழைத்துச் சென்று விடுகின்றன.

** ** ** **

இந்தப் பஞ்ச ரதங்களையும் கண்ணால் பார்க்கிறார் கலைஞர் ஸ்ரீ சிட்னிஸ். அவருடைய கற்பனையில் மாமல்லபுரத்துப் பஞ்சரதங்கள் எவ்வாறு தோற்றமளித்தன என்பதைக் காட்டுகிறது, அவர் தீட்டியிருக்கும் இந்த அற்புதச் சித்திரம். வர்ணக் கோலின் மூலமாகப் பஞ்சரதங்களையும் கொஞ்ச வைத்திருக்கிறார்; மாமல்லபுரத்தை மகேந்திரஜாலபுரமாக மாற்றிக் காட்டியிருக்கிறார்.

கல்கி தீபாவளி மலர் 1956




"பேசி யிருக்கிறார்கள்
பித்தமுதல் நோய்களுக்கு

ஆசைக்கொரு மருந்தை - கிளியே
அங்கெழுதி வைத்தாரில்லை !"

— கிளிக்கண்ணி



கடற்கரைக்
கோயிலும்
கலங்கரை
விளக்கும்

போட்டோ :
வி. ஜி. வெங்கடாசலம்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



